குமரிக் கண்டம் முதல் சுமேரியா வரை

# தமிழர் வரலாறுகள்



தனபாக்கியம் குணபாலசிங்கம்

# குமரிக்கண்டம் முதல் சுமேரியா வரை தமிழர் வரலாறுகள்



தனபாக்கியம் குணபாலசிங்கம்



**மணிமேகலைப் பிரசுரம்**

தபால் பெட்டி எண்: 1447,
7 [ப.எண்: 4], தணிகாசலம் சாலை,
தியாகராய நகர், சென்னை – 600 017.
தொலைபேசி: 24342926, 24346082
மின் அஞ்சல்: manimekalai1@dataone.in
இணைய தளம்: www.tamilvanan.com

# நூல் விவரம்


| | |
|---|---|
| நூல் தலைப்பு | குமரிக்கண்டம் முதல் சுமேரியா வரை தமிழர் வரலாறுகள் |
| ஆசிரியர் | தனபாக்கியம் குணபாலசிங்கம் |
| உரிமை | ஆசிரியருக்கு |
| மொழி | தமிழ் |
| பதிப்பு ஆண்டு | 2011 |
| பதிப்பு விவரம் | முதற் பதிப்பு |
| தாளின் தன்மை | 27.2 கி.கி. மேப்லித்தோ |
| நூலின் அளவு | கிரௌன் சைஸ் (12 X 18 செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | 10.5 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | xiv + 374= 388 |
| நூலின் இந்திய விலை | ₹ 150/– |
| அட்டைப்பட ஓவியம் | மோகன் கிராஃபிக்ஸ் |
| லேசர் வடிவமைப்பு | ஸ்ரீ விக்னேஷ்வரா கிராஃபிக்ஸ், போன் : 98845 13164 |
| அச்சிட்டோர் | பி.வி.ஆர். ஆஃப்செட், சென்னை–94. |
| நூல் கட்டுமானம் | தையல் |

# சமர்ப்பணம்



**ஏழாலை எனும் ஊரினைப் பிறப்பிடமாகக் கொண்டவரும், சிறுவர் பாடசாலைகளின் தலைமையாசிரியராகப் பணியாற்றியிருந்தவருமான என் தந்தை தம்பிமுத்து. சதாசிவத்திற்கு.**

சிறுவயதிலேயே அன்பாகிய தாயை இழந்திருந்தேன். ஆனால் அறிவாகிய தந்தை எனக்கு அறிவையூட்டி நெறிப்படுத்தியிருந்தார். தொழில் காரணமாக நான் கொழும்பில் வதிய நேரிட்டது. கொழும்பில் 1977ஆம் ஆண்டில் இடம் பெற்ற இனப் படுகொலையின் போது, யாழ்குடாவிற்குப் புலம் பெயர்ந்து உயிர் பிழைத்திருந்தேன். பின் 1983ஆம் ஆண்டில் இடம்பெற்ற தமிழினப் படுகொலை கொடூரமாய் இருந்ததனால், கிழக்கு மாகாணத்தைச் சேர்ந்த ஏறாவூருக்கு குடும்பமாகப்

புலம் பெயர்ந்திருந்தோம். அப்பொழுது 1990ஆம் ஆண்டில் சிங்களப் படையினர் பொல்லநறுவையிலிருந்து மட்டக்களப்பை நோக்கிக் கால்நடையாகப் படையெடுத்தனர். ஏறாவூர் நகர் முற்றாகச் சூறையாடப்பட்டதனால், நாம் மீண்டும் மாலை தீவிற்குப் புகலிடம் தேடிச் சென்றிருந்தோம். இக்காலத்திலேதான் 8.1.1992 அன்று என் தந்தையார் உயிர் நீத்திருந்தார். ஏறாவூரில் நாம் கைவிட்டுச் சென்ற எதுவும் (தந்தையார் நிழற்படம் உட்பட) கிடைக்கப் பெறவில்லை. அதனால் அவரது நினைவு மட்டுமே எஞ்சியிருந்தது. ஆனால் இன்று அவர் காலத்தை வென்றுவிட்டிருந்தார். விசுவமடுவில் வதியும் என் தங்கை மாலாவிடம் இக்குறிப்பிட்ட நிழற்படம் பேணப்பட்டிருந்தது. 21.12.09இல் என் கைக்கெட்டியிருந்தது. அவர் உருவத்தை மீளவும் காணக்கிடைத்த மகிழ்ச்சியில் அவருக்கே இந்நூலினைச் சமர்ப்பிக்கின்றேன். இது ஒரு வரலாற்றுத் தகவல்கூட.



# பொருளடக்கம்

## இயல் - I

### சைவத்தின் மாண்புகள்



## இயல் - II

### புதிய யுகத்தை நோக்கிய எம் பயணத்தில்

# இயல் - III

## வரலாறு தரும் சுவையான செய்திகள்

# இயல் - IV

## ஈழத்தில் வரலாறு புடம் போட்ட கதைகள்





# முன்னுரை

## வாசகர் சிந்தனைகளுக்கு இதுவரை எட்டாத வரலாறுகள்...

தமிழகத்திற்குக் காலத்தால் மிகப்பழமைமிக்க வரலாறுகளைப் பழந்தமிழ் இலக்கியங்கள் பேணிக் காத்திருந்த பொழுதும், நாம் வரலாறற்ற மனிதர்களாகவே வாழ்ந்து வருகின்றோம். அதனோடு வேரறுந்த ஆலமரம் புயலினால் நாலாபக்கமும் ஆடி, அசைந்து சாய்வதுபோல், நாமும் ஆடி, அசைந்து சாய்ந்து கொண்டிருக்கின்றோம். இன்று உலகெங்கும் பரவிச் சாய்ந்து கிடக்கும் (தமிழகம் உட்பட) தமிழினம் ஏன்? எப்படி? எவரால் இந்நிலைக்குத் தள்ளப்பட்டது. உங்களுக்குத் தெரியுமா? தெரியவே தெரியாது. ஏன்? நீங்கள் கடந்துபோன வரலாறுகளைக் 'குப்பை' என்று குப்பைத் தொட்டியில் போட்டுவிட்டு, புதியவற்றைத் தேடுகிறீர்கள். அதனால் ஆட்சிப் புலங்களையும், அடையாளங்களையும் இழந்து கிடக்கின்றீர்கள். மற்ற இனங்களோ எனில் குப்பைகளைக் கிளறித் தேடி எடுத்துத் தம் வரலாற்றுத் தடயங்களைக் காப்பகங்களில் பாதுகாத்து வருகின்றார்கள்.

இனி, ஈழ விடுதலைப் போரில் அப்பாவி மக்களும், பிற உயிரினங்களும் தம் மண்ணைக் காப்பாற்றக் கொடுத்த விலை என்ன? மனிதனின் அடிப்படை உரிமை, சமாதானம், சமத்துவம் எனும் சொற்களைக் கொச்சைப்படுத்துகின்ற உலகின் கண்களுக்கு ஏன் ஈழத்துத் தமிழ் உயிர்கள் கணக்கற்று இரண்டாம் தர உயிர்கள் ஆனார்கள்? இப்பூமியில் தாயக உரிமையையிழந்து தமிழினம் இருக்கையில், பிற இனங்கள் ஏன் எப்படி தம்மைத் தனித்துவ இனங்களாக அடையாளப் படுத்தி வருகின்றார்கள்?

தமிழர் ஏன் தம் தாயக மண்ணின் ஆட்சியுரிமையை இழந்தார்கள்? தமிழினத்தின் பலவீனங்கள் என்ன? உலக அரங்குகளில் தமிழர்கள் ஏன் புறக்கணிக்கப்பட்டுள்ளார்கள்? ஏன் இத்தனை பாரபட்சங்கள்? தொல்லியல், வரலாற்றாய்வுகள் உங்களுக்கு அறிவுறுத்துவதென்ன? இக்கேள்விகள் அனைத்திற்கும் தொல்லியல் ஆய்வாளரான நான் விடை தேடியுள்ளேன்.

ஏனெனில் வரலாற்றாய்வாளர்கள் ஓர் எல்லைக்குட்பட்ட வகையிலே கடந்தகாலங்களில் ஆய்வுகளை மேற்கொண்ட தனால், சில உண்மைகளையே அவர்களால் வெளிக்கொணர முடிந்திருந்தது. ஆனால் பழைய கால மனிதன் வாழ்ந்திருந்த களங்களுக்கு நேரடியாகச் சென்று, அவர்கள் விட்டுச் சென்ற தடயங்களை ஆராய்ந்து உண்மைகளைத் துணைக் கொண்டு வரலாற்றிற்கு முற்பட்ட கால மனித வரலாறுகளை மீளவும் கட்டியெழுப்பும் பணியில் ஈடுபடுபவர்களே தொல்லியலாளர்கள். எடுத்துக்காட்டாக, ஈழத்தில் புத்தளம் மாவட்டத்தில் பொன்பரிப்பு

அகழ்வாய்வுகளிற் கிடைத்த ஈமத் தாழிகளுக்கும், தமிழகத்தில் ஆதிச்சநல்லூரிற் கிடைத்த ஈமத் தாழிகளுக்கும், பிற தடயங் களுக்கும் இருக்கும் ஒற்றுமை கொண்டு, இவையிரண்டையும் உருவாக்கியவர்கள் பழந்தமிழர்களே என்ற உண்மை உறுதி செய்யப்படலாயிற்று. இவ்விரு களங்களிலும் கிடைக்கப்பெற்ற கறுப்பு - சிவப்பு மட்பாண்டங்களின் காலவரையறைப்படி இவை கி.மு.1000ஆம் ஆண்டைச் சேர்ந்தவை எனக் கால நிர்ணயம் செய்யப்படலாயிற்று. இவ்வாறான தொல்லியல் ஆய்வுகளின் பயனாக எழுந்த நூலே 'இலங்கையில் தொல்லியல் ஆய்வுகளும், திராவிடக் கலாச்சாரமும்' எனும் நூலாகும். இந்தக் கண்ணோட்டத்துடனே தொடர்ந்து எழுதிய நூல்களிலும் உண்மைத்தரவுகள் பாரபட்சமற்ற முறையில் ஆராயப்பட்டிருந்தன.

இந்நூலில் தமிழ் மக்கள் அறிந்து கொள்ளப்பட வேண்டிய பலதரப்பட்ட விடயங்கள் எளிமையாக்கப்பட்டுள்ளன. சாதாரண மக்களும் படித்துப் பயன்பெற்று மகிழ வேண்டுமென்பதற்காக இவை கட்டுரை வடிவில் தயாரிக்கப்பட்டுள்ளன. அதனால் சில முக்கிய விடயங்கள் தவிர்க்க முடியாத நிலையில், திரும்பத் திரும்ப இடம்பெறும் குற்றமிருப்பினும், அவற்றின் குறிப்புகள் தவிர்க்க முடியாதனவாய் இருப்பதனை வாசகர்கள் புரிந்து கொள்ளல் வேண்டும். சிறுகதைகளிலும், சமூக வரலாறுகளே பின்னிப் பிணைந்து கிடக்கின்றன. கதைகள் கற்பனையாயினும் வரலாற்றுப் பின்னணிகள் தான் அவற்றின் உயிரோட்டமாகும். அதாவது பல்வேறு காலங்களில் எழுதப்பட்ட ஆக்கங்கள் (ஈழத் தமிழரின் துயரங்களைப் பதிவு செய்யும் நோக்கில்) தொகுக்கப்பட்டுள்ளன. இவை முழுமையான பதிவுகள் இல்லாவிடினும், நிழல்போல் எம் வரலாற்றில் தொடர்ந்து

மக்களுக்குச் செய்திகளை எடுத்துச் செல்லவல்லன என்பதில் ஐயமில்லை.

மொழி நடையினைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது, இது எனது வயது முதிர்ந்த காலத்தில் எழுதப்பட்டதென்பதனால் மொழித் தளர்ச்சியும் இயல்பாகிவிட்டுள்ளது. அது தவிர்க்க முடியாததொன்றேயாம். மக்களுக்கு என் கருத்துகள், ஆய்வுகள், முடிவுகள் என்பன சென்றடைய இந்த முயற்சி போதுமானது என்பதும் என் கருத்தாகும்.

இறுதியாக, மணிமேகலைப் பிரசுரம் இந்நூலை வெளியிட முன்வந்ததையிட்டு, அவர்களுக்கு நன்றி கூறக் கடமைப் பட்டிருக்கின்றேன். அவர்கள் பணி தலைமுறை, தலைமுறை யாகத் தொடர்ந்து செல்ல வேண்டுமென்பதும் என் அவா ஆகும்.

**தனபாக்கியம் குணபாலசிங்கம்**

6, ஷெல்லி வீதி,
லண்டன் E12 6SW
10.7.2011.



# பதிப்புரை

சமய, சமூக, வரலாற்று எழுத்தாளரான திருமதி. தனபாக்கியம் குணபாலசிங்கம் அவர்களின் நூல்களை எங்கள் மணிமேகலைப் பிரசுரத்தில் மறுபதிப்புச் செய்தும், பதிப்புச் செய்தும் வந்துள்ளோம். தற்பொழுது அவர்களின் 'குமரிக்கண்டம் முதல் சுமேரியா வரை தமிழர் வரலாறுகள்' எனும் நூலிற்கு பதிப்புரை எழுதுவதில் பெருமையடைகின்றோம்.

தென்தமிழகம் கடற்கோள்களினால் அழிவுண்டபின் பெரும் பதிவுகள் எதுவும் கிடைக்கவில்லை என்பது குறப்பிடத்தக்கது. ஆனால் நாம் செய்த அற்ப தவத்தின் பலனாக மூன்றாம் தமிழ்கெழுகூடல் புலவரான நக்கீரர் தமிழரின் மூன்று தமிழ்கெழுகூடல்கள் பற்றி ஒரு சுருக்கமான வரலாற்றினைப் பதிவு செய்து தமிழர்களை மீண்டும் தலைநிமிர வைத்திருந்தார். அவரை நாம் நெஞ்சார வாழ்த்துவோமாக.

இனி, தமிழர்கள் எவரும் கற்பனையிலும் கனவு காணாத ஒரு வரலாற்றினை விவிலியவேதம் தன்னகத்துள் கொண்டிருந்தமையை நாம், இப்பொழுதுதான் உணரத் தலைப்பட்டிருக்கின்றோம். அதாவது விவிலிய வேதத்தின் முதல் ஏற்பாடு பாராட்டும் அப்ரம் (ஆப்ரகாம்) ஒரு தமிழன் என்று அடையாளப்படுத்தும் வகையில், விவிலிய வேதம் பல வரலாற்றுச் செய்திகளைப் பதிவு செய்திருக்கின்றது. ஏறக்குறைய நாலாயிரத்து ஐந்நூறு வருடங்கள் கழிந்த

பின்னராவது நாம் உணரும் வகையில் விவிலிய வேதம் எம்மை அடையாளப்படுத்தியுள்ளது. ஒரு ஆச்சரியம் தரும் விடயம்தான். ஆனால் உண்மைகளை இறைவன் பாதுகாத்து எமக்கு கையளித்திருக்கின்றார். அவன் திருவிளையாடல்களில் இதுவும் ஒன்றே.

இந்நூலாசிரியர் இவ்வாறு நாம் கண்டும் காணாதது போல் கைவிட்டிருந்த தமிழர் வரலாறுகளைத் தேடிப்பிடித்து ஒரு நூல் வடிவில் கோத்துத் தந்திருக்கிறார். அதனோடு படித்தின்புறக்கூடிய வேறு பல விஷயங்களும் இந்நூலில் பொதிந்துள்ளன. மணிமேகலைப் பிரசுரம் இப்புதையல்களை நீங்களும் படித்தின்புறுவதுடன், மேலும் ஆய்வுகளைச் செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்கின்றது.

திருமதி. தனபாக்கியம் குணபாலசிங்கம் சிறந்த ஆராய்ச்சியாளர். தமிழர்களுக்கு வரலாற்றுப் பதிவுகளைக் கொண்டு சேர்க்க வேண்டும் என்ற குறிக்கோளோடு தன்னை வருத்திக்கொண்டு பெரும் சிரமங்களோடு இந்த அரிய நூல்களை எழுதிவருகிறார். இவருடைய தமிழ் உணர்வும், அடுத்தவர்களுக்கு உதவும் தாயுள்ளமும் போற்றுதலுக்குரியது. தனபாக்கியம் குணபாலசிங்கம் அவர்களின் நூல்களை நாங்கள் வெளியிடக் கிடைத்தது எங்களின் பாக்கியம்.

இவர் ஆய்வுகள் தொடரும்; எங்களின் வெளியீடுகளும் தொடரும் என்பதைத் தெரிவிப்பதில் பெருமைகொள்கிறோம்.

- பதிப்பகத்தார்

# குமரிக்கண்டம் முதல் சுமேரியா வரை தமிழர் வரலாறுகள்



தனபாக்கியம் குணபாலசிங்கம்



# கடவுள் எங்கே? அவர் ஏன் மறைபொருளாக இருக்கின்றார்? நாம் ஏன் தெய்வத் திருமேனிகளைக் கடவுளாகப் பாவனை பண்ணி வழிபடுகின்றோம்?

உலகின் சமயங்கள் எல்லாம் மனிதன் அவ்வப்போது அனுபவித்த இறையனுபவங்களின் வெளிப்பாடே. காலத்தால், தேசத்தால் இந்த அனுபவங்கள் வேறுபட்டிருந்தாலும், அவற்றின் பின்நாதம் "ஒன்றே குலம் ஒருவனே தேவன்" என்பதாகும். ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒருவர் பெற்ற இறையனுபவங் களைப் பிறரும் அறிய வேண்டும் என்று கருதி அவர்கள் வெளியிட்டார்கள். இவ்வாறே காலந்தோறும் பல்வேறு மெய்ஞ்ஞானிகள் பெற்ற அனுபவங்களால் இன்றைய உலக சமயங்கள் உருவாகலாயின. அதனால் மக்களின் வாழ்வில் அறம் முக்கிய வழிகாட்டியாகலாயிற்று.

இனி, மக்கள் எல்லோருடைய அறிவு, ஆற்றல் என்பன ஒரே தரத்தனவல்ல. அதனால் மக்கள் எல்லோரையும் அவரவர் தரப்படி ஆன்மீகத்தை நாடி நெறிப்படுத்தல் அவசியமாய் இருந்தது. இவ்வகையில் சில படிமுறைகளைத் துணை கொண்டு பக்தனை நெறிப்படுத்திய சமயமாக சைவம் காணப்படுகின்றது.

திருக்குறள் உலகப்பொதுமறை என்று போற்றப் பட்டாலும், அதன் வாழ்த்துப்பா எந்தக் கடவுளின் பெயரையும் சுட்டாவிட்டாலும் அதனை ஓர் சைவநெறி நூலென்றே அடையாளம் காட்டி விடுகின்றது. திருவள்ளுவர் தனது வாழ்த்துப்பாவில் எண்குணமுடைய சிவத்தின் திருவடிகளைப் பணியாதவன் ஐம்பொறிகள் அற்றவனாகவே கருதப்படுவான் என அறிவுறுத்துவர். இதனை,

**கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான்**
**தாளை வணங்காத் தலை**

*(குறள் 9)*

எனும் குறளில் காணலாம். அடுத்து சைவம் வலியுறுத்தும் பிறவிப் பெருங்கடலை இறை நாட்ட முடையவரே கடப்பார் என்பர். இதனை,

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்

*(குறள் 10)*

எனும் குறளில் கண்டு தெளியலாம். இவ்வாறு திருக்குறள் குறிப்பிடும் கடவுள் இலக்கணம், உயிர்கள்

இயல்பு அனைத்தும் சைவத்தின் மாண்புமிக்க கோட்பாடுகளையே பிரதிபலிப்பனவாம்.

ஆனால் ஒருவன் தன் சமயம் வழிகாட்டுவதற்கப்பால், தன் இறையனுபவங்களைத் தானே அனுபவித்து உணர்ந்தாலன்றி, பிறர் அறிவுறுத்தலையும் அனுபவங்களையும் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதனால் தன் ஆன்ம ஈடேற்றத்தினை அடைந்துவிட முடியாது. எமக்கு அப்பாற்பட்ட சக்தி மீது நம்பிக்கையேற்பட்ட பின் தன் சொந்த முயற்சியினால் அதனை அனுபவிக்கத் துடிக்க வேண்டும். அப்பொழுது அவனும் இறைவனை ஏதோ ஒருவழியில் அனுபவிக்க முடியும். இவ்வாறு இறைவனைத் தேடியவர்களின் முயற்சிகள் வீணாகவில்லை. அவர்கள் அவரை உள்ளூற அனுபவித்து இன்புற்றனர். அதனைப் பிறரும் முயன்றால் அனுபவிக்கலாம் என அறிவுறுத்தினர். இவ்வாறு கடவுளைத் தேடியவர்கள் பலர் "அவர் எப்படி இருப்பார்" என்று அறிய முயன்றார்கள். ஆனால் குணம், குறியற்றதும், சுட்டிறந்ததும், ஊனக்கண்களாற் காணமுடியாததுமான அப்பொருளைக் காணாதே ஆட்பட்டிருந்தார்கள். இதனை இறை வழிபாட்டிற்கெனப் பேய் வடிவினை ஏற்று இறைவனுடன் ஒன்றியிருந்த காரைக்காலம்மையார், இறைவனை நோக்கியே முறையிடுகின்றார்.

அன்றுந் திருவுருவங் காணாதே ஆட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன் - என்றுந்தான்
எவ்வுருவோன் நும்பிரான் என்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது.

*(அற்புதத் திருவந்தாதி)*

என வினவுகின்றார்.

மாணிக்கவாசகரும்,

என்னுள்ளக் கருவை யான் கண்டிலேன்
உண்டோர் ஒள்பொருள் என்றுண வார்க்கெலாம்
பெண்டிர் ஆண்அலி என்றறி ஒண்கிலை
தொண்டனேற்கு உள்ளவா வந்து தோன்றினாயே
கண்டும் கண்டிலேன் என்கண் மாயமே

*(திருச்சதகம் 46)*

என்று ஒரு மயக்கநிலையிலே இறையனுபவத்தை முதலில் உணர்ந்திருந்தார். அதனாலே தான் "கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்" என்று சுட்டிறந்த கடவுளின் பெருமையைப் பற்றி எம் முன்னோர் போற்றினர்.

இவ்வாறு குணம், குறியற்ற மேலான நிலையுடைய கடவுளுக்கு உருவும், பெயரும், குணங்களும் கொடுத்து வழிபட்டு அனுபவம் பெற்றவர்கள் எம் நாயன்மார்கள். அதாவது மக்களுள் ஒரு சிலரே ஆன்மீக நாட்ட முடையவராவர். அவர்களையே நாம் யோகிகள், ஞானிகள் என அழைக்கின்றோம்.

இவர்கள் தம் மனங்களை வென்று, இறைவனையும், அவன் படைப்பு ரகசியங்களையும் காணும் ஆற்றல் பெற்றவர்கள். இவர்கள் உலகியல் வாழ்வினை முற்றாகத் துறந்த துறவியினர் ஆவர். இவர்களைப் போல் எல்லோரும் துறவிகளாயின், உலக இயக்கம் நின்றுவிடும் என்பதும் திண்ணம். அதனோடு மனிதராப் பிறவி யெடுத்தவர்கள் பல்வகைத் தரத்தினர் என்பதனை நாம் அனுபவம் மூலம் அறிவோம். அதனாலே தான் சைவ

*ஆகமங்களில் (இவை இறைவனருளால் வெளிவந்தவை என நம்பப்படுகின்றது.) பாமர மக்களுக்காகக் குணங், குறிகள் கொண்ட இறை வடிவங்களும், வழிபாட்டு நெறிகளும் அறிவுறுத்தப் பட்டுள்ளன. இதனையே தொல்காப்பியர்*

**வினையின் நீங்கி விளங்கிய அறிவின்**
**முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்**

*(தொல்.649)*

*என்றனர். மணிமேகலை ஆசிரியரும்,*

**ஆகம அளவை அறிவன் நூலால்**
**போக புவனம் உண்டு**

*(மணி காதை 27 - வரி 43-44)*

*என ஆகமம் சைவர்க்கான நெறிகளை வகுத்த நூலென்பர். மேலும், இறைவனே ஆகம வடிவில் (நூலறிவு மூலம்) உயிர்களுக்கு அருள்புரிகின்றான் என்பதனை மாணிக்கவாசகர்,*

**மன்னுமாமலை மகேந்திர மதனிற்**
**சொன்னவாகமந் தோற்றுவித் தருளியும்**

*(கீர்த்தித் திருவகவல் வரி 9-10)*

**ஆகம மாகிநின் றண்ணிப் பான்றாள் வாழ்க**

*(சிவபுராணம் வரி 4)*

*எனவும் கூறியருளினர். பிற்காலத்தில் பட்டினத்தடிகளும்,*

**சைவசித் தாந்தத் தெய்வவா கமத்தை**
**வரன்முறை பகர்ந்த திருமலர் வாய்**

*(திருக்கமல மும்மணிக்கோவை செய் 13, வரி 4-5)*

என்று கூறியருளினர்.

அருணந்தி சிவாசாரியாரும் பதி பசு பாசம் ஆகிய வற்றின் அணுநிலைகளையும், அண்டமாக விரியும் அதன் பிரபஞ்ச நிலைகளையும் இறையருள் பெற்ற ஞானிகள் ஆகம அளவையாலும், ஞானத்தினாலும் தம் ஞானக் கண் கொண்டு கண்டு தெளியலாம் என்பர். இதனை,

**அருளினா லாகமத்தே யறியலா மாவினாலும்**
**தெருளலாஞ் சிவனை ஞானச்செய்தியாற் சிந்தையுள்ளே**
**மருளெலா நீங்கக் கண்டு வாழலாம்**

*(சி.சி. செய் 6)*

எனச் சிவஞானசித்தியாரில் குறித்தருளினார்.

எனவே, ஆகமங்கள் ஆன்மீகப் பயிற்சிக்கான சரியை, கிரியை ஆகிய வழிபாட்டு நிலைகளை முதற் பயிற்சிக் களங்களாக வகுத்துள்ளன என்பது புலனாம். இறையனுபவமென்பது ஒவ்வொரு மனிதனும் அனுபவித்துணரும் நிலையிலேயே, இறை நம்பிக்கை வலிமை பெறுகின்றது. ஒரு குழந்தை பிறந்த நாள் முதல் அழுது, சிரித்து, அவதானித்து, கேட்டுப் பல பயிற்சிகளைத் தாயின் மடியிலிருந்து பெற்றுக் கொள்கின்றது. பின் தவழ்ந்து பழகிய பின், இருகால்களால் நடக்க முயல்கின்றது. பின் காதில் திரும்ப, திரும்பக் கேட்ட ஒலிகளை நினைவில் வைத்துத் தானும் தன் மழலை

மொழிகொண்டு பேசக் கற்றுக் கொள்கின்றது. காலப்போக்கில் பிறர் உதவியில்லாமல் தானே யாவற்றையும் செய்து கொள்கின்றது.

இவ்விதமே தம் கண்களுக்குப் புலப்படாததும், எங்கும் வியாபியாய், சுட்டிறந்து நிற்கும் பரம்பொருளை உணர்ந்து கொள்ளவும் பல படிமுறையான பயிற்சிக் களங்கள் எமக்கு வேண்டியுள்ளன. அதனாலேயே ஆலயங்களில் உருக்கொடுத்த தெய்வத் திருமேனிகளை செப்பிலேயோ அல்லது கருங்கல்லிலேயோ வார்த்தும், செதுக்கியும் அவற்றை இறைவனாகவே பாவனை செய்து பக்தி செலுத்தி வழிபடும் நிலை ஒரு பக்தனின் முதற் பயிற்சிக்களமாகின்றது.

இத்திருமேனிகளுக்கு நாள்தோறும் நன்றியுடனும், பயபக்தியுடனும் பூசைகள் செய்து, பாடி, உருகி மெய் சிலிர்த்து நிற்கையில், இந்த அனுபவம் சிறிது, சிறிதாக தெய்வீகத்தின் திருவிளையாடல்களைப் போற்றத் தூண்டுகின்றது. அதனால் இந்த பக்தனின் உண்மை நிலையை உணராதவர்கள் இவன் மூட நம்பிக்கைகளின் அடிமை என நினைத்து வேதனையடைகின்றனர். ஆனால் அவனோ என்றால் மின்னீர்ப்புச் சக்தி கொண்ட திருமேனியை முழுமையாக அப்பரம்பொருளே என்ற உணர்வுடன் மனதையும் உயிரையும் ஒன்ற வைக்கின்றான். அதிற் சொற்களால் விவரிக்க முடியாத சுகங்களைத் தனக்குள்ளே அனுபவிக்கின்றான்.

இவ்விதமே பஞ்ச பூதங்களின் குணங்களைத் தன்னகத்தே கொண்ட கருங்கற்சிலைகளும் பக்தனை

ஈர்த்தெடுத்து விடுகின்றன. இவ்வாறு தெய்வீக அனுபவங்கள் வளர, வளர அவனுக்குத் திருமேனிகளுக்குப் புறத்தே செய்கின்ற பூசைகள், கிரியைகள் என்பனவற்றை விட அகத்தே செய்யும் வழிபாடுகளில் நாட்டம் ஏற்படுகின்றது. திருமேனிகளின் வழிபாட்டின் பயனே இந்த அனுபவத்தைப் பெறுதலேயாம். இவ்வாறு புறத்திலே வழிபாடு செய்யாது உள்முகத்தியானம் கைகூடாது. இக்குறிக்கோளினை அடைந்த ஒருவர் முன்பு போல் திருமேனிகள் வழிபாடு, புறக்கிரியைகள் ஆகியவற்றில் பற்றில்லாதவராகின்றார்கள். பின்னர் யோக, ஞான நிலைகளினூடாக தன்னுள்ளே இறைவனைக் கண்டனுபவிக்கின்றார்கள்.

எனவே இவ்வாறு உயிர் சரியை, (சரியை, பிறர் பூசை செய்வதைப் பார்த்து இறையுடன் ஒன்றிப் போதல். கிரியையாவது தானே பூசை செய்து மகிழ்வதாகும்.) கிரியை வழிபாடுகளையியற்றி பக்குவமடைவதோடு, தன் பழவினைக்கீடான இன்ப, துன்பங்களையும் அனுபவித்து இறைவனிடம் தன்னை முழுமையாக அர்ப்பணிக்கின்றது. இவ்வாறு விடுதலையடைய நாட்டம் கொண்ட உயிர்களுக்குத் திருவருள் பார்வையில்லையாயின் விளக்கொளி பெறாத கண்போல மெய்யுணர்வு கிடைக்கப்பெறாது. உயிர்கள் அறிவிக்க அறியும் இயல்புடையவை. அதனால் தமது அறிவு விளக்கம் பெறும் வகையில் உடற்கருவிகளைத் தந்துதவிய திருவருட்சக்தியை மேலும், மேலும் நாடுகையில் இறைவன் அவர்களுக்கு எளியவனாகின்றான். இறைவனோ உயிர்களுடன் ஒன்றாய், உடனாய், வேறாய் நின்று இயக்கி வருபவன். எனவே, தமது இருளையகற்ற, தம்முடன்

ஒன்றாய்க் கலந்திருக்கும் இறைவனிடமே உருகி நிற்கையில். அவன் அருளால் பிறவி நோய் அறுந்து போகின்றது. தன் பிறவி நோயினை அறுக்க முயலாவிடின், இன்ப துன்பங்களைச் சுழற்சியாக அளிக்கவல்ல பிறப்பு வட்டம் தொடரும். அதனாலே தான், தன்மீது திருவருள் பாவித்த இறைவனின் திருவடிகளிற் தன்னை அர்ப்பணித்த மாணிக்கவாசகர் இறைவனிடம் "வல்வினையேன் தன்னை மறந்திட மூடிய மாய இருளை" அகற்றிவிடுமாறு இறைஞ்சினார். பின், இவர் பக்குவம் கொண்டு இருந்த நிலையில் இறைவன் இவரைத் தில்லையின் ஆட்கொண்டனர்.

இதன் பின்னர் இவர் தான் பெற்ற அனுபவங்களை எடுத்துக்கூறத் தவறவில்லை. தன் அச்சோப்பதிகத்தில்,

> சித்தமலம் அலுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட
> அத்தன் எனக்கருளிய ஆறாார் பெறுவார் அச்சோவே
>
> *(செய். 1)*

என்றும், திருத்தெள்ளேணத்தில்,

> முத்திக் குழன்று முனிவர்குழா நனிவாட
> அத்திக் கருளி அடியேனை ஆண்டுகொண்டு
> பத்திக் கடலும் பதித்த பரஞ்சோதி.
>
> *(செய். 12)*

என்றும் கூறியருளினார். இதுபோன்ற இறையனு பவங்களை இவர்தம் திருவாசகப் பாடலில் நாமும் படித்தனுபவம் பெறலாம். இவரைப் போலவே முதலில் இறைவனிடம் 'உன்னுரு ஏது?' என்று வினவிய காரைக்

காலம்மையாருக்கும் இறைவன் திருவருள் எட்டியிருந்தது. அப்பொழுது அவர் இறைவனைச் சோதி வடிவில் கண்டனுபவித்தார் என்று கூறுகின்றார். இதனை,

> **காண்பார்க்குங் காணலாந் தன்மையனே கைதொழுது**
> **காண்பார்க்குங் காணலாங் காதலாற் - காண்பார்க்குச்**
> **சோதியாய்ச் சிந்தையுளே தோன்றுமே தொல்லுலகுக்**
> **காதியாய் நின்ற அரன்.**

*(அற்புதத் திருவந்தாதி செய். 17)*

எனக் குறிப்பிட்டருளினார்.

ஆகமங்களைத் தமிழில் செய்யுமாறு தன்னை நன்றாக இறைவன் படைத்தனன் எனக் கூறும், திருமூலர் இறைவனைத் தானும் கண்டார் என்கிறார். இதனை,

> **நான் அறிந் தன்றே இருக்கின்ற ஈசனை**
> **வான் அறிந் தார்அறி யாது மயங்கினர்**
> **ஊன் அறிந்துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்**
> **தான்அறி யான்பின்னை யார்அறி வாரே**

*(திருமந்திரம் 1797)*

எனக் கூறியருளினர்.

ஒரு பக்தனுக்குப் பக்குவம் முதிர, முதிர அவனுக்கு இறைவனிடமிருந்து தான் பிரிந்து நிற்றலைப் பொறுக்க முடியாது, இறையுடன் ஒன்றுசேரத் துடிக்கும் நிலை அதிகரிக்கின்றது. இதுபோலவே பக்தனின் அன்பு மீதூரப்பட்ட நிலையில் இறைவனும் அவனது பக்தி வலையில் வீழ்ந்து விடுகின்றான் என்பர் மணிவாசகர். (திருவண்டப்பகுதி 42). வள்ளலாரும்,

அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே

*(திருவருட்பா 3269)*

என்றனர்.

இதுவரை நாம் ஆராய்ந்ததிலிருந்து பல்வேறு நிலைகளினூடாக பக்தர்கள், யோகியர் என்போர் இறை யனுபவத்தினைத் தாம் அனுபவித்ததாக அறிவுறுத்தியமை புலனாம். அதுபோல் நாம் ஒவ்வொருவரும் எம் தரத்திற்கேற்ப இறைவனை எங்கும், எதிலும் காண்பதோடு எம்முள்ளும் காணலாம். உங்கள் குறிக்கோளில் உறுதியாக இருக்கையில், அவர் பற்றிய அனுபவங்களை நீங்களும் பெறுவீர்கள். தேடுவதனை நிறுத்திவிட்டு அவருடனேயே இரண்டறக் கலந்து நிற்பீர்கள்.

சைவநீதி விளங்குக உலகமெலாம்.

ஓம்



# 'என் மனம்' எனும் பரந்தவெளியின் ஆழ, அகலங்களை அளக்க முயன்றேன். முடியவில்லை. ஏன்?

நாம் 'மனம்' என்பதனை நெஞ்சு, சிந்தை, உள்ளம், சித்தம், இதயம் எனப் பல பெயர்களால் அழைப்பினும், இதுவரை இன்னதென்று சுட்டிக் காட்டிட முடியாதவர்களாகவே வாழ்ந்து வருகின்றோம். ஆனாலும் மனிதர்கள் வெறுமனே எதனையும் பார்த்துக் கொண்டு இருப்பவர்கள் அல்ல. அதனால் பலரும் பலவிதமாக ஆய்வுகளை நடாத்தி 'மனம்' என்றால் என்ன? என அடையாளப்படுத்திக் காட்ட முயற்சிகள் எடுத்திருக்கிறார்கள். அதுபோன்றதொரு முயற்சியே இதுவும் எனக் கருதலாம்.

முதலில் 'மனம்' என நாமனைவரும் பொதுவாகக் கருதிக் கொள்வதென்ன என்று பார்த்தல் வேண்டும். எம் ஒவ்வொருவரின் அனுபவத்தில் மூளையே முக்கியச் செயலகம். அதன் கீழ்க் கட்டுப்பட்டு இயங்கும் துணை வெளி அலுவலகங்களாகக் கண், காது, மூக்கு, வாய்,

தோல் ஆகியன இயங்குகின்றன. ஆனால் இவற்றை யெல்லாம் விட 'மனம்' என்பது சிறிது வேறுபட்டு இயங்கும் உட்கருவிகள் எனப்படும் கருவிகளில் ஒன்றாகும். இவை எம் கண்களுக்குப் புலனாகாமலே இருந்து கொண்டு தொழிற்படுகின்றன. வெளியுலகில் பரந்த அண்ட வெளியில் எம் கண்களுக்குப் புலனாகாத பல விடயங்கள் இடையறாது நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. அதுபோன்றதொரு பரந்த வெளியே மனிதனின் மனமும் ஆகும். ஒவ்வொரு மனிதனின் மனங்களிலும் ஆயிரமாயிரம் எண்ணங்கள் தோன்றித் தொழிற்பட்டுக் கொண்டே இருக்கின்றன. அதனால் ஓருயிரின் குண இயல்பாகவே மனங்கள் காணப்படுகின்றன. உண்மையில் மனங்கள் தற்காலிகமானவை. அதாவது மரணத்தின் பின் உயிர் பிரியும் பொழுது, அதனியல்பான மனம், சடப் பொருளானபடியினால் அதனுடன் கூடிச் செல்வதில்லை. பின் அந்த உயிர் மறுபிறவியைத் தன் பூர்வவினைக்கொப்ப எடுக்கையில், அந்த உயிருக்கேற்ற வகையில் புதிய மனமும் ஏற்படுகின்றது. அதாவது ஓருயிரின் பிறப்பு வட்ட சுழற்சி போல, அதன் கன்ம வாசனைகளும் தொடர்கின்றன. எனவே ஓருயிர் வாழும் பொழுது இன்ப, துன்பங்களுக்கு உறுதுணையாக இருந்த மனம் உயிருடன் தொடர் வதில்லை என்பது உறுதியாம்.

மனதைப் பற்றி ஆய்வு செய்த மருத்துவர்கள் முதலில் மூளையின் பகுதி உறுப்புகளையே 'மனம்' எனக் கருதினர். முடிவில் மூளையின் ஒட்டுமொத்த இயக்கமே 'மனம்' என்னும் முடிவிற்கு வந்துள்ளனர். ஆனால் உளவியலாளர்கள் 'மனம்' என்பது மேல்மனம், நடுமனம், அடிமனம் எனும் மூன்று நிலைகளில் தொழிற்படுகின்ற

மனிதனின் வேறுபட்ட மன இயல்புகளைக் குறிப்பிட்டு அதனால் மனநோயாளிகள் பல திறத்தவர் என்பர். இருப்பினும் சில மனநோயாளிகள் தமது காதுகளில் கேட்கும் கட்டளைகளை முழுதாக நம்பி, அவற்றைச் செயற்படுத்துவார்கள். இவர்களுடைய வாழ்க்கை இவ்வாறு மாறியதற்கான பின்னணிகளை ஆராய்ந்தால், அவர்கள் வாழ்க்கையின் முற்பகுதியில் ஏற்பட்ட துயரங்கள் சோதனைகள் என்பன சாதாரண மனிதனால் முகங்கொடுக்கக் கூடியனவல்லன என்பதனைச் சுட்டிக் காட்டியுள்ளன. அதனால் மென்மையான மன இயல்புகளைக் கொண்டவர்கள் அவற்றைச் சமாளிக்க முடியாத நிலையில் மனதையிழந்து விடுகின்றனர். அதே சமயம் உறுதியான மனங்களைக் கொண்டவர்கள் தமக்கேற்பட்ட துயரங்களைச் சவால்களாகக் கொண்டு, அவற்றிற்கு முகம் கொடுத்து வெற்றியடைகின்றனர். இன்னும் சொல்லப்போனால் நயவஞ்சகமான மனித இயல்புகளைக் கொண்டோர் மனங்களில் நயவஞ்சக எண்ணங்கள் நிறைந்து இருப்பதனால், அவர்கள் கடைசி வரையும் தம் மனம் போனபடி நடந்து வாழ்க்கையின் கோட்பாடுகளைக் காற்றில் பறக்கவிட்டு விடுகின்றார்கள். அதனால் ஒருவரின் மனமானது உயிருக்கு உதவியாக இருப்பதனை விட்டு, அதனைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதனை நாம் அனுபவ அடிப்படையில் காண முடிகின்றது.

இவ்வாறு, மனம் தன் போக்கில் அதிவேகமாகத் தொழிற்படுவது மட்டுமன்றி, புயல்காற்றுகள் சுழித்தடித்து ஆடுவது போல், மனித வாழ்வினைச் சின்னா பின்னப்படுத்துவதும், அதன் இயல்பாகியுள்ளது.

அதனால் இதுவரை எவரும் மனத்தின் வேகத்தினை அளந்து காட்டினார்கள் அல்ல. ஆனால் தூரத்தில் சுழலும் பூமியின் வேகத்தைக் கணிக்கும் இவர்களுக்கு இது ஏன் முடிவதில்லை? ஆனால் மனங்களோ எந்தக் கருவிகள் உதவிகளுமின்றி நாம் காணும் அண்ட வெளியின் மூலை முடுக்கெல்லாம் இருந்தவிடத்திலிருந்தே ஒரு நொடிப்பொழுதில் போய் வந்துவிடும். மனிதர்கள் தம் உடல்களைத் தூக்கிக் கொண்டு பயணிக்க விமானங்களையோ, கடற்கப்பல்களையோ அல்லது புகையிரதவண்டி போன்ற வண்டிகளையோ கட்டிக் கொள்கிறார்கள். மற்றும் தற்காலக் கண்டுபிடிப்புகளான தொலைத் தொடர்பு சாதனங்களுக்கும் மின் தொலைத்தொடர்புக் கோபுரங்கள், அல்லது செய்மதிகளைக் கட்டினாற்றான், அவை தொடர்புகளை ஏற்படுத்திக் கொடுக்கின்றன. ஆனால் மனங்கள் பேசிக் கொள்வதற்கோ அவை தேவையற்றவையாம்.

இத்தகைய ஆற்றல்களைக் கொண்ட மனங்களை விஞ்ஞானிகள், தொழிலாளிகள் எனப் பலரும் வெளி யுலகப் பொருள்களில் மனதை ஒருமுகப்படுத்தியதனாலே, அவர்களால் இன்றைய சுகவாழ்வு முறைகளை அனைத்து மக்களுக்கும் ஏற்படுத்திக் கொடுக்க முடிந்தது. இவையனைத்தும் மனங்களின் வெளியுலகப் பார்வைகள், அந்தந்த விடயங்களில் குவிக்கப்பட்டதனால் ஏற்பட்ட சாதனைகள் ஆவன. மேலும், இத்தகைய வழிகளில் மனங்கள் ஒருமுகப்படுத்தியதனாலே மனிதன் வானத்திலும், ஆழ்கடல்களிலும், பனிமலைச் சிகரங் களிலும் உலாவிவர முடிகின்றது. அதுமட்டுமா? சந்திரன் மீது கால் பதித்து, அதன் இயல்புகளையும் உணர்ந்து

கொள்ள முடிந்தது. அதுமட்டுமன்றி கண்களுக்குப் புலனாகாத மின்காந்த அலைகளையும் தன் அன்றாட வாழ்வின் நண்பர்களாக்கிக் கொண்டு பூமியை ஓர் ஆய்வு மையக் களமாக மாற்றிவிட்டுள்ளார்கள். வெளியுலகப் பார்வையில் என் மனம் அதிகம் தூண்டிவிட்டதனாலே என்னால் இவற்றை வகுத்தும், தொகுத்தும் பார்க்க முடிந்தது எனலாம்.

மேலே ஆராய்ந்து காட்டியவாறு மனத்தினியல்புகள் நன்மையும், தீமையும் கலந்த பல்வேறு பரிணாமங்களைக் கொண்டதென்பது புலனாம். சமயவாதிகளான முனிவர்கள், சித்தர்கள், பக்தர்கள் என்போர் மனத்தினை ஒரு புதிய கடிவாளத்தைக் கொண்டு அடக்கியாண்டிருக் கிறார்கள். பக்தர்கள், சித்தர்கள் என்போர் இருதுருவங்கள் போன்றோர். ஆயினும் அவர்கள் குறிக்கோள் ஒன்றுதான். அதாவது எளிமைமிக்க பக்தர்கள் இறைமீது தீவிரபக்தியைச் செலுத்துவதன் மூலம், மனதை வென்றுவிடலாம் என்ற நம்பிக்கையுடையவர்கள். அதனாலேதான் இறைவழிபாட்டில் திளைத்திருந்த மணிவாசகர், நாவுக்கரசர், சுந்தரர் முதலானோர் தம் மனங்கள் தமக்கு உதவியாக இருக்கவேண்டுமென்று அங்கலாய்த்துக் கொண்டார்கள். இவர்களுள் மணிவாசகர் தன் மனத்திடமே "தன்னைக் கைவிட்டி டாதே" என்று வேண்டுதல் செய்கின்றார். இதனை,

வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்டு
ஆழ்கின்றாய் ஆழாமற் காப்பானை ஏத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீ அவலக்கடலாய் வெள்ளத்தே

என்று கூறுமுகத்தால் நாம் உணரமுடிகின்றது. பின் இறைவன் தானே குருவாக வந்து இவரைத் தடுத்தாட் கொண்ட பொழுது அவர் "தன் நெஞ்சம் தகுதியுடைத்தன்று" ஒப்பிட்டு முறையிடுகின்றார்.

இதனை,

**வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்**
**பெருமானே எனக்கேட்டு *வேட்ட நெஞ்சாய்ப்***
**பள்ளந்தாழ் உறுபுனலிற் கீழ் மேலாகப்**
**பதைத்துருகும் அவர்நிற்க என்னை யாண்டாய்க்கு**
***உள்ளந்தாள் நின்று உச்சியளவும் நெஞ்சாய்***
**உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய் அண்ணா**
**வெள்ளந்தான் பாயாதால் *நெஞ்சம் கல்லாங்***
**கண்ணிணையும் மரமாம் தீவினையி னேற்கே**

என்று கூறுகையில், தன் நெஞ்சு உள்ளந்தாள் நின்று உச்சியளவும் நெஞ்சாய் உருகியிருக்க வேண்டும். ஆனால் அது அப்படிச் செய்யவில்லை என்பதனால் அது கல்லை நிகர்த்தது என்று நொந்து கொண்டார்.

மணிவாசகர் நிலை இவ்வாறிருக்க, திருநாவுக்கரசரும் நெஞ்சைத் தன் இறைவழிபாட்டிற்கு ஒத்துழைக்குமாறு அன்பாக வேண்டுகின்றார். இதனை,

**நெஞ்சே நீ நினையாய்**

**நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா**
**நித்தலும்மெம் பிரானுடைய கோயில் புக்கு**

என வேண்டுதலின் மூலம் நாம் உணரலாம்.

சுந்தரர் இறைவனிடமே, தனது உள்ளம் தன்னை இறைவனிடம் ஒன்றிப்போகாவண்ணம் தடுக்கும் நிலையினை,

சுழித்த லைப்பட்ட நீரது போலச்
சுழல்கின் றேன்சுழல் கின்றதென் னுள்ளம்
கழித்த லைப்பட்ட நாயது போல

என்று கூறி, தான் இந்நிலையிலிருந்து விடுபட அருள்புரியுமாறு விண்ணப்பிக்கின்றார்.

இனி, பித்தர்களாக வேடமேற்கும் சித்தர்கள் 'மனம்' என்பது மூளையின் இயக்கம் என்று குறிப்பிடினும், அது இயங்குகையில் மனம், புத்தி, சித்தம் எனும் மூவகையில் தொழிற்படுவதாகக் கூறுவர். அதனோடு மனமானது நிலையாக ஓரிடத்தில் அமைதியாக இருக்க முடியாது அலைவதனால், அதனை மரத்திற்கு மரம் தாவித் திரிகின்ற குரங்குடன் ஒப்பிடுவர். அதனுடன் சித்தர்கள் அட்டமாசித்திகளைக் கைவரப்பெற்று, சித்திகளைச் செய்யும் வல்லமையைப் பெற்றாலும், மனதை அடக்குவதென்பது மிகக் கடினம் என்பர் தாயுமான சுவாமிகள். ஆனால் திருமூலர் மனத்தினைத் தியானப் பயிற்சிகள் மூலம் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்க முடியும் என்பர். மூச்சுக்காற்றுப் பயிற்சி எனும் (பிராணா யாமப் பயிற்சி) மூச்சுக்காற்றுக்கு மனதைக் கட்டுப்படுத்தி வைத்து, உயிரை விடுவிக்கும் ஆற்றலுண்டென திருமூலர் கூறுவர். இதனை,

கோணா மனத்தை குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணாத் தண்டூடே வெளியுறத் தானோக்கிக்
காணாக் கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணான் அடைக்கும் வழியது வாமே

என்று கூறுவதனால் உணர்ந்து கொள்ளலாம்.

எனவே 'மனம்' என்பது உடலுடன் கூடிய உயிரை முழுமையாக இயக்க வைக்கும் மூளையினின்றும் வேறுபடுவது புலனாகின்றது. அதனாலே மூளைக்கு மேலாக இதயம் பேசுகிறது என்பர் சிலர்.

இனி இன்றைய கணினிமய ஆய்வாளர்களில் ஒருவரான பேராசிரியர் கெவின் வோவிக் (Prof. Kevin Warwick) என்பவர் மனிதனின் திசுக்களிலிருந்து (Cells) மூளையை உருவாக்கி கணினி மனிதனுக்குள் (Robots with Human Brains) வைப்பதனால், அவற்றை உணர்வு பூர்வமான செயற்பாடுகளுக்குள் உட்படுத்த முடியும் என்று நம்பிக்கை தெரிவித்துள்ளார். எனவே, இந்த சைபோக்குகளின் (Cyborgs) தொழிற்பாடுகளுக்கு எந்தளவில் மனஉணர்வுகளை வெளிப்படுத்த முடியும் என்பதனை நாம் பொறுத்திருந்து தான் பார்க்க வேண்டும். ஏனெனில், விஞ்ஞானிகள் உயிர் பிரிந்து பிணமாகிக் கிடந்த மனித உடலின் முள்ளந்தண்டூடாக மின்காந்த அலைகளைப் பாய்ச்சிய பொழுது, அவ்வுடலில் மூளை இருந்தது. ஆனால், அப்பிணம் உயிர்பெறவில்லை. இதுபோலவே விஞ்ஞானிகளால் உயிரின் மன இயல்புகளை ஆழமாக, அதாவது சடவுடலுக்கு அப்பாற்பட்ட நிலையில் உள்நோக்கிப் பார்க்க முயலவில்லை என்பதும் புலனாம்.

இறுதியாக சைவசித்தாந்திகள் 'மனம்' பற்றி என்ன கூறுகின்றார்கள் என்பதனை நோக்கலாம். ஒருயிர் பெறும் அறிவு விளக்கமெல்லாம் அதனது முற்பிறப்பு வினைப் பயனாகக் கூட்டப்பட்டனவாம். உயிருக்கு அனாதியே அறிவு மறைப்புண்டு. அதனாலேயே இறைவனால் அந்த உயிரின் ஈடேற்றத்திற்காக உடற்கருவிகள் சேர்க்கப் படலாயின. இவ்வாறு கிடைக்கப்பெற்ற உட்கருவிகள், மற்றும் புறக்கருவிகள் கொண்டே உயிர் அறிவு விளக்கம் பெறுகின்றது. இவ்வாறு எம் உடலில் அறிவு நிகழ்ச்சிக்குரிய கருவிகளாக மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனும் உட்கருவிகள் இயங்குகின்றன. மனம் தன் முன் எதிர்ப்பட்ட பொருள்களை இது யாதோ? என்று ஐயப்படுகின்றது. சித்தம் சிந்திக்கின்றது. புத்தி விடயங்களை 'இது, அது' என நிச்சயிக்கின்றது. அகங்காரம் இன்னதெனத் தெளிந்து அறிகின்றது. இவ்வாறு சடப்பொருளிலிருந்து குணவடிவாய் இவை உயிருடன் சேர்ந்து தொழிற்படுகின்றன. இவ்வாறு இவ்வுட்கருவிகள் துணைகொண்டு அறிவது ஆராய்ச்சி அறிவாகும். ஆனால் உயிர் அனுபவ வாயிலாக ஒன்றினை அறிவது உயிர் தானே அறிவதாகும். எனவே 'மனம்' என்பது ஒருயிரின் முற்பிறப்பு கன்ம வினைக்கீடாக தன் அட்டகாசத்தைப் புரியுமேயொழிய, அது உயிரின் குணமன்று என்பது புலனாம். எனினும், இதனைக் கட்டுப்பாட்டில் வைத்திருக்க சைவசித்தாந்தம் சீலம், நோன்பு, செறிவு, அறிவு (சரியை, கிரியை, யோகம், ஞானம்) எனும் நான்கு வழிகளைக் கூறும். சரியை, கிரியை வழிநின்று மனதைக் கட்டி வைத்திருந்த பக்தர்கள் ஏராளம். குறிப்பாக, தமிழகத்தில் 63 நாயன்மார்

வரலாறுகள், மாணிக்க சுவாமிகள் வரலாறுகள் பக்தி நெறியில் நின்று மனதை வென்றவர்கள் வரலாறுகளாம். இதுபோலவே மனதைப் பிராணாயாமம், தியானம் எனும் பயிற்சிகள் மூலம் வென்றவர்கள் சித்தர்களாவர். பதினெண் சித்தர் வரலாறுகள் யோகம், ஞானம் ஆகிய நெறியில் நின்று மனதைக் கட்டுப்படுத்தியவர்கள் வரலாறுகளாம். எனவே, இவர்கள் மனத்தை அளந்தார்களோ? என்ற வினாவிற்கு விடை மறைபொருளாக இருப்பினும், மனத்தை வென்றார்கள் என்பதனை நாம் உறுதியாக நம்பலாம்.

மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்.

ஃஃ



# கோவிற் திருவிழாக்களில் அலைவீசிடும் மனிதக் கடல்

இறைவன் படைப்பின் இரகசியத்தை அவரே அறிவார். இதுவரை எவராவது தாம் அறிந்து கொண்டதாகக் கூறியதில்லை. ஆனால் சித்தர்களும், பக்தர்களும் தாம் ஒவ்வொருவரும் இறைவனின் இருப்பை அனுபவித்திருந்தார்கள் என்பதனை அவ்வப்போது வெளிப்படுத்தியிருந்தார்கள். இறையனுபவத்தினை ஒவ்வொரு உயிரும் பெற்று அனுபவிக்க முடியும் என்பதற்கும் சில வரலாறுகளைத் தமிழ்நாட்டுச் சைவமரபுகள் பேணியிருக்கின்றன. இந்த வகையில் திருச்சியிலுள்ள திருவானைக்கா நாவல் மரத்தினடியிலிருந்த சிவலிங்கத்தினை யானை ஒன்றும், சிலந்தி ஒன்றும் சேவித்துப் பலனடைந்தன என்பது ஓர் எடுத்துக்காட்டாகும். இவற்றையெல்லாம் மக்கள் இன்று நம்புவதற்கில்லை. ஏனெனில், அவை நிகழ்ந்து ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகள் கழிந்து விட்டன. ஆனால் சில மனிதர்களைக் காட்டிலும், விலங்குகளைப் பயிற்சி கொடுத்து, அறிவையூட்டி பல சாதனைகளைச்

செய்விப்பது என்பது நம் கண்களின் முன்னே நடைபெற்று வருகின்றன. அதனால் விலங்குகளின் அறிவு தொழிற்படும் வகைகளை நாம் குறைவாக மதிப்பிடக் கூடாது என்பதே என் கருத்து.

இவ்வாறு படைப்புகளில் ஓரறிவு முதல் எண்ணறிவு வரை இருப்பதாகச் சமய ஆய்வுகள் அறிவுறுத்தி யிருக்கின்றன. இனி இவ்வுலகப் படைப்பிற்கு கடவுள் ஒருவர் அவசியமில்லை என்று கூறும், நோய் வாய்ப்பட்டு, இறந்தொழியும் மனிதர்கள் பலர் இன்னமும் தொடர்ந்து மனித உருவில் வாழ்ந்து வருகின்றனர். அப்படியிருக்கப் பல பெரும் சமயங்கள் உலகளாவிய அளவில் உருவாகியிருக்கின்றன என்பதும் உண்மையே. அவற்றில் சில மதங்களின் உட்பிரிவுகளே பகைமை பூண்டு கடவுளை உரிமை கோரி மனிதர்களை மனிதர்களே கொன்றழிப்பதனையிட்டும் இவர்களின் அறியாமையை யிட்டும் நாம் துயரமடையத்தான் வேண்டும்.

இத்தகைய சூழலில், தானே தோன்றிய சமயமாகச் சைவம் அவதானிக்கப்பட்டுள்ளது. இந்தச் சமயங்கள் அனைத்தினதும் தாய்ச்சமயமாகச் சைவம் இருப்பதனால், சைவம் அனைத்துச் சமயங்களையும் தனது பிள்ளை களாக, அன்பு காட்டி ஒரே சமூகத்தில் வளர்த்தெடுக்கவும் துணைபோயிருந்துள்ளது. அதனைத் தொடர்ந்து இறைவனின் திட்டத்தினால் இன்று சைவமும், தமிழும் உலகளாவிய அளவில் பரவித் தான் தாய்மையைக் கட்டி எழுப்பியிருக்கின்றது. அதாவது சைவர்கள் எல்லாச் சமய மக்களையும், அவர்கள் இறைபிள்ளைகள், அவர்கள் எந்த வழியில் தெய்வ நீதிகளைப் பேண விரும்புகின்றார்களோ,

அவ்வழி நிற்பதே மேலானதாகும் என்ற நோக்குடைய வர்களாக இருக்கிறார்கள். இதனையே அவதாரமெடுத்த பகவான் சாயிபாபாவும் எல்லாச் சமய மக்களுக்கும் எடுத்துக் கூறியிருப்பதோடு, எல்லாச் சமய விழாக்களும் அவ்வப்போது பிரசாந்தி நிலையத்தில் எடுக்கப்பட்டும் வருகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது. அதனால் அங்கு மனிதக்கடல் நாள்தோறும் பெருக்கெடுத்திருப்பது வழமை. ஆனால் புலம்பெயர் நாடுகளின் தமிழர் நிலைமைகள் வேறுபட்டவை. எல்லா நாட்களிலும் கோவிலுக்குச் சென்று வழிபடுவது என்பது தடைப்பட்டாலும் திருவிழாக்காலங்களில் தான் எறும்புக் கூட்டங்கள் இனிப்புப் பண்டங்களை மொய்க்கத் திரளுவது போல் இவர்களும் திரள்வார்கள்.

இனி, ஒரு தனிமனிதனோ, அல்லது சமூகமோ முதலில் தத்தம் மனித உரிமைகளுக்காகப் போராடும் பொழுதும், துயருடன் வாழும் பொழுதும் அவர்கள் உள்ளங்கள் இருளடைந்து விடுகின்றன. அப்பொழுது கடவுளைப் பற்றிப் பேசினால், அவர்களுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வரும். யார் அந்தக் கடவுள்? ஏன்? அவர் எங்களை இந்த மனித அழிவுகளிலிருந்து காப்பாற்றவில்லை? என்று கூறித் தாம் கடவுளாகப் பாவனை பண்ணி வழிபட்ட சின்னங்களையும் எடுத்து வீசுவார்கள். ஈழத்தில் சிங்கள இராணுவ வீரர்கள் எத்தனை சைவக் கோவில்களைக் குண்டுகள் போட்டு அழித்து விட்டு, பெளத்தக் கோவில்களைக் கட்டும் பொழுது இந்தக் கடவுள் ஏன் மெளனியாக இருந்தார்? அவரது எல்லாம் வல்ல சக்திக்கு என்ன நடந்தது? என்றெல்லாம் கேள்விகளை அள்ளி வீசுவார்கள். எனவே

இத்தகைய வாழ்க்கைப் போராட்டத்தில், பல சைவர்கள் கோவில்களுக்குப் போவதை நிறுத்துவது வழக்கம். அவனவன் சுதந்திரமாகச் செய்த நல்வினை, தீவினைகளுக்கேற்பவே அவன் மறுபிறப்பும், அவன் வாழ வேண்டிய சூழல்களையும் ஏற்படுத்திக் கொடுக்கப்படு கின்றன. இதில் இறைவன் பங்களிப்பானது, ஓருயிர் செய்த வினையின் பலன் இதுதான் என்று பாரபட்ச முறையில் தீர்த்து விடுவது தான். அவருக்குத் தன் எல்லாக் குழந்தைகளும், எல்லா நலன்களையும் பெற்று அன்பும், அறனும் வளர்த்து வாழவேண்டும் என்பதில் அக்கறை அதிகம். அதனால் கலியுகத்தில் மின்காந்த அலைகள் மூலம் மனித சமூகம் அனைத்தையும் ஒன்றிணைத்து வாழவும் கற்றுக் கொடுத்திருக்கிறார். இவற்றையெல்லாம் கணக்கில் கொண்டே அவரது அற்புதப் படைப்புகளில் ஒன்றாகிய மனிதன், அவருக்கு நன்றி செலுத்தி வருவது அவசியமாகின்றது. அன்றிலிருந்து இன்று வரை மனிதன் இறைவனை வழிபட்டிருந்த வழிமுறைகள் ஏராளம், ஏராளம். இவர்களில் சைவர்கள் வழிபாடு பற்றிச் சிறிது ஆராய்வோமானால், இறைவனின் படைப்புத் தத்துவத்தினையே அவர்கள் போற்றி வழிபட்டார்கள். முதலில் லிங்க - யோனி வழிபாடாகவும், பின் சிவ - சக்தி கலந்த வழிபாடாகவும் தம் வழிபாடு களை இயற்றியிருந்தனர். சைவர்கள் ஆணின் சக்தியையும் - பெண்ணின் சக்தியையும் சமநிலை தவறாத உலக இயக்கத்திற்கு அவசியம் என்பதனை முழுதாக நம்பினார்கள். இதனைச் சங்க இலக்கியங்களில் ஒன்றான ஐங்குறுநூறு,

நீலமேனி வாழிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே

*(கடவுள் வாழ்த்து)*

*எனவும், புறநானூறு,*

பெண்உரு ஒருதிறன் ஆகின்ற அவ்வுருத்
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்

*(கடவுள் வாழ்த்து)*

*எனவும் கூறியிருந்தன. இந்த உலக இயக்கப்பாடானது உலகம் தங்குதடையின்றி இயங்குவதற்கேயாம். இதனையே மாணிக்கவாசகரும்,*

வேறுவேறு உருவும் வேறுவேறு இயற்கையும்
நூறு நூறாயிரம் இயல்பினதாகி
ஏறுடை ஈசன் இப்புவனியை உய்யக்
கூறுடை மங்கையுந் தானும் வந்தருளி

*என மீண்டும் நினைவுபடுத்தியதோடு, இறைவன் வேண்டுதலுக்கிணங்க ஒரு சிலரால் காமநூலென அடையாளப்படுத்தும் திருக்கோவையாரையும் திருவருளியிருந்தார்.*

*இனி, மனித குலத்தை உய்யக் கருதி, பரம்பொருள் மனித நிலைக்குக் கீழிறங்கி வருகையில் எடுத்த சக்தி வடிவங்களே, பிள்ளையார், முருகன் முதலான பிள்ளைகள் அவரேயன்றி வேறொன்றுமல்ல. அதனாலே சம்பந்தர் இறைவன் பிள்ளையார் வடிவெடுத்த நோக்கத்தினை,*

**பிடியதன் உருஉமை கொளமிகு கரியது**
**வடிகொடு தனதடி வழிபடு மவர்இடர்**
**கடிகண பதிவர அருளினன் மிகுகொடை**
**வடிவினன் பயில்வேலி வலமுறை பிறையே**

*என்றும், அருணகிரிநாதர், "சிவனருள் மயமானவன் முருகன்" என்பதனால் தன் திருப்புகழை முருகன் அவதாரத்தின் மீது பாடியிருந்தார். குமரகுருபரரும்,*

**கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்**
**குருபரனென் றோர்திருப்பேர் கொண்டு - திருநோக்கால்**

***(கந்தர் கலிவெண்பா-24)***

*என்று சிவனே உயிர்களை அருள்பாலிப்பதற்காக பல்வேறு வடிவங்களில், அருட்காட்சிகளைக் கொடுத் தருளினார் என்றனர். எனவே, சைவர்கள் அம்மன், பிள்ளையார், முருகன் போன்ற வடிவமெல்லாம் பெயர் வேறுபாடு மட்டுமேயன்றி, பரம்பொருள் ஒருவனே என்ற உண்மையை அனுபவத்தால் உய்த்துணர்ந்தவர்கள் ஆவர்.*

*இனி, சைவர்கள் உயிரின் ஈடேற்றமென்பது பலநிலைகளினூடாகப் படிப்படியாகவே அடைய முடியும் என்பதனை அனுபவத்தால் உணர்ந்து, சமய நெறிகளை வகுத்துள்ளனர். இந்நிலையின் முதற்படியாக ஆலயங்கள் அமைகின்றன. சைவக் கோவில்கள் அனைத்தும் சரியை, கிரியை வழிபாட்டில் மக்களை வழிப்படுத்தும் வகையிலே எழுப்பப்பட்டனவாம். கோவில்களில் வைக்கப்பட்டிருக்கும் இறையின் திருமூர்த்தங்களை இறைவனாகவே பாவனை பண்ணி வழிபட்டு வருகையில், காலப்போக்கில் பக்தன் தான் இறைவனென நம்பி வழிபட்ட திருமேனியை தன்*

உள்ளே நிலைநிறுத்தப் பழகிக் கொள்கிறான். அதனால் அவனது ஆன்மசிந்தனையில் மாற்றம் இடம் பெறுகின்றது. அப்பொழுது கோவில்களுக்குச் சென்று திருமேனிகளில் மனம் ஒன்றவைக்கும் நிலைக்குப் பதிலாகத் தனது உள்ளத்திலேயே கோயிலைக் கட்டித் தானே பூசைகளை நிகழ்த்தும் நிலை உருவாகின்றது. இதனைத் திருமூலர்,

உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சிவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே

என விவரித்தனர். இந்நெறியைக் கிரியை என்பர். திருநாவுக்கரசர் முதலில் கோவில், கோவிலாகச் சென்று புறப்பூசை நெறிகளில் நின்ற ஒருவராவர். அதன்பின் அவருக்கேற்பட்ட உயிரின் பக்குவ நிலை அவரை உள்முகமான பூசைகளில் வழிப்படுத்தியிருந்தது. அதனால் முதலில் அவர் சரியை வழிபாட்டில் இருக்கையில்

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
 நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
 பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையினாற் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
 சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி என்றும்
 ஆரூரா என்றென்றே அலறா நில்லே

எனத் தன் புறக்கருவிகள் கொண்டு இறைவனை வழிபட்டிருந்தவர் ஆவர். ஆனால் இந்த வழிபாடு

அவரை அடுத்த நிலையான உள்பூசை நெறியான கிரியை நெறிக்கு எடுத்துச் சென்றிருந்தது. அப்பொழுது, அவர் தன் உடலெனும் ஆலயத்தினுள்ளே, இறைவனுக்கு இலிங்கம் அமைத்து, வழிபடும் நிலை கைகூடக் கூடியதாய் இருந்தது. இந்நிலையேற்பட்ட பின் திருநாவுக்கரசர், திருமூலரைப் போலவே தனது புதிய அனுபவ நிலையை,

**காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக**
**வாய்மையே தூய்மையாக மனமணி இலிங்கமாக**
**நேயமே நெய்யும்பாலா நிறையநீர் அமையஆட்டிப்**
**பூசனை ஈசனார்க்குப் போற்றஇக் காட்டினோமே**

என்று எடுத்துக் கூறியிருந்தார். பூசலார் தன்னுள்ளே கட்டியிருந்த கோவில் பற்றி, இறைவனே எடுத்துக் கூறியிருந்தார் என்பதும் இங்கு நினைவு கூரத்தக்கது.

இவ்வாறு இறைவழிபாட்டில் ஆலயங்களே பக்தனை நெறிப்படுத்துவதற்கு ஆரம்பப் படிகளாக அமைகின்றன. அதற்காகவே எம் சமூக நலன் விரும்பிகள் ஊர்கள் தோறும் ஆலயங்களை அமைத்து மக்களை இறை வழிபாட்டில் நெறிப்படுத்தி வந்துள்ளார்கள். இவ்வாறு உருவாக்கப்பட்ட கோவில்களில் சைவாகம நெறிப்பட்ட வழிபாடுகள் நாள்தோறும் இடம்பெறுதல் அவசியமாகும். அதுவும் பிறவுயிர்களை வருத்தாது இலகுவிற்கிடைக்கும் பூவும்* நீரும், புகையும், ஒலியும், காற்றுமே சிறந்த பூசைப் பொருள்களாம்.

---

*இப்பூசைப்பொருட்கள் அனைத்தும் ஐம்பூதத்தின் வெளிப்பாடுகளே. பூ, இலை, புல் முதலான பூசைப் பொருட்கள் மண்ணை அடையாளப்படுத்தும் பொருட்களாவன.*

கோவிலிற் திருமேனிகளை நிலை நிறுத்தியபின் அன்புடன் இவை கொண்டு பூசைகளை ஒழுங்காக நிறைவேற்றுவது, தினமும் சூரியன் குறிப்பிட்ட நேரத்தில் தோன்றி உயிர்களை ஊக்கமுறச்செய்வது போன்றதாகும். இப்பூசைகள் தவறின், நாட்டு மக்களும், மன்னனும் கேடுறுவர் என்பதனைத் திருமூலர்,

**முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்**
**மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்**

என்பதனோடு, பக்தியின்றிச் செய்யும் பூசைகளினால், மன்னனுக்கும், நாட்டிற்கும் அழிவுண்டு என்றும் வலியுறுத்தினார். இதனை,

**பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றன்னை யர்ச்சித்தால்**
**பேர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்**
**பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாமன்றே**

என்று கூறுவதன் மூலம் உணரலாம். கடந்த காலங்களில் தென்மதுரை, கொற்கை எனப் பல அழிவுகளைச் சந்தித்த தமிழகம், வடமதுரையிலும், கோவில் பூசைகளைப் பக்திசிரத்தையற்று வெறும் பிழைப்பிற்காக பூசைகளைப் பொறுப்பேற்றிருந்த வடநாட்டுக் குருமார்களிடம் கையளித்திருந்தது. அதனால் மூவேந்தர்களும் தமிழக வரலாற்றில் மறையலானார்கள். ஈழத்திலும் தமிழ் மன்னர் ஆட்சிகள் இழந்து போகும் நிலையில் மக்களும் வேரற்ற மரங்கள் போல் சாய்ந்தார்கள் என்றுதான் கருத வேண்டியுள்ளது.

இருப்பினும், இன்று புலம்பெயர் நாடுகளில் தமிழர்கள் சைவத்தை தம் வாழ்வுடன் இணைத்துக்

கொண்டு பல ஆலயங்களை எழுப்பி வழிபாடுகளை மேற்கொண்டு வருகின்றார்கள். புலம்பெயர் நாடுகளில் மக்கள் அறிவினைக் கட்டிவிடும் பக்தி மேலீட்டினாற் தங்கள் சமய அனுஷ்டானங்களை மேற்கொண்டு வருவதனைச், சில அறிவுபூர்வமாகச் சிந்திப்போர் இவை அவசியம்தானா? என்று கருதுகின்றனர். ஏற்கனவே குறிப்பிட்டது போல் முதல்நிலையிலுள்ள மக்களுக்கு புறக்கருவிகளாலான சேவைகளே செய்ய முடிகின்றது. அதிலும் சிலரின் பக்தியானது அறிவைக் கட்டுப்படுத்திய பக்தியாக மிளிர்கின்றதனையும் நாம் சீர்தூக்கலாம். சைவம் வளர்ந்த தமிழக நாட்டுப் புறக்கோவில்களோ அல்லது நகரப் புறக்கோவில்களோ பரந்த வெளிப்பிரகாரங்களைக் கொண்டனவாம். அதனால் அங்கு திருவிழாக்களில் திரளும் மனிதக் கடலிற்கு அக்கோவில் வளாகங்கள் இடமளிக்கின்றன. இத்திருவிழாக் காலங்களில் இறைவனை எழுந்தருள வைத்து, நாட்டிற்கு அருள்பாலிக்க வைக்கும் தேரிழுத்தல்களும், அவற்றைத் தொடர்ந்து புரள்வாரையும், இன்னிசை செய்வாரையும், காவடி எடுப்பாரையும், கற்பூரச்சட்டி எடுப்பாரையும், முள்காவடி எடுப்பாரையும் பிறபக்தர்களால் மிகவும் ஆழ்ந்த உட்நோக்கினைக் கொண்டவர்கள் எனப் பார்க்கப்படுகின்றார்கள். ஒருவன் இறைவனுக்காக எத்தகைய உடற்துன்பங்களையும் அனுபவிக்கத் தயாராக இருக்கின்றான் என்பதுவே இதன் உட்கிடக்கையாகும். ஆனாலும் இறைவனுக்காக கண்ணைப் பிடுங்கிய கண்ணப்பனாருக்கு இவர்கள் நிகராகமாட்டார்கள். ஆனால், புலம்பெயர் நாடுகளில் கிறித்தவமும், இஸ்லாமும் இறைவன் புகழைக் கீர்த்தனைகள் மூலமாகப் பாடுதல்,

மற்றும் விழுந்து மண்டியிட்டுத் தம் இயலாமையைக் காட்டுதல் போன்றவற்றினைக் கூட்டுப்பிரார்த்தனைகள் மூலம் வெளிக்காட்டுபவர்களாவர். ஆனால் புலம்பெயர் வாழ் தமிழர்கள் சாதாரணமாகக் கோவில்களுக்கு தத்தம் நேர வசதிப்படி, மற்றும் ஆன்மீகத் தேவைப்படி செல்பவர்கள். ஆனால் திருவிழாக்காலங்களில் 'இறைவனுடைய திருநாட்கள்' என்றவுடன் எல்லா வற்றையும் ஒதுக்கி விட்டு, அத்திருவிழாக்களில் கலந்து இறையருளைப் பெறவேண்டுமென்ற துடிப்புடையவர் களாக இருக்கின்றார்கள். மனிதனை அறிவு ஆட்படுத்துவதை விட மனமே அதிகம் ஆட்படுத்தும் வல்லமை கொண்டதாகும். எனவே, இறைவனின் திருவிழாக்காலங்களில் கலந்து கொள்வது பக்தர்களுக்கு மிக, மிக இலகுவானதாகும். ஆனால் அறிவுபூர்வமான நூல்களைப் படிப்பது, அல்லது தியான வழி உடலையும், மனத்தையும் கட்டிப் போடுவதென்பது மிகக் கடினமானதாகும். உலகியலில் உடலால் செய்யக்கூடிய தொழில்களுக்கு மனிதவளம் அதிகம் இருப்பினும், அறிவினால் செய்யப்பட வேண்டிய தொழிலுக்கு சிலரே முன்வருவர். அதுபோலவே, திருவிழாக்காலங்களில் இறைவழிபாடுகளில் பங்குபற்றுவதென்பது, வருடத்தில் ஒரு சில நாள்களே ஆவன. அதனாலே திருவிழாக் காலங்களில் மக்கள் தவறாது பங்குபற்றி வருகின்றார்கள் என்பதே உண்மை. அதனுடன் போட்டி போட்டுத் தேரின் கயிறுகளை இழுக்கின்றார்கள். அன்றைய பொழுது முழுக்க இறைவன் சேவையில் அவர்கள் பொழுது கழிந்த பின் அவர்களையறியாமல் அவர்களிடம் ஒரு பெரும் திருப்தியேற்படுகின்றது.

இதுவரை ஆராய்ந்து காட்டியதன்படி அன்பு கொண்டு இறைவனை நாள்தோறும் வழிபடுதலோடு, திருவிழாக்காலங்களில் ஆடியும், பாடியும், அழுதும், புரண்டும் வழிபடும் சரியை வழிபாடானது சைவத்தின் உயிர்நாடியாகும் என்பது புலனாம். இதனையே மாணிக்கவாசகரும்,

**இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்**
**இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்**
**பின்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்**
**தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்**
**சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்**

*(திருப்பள்ளி எழுச்சி)*

என்றனர். நாமும் பரம்பொருளான இறைவனுக்கு எடுக்கும் திருவிழாக்காலங்களில் மனிதக்கடலெனத் திரண்டு, அவனைப் போற்றி உய்வோமாக!



# இறைவன் படைப்பில் பெண்மை

இவ்வுலகில் வாழ்கின்ற எல்லா ஆண்களையும், எல்லாப் பெண்களையும் பெண்களே பெற்றெடுக்கின்றனர். இப்பணிக்காக இவர்கள் தம் கருப்பையில் பத்து மாதங்கள் வளரும் வகையில் தன் பொக்குள் கொடியூடாக ஊட்ட மளிக்கின்றனர். அதனால் ஒரு குழந்தையானது பூரண வளர்ச்சிபெற்று ஒரு ஆண்குழந்தையாகவோ அல்லது பெண் குழந்தையாகவோ பிறக்கின்றது. அக்குழந்தை பிறந்ததும் தெரிந்தோ தெரியாமலோ "அம்மா" என்று அழைத்து தன் தாயை மகிழ்ச்சிப்படுத்துகின்றது. பசு போன்ற மிருகங்கள் கூடத் தாயை "அம்மா" என்றொலித்தே அன்பு காட்டுகின்றன. இவ்வாறு "அம்மா" எனும் சொல் படைப்பை நினைவூட்டும் தெய்வீகச் சொல்லாதலினால், உலகத்தாயையும் நாம் "அம்மா" என்றே அழைக்கின்றோம். அதனால் தமிழில் "அம்மா" எனும் சொல் முதன்மையானதாகப் போற்றப்படுவ தொன்றாகும்.

இனி இவ்வாறு படைப்பின் பொறுப்பினை ஏற்றுக் கொண்டதனால் பெண்கள் தாய்மைக் குணங்களை இயல்பாகவே கொண்டவராவர். ஒரு குழந்தையின் உருவாக்கத்தில் ஆண்களின் பங்கு சிறிதளவாய் இருப்பதனாலே, அவர்களால் தம் பிள்ளைகளிடம் தாயைப் போல் அன்பு காட்டவும், பராமரிக்கவும் முடியாதுள்ளது. இனி ஆணின் உடல் அமைப்பும், இயக்கமும் கூட வேறுபாடுடையனவாகவே அமைக்கப் பட்டுள்ளன. அதனால் பெண்கள் மனோவலிமையுடைய வர்களாகவும், ஆண்கள் உடல்வலிமையுடையவர் களாகவும் காணப்படுகின்றார்கள். விவிலியவேதம் இறைவன் ஆணாகிய ஆதாமைப் படைத்து அவனைத் தூங்கச் செய்து விட்டு, அவனது விலாஎலும்பொன்றினை எடுத்துப் பெண்ணாகிய ஏவாளைப் படைத்து அவனிடத்தில் கொடுத்தார் எனும் (ஆதியாகமம் 2, 21-23)

தமிழர் மதமான சைவம் படைப்புத் தத்துவத்தினை ஆழமாக நோக்கி, அனுபவ வாயிலாக சமத்துவமான தொரு படைப்புத் தத்துவத்தினை வலியுறுத்தி நிற்கும். இவற்றுள் குறிவழிபாடு (இலிங்க - யோனி) படைப்புத் தத்துவத்தினை அருவுருவ வடிவில் உணர்த்தி நிற்பதாகும். இதன் பின் மறைந்திருக்கும் படைப்பின் பெருமையினை உணர்ந்து கொள்ள முடியாத ஆரியர்கள் முதலில் எள்ளி நகையாடியிருந்தனர். அதாவது இவ் இலிங்க - யோனி வழிபாடுடையோர் எம் வேள்விகளை வெல்ல முடியாதவர்களாட்டும் (இருக்குவேதம் VII 21 - 5) என்று கூறுவதன் மூலம் தம் எதிர்ப்பை வெளியிட்டிருந்தனர். அதாவது இவ்வழிபாட்டினை வெறும் ஆண் - பெண் குறிவழிபாடென்றே இவர்கள் கருதினார்கள். உண்மை

யென்னவெனில் உலகப் படைப்பில் இறைவனும், அவரது சக்தியான இறைவியும் சமபங்காளிகளேயாவர். இதனைத் தொடர்ந்தே சிவ - சக்தி கலந்த வடிவங்களைப் படைப்பின் அடிநாதங்களாக ஏற்றுக் கொள்ளலாயினர்.

இதனையே புறநானூறு,

**பெண்உரு ஒருதிறன் ஆகின்ற அவ்வுருத்**
**தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்**

*(கடவுள் வாழ்த்து)*

என்றும், ஐங்குறுநூறு,

**நீலமேனி வாலிழை பாகத்து**
**ஒருவன் இருதாள் நிழற்கீழ்**
**மூவகை உலகும் முகிழ்த்தன முறையே**

*(கடவுள் வாழ்த்து)*

திருமூலரும்,

**இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்**
**நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்**
**படங்கொடு நின்றஇப் பல்லுயிர்க் கெல்லாம்**
**அடங்கலும் தாமாய்நின் றாடு கின்றாரே**

*(திருமந்திரம் 2768)*

எனப் போற்றினர். ஆனால், மாணிக்கவாசக சுவாமிகள் இறைவன், உத்தமியை உடலில் பாதியாகக் கொண்டிருப்பது உலகத்தோர் உலக இயக்கத்தைத் தொடர்ந்து வைப்பதற்காகவெனவும், பின் இந்த போகிகள் யோகிகளாக

வேண்டுமென்பதற்காக யோகி வேடம் பூண்டார் எனவும் இருவேட தத்துவங்களையும் போற்றுவர்.

இதனை,

பாகமதி லுத்தமியை வைத்தல்பழ தென்றாய்
போகமுல குக்கருள் புரிந்தருள வென்றே
மாகமுகி லொத்தகுழன் மங்கையொ டிருந்தான்
யோகமுயிர் கட்டுதவயோகவுரு வானான் சாழலோ

*(திருவாசகம்)*

என்று கூறுமுகத்தால் உணரலாம். இதனையே சிவஞான சித்தியாரும்,

போகியாயிருந் துயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்
யோகியா யோமுத்தி உதவுகல லதுவு மோரார்

என்று கூறியருளினார். பட்டினத்தடிகளும்

பாவையுடன் இருந்த பரமயோகி

*(மும்மணிக்கோவை)*

என்று சிவ - சக்தி கலந்த திருமேனியின் பெருமையினைப் போற்றியிருந்தார். இதுவரை நாம் ஆராய்ந்ததிலிருந்து சைவர்கள் சிவத்திற்கிணையாகவே சக்தி வழிபாட்டினையும் மேற்கொண்டனர் என்பது புலனாம்.

தமிழர் சமயக் கோட்பாடுகள் உயரிய மனித சமூகத்தை உருவாக்கப் பெண்மையின் பங்களிப்பின் முக்கியத்துவத்தினை நன்கு உணர்ந்திருந்தனர். அதனாலே பெண் குழந்தை முதல் மூதாட்டி

வரை அனைவரையும் "அம்மா" என்றழைத்துப் போற்றுமியல்புடையவராவர்.

இந்தப் பின்னணியில் உருவாகிய காரைக்காலம்மை யார், இல்லறத்தில் வளர்த்திருந்த அவரது ஆன்மீகம், அவரை அவரது கணவரிடமிருந்து பிரித்த பொழுது தளரவில்லை. மாறாக இறைவனிடம் தனக்குப் பிற ஆண் களால் காமுறும் கோலமற்ற வகையில் பேய் வடிவைக் கேட்டுப்பெற்று தன் ஆன்மீகத்தை வளர்த்திருந்தார்.

சங்க காலத்தில் வாழ்ந்திருந்த ஔவையார் அரசர்களுக்குப் பாராட்டுகள் தெரிவிக்கும் பாக்களை அல்லது அறிவு புகட்டும் பாக்களை அல்லது சமாதானப் பயணங்களை மேற்கொண்டு ஏற்படுத்திய பாக்களை எமக்கு விட்டுச் சென்றுள்ளார். இவருக்குப் பரிசாக அதியமான் உயிர்காக்கும் நெல்லிக்கனியைப் பரிசாக அன்பளிப்புச் செய்திருந்தான் என்பதனால், அரச சபைகளில் பெண்கள் கௌரவிக்கப்பட்டு, ஆதரிக்கப் பட்டிருந்தமை புலனாம்.

இரண்டாவது ஔவையார் சைவ சமய நெறியை நன்னெறிப்படுத்தும் வகையில் புதுமைப்படுத்தியிருந்தார் என்றும் அறிகின்றோம். இவர் முதலாம் குலோத்துங்க சோழன் காலத்தவர் ஆவர்.

இவ்விரு ஔவையாரையும் தவிர இன்னோர் ஔவையார் சுந்தரமூர்த்தி நாயனார், மற்றும் சேரமான் பெருமான் காலத்தில் வாழ்ந்தவர் ஆவர். இவ்வாறு இந்த மூன்று ஔவையார்களும் பெண்கள் சமூகத்தில் உயரிய

நிலையில் வைத்துப் போற்றப்பட்டார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாக உளர்.

இவ்வாறு இறைவனின் படைப்பில் பெண்மையின் முக்கியத்துவம் தமிழர் வாழ்வில் ஒரு சிறப்பான இடத்தில் வைத்துப் போற்றப்படினும், அறியாமை காரணமாக பெண்களை அவமதிக்கும் சமூகங்களும் உள. ஆனால் உலகளாவிய அளவில் 19ஆம் 20ஆம் நூற்றாண்டுகளிலே தான் அனைத்துப் பெண்களும் ஆணுக்குச் சமமாகத் தன்னை முன்னேற்றிக் கொள்ளக்கூடிய வாய்ப்புகளைப் பெறலாயினர். குறிப்பாக முதலாம், இரண்டாம் உலப் போர்களில் இவர்கள் பல்துறைகளிலும் ஆற்றிய பணிகள் அளப்பரியன. அதன் பின்னரே அரசியலில் இவர்கள் புகும் வாய்ப்பினைப் பெற்றுக் கொள்ளலாயினர். பெண்கள் கல்வியறிவு பெற்று பல சாதனைகளைப் புரிந்த பின்னரே இன்று உலகம் விழிப்படைந்துள்ளது. தமிழர் சமயக் கண்ணோட்டத்தில் உயரிய நிலையிலிருந்த பெண்மைக்கு இன்று சமூகத்திலும் பலப்பல உயரிய பணிகள் கிடைக்கப்பெறும் வாய்ப்புகள் உள. ஆனால், பழந்தமிழர் வரலாற்றில் பெண்கள் சமய வாழ்விலும், சமூக, அரசியல் வாழ்விலும் உயர்வாக போற்றப்பட்டிருந் தார்கள் என்பதற்குக் காரணம் இறைவன் படைப்பில் பெண்கள் சமபங்காளிகள் என்பதனை உணர்ந்திருந் தமையாலேயாம்.



# இடையறாது சுழலும் பூமியின் உள்ளும் புறமும் மறைந்து கிடக்கும் மின்காந்த அலைகளும், இன்றைய விஞ்ஞான தொழில்நுட்ப வளர்ச்சிகளின் இரகசியங்களும்

பூமி காந்தத் தன்மையுடைய கோள் என்பதனை முதன் முதலாக அறிவுறுத்தியவர் பௌதிகவியலாளரான வில்லியம் கில்பேர்ட் (William Gilbert *1544 - 1603*) என்பரே ஆவர். இதனைத் தொடர்ந்து செய்து வந்த ஆய்வுகளின்படி பூமி மட்டுமன்றி, மற்றக் கோள்களும் மின்காந்த இயல்புகளைக் கொண்டிருப்பதனாலே நீள்வடிவிலான ஒரு பாதையில் சூரியனைச் சுற்றிச் சுழல்கின்றன என்ற உண்மையும் அறியப்படலாயிற்று. சிறப்பான ஆய்வுகள் நாம் வாழும் பூமிமீதே செய்யப்பட்ட பொழுது, பூமியின் குறுக்காக ஒரு பெரிய காந்தத்தட்டு உள்ளதென்றும், அது பூமத்திய ரேகையிலிருந்து வெவ்வேறு பாகையில் வேறுபட்டு இருப்பதாகவும்

அவதானிக்கப்பட்டுள்ளது. பூமி சரிவாக இருப்பதனால் வட தென் துருவங்களில் சமாந்தரமாக இருப்பதில்லை. அதாவது 23 1/2° பாகை சாய்வாக இப்பகுதி சுழல்கின்றது என்பதும் புலனாகின்றது. உண்மையில் நாம் பூமியின் சுழற்சிக்கம்பு என்று குறிப்பிடுவது ஒரு கற்பனைக் கம்பையேயாம் (An Imaginary rod).

பூமியின் உட்பகுதியின் மத்தியிலுள்ள இரும்பு, மற்றும் நிக்கல் (Nickel) எனும் உலோகக் குழம்புகள் அதிக வெப்பத்துடன் இருப்பதனாலே பூமிக்குச் சுழற்சியும் இயல்பாகின்றது. ஒரு குறிப்பிட்ட நீள்வட்டவடிவிலுள்ள பாதையில் இவையனைத்தும், இடையறாது சுழல்வதனால் அவற்றின் சுழற்சிக்குக் கால அளவைகளும் உள. அதனோடு பூமியின் சுழற்சியானது அதன் புறச் சூழலில் ஒரு சக்தி மிக்க காந்தவெளியையும் உருவாக்குகின்றது. அதனால் பூமி முழுமையாக ஒரு காந்தக் கோளமாகவே தொழிற்படுகின்றது. ஆனால் பூமியின் புறப்பகுதி நீராகவும், உட்பகுதி திடமாகவும் இருப்பதனால், இவ்விரண்டு பகுதிகளும் வேறுபட்ட விகிதத்திலும் சுழல்கின்றன. இச்சுழற்சிகளின் பயனாக மின்சக்தியும் உருவாகுகின்றது.

நாம் எம் கண்களால் பூமியையும், மற்றும் சூரியன், முழுமதி, வெள்ளிகள் என்பவற்றையும் காண முடிகின்றது. ஆனால் இவையும், எம் கண்களுக்குப் புலனாகாத மற்றக் கோள்களும் எப்போது? எவ்வாறு? உருவாகின என்பதனை நாமெவரும் கண்டதில்லை. ஆயினும் இப்பிரபஞ்சம் அனைத்தும் 4.6 பில்லியன் (billion) ஆண்டுகளுக்கு முன் ஏற்பட்ட ஒரு பாரியவெடிப்பினைத் (A Big Bang Theory)

தொடர்ந்து உருவாகின என ஆய்வாளர்கள் கருதுவர். ஜெர்மானிய தத்துவஞானியான இமானுவல் கன்ட் (Immanual Kant) என்பவர் 1775ஆம் ஆண்டளவில், தட்டுவடிவில் சுழன்று கொண்டிருந்த காற்றுகளினாலும், தூசிகளினாலும் சூரியக் குடும்பக் கோள்கள் உருவாகியிருக்கலாம் என்று கருதியிருந்தார். இக்கருத்தினை ஏற்றிருக்கும் இன்றைய ஆய்வாளர்கள் ஈர்ப்புச் சக்தி இவற்றை ஒருங்கிணைத்ததனால் உருவாகிய சக்தி சூரியனை வெப்பமடையச் செய்ததென்றும், பின் சூரியன் 5,000 மில்லியன் ஆண்டுகளுக்குள் ஒளிப்பந்தாக உருவாகிற்று என்றும் கருதுவர். அதே சமயம் சுழன்று கொண்டிருந்த பிற தட்டுகள் குளிர்மையடைந்து, பல கோள்களாக உருவாகிச் சூரியனின் ஈர்ப்புச் சக்தியினால் (காந்த ஈர்ப்பு) இவையனைத்தும் நீள்வட்ட வடிவில் சுழலத் தொடங்கின. இவை முதலில் வெப்பமுடையனவாக இருந்தபொழுதிலும் சூரியனைப் போல் வெப்பமடையக்கூடிய வகையில், இவற்றில் ஹெலியத்தினை (Helium) உருவாக்கக்கூடிய ஹைட்ரஜன் துகள்கள் (Hydrogen Atoms) இல்லாமையால் இவை காலப்போக்கில் குளிர்மையடைந்தன. இவ்வாறு குளிர்மையடைந்த கோள்களில், பூமியில் மட்டுமே உயிர்கள் உருவாகக்கூடிய சூழல்கள் ஏற்படலாயின. இவற்றுள் முழுமதியின் ஈர்ப்பு விசையானது மிகக்குறைவானதனால் அங்கு காற்று, மழை என்பன ஏற்படவில்லை. அதனால் அங்கு பூமியைப் போன்ற சூழல் மாற்றங்கள் ஏற்பட முடியவில்லை.

பூமி தன் அச்சிலிருந்து சூரியனை ஒருமணித்தியாலத்திற்கு 10,400 கிலோமீட்டர் வேகத்தில் சுற்றுகின்றது. இவ்வாறு சூரியப் பாதையை முழுமையாகச்

சுற்றி முடிக்க பூமிக்கு 365 1/4 நாள்கள் எடுக்கின்றன. இவ்வாறு ஒரு காலக்கணிப்பிற்குட்பட்டுச் சுழலும் பூமியில் முதலில் உயிர்கள் வாழக்கூடிய சூழலை ஆயிரக்கணக் கான ஆண்டுகள் தொடர்ந்து பெய்த மழை, பாறைகளின் சூட்டினைத் தவிர்த்ததோடு, மீண்டும் ஆவியாகி மழையாகப் பெய்யலாயிற்று. அதனால் ஆழ்கடல்களும், ஆறுகளும் உருவாகிப் பூமியின் 70%வீதப் பகுதியினை நீரினால் நிரப்பியிருந்தன. இப்புதிய பருவப்பெயர்ச்சிச் செயற்பாட்டின் போது ஹைட்ரஜன் (Hydrogen), நைட்ரஜன் (Nitrogen), கார்பன் டை ஒக்சைட் (Carbondioxide), ஒக்சிஜன் (Oxygen), ஆர்கன் (Argon), ஹெலியம் (Helium), ஓசோன் (Ozone) முதலான ரசாயனங்களும் உருவாகி, மழைநீருடன் அடித்துச் செல்லப்பட்ட பொழுது கடல்கள் உயிரூட்டமுள்ள நீர்க்கலவைகள் கொண்ட நீரினைப் பெறலாயின. அதனால் உயிர்கள் முதலில் கடல் நீரினுள் உருவாகத் தொடங்கின. காலப்போக்கில் நீருடன் காற்று, வெப்பம் என்பன சேர்கையில் பூமி மீது தாவரங்களும் துளிர்க்கலாயின. இவ்வாறு பூமியில் உருவாகும் உயிர்களைச் சூரியனின் கதிர்கள் தாக்காவண்ணம் ஓசோன் (Ozone) படலமும் உருவாகியிருந்தது. அதனோடு பூமியிலிருந்து 30,000 மைல்கள் தூரத்திற்கு வானம் மின்னாற்றல் கொண்ட துணுக்குகளைக் கொண்டதாகவும் அமையலாயிற்று.

இந்த வான்வெளி, ஒரு காந்தவெளி (Magnetosphere) என அழைக்கப்படுகின்றது. சூரியனிலிருந்து வெளிவரும் உயிராபத்தான கதிரின் வெப்பத்திலிருந்து பூமியிலுள்ள உயிர்களைக் காப்பதற்காகவே இந்தக் காந்தவெளி

உருவாகலாயிற்று. பூமியின் உட்பகுதியிலுள்ள இரும்பு, நிக்கல் என்பவற்றின் இடையறாச் சுழற்சியினால் இந்த காந்தவெளி ஏற்பட்டிருப்பதனால், இது தங்குதடையின்றி இடம்பெறும் ஒரு நிகழ்ச்சியாகும்.

பூமியில் உயிர்கள் வாழும் சூழலானது (Biosphere) நீர், நிதானமான அளவு சூரிய ஒளி என்பனவற்றைக் கொண்டிருத்தல் வேண்டும். ஏனெனில் தாவரங்கள் சூரியஒளி, மற்றும் நீரைத் துணை கொண்டே உயிரூட்டம் பெறுகின்றன. அதனாலே இவற்றை உணவாகக் கொள்ளும் பிற உயிர்கள் ஊட்டம் பெறமுடிகின்றது. எனினும் இந்த இயற்கைச் சூழலானது பூமியெங்கும் ஒரே வகையில் அமையவில்லை. சூரியவெப்பம், மழை வீழ்ச்சி என்பன இடத்திற்கிடம் வேறுபடுவதனால், அந்தந்த இடங்களின் சூழல்களுக்கேற்ற வகையிலே உயிர்கள் உருவாகியுள்ளமையை நாம் அவதானிக்க முடிகின்றது. ஆனால் மனிதன் மட்டும் இயற்கைச் சூழலைத் தனக்கேற்ற வகையில் மாற்றிக் கொள்ளும் நிலையில், பூமியின் இயல்புகள் மாறிக்கொண்டிருப்பதனையும் நாம் அனுபவிக்கின்றோம் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

இதுவரை பூமியின் தோற்றம், அதன் படிப்படியான இயல்புகள் உருவாகிய நிலைகள் என்பன பற்றி மேலோட்டமாகப் பார்த்திருந்தோம். அதன்படி மின்காந்த அலைகளை அது உள்ளும், புறமும் கொண்டிருப்பதுவே அதன் சிறப்பியல்பாக அறியப்பட்டுள்ளது. இதனை அறியவும், பயன்படுத்தவும் மனிதனுக்கு நீண்டகாலம் தேவைப்பட்டிருந்தது. அதுவும் தற்கால விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளெல்லாம் முதலில் தற்செயலாக ஏற்பட்ட

நிகழ்ச்சிகளாகவே அறிமுகமாகியிருந்தன. காலப்போக்கில் பலர் இவற்றின் பின்னணிகளை ஆராய்வதற்காக தங்கள் மனங்களை ஒருமுகப்படுத்தி பல உண்மைகளை உலகறியச் செய்தார்கள். அவர்களுள் ஒரு சிலரின் ஆய்வுகளையும், கண்டுபிடிப்புகளையும் ஆராய்தல் அவசியமாகும்.

1837ஆம் ஆண்டில் அமெரிக்கரான சாமுவேல் மோர்ஸ் (Samuel Morse) கம்பிகளினூடாகச் (Wire) செல்லும் மின்னோட்டத்தினை நிறுத்துவதற்காகக் காந்தத்தினை (Magnet) உபயோகித்தார். அப்பொழுது அந்தக் கம்பியின் மறுமுனையில் ஒரு ஒலி (beep) உருவாகியிருந்தது. அந்த ஒலியை விளங்கிக் கொண்டு, அதனை அதன் மூலச் சொல்லாக மாற்ற முடிந்ததனால், இந்த ஒலிக் குறியீட்டினை மோர்ஸ் குறியீடு (Morse Code) என அழைத்தனர். ஆயினும் 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேதான் மின்சாரம் எதிர்கால மனிதனின் முக்கிய சக்தியாக அமையுமென்ற நம்பிக்கை உருவாகலாயிற்று. இந்த வகையில் 1879ஆம் ஆண்டில் அமெரிக்கரான தோமஸ் ஆல்வா எடிசன் (Thomas Alwa Edison) மின்விளக்குகளைக் கண்டுபிடித்திருந்தார். அதேசமயம் ஆங்கிலேயரான யோசப் சுவன் (Joseph Swan) என்பவரும் மின்விளக்குகளைக் கண்டுபிடித்திருந்தார் என்பதும் குறிப்பிடத்தக்கன. எடிசன் தொடர்ந்து செய்து வந்த ஆய்வுகளின் விளைவாக அவரால் மின்உற்பத்தி யந்திரத்தினையும், மின்சேமிப்புக் கலனையும் (Storage Battery) உருவாக்க முடிந்தது. இதன் பயனாக 1880இல் லண்டனிலும், நியுயோர்க்கிலும் மின்சக்தி நிலையங்கள் உருவாக்கப்பட்டு, முதன்முதலாக மின்விளக்குகளுக்கான மின்சார விநியோகம் செயற்படுத்தப்பட்டது. 1821ஆம்

ஆண்டில் மைக்கல் பாரடேயின் (Michael Faraday) மின்உற்பத்திக் கருவி உருவாகி இருந்தமையும் இதற்கு ஒரு முன்னோடி முயற்சியாக இருந்ததெனலாம். இதனைத் தொடர்ந்து நீர்வீழ்ச்சிகளின் சக்தியினை உருளைகள் (turbines) மூலம் விசைப்படுத்தி மின்சாரத்தினை உருவாக்கல் அல்லது அலகுகளையுடைய காற்றாடிகளை இயக்கி மின்சாரத்தை உருவாக்கல் என்பன பரவலான மின் உற்பத்திச் செயற்பாடுகளாக உருவாகியிருந்தன.

1954ஆம் ஆண்டில் இன்றைய சமூகங்களை முழுமையாக உள்வாங்கக்கூடிய ஒரு புதிய தொழில் நுட்பத்தினை மூன்று அமெரிக்கர்கள் (Pearson, Fuller, Chapman ஆகிய மூவர்) இணைந்து சிலிக்கன் துணுக்குகள் (Silicon Cells) மூலம் சூரிய ஒளியை மின்சாரமாக மாற்றும் வகையில் ஒரு சூரிய மின்கலனை (a solar battery) உருவாக்கியிருந்தனர். இதற்கு முன்னோடியாக அன்ரொயின் லவோசியர் (Antoine Lavoisier) எனும் விஞ்ஞானி 1774ஆம் ஆண்டிலேயே சூரிய வெப்ப சக்தியைக் கண்ணாடிகளில் ஒருங்கிணைக்கும் கருவியினை (Solar Furnace) உருவாக்கியிருந்தார் என்பதும் குறிப்பிடத் தக்கது. இவ்வாறு புதிய மின் உற்பத்தி முறைகள் முழுமையாகத் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியாத நிலையில், அணுசக்தியினைக் கொண்டு மின்சார உருவாக்கம் என்பது 2000ஆம் ஆண்டளவில் பாவனைக்கு வரலாயிற்று. ஆனால் பங்குனி 2011இல் யப்பானில் இடம்பெற்ற பூமியதிர்வும், ஆழிப்பேரலைகளின் கொடுமையும் அங்குவாழ் மக்களை மட்டுமன்றி, உலக மக்களையும் அதிர்ச்சிக்குள்ளாக்கியிருந்தது. இதனைத் தொடர்ந்து புக்குசீமா (Fukushima) அணுஉலையும்

கதிர்வீச்சுகளை சுற்றாடலில் வெளியேற்றியிருந்தது. இந்நிலையின் பின் ஜெர்மனி போன்ற சில நாடுகள் அணுசக்தி மின்சார உற்பத்தி நிலையங்களை படிப் படியாக மூடிவிடத் தீர்மானித்துள்ளன என்பதும் கவனத்திற் கொள்ளத்தக்கது. தமிழ்நாட்டிலும் கூடங்குள அணு மின் உலையை மூடிவிடுமாறு மக்கள் போராட்டம் தொடர்வதும், இங்கும் மக்களின் விழிப்புணர்வினை நாம் உணரக்கூடியதாக உள்ளது. (இது ஒரு புதிய சகாப்தத்தை தொடக்கியிருந்தாலும், நீடிக்க முடியாது இடையிலேயே கைவிடப்படும் நிலைக்குத் தள்ளிவிடப்பட்டுள்ளது.) இனி, மின்சக்திப் பாவனையின் வரலாற்றில் மார்சல் டிப்ரெஸ் (Marcel Deprez) என்பவர் அதிவீச்சுக்கூடிய இணைப்பு நிலையங்களை உருவாக்கியிருந்தார். அதனால் மின்சேமிப்பு மையங்களிலிருந்து நகரங்களுக்கு மின்சாரம் வழங்கப்படும் முறை உருவாகலாயிற்று. இந்த நாள் முதல் உலகளாவிய அளவில் மின்சாரம் மனித வாழ்விற்கு பல்வேறு வழிகளிலும் நன்மைகளைப் புரியும் சக்தியாக மாறலாயிற்று.

இவ்வாறு மின்சாரப் பாவனை மேலோங்கவே, இன்று வீடுகளுக்குள் இருந்து கொண்டே மனிதர்கள், உலகின் எந்த மூலையில் வாழ்பவனுடனும் நேரடியாகப் பார்த்து உரையாடி வருகின்றான். (இதற்கு இரு பக்கத் தாரும் மின்சாரவசதிகளுடன் கூடியதும், காட்சிப்படுத்தி உரையாடக்கூடிய வசதிகளைக் கொண்ட தொலைக் காட்சி, அல்லது கணினி அல்லது கைத்தொலைபேசி களையும் வைத்திருத்தல் அவசியமாம்.) ஆனால் 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் செப்புக் கம்பிகளினூடாகவே சிறு குறிப்பிட்ட பகுதிகளுக்குத் தொலைபேசிகள்

ஏற்படுத்தப்பட்டிருந்தன. இதன் முதன் முயற்சியாக 1851ஆம் ஆண்டில் ஆங்கிலக் கால்வாய்க்கும், பிரான் துறைமுகமாகிய கலைக்கும் (Calais) மற்றும் டோவர் துறைமுகத்திற்கும் (Dover) இடையே தொலைதொடர்பு கம்பிகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. அதனைத் தொடர்ந்து 1866ஆம் ஆண்டில் கடலினுள் பதிக்கப்பெற்ற குழாய் களினூடாகத் தொலைத்தொடர்புக் கம்பிகள் அத்திலாந்திக் கடலைத் தாண்டியும் தொடர்புகளை ஏற்படுத்தியிருந்தமை மின்சாரம் மனித வரலாற்றில் ஏற்படுத்திய ஒரு பெருந்திருப்புமுனையாகும். ஆனால் இன்றோ மின்சாரமில்லாவிடில் மனிதனுக்கு வாழ்வில்லை என்ற வகையில் மின்சாரத்தின் தொழிற்பாடுகள் எல்லைகள் கடந்து சென்றுவிட்டன. அதாவது பூமியில் மட்டுமன்றி, மற்றக் கோள்களிலும் இதுபோன்ற மாயமான்கள் இருக்கின்றனவா என்று தேடும் வகையில் மின்சாரத்தினால் தொழிற்படுத்தப்படும் கருவிகள் பல விண்ணிலும் செலுத்தப்பட்டுள்ளன. அன்றாட வாழ்விலோ தொலைபேசி, தொலைக்காட்சி, மின்னஞ்சல், தொலைநகல், கணினிகள், கைத்தொலைபேசிகள் எனப் பலப்பல வடிவங்களில் மின்சாரம் மனிதனை அடிமைப் படுத்தி வைத்திருக்கின்றது. கைத்தொலைபேசிகளை வைத்திராத மனிதர்களைக் காண்பதும் அருமையே.

இவையனைத்தையும் மறைமுகமாக இருந்து கொண்டு தொழிற்படுத்தும் சிலிக்கன் (Silicon) என்பது யாது? அதன் பங்கு என்ன? என்பதனை அறிவதும் மிக அவசியமானதாகும். அமெரிக்கரான ஜக் கில்பி (Jack Kilby) 1959ஆம் ஆண்டில் நூற்றுக்கணக்கான சிலிக்கன் துணுக்குகளை ஒரு தட்டில் வைத்து மின்னோட்டத்தினை

அவற்றிடையே பாய வைத்திருந்தார். அதாவது பாறைகளிலும், மணல்களிலும் கிடைக்கும் சிலிக்கன் துண்டுகளைப் பண்படுத்திய தட்டில் வைத்து மின்னோட்டத்தினைச் செலுத்தும்பொழுது, அத்துணுக்கு சிப்ஸ் (Chips) எனப்படுகின்றது. இந்த சிலிக்கன் நுண் தட்டானது (A Wafer of Silicon) *1960* ஆம் ஆண்டு முதலாகக் கணினிகளின் மூல உறுப்பாகவிருந்து, அதனைச் செயற்படுத்தி வருகின்றது.

இந்தச் சிலிக்கன் தட்டானது ஆயிரக்கணக்கான வெவ்வேறு வழிகளைக் கொண்ட மின்னோட்டத்துடன் இணைக்கப்பட்டிருக்கும். இது பிளாஸ்டிக்கினால் மூடப்பட்டு, பீட் (Feet) எனப்படும் நாடாக்களினால் (Wire Feet) கணினியுடன் பொருத்தப்படும். கணினியினுள் நிகழ்ச்சி நிரல்களையோ அல்லது செய்திகள் முதலான வற்றையோ பதிவு செய்யும் பொழுது, அவை சிலிக்கன் துணுக்குகளினுள் உள்ள ஒலிப்பதிவுகளினால் (transistors) ஒன்று (*1*) எனும் இலக்கமாகவோ அல்லது சூனியம் (*0*) எனும் இலக்கமாகவோ அல்லது எதிர்மாறான இலக்கமாகவோ ($1^S$ into $0^S$ or Vise Versa) மாற்றப்படுகின்றன. இந்த இலக்கக் குறியீடு, எண் குறியீடு (Binary Code) எனப்படும். அதாவது இந்த எண்குறியீடு செயற்படும் நிலை (on ஆக இருக்கையில்) *1* ஆகும். பின் செயலிழக்கும் நிலை (off ஆக இருக்கையில்) *0* ஆகும். இதனை இரு அடிப்படை (*2* base) என்பர். இவ்விரு குறியீடுகளையும் சுருக்கமாக பிட் (bit) என அழைப்பர். இந்த பிட் துணுக்குகள் கணினிக்குள் சுற்றிவரும் பொழுது எட்டு எண்கூட்டங்களாகச் *00111001* சுற்றி வரும் நிலையில் அவை பைட்ஸ் (bytes) என அழைக்கப்படுகின்றன.

இவ்வாறு எண்குறியீட்டு துணுக்குகளாகிய இவையே ஒரு கணினியினுள் சிறிய அளவில் (Computer chips) மின்னலை களைச் சேமித்து அவற்றைத் தொழிற்படுத்துகின்றன. இவ்வாறு இவை தொழிற்படுகையில் பஸ்கள் (buses) எனப்படும் மின்னோட்ட வழிகள் இத் தரவுகளை எடுத்துச்செல்கின்றன. இந்த பஸ்கள் (buses) எட்டு மின்னோட்ட வழிகளைக் கொண்டவை. இவ்வழிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு எண்குறியீட்டினை எடுத்துச் செல்லும். எனவே எட்டு எண் குறியீட்டுத் தொகுதி களான பைட்டை (00111001) இந்த எட்டு மின்னோட்ட வழிகளும் எடுத்துச் செல்கின்றன என்பது புலனாம். காலப்போக்கில் கணினிகள் எட்டுவழிகளுக்கு மேலாக அமைக்கப்படுவதனால், அவை பெருந்தரவுகளை எடுத்துச் செல்வனவாக வளரலாயின. அதனால் 16, 32, 64 ஆக வழிகள் வளரும் நிலையில் முறையே 2, 4, 8 பைட்டு களை (bytes) எடுத்துச் செல்லும் வீச்சுக் கொண்டனவாம். இந்நிலை அதிகரிக்கவே ஒரு பெரும் தொகுதி பிட்டுகளின் (A Megabit - Mb) நினைவுத்திறன் என்பது எட்டு மில்லியன் பிட்டுக்களாகும். அதே சமயம் ஒரு பெரும் தொகுதி பைட்டுகளின் (A Megabyte - MB) நினைவுத்திறன் என்பது ஒரு மில்லியன் பைட்ஸ்கள் ஆகும். இந்த அடிப்படையிலேயே இவற்றின் வளர்ச்சி நிலைகள் அதிகரிக்க அவற்றின் செயற்பாடுகளும் அதிகரிக்கின்றன என்பது புலனாம்.

இன்று உலகளாவிய அளவில் கணினிகள் ஒவ்வொன்றும் தொடுக்கப்பட்டு செய்திகளைப் பரிமாறக் கொள்ளக்கூடிய இன்னோர் தொழில்நுட்ப வளர்ச்சிக்கு

மோடம் (Modem) வித்திட்டுள்ளது. இது கணினிகளின் செய்திப்பரிமாற்றங்களின் வேகத்தை அதிகரிக்குமுகமாக உருவாக்கப்பட்ட சிறிய பெட்டியாகும். இது 15cm (6 அங்குலம்) நீளமுடையதாய் ஒரு தொகுதி மின்கம்பி களைக் கொண்ட நாடாவைக் கொண்டு தொலைபேசி வழியுடன் இணைத்து, கணினிக்குள் பொருத்தப் பட்டிருக்கும். இவ்வாறு மின்னலைகளுடன் இணைக்கப் படும் பொழுது இதன் வேகமும் மின்துணுக்குகளின் வேகமுறையிலேயே (Bits Per Second (BPS)) அளக்கப்படும். அதிவீச்சுக்கொண்ட மோடம் ஒரு வினாடிக்கு (Per Second) 56,000 துணுக்குகளை அனுப்பவல்லதாகும். இவ்வாறு கணினிக்கு வெளியே இணைக்கும் மோடத் தினை விட (An external Modem) உள்ளே இணைக்கப்படும் மோடம் (An Internal Modem) அட்டை வடிவில் இவையிரண்டின் கலவையான (PCMCIA) இன்னோர் மோடமும் உண்டு.

கணினியின் உள்ளே பஸ்களின் வழியுடன் (Buses) இணைப்பதே உள்ளிணைப்பு மோடமாகும். இந்த இணைப்பு செலவுகள் குறைந்தது. ஆனால் குறைபாடு களைக் கொண்டதாகும். அட்டை வடிவான மோடம் தேவையான பொழுது கணினியினுள் செலுத்தவும், பின் வேறு தேவைகளுக்காக வெளியே எடுத்து விடவும் முடியும். ஆனால் இது சற்று நுணுக்கமான வேறு தொழிற் பாடுகளைக் கொண்டதனால் இதற்கு அதிக வரவேற் பில்லையெனலாம். இவ்வாறு மோடங்களின் வேகமான தொழிற்பாடுகள் வழமையான தொலைலபேசி வழிகளினூ டாகப் பயன்படுத்தப்பட்டு வரப்படினும், இன்னும்

அதிகவேகமான வழிமுறைகளில் தொழில்நுட்பங்கள் அதிகரிக்கும் வழியில் முயற்சிகள் எடுக்கப்படலாயின.

மேலே அவதானித்த மோடத்தினை அதிவீச்சாக இயங்கக்கூடிய இன்னோர் தொழில் நுட்ப வளர்ச்சியினை எடுத்துக்காட்டும் வகையில் எண்குறியீட்டு இணைப்பு வலயம் (Intergrated Services Digital Network - ISDN) அறிமுகமாயிற்று. சாதாரண தொலைத்தொடர் மின்கம்பி வழிகளினூடாகச் செயற்படும் மோடத்தினைக் காட்டிலும் இது வேகமானதும், உடனடித் தொடர்புகளை ஏற்படுத்தக் கூடியதுமாகும். ஏனெனில் இதற்கென பொருத்தப்படும் கருவியொன்றினைப் (A Terminal Adapter) பொருத்தி ஒரு கணினியிலிருந்து வேறோர் கணினிக்கு எண்குறியீட்டு முறையில் செய்திகள் தொலைத்தொடர்பு வழிகளினூடாக அனுப்பப்படுகின்றன. அதனோடு இந்த முறையீடு மிகவும் கூடிய வேகத்தில் செய்திகளைப் பரிமாறக்கூடிய பான்ட்வித்துகளையும் (A very high bandwith) கொண்டதாக இருக்கும்.

இன்று கணினிகளை இணைக்கும் வலயமானது மூன்று வழிகளில் இணைக்கப்படுகின்றது. முதலாவது, வழமையான தொலைத்தொடர் (The Telephone Network) வழிகளின் ஊடாகவும், இரண்டாவதாக, கண்ணாடி இழைகளின் ஒளிவீச்சை உள்ளடக்கிய நாடாக்களினூடாகவும், மூன்றாவதாக, செய்மதிகளினூடாகவும் இணைக்கப்படுகின்றன. அதனால் இந்த வேறுபட்ட மின்னோட்ட வழிகளின் வேகத்தினடிப்படையில் ஒரு விநாடிக்கு அனுப்பும் செய்திகளின் வேகமும் மாறுபடும். இவ்வழிகளில் அதிவீச்சாகச் செய்தியைப் பரிமாற்றம்

செய்யும் சக்தியையே பான்ட்வித் சக்தி (Bandwith Capability) என்பர்.

இனி, கணினிக்குள் மின் காந்த அலைகளின் பிறதொழிற்பாடுகள் பற்றி ஆராய்தலும் அவசியமாம். கணினிக்குள் தரவுகளையும், கட்டளைகளையும் பாதுகாக்கவும், அவற்றைச் செயற்படுத்தவும் இருபிரிவுகள் உள. முதலாவதாகக் கணினியினுள் நிரந்தரமாகப் பொருத்தப்பட்டிருக்கும் உலோகத்தட்டுகள் அதிக தரவுகளைப் பேணி வைத்திருக்கவல்லன. இவற்றுள் மென்தயாரிப்புகள் (Software) எனப்படும் நிகழ்ச்சி நிரல்கள் ஒரு கணினி செய்ய வேண்டியவற்றை படிப்படியாகவும், கணித அளவிற்கேற்கவும் அறிவுறுத்துகின்றன. இந்த நிகழ்ச்சி நிரல்களைத் தயாரிப்பவர்கள் தரவுகளை ஒரு கணினி எவ்வாறு செயற்படுத்த வேண்டும் என்று தீர்மானித்த பின் அதற்கேற்ற வகையில் தயாரிக்கும் ஆற்றலைக் கொண்டிருப்பர். அதனோடு கணினியின் செயற்பாட்டிற்கான கட்டளைகளை அதற்கென உருவாக்கப்பட்ட மொழிகளிலே அறிவுறுத்துவர். (எடுத்துக்காட்டாக COBOL, Visual Basic d BASE IV போன்ற சிறப்புக் கட்டளை மொழிகளைக் கையாள்வர்.) இவை பாவனையாளருடைய தேவைகளுக்கேற்ப பலதரப்பட்டன. அதனால் பாவனையாளர்கள் அவை ஒவ்வொன்றின் ஒழுங்கமைதிகளை அறிந்திருத்தல் வேண்டும். (The Operating System, Word Processing Program, Graphics Program, Database Program, Spread Sheet Program, Games Program என்பன அவற்றுள் சிலவாம்.) அதனால் மென்தயாரிப்புகளை (Software) ஒரு கணினியின் மின்மூளை (Electronic Brain) என்பர். இந்த மென்தயாரிப்புகளில் மிக முக்கியமான

இயங்கு சக்தியாக இருப்பது செயற்பாட்டு முறை (The Operating System) ஆகும். இன்று பாவனையிலுள்ள கணினிகள் 1995ஆம் ஆண்டிற்குப் பின் உற்பத்தி செய்யப்பட்டிருப்பின் அவை காட்சித் திரை 95 (Windows 95) அல்லது காட்சித் திரை 98 (Windows 98) என்பதனை தமது செயற்பாட்டு முறையாகக் கொள்கின்றன. இந்த வகையில் காட்சித் திரைகள் நடுநிலை வகிக்கும் பணிகளைச் செய்கின்றன. கணினியினைத் திறந்தவுடன் காட்சித்திரைகள் தாமாகவே இயங்கத் தொடங்குகின்றன. எம்மூளை எண்ணங்களையும் செயற்பாடுகளையும் வழிநடத்துவது போல காட்சித் திரைகள் கணினியின் செயற்பாடுகளை வழிநடத்தும் பணியை மேற்கொண்டுள்ளன எனலாம்.

இவ்வாறு மென்தயாரிப்புகளின் பணி இருக்கையில் கடினத்தட்டுகள் (Hardware) எனப்படும் கணினியின் பிற கருவிகளின் பங்களிப்பு என்ன? என்று ஆராய்தல் அவசியமாம். தனியே மென்தயாரிப்புகளோ அல்லது கடினத்தட்டுகளோ இருப்பின் அவற்றினால் எப்பயனுமில்லை. ஆகையினால் இரண்டும் இணைந்தே ஒரு கணினியினைத் தொழிற்படுத்தி வருகின்றன என்பது புலனாம். ஒரு கணினியின் உடலானது கடினத் தட்டுகளாலே ஆக்கப்பட்டதொன்றாகும். ஆகையினால் மென்தயாரிப்புகளும், செயற்பாடுகளுமே உடலாகிய கணினியின் பிற உறுப்புகளை வழிநடத்திச் செல்லும் மூளையும், எண்ணங்களும் அதன் உள்ளுறுப்பு களாகின்றன. இந்தக் கணினியின் வெளி உறுப்புகளாக கணினியின் முகப்புத் திரை (The Monitor), எலி உருவில் வடிவமைக்கப்பட்டுள்ள தேடல் கருவி, (The Mouse -

இதனை அழுத்தி சுட்டிக்காட்டும் சிறிய நேர்க்கோட்டுக் குறிமூலம் பாவனையாளர் தேடும் விடயங்களைத் திரையிட்டுக் காட்டும்.) அச்சுத் தட்டு, (The Keyboard - இது தகவல்களை திரையில் அடித்து கட்டளைகளைப் பிறப்பித்தல் போன்ற தொழிற்பாட்டுடன் இன்னும் பல கட்டளைகளை நிறைவேற்றவல்ல திறப்புகள் (Keys), பலவற்றைக் (Important Command Keys) கொண்டதாகும்.) கணினியினுள் தயாரித்தவற்றை பதிப்பிக்கவல்ல யந்திரம் (Printers), பேச்சுகளைச் செவிமடுக்கவல்ல ஒலிபெருக்கி (External Speakers) என்பனவும் வெளியே இணைக்கப் படுகின்ற கருவிகளாம். இவற்றோடு மோடம் (Modem) காட்சிகளைத் திரைபோட்டுக் காட்டவல்ல படப்பிடிப்புக் கருவி (Video Cameras), உருவங்களையோ அல்லது நிழற்படங்களையோ ஊடுருவிப் பிடித்து கணினிக்குள் வரைபடங்களாக மாற்றியமைக்கக்கூடிய கருவி (Scanner), எண்குறியீட்டு படப்பிடிப்புக் கருவி (Digital Cameras), கணினி விளையாட்டிற்குரிய மகிழ்ச்சிக்கம்பு (Joy Sticks), பேச்சுகளைக் கணினியினுள் பதிவு செய்யக்கூடிய நுண்ணிய பேச்சுக்கருவி (Microphones), முதலானவையும் மேலதிகமாக ஒருவரின் தேவைக்கேற்ப கணினியுடன் இணைக்கப்பட்டு வருகின்றன.

இன்று ஊடகத்துறை என்பது உலகின் எந்த மூலையில் ஒரு அரசியல், சமூக, பொருளாதார நிகழ்ச்சிகள் இடம்பெற்றாலும், அக்களத்தின் உண்மை நிலைகளை உடனேயே காட்சிப்படுத்தி அறிவிக்கும் வகையில் வளர்ந்து விட்டுள்ளது. (இதற்கு அந்தந்த நாடுகளின் அனுமதி பெறப்பட வேண்டும். இலங்கையரசு தமிழர்

இனப்படுகொலைகள் நடைபெற்ற பங்குனி - சித்திரை - வைகாசி 2009ஆம் ஆண்டுக் காலப்பகுதியில் ஐ.நா.தொண்டர் பணியாளர், மற்றும் ஊடகவியலாளர் (சிங்களவர் உட்பட) எவரையும் அனுமதிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.) சிறப்பாக இந்த ஊடகத் துறையினருக்கு அதிகம் உதவும் வகையில் இன்று நடைமுறையில் இருக்கும் தொழில்நுட்பமானது பாவனையாளர் எண்குறியீட்டு உதவி (Personal Digital Assistants - PDAS) என்பதாகும். இது கணினியுடன் தொலைபேசி வழிகள் இணைக்கப்பட்டதொன்றாகும். இதனை எடுத்துச் செல்கையில் ஒருவர் தொலைபேசி, இணையதளங்களுடன் தொடர்புகளை ஏற்படுத்திக் கொள்ள முடியும். அதனோடு மின்னஞ்சல் தொடர்பு களை ஏற்படுத்துதல், மற்றும் படக்காட்சிகள் போன்ற வற்றை தமது நிறுவனங்களுக்கு உடனடியாக அனுப்பவும் இவர்களுக்கு முடிகின்றதெனலாம். இதுபோன்றே செய்தி அறிவிப்பாளர்கள் சிலர் தம் உடலில் அணியக்கூடிய சிறிய கணினி மூலம் (Wearables) பல தகவல்களைப் பரிமாறிக் கொள்கின்றனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

இவற்றையெல்லாம் விடச் சிறிய வடிவில் உருவாக்கப் பட்டுள்ள கைத்தொலைபேசிகள், மேற்குறிப்பிட்ட அனைத்தினையும், நிறைவேற்றிக் கொள்ளக்கூடியதாக இன்று வளர்ந்துள்ளன. இவற்றுள் இணைக்கப்படும் மோடம் இணையத்தளங்களை இணைத்து விடுகின்றது. ஏறக்குறைய 160 எழுத்துகளைக் கொண்ட செய்தி களையும் எடுத்துச் செல்ல வல்லது. ஆரம்பத்தில் 1980களில் உருவாக்கப்பட்ட கைத்தொலைபேசிகள் ஒலியலைகளின் குறியீடுகள் மூலமே (Analog Signal -

Signals in the form of Waves) தொழிற்படுத்தப்பட்டன. இதனைத் தொடர்ந்து இடம் பெற்ற தொழில்நுட்ப வளர்ச்சியினால் 1990களில் எண்குறியீட்டு முறை அறிமுகப்படுத்தப்பட்டது. இதன் மூன்றாம் கட்ட வளர்ச்சி நிலை தொலைபேசிகள் 3G தொலைபேசிகள் (3G Phones) எனப்பட்டன. இவை மிகவீச்சுக் கொண்ட மின்காந்த அலைகள் மூலம் தொகுப்பாக செய்திகளை (General Packet Radio Service - GPRS) மிகவேகத்தில் அனுப்பவல்லன.

இவை $56^{k}$ மோடத்தின் ($56^{k}$ Modem) வேகத்தைக் காட்டிலும் எட்டு மடங்கு அதிக வேகமுடையனவாம். அதனோடு எந்த நேரத்திலும் இணையத்தளத்துடன் உடனடித் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளக்கூடியது மாகும். மின்கம்பிகளினூடாக ஓடும் மின்னலை ஓட்டத்தினால் தொடர்பு இவைக்கு இல்லாவிடினும், இவை குறியீடுகளை அழுத்தும் பொழுது அவை தொடுப்பு நிலையங்களுக்கு (Base Station) உடனடியாகச் சென்று விடுகின்றன. பின், அவை கோரும் குறியீட்டு எண்களுடன் தொடர்புபடுத்தப்படுகின்றன. தற்பொழுது கைத்தொலைபேசிகளை சிறிய செய்மதி (Small Satellites) ஊடாகத் தொடர்புபடுத்தி விடவும் திட்டங்கள் உள. இவ்வாறு எம் கண்களுக்குப் புலனாகாத மின்காந்த அலைகளின் வேகம் எவ்வளவு என அளந்துகாட்டும் கருவிகளாகவும் நாம் இவற்றைக் கருதலாம். உண்மை யென்னவெனில் இதன் மின்வீச்சுக் கதிர்கள் பல பாவனை யாளர்களைப் பாதித்திருப்பின், அவை வர்த்தக நலன் கருதி அதிகமாகப் பிரசாரப்படுத்தப்படுவதில்லை. அண்மையில் ஐ.நா. உலக சுகாதார நிறுவனம்

கைத்தொலைபேசிகள் பலருடைய மூளைப் புற்றுநோய்க்கு காரணமானவை என அறிவித்திருந்தமை இங்கு குறிப்பிடுவது ஏற்றதாகும்.

இனி, பூமியின் இரகசியங்களில் ஒன்றான இந்த மின்காந்த அலைகளை மனிதன் எவ்வாறு இன்றைய சமூகப் புரட்சிக்குக் கையாண்டு வருகின்றான் என்பதனை நோக்குவோம். மின்காந்த அலைகள் சூரியஒளி, அல்லது ஊடுருவிப்பாயும் கதிரியக்கம் (X-Rays) போல இயங்குவதாகும். சூரியன் என்ற விளக்கு ஒன்றே பூமியனைத்திற்கும் வெளிச்சம் தரவல்லது என்பதனால் அதன் சக்தியை நாம் கணக்கிட்டுக் கொள்கிறோம். ஆனால் எம் காதுகளுக்கு எட்டுகின்ற ஒலியானது, முதலில் ஒலி அலையாக உருவாகிக் காற்றினூடே எம் காதினை அடையும் பொழுது அது சத்த ஒலியாகின்றது. நாம் அதுபற்றி என்றும் சிந்தித்ததில்லை. இன்று விஞ்ஞான ஆய்வுகள் தான் இந்த அலைகளின் வேகத்தினைப் பல்வேறு பரிமாணங்களிற் செயற்படுத்தி, தன் தேவைகளுக்குப் பயன்படுத்தி வருகின்றன.

வானொலி, தொலைத்தொடர்பு, தொலைக்காட்சி, கணினி எனப்படும் அனைத்துத் தொழிற்பாடுகளுக்கும் மின்காந்த அலைகளையே பயன்படுத்தி வருகின்றனர். இதற்காக மின்காந்த அலைகளை வீச்சுடன் வெளியேற்ற வல்ல (Large Radio Transmitters) தொலைத்தொடர் கோபுரங்கள் கட்டப்படுகின்றன. இவற்றின் மூலம் அதிவேகமாக மட்டுமின்றி காதினுள் பொருத்தப்படும் கருவிகளுக்கு வேண்டியளவு சிறிய அளவு வேக ஒலிகளும் அனுப்பப்படுகின்றன. ஒலி அலைகளும் ஒருவகைக் குறியீடு

என்பதனால், அவற்றை எண்குறியீடாகக் கருவிகள் மூலம் (Analog Digital) மாற்றியமைக்கப்படுகின்றன. பின் இந்த எண்குறியீட்டினை ஒலி அலைகளாக (A Digital Analog) மாற்றும் முறைகளும் செயற்பட்டு வருகின்றன. இந்த எண்குறியீட்டிலும் அதிவேக முறைமூலம் (International Standard Digital Network) ஊடகவியலாளர்கள் நிழற்படங்கள், காட்சிப்படங்கள், வரைபடங்கள் ஆகியவற்றை எண்குறியீட்டுருவில் மாற்றி (Digital Images) தத்தம் நிறுவனங்களுக்கு அனுப்பி வருகின்றார்கள். இவ்விதமே கணினிகளும், நிழற்படங்களை உலகளாவிய அளவில் அனுப்பும் பொழுது, அவற்றை எண்குறியீடாக மாற்றி அனுப்புகின்றன. அவை பின் குறிப்பிட்ட கணினி களுக்குள் செல்கையில் மீண்டும் காட்சிகளாகின்றன். இணையதள தொலைபேசி (The Internet Telephone) காட்சிப்பட தொலைபேசி (Video Phone) என்பனவும் இந்த அடிப்படையிலேயே ஒருவருக்கொருவர் நேராகப் பார்த்து உரையாடச் செயற்படுகின்றன. இணையதள உரையாடலுக்கு நுண்தொலைபேசி (Microphone) ஒரு சோடி ஒலிபெருக்கி (A Pair of Speakers) ஒரு ஒலிமட்டை (A Sound Card) என்பனவும் அவசியமாம்.

நாம் இதுவரை ஆராய்ந்ததன்படி காந்தக் கோளமான பூமியின் மின்காந்த அலைகளை எவ்வாறு மனிதன் பயன்படுத்திக் கொண்டான் என்பது புலனாகியுள்ளது. காலம் காலமாக மின்னல்கள் அடித்து மனிதர்கள் சாவைத் தழுவி வருகின்றார்கள். அது மனிதனின் உள்ளே உள்ள மின்காந்த அலைகளின் ஈர்ப்பினாலே தான் இடம்பெறுகின்றன என்ற உண்மையும் உணரப்பட்டிருந்தது. உடலிலுள்ள உயிரணுக்கள்

பொருளாகவும், இயக்க சக்தியாகவும் தொழிற்படுகின்றன. இச்சக்தியினை மின்னிகள் (Wave Energy) என்பர். அதனை அறிந்து கொண்ட பின்னரே ஒரு நோயாளியின் உடற்சக்தி வீழ்ச்சியடையும் பொழுது, மின்காந்த அலைகளினால் உடற்பகுதிகள் அழுத்திவிடப்பட்டு சக்தி தூண்டப்படுகின்றது. மனிதனின் மூளையிலிருந்து முள்ளந்தண்டினூடாக மின்காந்த அலைகள் மூலமே கட்டளைகள் பிறப்பிக்கப்பட்டு உடல் இயக்கம் நடைபெறுகின்றது என்பது மருத்துவர்கள் கண்ட உண்மை. அண்மையில் (2011ஆம் ஆண்டில்) கார் விபத்தில் உடலின் கீழ்ப்பகுதி செயலிழந்த நிலையில், முள்ளந்தண்டின் கீழ்ப்பகுதியில் மின்காந்த அலைகள் செலுத்தப்பட்டு மேற்பகுதியுடன் இணைக்கப்பட்ட பொழுது, அந்த மனிதரின் கால் பகுதியின் தொழிற்பாடுகள் இயல்பாகின என அமெரிக்க மருத்துவர்கள் அறிவித்துள்ளனர். (இது B.B.C. செய்திப் பிரிவினரால் காட்சிப்படுத்தப்பட்டிருந்தது.)

இவ்வாறு பூமியில் அனைத்து உயிர்களின் இயக்கத்திற்கும் மின்காந்த அலைகளே உறுதுணையாயிருக்கின்றன என்பதும் இந்த நூற்றாண்டிலே தான் அறியமுடிந்தது. ஆனால் இத்தகைய மருத்துவ முறைகள் அனைத்தும் உடலில் 'உயிர்' இருக்கும் வரையே பலன் தரும் என்பது இன்னோர் உண்மை ஆகும். இதனை முழுமையாக விளங்கிக் கொள்ளாத மருத்துவர்கள் உயிர்விட்டுப் பிரிந்த பின் பிணமாகிக் கிடந்தவரின் முள்ளந்தண்டூடாக மின்காந்த அலைகளைச் செலுத்திய பொழுது, அங்கு மூளை, இருந்தும் அது தொழிற்படவில்லை. ஏனெனில் உயிர் என்பது உடலன்று. அது ஒருடலுடன் ஏன் சேர்கின்றது? ஏன் பிரிந்து செல்கின்றது?

என்பதனைச் சைவ சித்தாந்திகளே அறிவர். இந்த விடயம் விஞ்ஞான ஆய்வுகளுக்கு அப்பாற்பட்டதொன்றாகும். இந்த உண்மையைச் சித்தர்கள், துறவிகள், யோகிகள் என்போர் விஞ்ஞான ஆய்வுகள் எதுவுமின்றி, மனத்தினை உள்முகமாக ஒருமுகப்படுத்தியதனாலே உணர முடிந்தது. ஆனால் வெளியுலகில் மனத்தை ஒருமுகப்படுத்தி, ஆயும் விஞ்ஞானிகளுக்கு பௌதிகவியல் அறிவுகளே கைகூடலாயிற்று. எனவே, மின்காந்த அலைகள் பூமியின் இடையறாச் சுழற்சிக்கும், உயிர்களின் இயக்கத்திற்கும் உறுதுணையானதொன்றேயன்றி வேறொன்றுமல்ல.

இனி, மனித வடிவில் உருவாக்கப்படுகின்ற இயந்திர மனிதர்களும் (Robots) மனிதனுக்குச் சவாலாக முன்னேற்றமடைந்து வருகின்றனர். ஏற்கனவே வீடுகளில் சலவை யந்திரம், பாத்திரங்களைச் சுத்திகரிக்கும் யந்திரம் முதலானவற்றின் குறிப்பிட்ட பொறிகளை (Buttons) அமத்தியதும், அவை மின்சாரத்தின் மூலம் தவறில்லாமல் படிப்படியான முறையில் தொழிற்பட்டு வருகின்றன. இதேபோல தொழிற்சாலைகளிலும் யந்திரங்களே முழுமையாகத் தொழிற்பட்டு வருகின்றன. ஆனால் இன்று யந்திரமனிதனை உருவாக்கும் படிமுறையான முயற்சியில் வின்சி யந்திர மனிதன் (The De Vinci Robot) தூரத்திலிருந்து தொழிற்படுத்தும் மருத்துவரின் கட்டளைக்கிணங்க சத்திர சிகிச்சைகளைச் செய்கின்றது. வேறுசில சிபாரிசு செய்யப்பட்ட மருந்துகளை, மருந்தகத் திலிருந்து எடுத்து நோயாளருக்கு வழங்குகின்றன. இதனைத் தொடர்ந்து மனிதனைப் போல் சிந்தித்துச் செயற்படவல்ல செயற்கை விவேகம் (Artificial Intelligence)

கொண்ட மனிதனை உருவாக்கும் முயற்சியிலும் சில விஞ்ஞானிகள் ஈடுபட்டுள்ளனர்.

மனித மூளையைப் போல் தொழிற்படக்கூடிய நிகழ்ச்சிகளைக் கணினியில் தயாரிப்பது, அதற்கான மொழி உருவாக்கம் என்பனவும் கவனத்திற் கொள்ளப் பட்டுள்ளது. இந்தக் கணினி மனிதனின் செயற்பாடானது திரவத்தினை அழுத்தும் பொறிமுறையினால் (Hydraulic Engine System) கட்டுப்படுத்தப்படும் எனத் தெரிகின்றது. தற்பொழுது உருவாக்கப்பட்டுள்ள கணினி மனிதனின் மூட்டுகள் மின்கம்பிகள் மூலமே இயக்கப்படுகின்றன. இனிவரும் காலங்களில் சாதாரண மனிதனைக் காட்டிலும் சிறப்பாக இயங்கும் வகையில் கணினி மனிதனை உருவாக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்படு கின்றன. ஆனால் மனிதனிடமுள்ள அன்பு, இரக்கம், பரிவுகள் போன்ற உணர்வுகளை நாம் இவற்றிடம் எதிர்பார்க்க முடியாது. ஏற்கனவே மனிதர்களுடன் உரையாடிச் செயற்படும் கணினி மனிதர்கள் உருவாக்கப் பட்டுள்ளமையும் குறிப்பிடத் தக்கது. அமெரிக்காவில் சிந்தியா பிரசில் (Cynthia Breazeal) என்பவர் லியானாடோ (Leonardo) எனப்படும் அடர்த்தியான மயிர்கள் கொண்ட மனிதனை உருவாக்கியிருக்கிறார். இந்த லியானாடோ மனிதனுடைய முகத்தில் உணர்வுகளைத் தெரிவிக்கும் வகையில் முப்பத்திரண்டு (32) மின்னலைக் கருவிகள் பொருத்தப்பட்டுள்ளன. காலப்போக்கில் இந்த மனிதன் கண்களால் பார்க்கவும், காதுகளால் கேட்கவும், வாயினால் பேசக்கூடிய வகையிலும் அமைக்கப்படலாம் என்று தெரிகின்றது. இவற்றை சமூகக் கணினி மனிதன் (Social Robots) என்பர். இந்த வகையில் நெதர்லாந்திலும்

எயின்ஹறவன் பல்கலைக் கழகத்தில் (Eindhoven University) இமூ (emuu) ஐகட் (icat) எனும் இருவகையான சமூகக் கணினி மனிதர்கள் உருவாக்கப்பட்டுள்ளனர் என்பதும் குறிப்பிடத்தக்கது.

கணினி மனிதனை உருவாக்கும் நாடுகளிற் தென்கொரியாவும் முன்னணியிற் திகழும் நாடாகும். தென்கொரிய நாட்டுக் கணினி மனிதர்கள் 2020ஆம் ஆண்டளவில் வீட்டு வேலைகளுக்கு அமர்த்தப்படுவர் எனக் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது. தென்கொரிய நாட்டின் அரசும் 2007ஆம் ஆண்டில் கணினி மனிதனுக்காகிய ஒழுக்க விவரக் கோவையைத் (A Robot Ethics Charter) தாம் தயாரிப்பதாக அறிவித்திருந்தது. அந்த ஒழுக்காற்று விதிமுறைகளில், கணினி மனிதன் உருவாக்கப் பட்ட படிமுறை விவரங்கள், மற்றும் அவற்றின் தொழிற் பாடுகளும் விவரிக்கப்பட்டுள்ளன என்று தெரிகின்றது. விவேகத்துடன் இயங்கவல்ல இந்த இயந்திரங்களிலிருந்து ஏற்படக்கூடிய அபாயங்களைத் தவிர்க்குமுகமாகவும், மனிதர்கள் அவற்றைக் குறைகூறாமல் இருப்பதற்காகவும், இந்த ஒழுங்கு விதிகள் தயாரிக்கப்பட்டன என அறிவித்துள்ளனர்.

இவ்வாறு செயற்கையான வழிமுறைகளுக்கு மேலாகக் கணினி மனிதனை முற்று முழுதாக மனிதனைப் போலவே சிந்தித்துச் செயற்படவும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. பேராசிரியர் கெவின் வார்விக் (Prof. Kevin Warwick) என்பவர் வில்சிமித் படம் I இல் (The Will Smith Film I) இடம்பெற்ற கணினி மனிதனைப் போல் வீட்டு வேலைகளைத் தாமாகவே

சிந்தித்துச் செயற்படக்கூடிய சைபோர்களை (Cyborgs) இன்னும் பத்து வருடங்களில் உருவாக்க முடியும் என நம்பிக்கை வெளியிட்டுள்ளார். இவரது ஆய்வானது மனிதனின் மூளையிலிருந்து எடுக்கப்படும் திசுக்களை (Brain Cell) வளர்த்துக் கணினி மனிதனுக்குள் வைப்பதனால், அவை மனித உணர்வுகளைப் புரிந்து கொண்டு இயங்க வல்லன என்பர். அதனோடு இவர் தனது கையிலேயே மின்துணுக்கினைப் (Chip) பொருத்திக் கொண்டு தன்னையே சைபோர்க்கின் (Cyborg) தொழிற்பாடுகளைச் செய்விக்கும் பரிசோதனையாளனாகவும் ஆய்வுக்களத்தில் இறக்கியுள்ளார். இந்த சைபோர்க் அவரது மூளையின் கட்டளைப்படி மின்விளக்குகளைப் போடவும், தள்ளு இருக்கைகளைத் தள்ளவும் முடியும் என்றும் கருதுகின்றார். இக் கருத்துகளை இவர் பேர்மிங்காமில் (Birmingham) நடைபெற்ற கருத்தரங்கு ஒன்றில் தெரிவித்திருந்தார்.*

இதுவரை நாம் ஆராய்ந்ததன்படி புலனாவது என்னவென்றால், பூமியின் இயக்கத்திற்கும், மற்றும் உயிர்களின் இயக்கத்திற்கும் மட்டுமன்றி, உயிர்களைச் சூரியக்கதிர் இயக்கத்திலிருந்து உயிர்களைக் காப்பதற்கும் மின்னலைகள் அவசியமானவை என்பதேயாம். அது மட்டுமல்ல 4.6 பில்லியன் ஆண்டிற்கு முன் ஏற்பட்ட ஒரு மகாவெடிப்பின் போது ஒரு பெரிய கோள் வெடித்துச் சிதறியதனால் சிதறுண்ட கோள்கள் மீண்டும் ஒரு நீள்வட்டத்தில் திட்டமிடப்பட்டது போல் காந்த ஈர்ப்பினாலே தான் ஒழுங்காக ஓடிக்கொண்டிருக்கின்றன

* *Metro - 19, Oct 2010, p.27.*

என்பதும் புலனாம். காந்தமென்பது கண்ணுக்குப் புலனாகாத ஒரு ஓட்டசக்தியாகும். அது இரும்பு, நிக்கல் போன்ற உலோகங்களை இழுத்துக் கொண்டு, பிறவற்றைத் தள்ளிவிடும். ஏனெனில் பூமியின் நடுப்பகுதியிலுள்ள இவ்விரண்டின் வெப்பத்தினாலே பூமியைச் சுழல வைக்க முடிகின்றது என்பதனால் இவற்றின் உந்து சக்தியின் அளவினை நாம் மதிப்பிட முடிகின்றது. இன்று சிலிக்கன் துணுக்குகளினூடாக ஓடவிடப்படும் மின்காந்த அலைகளின் செயற்பாடுகளை மனிதன் பன்மடங்காக ஆக்கிக் கொண்ட பின்னரே அவனால் பூமியின் இரகசியங்களை மட்டுமன்றி, பிறகோள்களின் இரகசியங் களையும் ஓரளவிற்காகவாவது புரிந்து கொள்ள முடிந்ததெனில் மிகையாகாது. ஆனால், மனிதன் தேவைக்கு மீறி மின்னல் பாய்ச்சலில் பாய்வதென்பது மானிடத்தின் அழிவை நோக்கிய பயணம் எனில் தவறாகாது.

## உசாத்துணை நூல்கள்


1. Anna Clayborne & Mark Wallace, The Usborne Computer Dictionary, 1999, Usborne Publishing Ltd.

2. Larry Long, Nancy Long, Computer International Edition, Fourth Edition, 1996, Prentice Hall International.

3. Jane Shutter, Century of Change Communications, 1999, Heineman Library.

4. John.Fardon, Consultant Rodney Walshow, All about Planet Earth, 2002, Annes Publishing Ltd.

5. Jon Turney, Dilemmas in Modern Science, Technology, 2008, Evan Brothers Ltd.

6. Angus.J.Kennedy, The Internet The Rough Guide, 2000, Rough Guide Ltd.

7. Jon Richards, Communications.

8. Matt Turnet, e-Explore Earth Google, 2004, Dorling Kindersely Ltd.

9. Peter D.Riley, Cycles in Science Earth, 1998, Heineman Library.

10. Richard Wood (Consulting Editor), Great Inventions, 1995, Macdonald Young Books.

11. Reader's Digest, How to do just about anything on a computer, 2000, Reader's Digest Association Far East Ltd.

12. Salley Morgan, Behind Media Internet, 2001, Heineman Library Books.

13. தனபாக்கியம் குணபாலசிங்கம், சைவசித்தாந்தமும், விஞ்ஞான உலகமும், 2004, 2ஆம் பதிப்பு, மணிமேகலைப் பிரசுரம், சென்னை, தமிழ்நாடு.

14. ராஜேஷ்குமார், சித்தர்கள் பித்தர்களா? (இந்நூலை அனுபவித்தேன். சில உண்மைகள் தெளிவாக்கப்பட்டிருந்தன.)

ஓஒ




# 3011ஆம் ஆண்டில் [ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு] நம் தலைமுறையினர் எம்மைப்பற்றி முழுமையாக அறிந்து கொள்ள நாம் செய்யவேண்டியவை என்ன?

இந்த வினா என் சிந்தையில் எழுந்ததற்குக் காரணம் எம் மூதாதையர்கள் கடந்து போன காலங்களில், தமது பெருமைமிக்க வரலாறுகளைப் பதிவு செய்து தம் தலைமுறையினருக்குக் கையளிக்க வேண்டுமென்ற அக்கறையோ அல்லது ஆவலோ கொண்டிருக்கவில்லை என்பதனாலேயாம். உண்மையில் நாம் நம்ப முடியாத அளவிற்கு, அவர்கள் மிகச் சிறந்த ஆட்சியாளர்களாகவும், தமிழ்மொழியை வளர்க்கும் ஆசான்களாகவும் திகழ்ந்துள்ளனர். இவர்கள் தமிழ்கெழுகூடல்களை அமைத்து தமிழில் இலக்கியங்களைப் படைப்பதற்கு சிவனும், முருகனும் திருவிளையாடல்களைப் புரிந்து துணை நின்றனர் என்பதனை இக்கழக வரலாறுகள் எடுத்தியம்புகின்றன. இந்த மூன்று தமிழ்க் கழகங்களிலும் இவர்கள் யாத்த இலக்கியங்கள், வேறு எந்த மொழிகளிலும் இக்காலத்தில் எழுந்திருக்கவில்லை என்பது மறுக்க முடியாத உண்மையாகும்.

ஆனால் எவ்வளவுதான் நாம் எம் மூதாதையரைப் பற்றிப் பெருமை கொண்டாலும், முதலிரு கடல்கோள்களின் போது தமிழ்கெழுகூடல்கள் இயற்றிய இலக்கியங்களும் கடலுக்கிரையாகி விட்டன. எஞ்சிய நூல்களின் தகவல்களைக் கொண்டே அவர்களின் இலக்கிய முயற்சிகளை நாம் எடை போட முடிகின்றது. இதுவும் இறைவனின் திருவிளையாடலே. அறநெறி மனிதர் களிடையே தவறிப்போகையில், இப்படியான தண்டனைகள் அவர்களை நெறிப்படுத்தவே எனப் பிரளய வெள்ளக் கதைகள் பல எமக்கு அறிவுறுத்தியுள்ளன.

இனி, இக்கடற் கோள்களிலிருந்து தப்பிய மக்கள் புலம்பெயர்வுகளை மேற்கொண்டிருந்தார்கள். சிறப்பாக, தமிழகத்தின் வட பகுதிகளுக்குப் புலம் பெயர்ந்து வடமதுரையில் அரசமைத்து மீண்டும் தமிழ் வளர்த்திருந்தார்கள்.

இக்காலத்தில் இவர்கள் படைத்த இலக்கியங்களே இன்று எம் கைகளுக்கெட்டியுள்ளன. இந்நூல்களை ஆராய்கையில், உலக இயக்கத்தைத் தடையின்றி நடத்திக் கொண்டிருக்கும் அகத்திணை பற்றியே இவர்கள் அதிகம் நுணுகி ஆராய்ந்துள்ளமை, மனித இனத்திற்குப் பொதுவானதொன்றாகும். மற்று, ஆட்சி, பகை, போர், வெற்றி, தோல்விப் பலாபலன்கள் என்பனவற்றை புறத்திணை எனும் பகுதியில், தம் காலத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் கருவாகக் கொண்டு இலக்கியங்களை யாத்துள்ளார்கள். ஆனால் காலக் கண்ணாடிகளாகவும், எல்லையற்ற ஊடகங்களாகவும் இருக்கும் இந்த இலக்கியங்கள் தம் காலத்தைய அரசியல் சமூக

நிகழ்ச்சிகளைக் காலவடிப்படையில் வகுத்தும், பகுத்தும் பதிவு செய்யவில்லை என்பது பெரும் வரலாற்றுத் தவறாகும். அதனால் இலக்கியங்கள் பெருமளவில் உருவாகியிருந்தபொழுதும் பல வரலாற்று நிகழ்ச்சிகளை காலவரிசையற்ற அடிப்படையிலேயே நாம் கண்ணோட்ட மிட வேண்டிய நிலைக்குத் தள்ளப்படுகின்றோம். அதனால் இன்னமும் வரலாறற்ற மனிதர்களாகவே எம்மை அடையாளப்படுத்திக் கொள்கின்றோம். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட எம் மூதாதையர்கள் விட்ட தவறுகளை நாம் தொடர்ந்தும் விடக் கூடாது என்ற முன்னெச்சரிக்கை எம் எல்லோர் செயற்பாடுகளிலும் இருத்தல் வேண்டுமென்பதற்காகவே, இந்த விடயங்கள் குறிப்பிடப்படுகின்றன.

ஏனெனில், திருவள்ளுவருக்குப் பின் தமிழுலகம் ஏறக்குறைய அறுபது தலைமுறைகளையாவது கண்டிருக் கும் எனில் தவறாகாது. தமிழ் உலகம் இலக்கியத் துறையில் ஒரு பொற்காலத்தினை திருவள்ளுவர் காலத்திலே தான் அடைந்திருந்தது எனில் மிகையாகாது. மனித சமூகத்திற்கு வேண்டிய விடயங்களை ஆழமாகவும், அகலமாகவும் சிந்தித்து 1330 குறட் பாக்களை இலக்கணக் கட்டுக் கோப்பான ஈரடிச் செய்யுள்களால் இயற்றியிருந்தார். தமிழர்களின் அறிவுத்திறனை மதிப்பதென்றால் திருக்குறள் ஒன்றே போதுமானதாகும். இவர் நம்மில் எவரும் எப்பொழுதாவது சிந்திக்க முடியாத விடயங்களை யெல்லாம் தன் உயரிய சிந்தை கொண்டு அறிவுறுத்தினார். அதனால் இவரைப் பல்துறை விற்பன்னர் என்று போற்றியே தமிழக அரசு (கலைஞர் மு.கருணாநிதி ஆட்சிக் காலத்தில்) கன்னியாகுமரிக் கடலில் ஒரு

மாபெரும் சிலையை அவருக்கெடுத்திருந்தது. ஆனால் இவரும் கூடத் தான் யார்? தன் கல்விப் புலமை எவ்வாறு கிடைத்தது? அல்லது தான் வாழ்ந்திருந்த காலத்தில் அரசியல், சமூகப் பின்னணிகள் எத்தகையன என்று குறிப்பிட்டாரில்லை. இன்னும் சொல்லப்போனால் 'தமிழ்' எனும் சொல்லினைத்தானும் குறித்தாரில்லை. பொதுவாக இவர் மட்டுமன்றி, பல தமிழ்ப் புலவர்கள் தம்மை அடையாளம் காட்டிக் கொள்ள விரும்பினார்கள் இல்லை. இதன் விளைவு நாம் இன்று எதனையும் திட்டவட்டமாக உறுதிப்படுத்த முடியாமல், சான்றுகளைத் தேடுபவர்களாகவே இருக்கின்றோம். எம் மூதாதையர் தூர நோக்குடையவர்களாகச் செயற்பட்டிருந் தால், நாம் அவர்களைத் தேடியலையும் அவலம் இல்லாதிருந்திருக்கும் என்பதனை வரலாற்றுணர்வுடைய வர்களே உணர்வர்.

பழையன கழியட்டும் புதியன போற்றுவோம் என்று கழியவிட்ட காலங்களே நம்மைப் பார்த்து சிரிக்கின்றன எனில் மிகையாகாது. இன்னும் சொல்லப்போனால்

**யாதும் ஊரே யாவரும் கேளிர்**
**தீதும் நன்றும் பிறர்தர வாரா**

எனும் புறநானூற்றுப் புலவரின் மனிதநேயத்தை நம்பிய தமிழினம் படகோட்டியில்லாத நாவாய் கடலில் தத்தளிப்பது போல் தத்தளிக்கின்றது. இவர்களிடம் தஞ்ச மடைந்தவர்கள், இவர்களை அடக்கியாளும் நிலையிலிருக் கிறார்கள். தம் மண்ணின் வரலாறுகளை கால அடிப்படையில் எழுதி வந்திருந்தால், அந்த மண் பிறர் கைக்குப் போக வரலாறு இடமளித்திருக்காது.

முதலிரு கடல்கோளின் பின் பாண்டியர்கள் வடக்கே புலம்பெயர்ந்து, சேர, சோழ மன்னர்களுடன் உறவுகளை வளர்த்துக்கொண்டு ஆண்டிருந்தார்கள். போர்களற்ற சூழலில் மக்களும் தத்தம் தொழில் களினடிப்படையில் வாழ்வு முறைகளை அமைதியாக ஓட்டிக் கொண்டிருந்தனர். ஆனால், வடநாட்டுப் பிராமணர்கள் தென்னாட்டில் அதிகமாக மன்னர்கள் ஆதரவுடன் குடியமர்த்தப்பட்டார்கள். அவர்களது குடியமர்வுகளுக்குப் பின் தமிழக வாழ்வு முறைகள், செங்கோல் ஆட்சிகள் அனைத்தும் நிலை தளரத் தொடங்கின.

இந்தப் பிராமணக் குடியினர் வேள்விகளையும், யாகங்களையும் செய்யும் தொழில்களை மேற்கொண்டி ருந்தவர்கள் ஆவர். இத்தொழில் மூலமே அவர்கள் தம் வருவாயை ஈட்டிக் கொள்ள முடிந்தது. மன்னர்களை நம்பும் வகையில், எந்தெந்த யாகங்களைச் செய்தால் அவர்கள் பிறநாடுகளைக் கைப்பற்றிப் பேரரசுகளை ஏற்படுத்தலாமெனப் புதிய ஆசைகளைத் தூண்டிவிட்டி ருந்தனர். அதனால் இவ்வாறு தூண்டி விடப்பட்ட ஆசைகள் மூவேந்தர்களின் ஒற்றுமையான ஆட்சிக்குப் பெரும் சவால்களாக அமைய அவர்கள் போரிட்டுக் கொள்ளத் தொடங்கினர். இந்தப் போர்களின் வெற்றி தோல்விகளை மட்டுமன்றி, குறிப்பிட்ட மன்னன் செய்த யாகங்களின் காரணமாகவே இந்த வெற்றிகள் கிடைக்கப் பெற்றன என்று வேள்வியியற்றிய பிராமணர்களையும் புகழ்ந்து பாடிய நூலே புறநானூறு என்று அடையாளப் படுத்த முடிகின்றது. இந்நிலையில் மூவேந்தர்களைக் காட்டிலும் பிராமணர்கள் மேலாதிக்கமுடையவர்

களானார்கள். மக்களோ சொந்த மண்ணிலே நடமாட உரிமையற்றவர்களானார்கள். இந்த நிலைமை ஆங்கிலேயர் வந்து, இவர்களுக்குக் கல்வியறிவை வழங்கி விழித்தெழச் செய்யும் வரை நீடித்திருந்தது. அதற்கு முன்னரே மூவேந்தர்களும் ஆட்சிகளையிழந்து, வரலாற்றிலும் முற்றாக மறைந்து போயிருந்தார்கள்.

இந்தப் பின்னணியில் தமிழக ஆட்சி என்பது பலப்பல அரசியற் செல்வாக்குடைய வேற்றின மக்களின் கைகளுக்குப் போவது இயல்பாகும். இந்த ஆட்சியாளர்கள் கூட நாட்டு மக்களின் முழுமையான தேவைகளை நிறைவேற்றக்கூடிய இறைமையதிகாரங்களைப் பெற்றிருக்கவில்லை என்பதனைக் கூறிக்கொண்டு, எம் வரலாற்றில் பெருமைபெற்றிருந்த ஆட்சிப் புலங்கள் பற்றியும், குறிப்பிடுதல் அவசியமாகும். சங்க இலக்கியமான பதிற்றுப்பத்து (இதில் முதலாம், பத்தாம் பத்துகள் கிடைக்கப்பெறவில்லை) முழுமையாக சேரமன்னர்களின் (இன்று மலையாளிகளாக மாறியுள்ளவர்கள்)ஆட்சி வரலாறுகளைக் காலவரிசையில் வைத்துப் பாராட்டியுள்ள ஒரு நூலாகும். இந்நூலிலிருந்து இமயவரம்பன், நெடுஞ் சேரலாதன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் முதலான சேரமன்னர்களின் திறன்மிக்க ஆட்சிகளை நாம் உய்த்துணர்ந்து பெருமைப்படாமல் இருக்க முடியாது. இதனைத் தொடர்ந்து இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்திலும், சீத்தலைச் சாத்தனாரின் மணிமேகலையிலும், இவர்கள் காலத்தைய, அரசியல், சமய, சமூக நடப்புகள் பற்றி நாம் முன்னெப்பொழுதுமில்லா வகையில், காவியங்கள் எனும் புதிய ஊடகங்கள் வாயிலாகப்

பெறமுடிகின்றது. அவர்களுக்கு நாம் மட்டுமன்றி, தமிழக மக்கள் இனி வரும் காலங்களிலும், நன்றியுடன் தலைசாய்த்துப் போற்றுவார்களாக!

ஒவ்வொரு இனத்தின் தலைமுறையினரும் பொதுவாகத் தமது மூதாதையர் கட்டியெழுப்பிய அடித்தளங்களின் மீதே தொடர்ந்தும், தம் புதிய சமூகங்களைக் கட்டியெழுப்ப முடிகின்றது. அதனால் நாமும் எம் மூதாதையர் விதைத்துக் களஞ்சியப்படுத்திய விதைகளிலிருந்து முளைத்தவர்களே. அதனாலே பல்லாயிரம் ஆண்டுகள் கடந்துவிட்ட நிலையிலும், அவர்களை அப்படியே பார்த்து மகிழவேண்டும் என்று துடிக்கின்றோம். இந்நிலை குறிப்பாக 3011 ஆம் ஆண்டில் முளைக்கவிருக்கின்ற எம் தலைமுறையினருக்கும் இருக்கத் தான் செய்யும். அதனால் எம் காலத்திலிருந்தாவது எமது உரிமைப் போராட்டங்கள், உலகளாவிய அளவிலான புலம்பெயர்வுகள், தமிழ்மொழியின் புதிய வடிவங்கள் அனைத்தும் அவர்களைச் சென்றடைய வேண்டும். அதற்காக நாமனைவரும் தொழிற்படக் கடமைப் பட்டிருக்கின்றோம்.

இனிப் பழமையைப் புகழ்ந்து புதிய உலகத்திற்குச் செல்லும் வகையில் தொழில் நுட்பங்கள் அனைத்தும் வளர்ந்து விட்டுள்ளன. அதனால் பழமையை நோக்கி முதலில் கண்ணோட்டமிடுதல் அவசியமாகின்றது. ஏறக்குறைய நானூறு ஆண்டுகளுக்கு முன் உருண்டை வடிவான பூமியை வலம்வரவேண்டுமென்ற முயற்சியில் போர்த்துக்கேயர், ஸ்பானியர், டச்சுக்காரர் சுற்றிவரும் முயற்சியில் புதிய இனங்களையும், நாடுகளையும்

கண்டார்கள். தமது போர் நுட்பங்களைத் துணைக் கொண்டு புதிய நாடுகளைக் கைப்பற்றினார்கள். ஆனால் இவர்களைத் தொடர்ந்து இத்துறையில் இறங்கிய ஆங்கிலேயர்கள் இவர்களை முறியடித்துக்கொண்டு உலகின் பல பாகங்களிலும் இனங்களை வெல்லும் முயற்சியில் வெற்றி கண்டார்கள். அதனால் பல குடியேற்ற நாடுகளில் தமது ஆட்சிகளை உறுதி செய்திருந்தார்கள். ஆனால் இவர்கள் பற்றி நாம் பெருமைப்படவேண்டிய விடயமென்னவெனில் அவர்கள் "இவையெல்லாம் குடியேற்ற நாடுகளே. ஆகையால் அவர்களின் மூலவளங்களைச் சுரண்டிக் கொண்டு போவோம்" என்ற எண்ணமுடையவர்களாக இருக்க வில்லை. மாறாக, அந்தந்த நாடுகளை உருவாக்க அடித்தளமாக இருந்த அவர்களது மூதாதையர்கள் யாவர்? என்று கண்டுபிடிக்கத் துடிப்புடன் பழைய வரலாற்று எச்சங்கள் கிடைக்கக்கூடிய இடங்களைத் தேடி அலைந்து திரிந்தார்கள். தொடர்ந்து அடையாளம் காணப்பட்ட இடங்களில் வருடக்கணக்காக அகழ்வாய்வு களைச் செய்தார்கள்.

இவர்களின் ஆய்வுகளின் பயனாகவே சுமேரிய நாகரிகம், எகிப்திய நாகரிகம், இந்துவெளி நாகரிகம், கடலுள் தாண்டுவிட்ட குமரிக் கண்ட நாகரிகம் எனப் பெரும்பழமை மிக்க நாகரிகங்கள் பற்றி நாம் முழுமையாக அறிந்து கொள்ள முடிகின்றது. அதுமட்டுமின்றி ஏறக்குறைய 5000 ஆண்டுகளுக்கு முன் இவர்கள் உருவாக்கிய எழுத்து வடிவங்களின் இயல்புகள், குறியீட்டு எழுத்துகள், அவற்றுடன் தொடர்பான மொழிகள் அனைத்தையும் அயராது உழைத்து, அவர்களின்

வரலாறுகளை எழுதிப் பெருமைப் படுத்தினார்கள். ஒவ்வொரு நாடுகளில் தொல்பொருட் களஞ்சியங்களை ஏற்படுத்தி இந்த வரலாற்றெச்சங்களைப் பேணினார்கள். சிலவற்றை எடுத்துச் சென்று தம்நாட்டுத் தொல்லியற்களஞ்சியங்களில் பாதுகாக்கலாயினர். இன்னும் சொல்லப்போனால் இந்நாடுகளில் உருவாக்கப் பட்ட பல்கலைக்கழகங்களில் தொல்லியற்துறை, வரலாற்றுத்துறை முதலான கல்விப்பீடங்களையும் உருவாக்கி, உள்ளூர் மாணவர்களும் தத்தம் வரலாறுகளைப் புரிந்து கொண்டு, அவற்றைப் பாதுகாக்க முன்வரவேண்டுமென்று கருதினார்கள். இவர்களுடைய முயற்சிகள் அந்தந்த நாடுகளில் நல்ல வரலாற்றாய் வாளர்கள் பலரை உருவாக்கியிருந்தன.

இந்த வகையில் தமிழகத்தில் உ.வே.சாமிநாதையர், மறைமலையடிகள், தேவநேயப் பாவாணர், மீனாட்சி சுந்தரம் பிள்ளை, திரு.கனகசபை, பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி, என்.மகாலிங்கம், சா.குருமூர்த்தி, அறிஞர் அண்ணா முதலானோரும், ஈழத்தில் செ.இராசநாயகம், ஜோர்.ஆர்.சின்னத்தம்பி முதலானோரும் உருவாக்கி யிருந்தனர் எனில் மிகையாகாது. இவர்களின் கடுமையான உழைப்பின் பயனையே தொடர்ந்து வந்த ஆய்வாளர்கள் பயன்படுத்த முடிந்தது. அதனால் தமிழ்மக்கள் இதுவரை காலமும் கேட்டும், கேளாதது போலிருந்த முதற்தமிழ் கெழுகூடல், இரண்டாம் தமிழ்க்கெழுகூடல்களைக் கடல்கள் அடித்து வாரிச் சென்றன என்ற செய்திகளின் உண்மையை அலசிப் பார்க்கும் வகையிற் தூண்டப்பட்டுள்ளார்கள்.

தாயகத்திலிருந்து முதற் கடற்கோளின் போது ஈழம் துண்டிக்கப்பட்ட பின் தொடர்ந்து வந்த பாண்டியர் ஆட்சிகள் ஈழத்தைப் பிரிந்த நாடாகவே கையகல விட்டிருந்தன. அதனால் வர்த்தகக் குடிகளின் கையிலே தான் அங்கு நிருவாக முறைகள் இடம்பெற்றிருந்தன. ஆனால் வங்க இளவரசன் விஜயனையும் தோழர்கள் எழுநூறு பேரையும், அவர்களது மனைவிமாரையும், மற்றும் பிள்ளைகளையும் தீயபழக்கமுடையவர்கள், சமூக நெறிகளைச் சீரழித்து விடுவார்கள் என்று கருதி வங்க நாட்டு மக்கள் மூன்று வெவ்வேறு தோணிகளில், வங்கக் கடலில் விட்டிருந்தார்கள். அப்பொழுது விஜயனும், தோழர்களும் பயணித்த தோணி ஈழத்தின் தாமிரபரணிக் கரையை (இது புத்தளம் மாவட்டத்தைச் சேர்ந்த பகுதி) அடைந்தபொழுது, அங்கு வாழ்ந்திருந்த தமிழ்க்குடிகளே அவர்களுக்குத் தஞ்சம் வழங்கியிருந்தனர். பின் அவர்களுக்குப் பெண் துணைகள் வேண்டி, பாண்டி நாட்டிலிருந்தே பெண்கள் தருவிக்கப்பட்டு தம் இன - சமூக வளர்ச்சிகளை ஏற்படுத்தியிருந்தார்கள். இந்தப் பின்னணியிலேதான் சிங்களவரின் தாய்வழி மரபணுக்கள் (DNA) அவர்களைத் தமிழினக்கலப்பு கொண்ட இனமாக அடையாளப்படுத்தியுள்ளன.* அதனோடு மகாவம்சம் விஜயனுக்குப் பின் அரசாட்சிக்கு வாரிசில்லாமையால், அவனது சகோதரன் மகன் பாண்டுவாச தேவனும், பின் அவனை மணம்புரிய வந்த புத்தகசனாவும் (பெண்

---

* *Dr.Siva - Thiyagaraja, "The Peoples and Cultures of Prehistoric Sri Lanka." மீட்சி -ஆடி, ஆவணி 2010. இந்த வாரயேட்டில் இவர் DNA ஆய்வுகளைத் துல்லியமாக இனங்காட்டியுள்ளார்.*

பரிவாரங்களுடன்) கலிங்கத்திலிருந்து புத்தபிக்கு வேடங்களில் வந்து திருகோணத்துறையில் வந்திறங்கியதனால், புதிய தாயக மரபணுவொன்று (DNA) சிங்கள மக்கள் இனவளர்ச்சிக்குத் துணையாக இருந்தமையும் மகாவம்சம் போன்ற வரலாற்று நூல்களிலிருந்து நாம் தெளிவு பெற முடிகின்றது. இருப்பினும், பாண்டி நாட்டுப் பெண்களின் திருமண உறவுகளே இவர்களைப் பலப்பான ஆட்சியொன்றினை தாமிரபரணிக்கரையில் (பின் இந்த ஆட்சி சிறிது தெற்கு தம்மன நு.வர எனும் பெயருடன் இயங்கலாயிற்று) அமைத்துக் கொண்டு, முழு ஈழத்தையும் தமதாக்கும் முயற்சியில் உதவின. அதனால் தமிழக அரசுகள் கடற்கோள்களினால் தளர்த்திவிடப்பட்ட ஈழத்தின் (ஏழ்பனை நாட்டுப் பிரிவின்) உள்ளூர்ச் சிற்றரசுகளை மீண்டும் தமது கட்டுப்பாட்டிற் கொண்டு வர தொடர்ந்தும் முயற்சிகள் எடுத்தார்கள். அதனால் தேவநம்பியதீசன் (கி.மு. 247 - 207) ஈழத்திற்குப் பௌத்தத்தை அறிமுகம் செய்த காலம் முதலாக இன்றுவரை ஏறக்குறைய 2300 ஆண்டுகளாக தமிழ் - சிங்கள இனப் போராட்டங்கள் பலப்பல வடிவங்களில் இடம்பெற்று வந்துள்ளமையை சிங்கள வரலாற்று நூல்களாகிய தீபவம்சம், மகாவம்சம், சூளவம்சம், தாதுவம்சம் முதலான நூல்கள் பதிவு செய்திருக்கின்றன.

அதனோடு இவர்கள் காலந்தோறும் சூழ்ச்சித் திட்டங்களால், தமிழர் தாயகங்களைச் சிங்கள மயமாக்கி, தம் இனத்தினைப் பெரும்பான்மையினமாக்கிக் கொண்டனர். இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாக ஆங்கிலேயர்கள் வெளியேறிய பின் இடம்பெற்ற திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்கள் புத்தளம்

மாவட்டம், திருகோணமலை மாவட்டங்களைச் சிங்கள மயமாக்கிவிட்ட நிலைமைகளை நாம் கண்கண்ட சான்றுகளாகக் கொள்ளலாம். இவையெல்லாம் கைகூடும் வகையில் இவர்கள் தம்மை இந்நாட்டில் நிலைநாட்டிக் கொள்ள எழுதிய வரலாற்று நூல்களாகிய தீபவம்சம் (ஒளிமிக்க வம்சத்தார்), மகாவம்சம் (உயரிய வம்சத்தார்) எனும் நூல்களில் காலந்தோறும் பதிவு செய்து வந்துள்ளார்கள் என்பதனால் அவர்கள் தூரநோக்குடன் தம் வரலாற்றினை எழுதுவதனால் தமக்குப் பாதுகாப்பாக மட்டுமன்றி, பெருமையும் தரவல்லது என்று கருதியிருந்தார்கள் என்பதே உண்மை. தமிழர்களுக்கு இந்த வரலாற்றுணர்வு என்பது அன்று சிறிதுமிருக்கவில்லை என்பது மற்றுமொரு மறுக்கமுடியாத உண்மையாகும். சிங்கள இனம் தம் தாயகத்தை ஆக்கிரமிக்கிறார்கள் என்பதனை அறிந்த சேனன், குட்டன் (கி.மு 177 - 155) எல்லாளன் (கி.மு. 145 - 101) படையெடுப்புகள், அவர்கள் ஆட்சிகள் பற்றி எமக்கு அறியத் தருவதும் மகாவம்சமேயாகும். பின்னர் சண்டமுகசிவனின் (கி.பி. 103 - 112) மனைவி தமிழாதேவி என்பதும், மகாநாமன் மனைவி (கி.பி. 409 - 431) தமிழமகிஷி என்பதும், பின் மகாநாமன் மகன் சொத்திசேனன் (கி.பி. 433 - 460) ஆட்சிக்குப்பின் ஈழத்தை ஆண்டிருந்தவர்கள் பாண்டு, பரிந்த, குட்டபரிந்த, தாதிய, பீதிய முதலான தமிழர்கள் என்பதனையும் எமக்குச் சிங்கள வரலாற்று நூலாகிய மகாவம்சமே அறியத் தருகின்றது.

எனவே, நாமிழந்துபோன வரலாறுகளைப் போனால் போகட்டும் விடடா என்ற நிலைக்கே தள்ளப்பட்டிருக்கின்றோம். இன்று நாம் ஒலி-

ஒளிக்கற்றைகளைப் பயன்படுத்தி நிகழ்ச்சிகளை உடனுக்குடன் தொலைக்காட்சிகள் மூலம் காட்சிப் படுத்தும் கணினி யுகத்தில் வாழ்ந்து வருகின்றோம். இதனைப் பயன்படுத்தி இன்றைய இங்கிலாந்து தொல்லியல், வரலாற்றியல் ஆய்வாளர்கள், தமது எதிர்காலத் தலைமுறையினர் தம் வரலாறுகளை அறிந்து கொள்வதற்காக எடுத்து வரும் முயற்சிகளைக் குறிப்பிடுவது ஏற்றதாகும்.

இங்கிலாந்து கடற்கோளொன்றினால் கி.மு. 6000 ஆண்டளவில் ஒரு தனித்தீவாக ஆகியிருந்த காலம் முதலாக தம் மூதாதையர் எவ்வாறு வாழ்ந்திருந்தார்கள் என்றறிவதற்காக தொல்லியலாய்வுகள் பரவலாக இடம்பெற்று வந்துள்ளன. இந்த வரலாற்றுத் தடயங்கள், ஒவ்வொரு மாநிலத்திலும் தனித்தனி தொல்பொருட் களஞ்சியங்கள் சிறப்பான முறையில் அமைக்கப்பட்டுப் பாதுகாக்கப்படுகின்றன. இன்றைய புதிய தொழில்நுட்பம் அறிமுகமாகியபின் இவையனைத்தும் காட்சிப் படங்களாகப் படம்பிடித்துப் பாதுகாக்கும் முயற்சிகள் பெருமளவில் ஏற்பட்டுள்ளன.

இதற்கு முன் நமது காலத்தையண்டி இடம்பெற்ற முதலாம், இரண்டாம் உலகப் போர்களில் இடம்பெற்ற போர்களை (19ஆம் நூற்றாண்டில் பிரெஞ்சுக்காரர் நிழற்படக் கலைக்கு முன்னோடிகளாயினும், அமெரிக்கரே சினிமாத் துறைக்கு நாடாக்கள் மூலம் காட்சிகளைப் படம் பிடித்திருந்தார்கள்.) நிழற்படங்கள் மூலம் படம்பிடித்துப் பேணியிருந்தமையினால், நாமும் 60 - 80 வருடங்களுக்கு முன் இடம்பெற்ற போர்களை நடந்த வண்ணமே பார்த்து

அப்போரின் கொடூரங்களை உணர்ந்து கொள்ள முடிகின்றது. இன்றைய நிலை அப்படியல்ல. உலகின் மூலையில் எங்கெங்கெல்லாம் போர்களினால் மக்கள் அவலப்படுகின்றார்களோ அவையனைத்தும் செய்மதி களூடாகவும், தொலைத்தொடர்பு கமராக்கருவிகள் ஊடாகவும் உடனுக்குடன் படம்பிடித்து எமக்குக் காட்சிப்படுத்தும் தொழில்நுட்பங்கள் எம்மை உலகெங்கும் அழைத்துச் செல்கின்றன. இவையனைத்தும் தொடர்ந்து வரும் தலைமுறையினருக்குக் காட்சிகளாகவே வழங்கப்படவிருக்கின்றன.

ஆனால், பிரித்தானியர்கள் இன்றைய நிகழ்ச்சிகளை மட்டுமன்றி, பழைய குடியினர் எங்கெங்கெல்லாம் தமது தடயங்களைக் கைவிட்டிருந்தார்களோ அங்கங்கெல்லாம் மீண்டும் குழுவினராகப் பயணித்துப் படம் பிடித்து, தொலைக்காட்சியில், மக்களுக்கும் பழமை எவ்வளவு பெருமை மிக்கது என்பதனை அறிவுறுத்தி வருகின்றனர். இந்த வகையில் இங்கிலாந்து திறந்தவெளி பல்கலைக்கழகப் (Open University) பேராசிரியரான நீல் ஒலிவர் (Neil Oliver) பழைய பிரித்தானியா (Ancient Britian), கெல்ரிக் பிரித்தானிய வரலாறு (The History of Celtic Britian) முதலான தலைப்புகளில் பழைய வரலாறுகளைப் பி.பி.சி (B.B.C) தொலைக்காட்சியில் விவர்ணப் படமாகக் (Documentary Film) காட்சிப்படுத்தியிருந்தார். இவர் இந்தக் காட்சிகளை எடுப்பதற்காக நிலத்திற்கடியிலிருந்த சுரங்கங்களுக்கும், குகைகளுக்கும் மட்டுமின்றி ஆழ்கடலுக்கும் சுழியோடிச் சென்றிருந்தார். அதாவது கி.மு. 3000ஆம் ஆண்டளவில் இங்கிலாந்தின் பல பகுதிகளிலும் வாழ்ந்திருந்த மக்கள் பெருங்கற் பண்பாட்டுச் செயற்பாட்டினை கூட்டு

முயற்சிகளுடனே நிறைவேற்றியிருந்தனர் என்பதனையும், மற்றும் இவர்கள் தம் அன்றாட வாழ்வு முயற்சிகளுக் காகிய கல்லாயுதங்களைத் தனிமனிதர்களாகவே முயன்றிருந்தார்கள் என்பதனையும் எமக்கு அறியத் தருகின்றார்.

இவர் ஆய்வுகளுக்காகத் தேடிச்சென்ற சுரங்கங்களின் வாயில்கள் மிகக் குறுகிய விட்டமுடையனவாதலால், இவர் (குழுவினரும்) தவழ்ந்தும், கைகால்களை வசைப்படுத்தியும் இழுத்துச் செல்வதனைப் பார்க்கையில் தம் மூதாதையர் பற்றி அறிவதில் இவர்களுக்கிருக்கிற துடிப்புப் புலனாம். தொடர்ந்து கி.மு. 400ஆம் ஆண்டளவில் இரும்புக் காலம் அறிமுகமாகிய பொழுது, அவர்கள் எவ்வாறு இரும்பாயுதங்களை உலைகளில் உருக்கிச் செப்பனிட்டார்கள், மற்றும் கி.மு. 1ஆம் நூற்றாண்டில் ரோமர்கள் பிரித்தானியாவைத் தம் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருந்த பொழுது, கட்டிய மதில்கள், கட்டடங்கள், நீராடும் தடாகங்கள், வழிபாட்டுத் தலங்கள், அவர்களின் காசுகள், ஆடைகள் அனைத்தையும் மீண்டும் செய்துபார்த்தல் என்பன பழமையைப் புதுமைப்படுத்தும் ஒரு முயற்சியாகும்.

இவற்றை விட ஒரு படி மேலான செய்தியெனில், யொட்பரேவிலுள்ள (Jodburah) எழுநூறு வருடப் பழமை வாய்ந்த கபொன் (Capon) எனும் மரத்தினைத் தமது வருங்காலச் சந்ததியினரும் கண்டுகளிக்க வேண்டுமென்ப தற்காக அம்மரத்தைப் பேணிப் பாதுகாத்து வருகின் றார்கள். அந்த மரம் இதுவரை இவர்களின் 15 - 20 வரையிலான தலைமுறையினரைக் கண்டு களித்திருக்கும்.

இனி எத்தனை தலைமுறைகளைக் காண வேண்டும் என்பதனைக் காலம்தான் நிர்ணயிக்க வேண்டும்.

இனி, பூமியில் மனிதர் வாழ்வுகள் கடற்பெருக்கு களினாலும், பூமியதிர்வுகளாலும், எரிமலைகளாலும் காலந்தோறும் போராடி வந்துள்ள கதைகள் பலப்பல. இந்த வகையில் கி.மு. 11,600 ஆம் ஆண்டளவில் கடற்பெருக்குள் மூழ்கிய அத்திலாந்திக் தீவு பற்றிய கதையை எகிப்திய குருவானவர் மூலம் தெரிந்து கொண்ட கிரேக்கரான சொலன், வாய்வழியாக அவரது உறவினர் அறிந்திருந்தனர். பின் அச்செய்தி பல தலை முறையினரூடாகப் பிளேட்டோவும் (கி.மு. 427 - 347) அறிந்து கொண்டு தன் எழுத்துகளில் பதிவு செய்திருந் தார். இவ்விதமே கிரீட் தீவில் (Crete) உருவாகி வளர்ந்த மீனோவன் கலாசாரம் (Minoan Culture) பூமி அதிர்வினாலும், எரிமலைக் குழம்புகளினாலும் கி.மு. 1620 அளவில் அழிக்கப்பட்டு முப்பதாயிரத்திற்கு மேற்பட்ட மக்கள் சாவைத் தழுவியிருந்தார்கள். இவ்வாறு காலந் தோறும் உலகின் பல பாகங்களிலும் இடம் பெற்றிருந்த இயற்கையழிவுகளை மரபுக் கதைகள் மூலமும், இலக்கியக் குறிப்புகள் மூலமுமே அண்மைக்காலம் வரை அறிந்திருந் தோம். ஆனால் ஈழத்தின் வடபகுதியில் இடம்பெற்ற (26.12.2004) ஆழிப்பேரலையின் கொடுமைகள் காட்சிகளாகப் பதிவு செய்யப்பட்டு, உலக நாடுகள் தொலைக்காட்சி மூலம் அதனை உலகமயப்படுத்தி யிருந்தனர்.

அமெரிக்காவில் பல மாநிலங்களில் சுழல் காற்றுடன் கூடிய அடைமழைகளினால் மக்கள் வீடு, வாசல்களை

யிழந்துவரும் நிகழ்ச்சிகள் தொடர்ந்து பேசப்படுவதோடு, அவையும் காட்சிப்படங்களுடன் மக்களைச் சென்றடை கின்றன. ஐஸ்லாந்தில் 2010ஆம் ஆண்டில் இடம்பெற்ற எரிமலைக் குமுறலினாலும், பின்னர் 2011 வைகாசியில் பல ஐரோப்பிய நாடுகளில் ஏற்பட்ட பனிமழை காரணமாகவும் விமானப் பயணங்கள் 2, 3 கிழமைகளுக்கு முற்றாக நிறுத்தப்பட்டிருந்தன.

இவையெல்லாவற்றையும் விட 3 பங்குனி 2011 அன்று பிற்பகல் 2 மணி 46 நிமிடங்களில் (இது யப்பானிய நேரம்) செந்தை (Sendai) நகரில் ஏற்பட்ட பூமி அதிர்வு களும், அதன் பின் ஏற்பட்ட கோபத்துடன் வெளியேறிய ஆழிப்பேரலைகளால் அங்கிருந்த விமானங்கள், கட்டடங்கள் அனைத்தையும் குப்பை கூளங்களென வாரியெடுத்துச் செல்வதனை உலகமக்கள் அனைவரும் தத்தம் தொலைக் காட்சிகளில் நேரடியாகவே பார்த்து அச்சமுற்றனர். அடுத்த நகரமாக புக்குசிமாவில் (Fukushima) 17,000 வரையிலான மக்கள் வாழ்ந்திருந்தனர். அவர்களுள் 10,000 பேர்வரை நீரினால் அடித்து அள்ளிவாரிச் செல்லப்பட்டனர். அதனால் 95% வீதமான நகரம் குப்பைத் தொட்டியாக மாறியிருந்தது. செந்தையின் வட கிழக்கிலிருந்த துறைமுகத்திலிருந்து 100 பேர் வரை பயணித்த கப்பல் தூக்கி எறியப்பட்ட நிலையில் மிதந்து கொண்டு நீரலைகளுடன் சென்று கொண்டிருந்தது. வீடுகளும், கார்களும் உடைக்கப்பட்டு சின்னாபின்னப் பட்டிருந்தன. இந்த ஆழிப்பேரலையின் போது ஒட்டுமொத்தமாக 25,000 பேர் வரை உயிருடன் அடித்துச் சென்றமை மிக மிகக் கொடியதாகும். இதன் பின்னர் 300,000 பேர் வரை தற்காலிகக் கூடாரங்களில்

தங்கவைக்கப்பட்டார்கள். இந்த மக்கள் நலனுக்கான தூய காற்றில்லை. நீரில்லை. உணவில்லை. பாதுகாப்பு உடைகள் இல்லை. மருந்துகளில்லை. எல்லாமே நிலை குலைந்திருந்தன.

இவையனைத்தையும் அங்கு சென்றிருந்த சனல் 4 (Channel 4) பிபிசி (BBC) தொலைக்காட்சி சேவையாளர்கள் அங்கிருந்தபடியே பிரித்தானிய மக்களுக்கு நிகழ்கின்ற நிகழ்ச்சிகளை செய்மதிகளூடாக அனுப்பியிருந்தார்கள். மின்சாரம் செயலிழந்ததனால் இணையத்தளம், மற்றும் கைத்தொலைபேசிகளும் செயலிழந்தன. இச்சூழலையும் தாண்டிவிட்ட நிலையில், ஒருவர் மியாகி நகர் (Miyagi) கடலுக்குள் மூழ்கித் தத்தளிக்கும் நிலையைப் படப்பிடிப்புக் கருவிமூலம் படம் பிடித்தார். வேறு சிலர் மின்னலைகள் தேக்கி வைக்கப்பட்டிருந்த கைத்தொலை பேசிகள் மூலம் அக்காட்சிகளைத் துணிகரமாகப் பதிவு செய்திருந்தார்கள். இவையனைத்தையும் பாதுகாத்து வைக்கும் நிலையில் 3011ஆம் ஆண்டு மக்கள் தாமும் நேரில் பார்த்து தம் மூதாதையர் அனுபவித்த துன்பங் களை உணர்வார்கள். பாண்டியரின் தென்மதுரையும் கொற்கையும் கடல் அலைகள் அடித்துச் செல்கையில் எம் மூதாதையர் அனுபவித்த கொடுமைகளும் இத்தகையதேயாம். அப்பொழுது பதிவுகளில்லை அதனால் நாம் அவர்கள் சந்தித்த கொடூரங்களைத் தட்டிக் கழித்து விட முடியாது.

2011ஆம் ஆண்டின் முற்பகுதியில் டன் சினோ (Dan Snow) எனும் ஆய்வாளர் இன்றைய அழகுமிக்க நகரங்களான லண்டன், பரிஸ், நியுயோர்க் என்பன

ஓரிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் அழுக்குப்படிந்த நகரங்களாக இருந்தன என்பதனைத் தமக்குக் கிடைத்த சான்றுகளைக் கொண்டு பி.பி.சி தொலைக்காட்சியில் மீண்டும் உயிரூட்டஞ்செய்து எமக்குக் காட்டியிருந்தார்.

இனி, ஈழவரலாற்றில் எம் கண்முன்னாலே ஒரு இரத்தம் படிந்த வரலாறு பதிவாகியுள்ளது. இதற்கு முன் நடந்த போராட்டங்கள் எல்லாம் மகாவம்சம், சூளவம்சம் முதலான நூல்களில் பதிவாகியிருந்ததனாலோ என்னவோ நாம் அவற்றின் துயரங்களை அனுபவிக்காமலே படித்துக் கொள்ள முடிகின்றது. இன்றோ அப்படியல்ல. தமிழரின் கறைபடித்த ஈழப்போரை நடத்திய தலைவர் வே.பிரபாகரன், மற்றும் அவரது படைத்தளபதிகள், அரசியல் பேச்சாளர்கள், போராளிகள் அனைவரும் முப்பது வருடங்களாக முகம் கொடுத்திருந்த போராட்டங்கள் அனைத்தும் காட்சிப் படங்களாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. இப்பொழுது அவர்கள் இல்லை. ஆனால் அவர்கள் சந்தித்த கொடூரங்களை நாம் காட்சிப் படங்களில் கண்ணுற்று அவர்கள் தமக்காகவன்றி, தம் மக்களுக்காகவும், மண்ணுக்காகவும் தம்மை விலை கொடுத்திருந்தார்கள் என்ற உண்மையை உணர்கின்றோம். நாம் மட்டுமன்றி உலக மக்களும் பார்த்து, இப்படியும் ஒரு கொடூரத்தை மனிதன் தன் குலத்திற்கே இழைக்க முடிகின்றது? என்று சிந்திக்கத் தொடங்கியிருக்கின்றார்கள்.

ரஷ்யாவில் தெய்வீக மனிதனாகத் தோன்றிய மைகல் கொர்பசேவ் (Mikhal Gorbachev) நாட்டின் அதிபராக இருந்த காலத்தில், இரத்தம் சிந்தாமலே ரஷ்யக் கூட்டாட்சி

முறைகளை நீக்கி, நாடுகளின் சுயாட்சிகளைக் கௌரவித்திருந்தார். அதனால் கடந்த நூற்றாண்டின் மிக உயரிய மனிதகுல வெற்றியாளராக அவரே இருந்துள்ளார். ஆனால் 2300 ஆண்டுகளாக இடம்பெறும் போராட்டங்களில், சிங்கள அரசுகள் தோல்விகளையே தழுவி வந்துள்ளன. இன்றைய உலக நாடுகளும் இதனை உறுதி செய்துள்ளன.

இன்றைய மனிதனின் செயற்பாடுகள் அனைத்தும் மனிதனை யந்திரமயமாக்கி விட்டுள்ளன. ஆனால், இயற்கையோ அவையனைத்தையும் ஒருநொடியில் அழிக்கும் சக்தி படைத்தது என்பதனைக் காலம்தோறும் எமக்கு நினைவூட்டி வந்துள்ளது. எனவே, இயற்கையோடு இணைந்து எம் தொழில் நுட்பங்களைப் பயன்படுத்துவோமானால், எம் தலைமுறையினர் பூமியில் வாழும் வரை நாம் எம் செய்திகளை அவர்களுக்குப் பாதுகாத்தளிக்க முடியும். அதனால் எம் தலைமுறையினரின் வாழ்வு முறைகளை அறிய அவர்கள் நிலத்தின் கீழ் ஆய்வுகளைச் செய்ய வேண்டிய அவசியமில்லை. எம் துயர நிகழ்ச்சிகள், மற்றும் மகிழ்ச்சி தரும் கொண்டாட்டங்கள் அனைத்தும் மின்காந்த அலைகள் துணைக்கொண்டு சிடிகளாகவும் (CD) டிவிடிகளாகவும் (DVD) பதிவு செய்து பாதுகாத்துக் கொள்ளின், இவற்றினை அவர்களின் பார்வைக்கு நாம் எடுத்துச் செல்ல முடியும். தொழிலாளிகள் என்போரின் கடும் உழைப்பினால் செய்யப்பட்ட மாபெரும் வழிபாட்டுத் தலங்களை மற்றும் கோபுரங்கள், மாடமாளிகைகள் கொண்ட நகரங்களை மட்டுமன்றிச் சுரங்கங்களில் தம் சுகங்களை பறிகொடுத்து விட்டு மற்றவர்களுக்காக எடுக்கப்பட்ட செப்பு, இரும்பு,

தங்கம், ஈயம் என்பனவற்றால் செய்யப்பட்ட அனைத்து மக்கள் சாதனங்களையும், பாவனைப் பொருட்களையும் நாம் எம் 3011ஆம் தலைமுறையினருக்குக் கையளிக்கையில், அவர்கள் எம்மைப் பற்றி அறிந்து பெருமைப்படத்தான் செய்வார்கள். அதனால் காலஇடைவெளிகள் தகர்ந்து போகின்றன. ஆனால் ஒரு கவலை. இன்று பெருமளவில் ரொபொட் (Robots) எனப்படும் கணினிமனிதனை உருவாக்கிப் பல செயற்பாடுகள் அவை மூலம் செய்யப்பட்டு வருகின்றன. இவை இன்றைய மனிதனை அறநெறிகள் மூலம் நெறிப்படுத்தவல்லன என்பது கேள்விக்குறியே.

ஆனால் மனிதனோ பாவம். ஆசைகளை வெல்ல முடியாதவன். மனம் எனும் படகின் அலைகளோடு பயணிப்பவன். அதனால் இவனது முடிவுதான் என்ன? 3011ஆம் ஆண்டில் எம் தலைமுறையினர் எவ்வடிவில் மாறியிருப்பார்கள், எங்கிருப்பார்கள் என்றும் சொல்ல முடியாத நிலையில் நாமிருக்கின்றோம். அவர்கள் எம்மைப் போலவே எம்முணர்வுகளைப் புரிந்து கொள்வார்கள் என நம்புவோமாக! எல்லாம் அவன் செயலாகவே அமையட்டும்.

ஃஃ




# வரலாறு தரும் சுவையான செய்திகள்



# குமரிக்கண்டம் முதல் சுமேரியா வரை இதுவரை ஆய்வுகளுக்குப் புலப்படாதிருந்த தமிழர் வரலாறுகள் [மீளாய்வு]

## சுமேரியர்கள் யார்?

*கடலாய்வாளர்களும், நிலவியலாய்வாளர்களும் பனிப்படலங்கள் கடைசியாக உருவாகியிருந்த காலப்பகுதியில் (கி.மு. 17,000-7,000) பூமியின் ஐந்து வீத நிலப்பகுதி கடலுட் தாண்டுபோயின என்பர். பனிப்படல உருக்கத்தினால் கடலின் நீர்மட்டம் 120 மீட்டர்களுக்கு உயர்வடைந்ததனால் உலகளாவிய அளவில் மக்கள் குடியிருப்புகள் பல (25 மில்லியன் சதுரகிலோ மீட்டர்கள் அல்லது 10 மில்லியன் சதுர மைல்கள் வரை) கடலுள் மூழ்கடிக்கப்பட்டிருந்தன. இக்காலப்பகுதியில் லெமூரியா எனப்பட்ட குமரிக்கண்டம், மற்றும் இன்றைய பாரசீகக்குடாப் பகுதியையண்டிய மக்கள் குடியிருப்பு களும் கடலுட்தாண்டு போயின என்பதனால், வாழ்மனைகளை இழந்த மக்கள் எங்கெங்கெல்லாம் புலம்*

பெயர முடியுமோ அங்கங்கெல்லாம் சூழ்நிலைகளுக் கேற்றவாறு புலம்பெயரலாயினர். இவ்வாறான பின்னணியில் குமரிக்கண்டத்தில் 49 நாடுகளை வைத்து ஆண்டிருந்த பழம்பாண்டியரது குடிமக்களின் 48 நாடுகள் கடலுள் மூழ்கடிக்கப்பட்ட பொழுது, மெசொபொட் டேமியாவை நோக்கிப் புலம்பெயர்ந்திருந்தார்கள் என்று கருதுமளவிற்கு சில உண்மைகள் கோடிட்டுக் காட்டப் பட்டுள்ளன. அவை பற்றி மேலே ஆராய்வோம்.

உலகின் பழம்பெரும் நாகரிகங்களில் ஒன்றான சுமேரிய நாகரிகம் மெசொபொட்டேமியாவில் (Mesopotamia) வளர்ந்ததொன்றாகும். மெசொபொட் டேமியா என அழைக்கும் பகுதி ரைகிரிஸ் (Tigris) யூபிரரிஸ் (Euphrates) எனும் ஆறுகளுக்கிடைப்பட்ட நிலப்பரப்பாகும். இதற்குச் சிறிது தெற்கே யூபிரரிஸ் ஆற்றையண்டி வளர்ந்திருந்த நாகரிகம் (இது இன்றைய ஈராக்கின் தென்பகுதியாக அடையாளம் காணப் பட்டுள்ளது.) பபிலோனிய நாகரிகம் என அழைக்கப் பட்டிருந்தது. இந்தச் சூழலில் உருவாகி வளர்ந்த நாகரிகங்களைப் பொதுவாக மெசொபொட்டேமிய நாகரிகம் என்றோ அல்லது பபிலோனிய நாகரிகமென்றோ வரலாற்றாசிரியர்கள் குறிப்பிடுவர். இருப்பினும், 'பபிலோனியா' எனும் பெயரிலேயே இந்நாகரிகம் அதிகமாகப் பாராட்டப்பெற்றுள்ளது. இதன் பின்னணி பற்றி ஆராய்கையில், விவிலிய வேதம் குறிப்பிடும் பேபல் கோபுரம் (Babel Tower) எனும் சொல்லிலிருந்து, பபிலோனியா எனும் சொல் மருவி வளர்ந்ததாகக் கருதப்படுகின்றது. மக்கள் குடியிருப்புகளையெல்லாம் வாரியெடுத்துச் சென்ற பிரளயவெள்ளமொன்றின் பின்

மக்கள் மெசொபொட்டேமியாவில் சினார் எனும் நகரில் (இது Shinar அல்லது சுமேர் என அடையாளப்படுத்தப் பட்டுள்ளது) மக்கள் விண்ணைத் தொடும்வரை கோபுரம் ஒன்றைக் கட்ட முயன்றிருந்தனர் என்றும், அப்பொழுது இவர்கள் முயற்சிக்கு முற்றுப்புள்ளி வைக்கும் வகையில் கடவுள் ஒரு மொழிப்பேச்சிற்குப் பதிலாக பல மொழிகளை அவர்களிடையே ஏற்படுத்திக் குழப்பி விட்டிருந்தார் என்றும் விவிலிய வேதம் குறிப்பிடும். இந்த வரலாற்று மூலத்தை அடிப்படையாகக் கொண்டுருவாகிய பெயரே பபிலோனியா எனக் கருதப்படுகின்றது.

இந்த பபிலோனிய நகரை முதலில் நிம்ரொட் (Nimrod) எனப்படும் வேட்டுவவீரனே உருவாக்கி யிருந்தான். ஆனால் இது காலப்போக்கில் உருக் (Uruk) ஊர் (Ur) லகஸ் (Lagash) மரி (Mari) நிப்பூர் (Nippur) அசூர் (Ashur) எலாம் (Elam) முதலான நகர நாகரிகங்களை உலகிற்கு அறிமுகப்படுத்தியிருந்தது. கி.மு. 3000ஆம் ஆண்டளவில் உருக் நகரில் ஆண்டிருந்த கில்கமேஷ் (Gilgamesh) மன்னனின் காவியம் இன்றுவரை அவனை நினைவூட்டும் காவியமாக மனித வரலாற்றில் இடம்பிடித்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது.

இனி, உலக மனித வரலாற்றில் பபிலோனியாவில் தான் முதன்முதலில் எழுத்துருவாக்கம் உருவாகியிருந்தது. இந்த பபிலோனியன் சித்திரக் குறியீட்டு எழுத்துகளை கியூனிபோம் எழுத்து (Cuneiform Script) என்பர். பின் வெகுவிரைவில் சித்திரக் குறியீடுகள் ஒலிக்குறியீடுகளாக வளரும் நிலைகளும் உருவாகியிருந்தன. இருப்பினும் ஆரம்ப காலத்தைச் சேர்ந்த களிமண் தட்டுகளில்

$^{d}$Nabu - ku - du - úr - ri - uşur šar Babili $^{ki}$

za - ni - in É - sag - íl ù - zi - da

aplu a - ša - re -

$^{d}$Nabu - apla - $^{ki}$ana-ku

பபிலோனிய மன்னன் நெபுசட்நாசர் கட்டிய கோவில்களான எசகிலா, எசிதா என்பவற்றின் செங்கற்களில் பொறிக்கப்பட்ட செய்தி. இது கியூனிபோம் (Cuneiform Writing) எழுத்துகள் ஒலிவடிவில் சொற்களை உருவாக்கியிருந்தன என்பதற்கான சான்றாகும்.

Source : Lorna Oakes, The Assyrians Activity Book, British Museum Press, p.7



சுமேரியர்கள் தம் கணக்குகளை பதிவு செய்து கொள்வதற்காக உருவாக்கப்பட்ட கணித முறையிலான எழுத்துகள் (Cuneiform Writing).

Source : Fiona.Macdonald, The world in the time of Tutan Khamun. Belitha Press, P.32.

எழுதப்பட்ட இந்த எழுத்துகளை விளங்கிக் கொள்ள முடியவில்லை. ஆனால் இங்கு கி.மு. 3000 ஆம் ஆண்டில் எழுதப்பட்டிருந்த மொழி 'சுமேரியன் மொழி' என இனம் காட்டப்பட்டிருந்தது.

இந்தச் சுமேரியர் யாவர்? அவர்கள் ஏன் இங்குப் புலம் பெயர்ந்தார்கள்? பூர்வீகம் என்ன? என்னும் பல கேள்விகளுக்கு ஆய்வாளர்களிடையே இன்னமும் தெளிவான கருத்துகள் இல்லை. இந்தக் கேள்விகள் எழக் காரணமென்னவெனில், சுமேரியர்கள், பபிலோனியாவின் பூர்வீகக்குடிகள் இல்லை. ஏனெனில் ஆய்வுகள் அவர்கள் அங்கு இடையிட்டு வந்து, தம்முடன் கொண்டு வந்த சமூகப் பாரம்பரியங்களை அங்கு வளர்த்திருந்த புதியதொரு சமூகத்தினர் என அறிவுறுத்தியுள்ளன. அதனோடு அவர்கள் தாம் யார்? தாம் எங்கிருந்து வந்தார்கள்? என்று தம்மைப் பற்றிய தகவல்களைக் குறிப்பிடாமையினால், தங்கள் வரலாற்றுப் பதிவுகளில் அக்கறையற்றிருந்தார்கள் என்பதும் புலனாம். ஆனால் சுமேரியர் மிகவும் புத்திக் கூர்மையுடன், அதிக முயற்சியும், கடவுள் பக்தியும் கொண்ட மக்கள் என அவர்கள் இலக்கியங்கள் புலப்படுத்தியுள்ளன. இந்த இலக்கியங்கள் எழுத்து வடிவிலிருப்பதனாலே சுமேரியரை நாம் இனம் காண முடிகின்றது. ஆனால் ஓர் சிறப்பியல்பு இவர்கள் மொழிக்குண்டு. அதாவது உலகில் உள்ள வேறு எந்த மொழியுடனும் ஒற்றுமை கொண்டிராது, சுமேரிய மொழி தனித்துவமான இயல்புகளைக் கொண்ட மொழியாகும். இருப்பினும் இவர்கள் மொழியிலிருந்த பல அறிவுபூர்வமான விடயங்களை வடக்கே வாழ்ந்திருந்த அக்காடியன் இனத்தவர் (Akkadian Tribes) மொழிக்கு

மொழிபெயர்ப்புகள் செய்யப்பட்டிருந்தன. அதனாலே சுமேரிய மொழியை இன்றைய ஆய்வாளர்கள், இம் மொழி, மக்கள், கலாசாரங்கள் பற்றி அறிந்து கொண்டனர் எனத் தெரிகின்றது. ஆனால் இவர்கள் பூர்வீக வரலாறுகள் பற்றிய குறிப்புகள் எதுவுமற்ற நிலையில், ஏன்? எங்கிருந்து வந்தார்கள் என்னும் கேள்விகளுக்கு விடைகள் இன்னமும் கேள்விக் குறியாகவே இருந்து வருகின்றது. இந்நிலையில் சுமேரியர் பற்றிய ஆய்வுகளை மேற்கொண்டிருந்த ஆய்வாளர் பெனோ லான்ட்ஸ்பேகர் (Benno Landsberger) உண்மையை அணுகும் வகையில் ஊகித்திருந்தார். அதாவது இவர்கள் கடல்வழியாக கிழக்கே இருந்தோ அல்லது இந்துவெளிப் பிரதேசத்திலிருந்தோ புலம்பெயர்ந்திருக்கலாம் என 1944ஆம் ஆண்டளவிலே தன் கருத்தினை வெளியிட்டிருந்தார். இக்காலத்தில் தமிழர்கள் தமிழகத்திலோ அல்லது ஈழத்திலோ தம்மைச் சரியாக அடையாளப்படுத்தும் வரலாற்றுப் பதிவுகளைப் பெற்றிருக்கவில்லை. அதனால் 'சுமேரியர்' பற்றி இவர்கள் அலட்டிக் கொள்ள வேண்டிய அவசியமும் இருக்க வில்லை.

ஆனால் எச்.நெவில் போன்ற ஆய்வாளர்கள் சுமேரிய நாகரிகத்திற்கும், தமிழர் நாகரிகத்திற்கும் இருந்து வந்த ஒற்றுமைகளைக் கோடிட்டுக் காட்டத் தவறவில்லை. அதாவது சுமேரியரின் நாகரிகங்கள் வளர்ந்திருந்த நகரங்களான ஊர் (Ur) எழாம் (Elam) பகுதிகளில் வாழ்ந்திருந்த அரவமொழிப் பேச்சினையுடைய மக்கள் தமிழகத்திற்குப் புலம்பெயர்ந்திருக்கலாம் என இவர் கருதியிருந்தார். இக்கருத்திலும் உண்மைகள் இருக்கத்தான்

செய்கின்றது. பபிலோனியாவில் குடியமர்ந்த சுமேரியர் காலப்போக்கில் மீண்டும் தம் பூர்வீகத்திற்குப் புலம் பெயர்ந்திருக்கலாம். எதுபோலவெனில் உலகளாவிய அளவில் புலம்பெயர்ந்த யூதர்கள், 2000 ஆண்டுகள் வரை காலம் கடந்தபின்னும், தம் பூர்வீகமண்ணிற்கு மீண்டுசென்று தம் நாட்டை மீட்டெடுத்தமை போலாகும். இப்படியான கருத்துகளை வரலாற்றாய்வாளர்கள் சீர் தூக்கியிருக்கும் இக்கால கட்டத்தில் சிவகணேசன் என்பவர் தமிழைக் கணிதமொழி என்பதோடு, தமிழருக்கும் சுமேரியருக்குமிடையேயுள்ள இன ஒற்றுமையை வலியுறுத்தி வருவதும் குறிப்பிடத்தக்கதாகும். அதனோடு பிற்கால யூத இனத்தின் மூதாதையரான ஆப்ரஹாம் பபிலோனியாவின் ஊர் (Ur) நகரத்து அரவ மொழிபேசும் சால்டியன் என்பதனால், ஏதோ ஒரு வகையில் யூதர்களுக்கும், தமிழருக்கும் பூர்வீகத்தில் இனத்தொடர்புகள் இருந்ததற்கான பின்னணியையும் சுட்டிக் காட்டுவது என்பது, உறவுகளை அடையாளம் காட்ட முடியாது மனித இனங்கள் இன்று விலகிச் சென்றுள்ள நிலைமைகளுக்கு இது ஓர் எடுத்துக் காட்டாகும்.*

## வரலாற்றை எழுதத் தவறியதால் உரிமையிழந்த தமிழர்கள்

முன்னர் குறிப்பிட்ட பெனோ லான்ட்ஸ்பேகர், எச்.நெவில் முதலானோர் கருத்துகளை மீண்டும் மீளாய்வு

* *'எழுத்துருவாக்கம்' என்பது பற்றி சிவகணேசன் GTV வெளிச்சம் நிகழ்ச்சியில் தன் கருத்துகளை முன்வைத்திருந்தார் (28.01.11).*

செய்கையில், லெமூரியாக்கண்டமெனவும், குமரிக்கண்டமெனவும் இனம் காணப்பட்ட தமிழகப் பூர்வீக வரலாறுகள் இருபெரும் ஊழி வெள்ளங்களினால் மூழ்கடிக்கப்பட்டிருந்தன என்பதனைத் துணைக்கொண்டு நோக்குகையில், உயரிய சிந்தனைகளுடனும், கடவுள் பக்தியுடனும் பபிலோனியாவிற்குப் புலம் பெயர்ந்து தம்மைச் சுமேரியர் என (லெமூரியர் - குமரியர் - சுமேரியர் எனும் சொற்கள் பேச்சு மொழியில் பல இனமக்கள் சேர்க்கையில் அடையாளம் தெரியாமலே மருவி, புதிய மொழிகளைத் தோற்றுவித்துள்ளமையே இதுபோன்ற உலகமொழிகளின் வரலாறுகளின் ஒரு பகுதியாகும்.) அடையாளப்படுத்திக் கொண்டனர் எனலாம். சுமேரிய மொழி தனியியல்புகளைக் கொண்டது போல், தமிழும் இன்று வரை தனியியல்புடைய மொழியாகவே தன்னை அடையாளம் காட்டுகின்றது.

பொதுவாக மற்ற உலக மொழிகளில் உள்ள வர்க்க எழுத்துகள் (ka, kha, ga, gha, pa, pha, sa, sha, ca, cha) போன்ற ஒலி அழுத்தங்கள் கொண்ட எழுத்துகள் தமிழில் இல்லை. மற்றும் ஜ, ஸ, ஷ, ஸ்ரீ போன்ற எழுத்துகளும் இல்லை. ஆனால் இதற்குத் தனித்துவமாக ஃ, ழ, ள, ரற, னண எனும் எழுத்துகள் இருப்பதும் குறிப்பிடத்தக்கது. இத்தகைய தனித்துவமான மொழியைக் கொண்ட தமிழர்களும் அன்றிலிருந்து இன்றுவரை தம் பூர்வீக வரலாறுகளை எழுதிப் பேணுவதில் அதிக நாட்டமற்றவர்களாகவே காணப்படுகின்றனர். தமிழகத்திலும், ஈழத்திலும் இவர்கள் பூர்வீக வரலாறுகள் மண்ணுக்கடியிலேயே புதைந்து கிடக்கின்றன. அவற்றை

வெளிக்கொணர்ந்தவர்கள் மேலைத்தேய நாட்டினரே. சிறப்பாக, ஆங்கில ஆய்வாளர்களே. தமிழர்களின் பலவீனத்தைப் பயன்படுத்தியே குடியேற்றவாசிகளாக, (அதுவும் நாடுகடத்தப்பட்டு வங்கக்கடலில் விடப்பட்ட தோணிகள் ஈழத்தின் கரைகளை வந்து சேர்ந்த நிலையில்) வந்த விஜயனும் தோழர்களும் ஈழத்தில் தம்மை நிலைநாட்டிக் கொண்டனர். இந்த இழிவான வரலாற்றுப் பின்னணியைத் தாம் கொண்டிருந்தாலும், தம் வமிசம் தமிழரைக் காட்டிலும் மேலானது என்னும் வகையில் 'மகாவம்சம்' எனும் வரலாற்று நூலை எழுதியிருந்தார்கள். இந்த மகாவம்ச நூலினைச் சான்றாகக் கொண்டு தாமே இலங்கைக்கு உரித்தான இனம் என வலியுறுத்தும் ஆயுதமாகக் கொள்கின்றார்கள். இந்நிலையில் வரலாறு களை எழுதிவைக்க அக்கறை கொண்டிராத தமிழினம், ஈழத்தின் மூத்தகுடிகள் தாமே என்பதனைச் சான்றுகள் கொண்டு நிறுவ முடியாத நிலைகளில் இரண்டாம் தர மக்களாக மண்ணின் உரிமைகளையிழந்து நிற்கும் நிலையினை நாம் கண்கூடாகக் காண்கின்றோம்.

இனி, இயற்கையனர்த்தங்களாலும், போர்களாலும் மக்களின் புலம்பெயர்வுகள் உலகளாவிய அளவில் ஏற்பட்டிருந்தன என்பதனையும் வரலாறுகள் எமக்கு அறிவுறுத்தியுள்ளன. இந்த வகையில் எச். நெவில் தமிழக வரலாற்றினை ஒரு புதிய கோணத்தில் ஆராய்ந்து காட்டியிருக்கின்றார். இவரது ஆய்வுகளின்படி பபிலோனியாவில் அடையாளப்படுத்தப்பட்ட சுமேரியர்கள், எழாமைட்டுக்கள் (இவர்கள் இருவரும் கலாசார ஒருமைப்பாடுடைய மக்கள்) எனப்படும் மக்கள் அரவ மொழியைப் பேசும் மக்கள் எனவும், இவர்களின்

புலம்பெயர்வுகளினாலே தமிழகத்தில் ஊர் எனும் பெயரில் நாடுகள் உருவாக்கப்படலாயின என்பர். அதனோடு 'எல்' எனும் சொல்லின் அடியிற் பிறந்த எழாம் குடியினரே ஈழத்திற்குப் புலம்பெயர்ந்தனர் என்ற கருத்தினையும் இவர் முன்வைத்திருந்தார். ஏனெனில் சால்டிய மொழியில் 'எழு' எனும் சொல் தமிழில் 'எல்' (சூரியன்) எனும் பொருள் தருவதனால் இப்படியான புலம்பெயர்வுகளுக்குச் சான்றுகளாக மொழி ஒற்றுமையும் இருக்கின்றது என ஒப்பிட்டுக் காட்டியிருந்தார். இவருடைய மொழியாய்வு கள் இந்த இரு பிரதேச மக்களிடையேயும் காணப்பட்ட மொழியொற்றுமையை வலியுறுத்தியிருப்பது உண்மை களை அரண் செய்வதாக உளது எனலாம்.

மொழி ஆய்வுகள் ஒருபுறமிருக்க 'அரவர்' பற்றிய ஆய்வுகளும், இவர்களைச் சுமேரிய இனத்துடனும், தமிழகப் பூர்வகுடிகளுடனும் இணைக்குமளவிற்கு அவர்கள் வரலாறுகள் காணப்படுகின்றன. ஊழிப் பெருவெள்ள அழிவுகளின் பின் தமிழ்க்குடிகள் பெருவாரியாகப் புலம்பெயர்ந்ததனாலோ என்னவோ (இன்று ஈழத்தில் யாழ்குடாமக்கள் போரின் அவலத்தினால் புலம்பெயர்ந்ததனால் எட்டு லட்சம் மக்கள் என சனமதிப்பீட்டில் இருந்த தொகையினர் 2011ஆம் ஆண்டுக் கணிப்புகளின்படி நான்கு லட்சமாகக் குறைந்துள்ள நிலை ஒப்பிட்டு நோக்கத்தக்கது.) மூன்றாம் தமிழ்க்கெழுகூடல் வடமதுரையில் வளர்த்திருந்த தமிழகத்தின் மக்கள் தொகைக் குறைபாட்டினைத் தவிர்க்க அகத்திய முனிவர் குசராட் மாநிலத்தின் துவாரகைப் பகுதியிலிருந்து (குசராட்டின் பூர்வீக மக்கள் ஆதிதிராவிடக் குடிகள் ஆவர். அதாவது தொடக்க

காலத்தில் ஆரியர் குடியேற்றங்களும், வடமொழி ஊடுருவலுமற்ற காலப்பகுதியில் என்பது இங்கு கருத்திற்கொள்ளத் தக்கது). பதினெண்குடிகளைத் தருவித்து காஞ்சிபுரப் பகுதியில் குடியமர்த்தினார் எனத் தொல்காப்பியத்திற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் குறிப்பிடுவர். இப்பதினெண் குடிகளில் ‘அரவர்' எனப்படும் அருவாளர்களும் அடங்குவர். இவர்களைக் காஞ்சிக்கு அணித்தாக வாழ்ந்த ஆந்திரர்கள் ‘அரவர்' என அழைத்தனர். அக்காலம் முதல் இன்று வரை தெலுங்கு நாட்டினர் ‘தமிழரை' அரவர் என்றழைக்கும் மரபு இந்தப் பின்னணியிலே வந்ததாம். அதனோடு நெல்லூர் மாவட்டத்துக் குகையொன்றில் இவர்களை கி.மு.8ஆம் நூற்றாண்டில் ‘அருவாளர்' எனக் குறிப்பிட்டுள்ளமையும் சீர்தூக்கத்தக்கதாம். இப்பின்னணியிலேயே நிகண்டு நூலாரும் ‘அரவர்' எனில் ‘தமிழர்' எனப் பொருள் கண்டிருந்தார். புலம்பெயர்வுகள் இப்படித்தான் நடந்திருந்தன என்று நாம் உறுதிப்படுத்த சான்றுகள் இல்லை என்பது ஏற்கனவே அவதானிக்கப்பட்ட தொன்றாகும். எனவே, கடற்கோள்களின் பின் புலம்பெயர்ந்த மக்கள் மீண்டும் தாயகத்தை நோக்கிப் பயணித்திருக்கலாம் எனக் கருதுவதற்குரிய சாத்தியக் கூறுகளையும் நாம் மறுதலிக்க முடியாது.

## யூத-தமிழின வரலாற்றுத் தொடர்புகள்

இனி சுமேரியர் - தமிழர் - அரவர் ஒருமைப்பாடுகள் இவ்வாறு இருக்கையில் யூத இனத்தின் மூலங்களும் பழந்தமிழர் வரலாற்றுடன் சிறிது தொடர்பு கொண்டிருந்தது எனில் சிலரை “இது வெறும் கட்டுக்கதை” என்று

கூற வைக்கலாம். அதாவது, இன்றைய யூத இனத்தின் கருவானது சால்டியரின் ஊரிலேதான் உற்பத்தியாகியிருந்தது என்பதுதான் அந்த உண்மைக் கதை. (தமிழர்களைப் போல் யூதர்களும் கடவுள் மீது அன்பும், பக்தியுமுடைய மக்கள்தான். ஒரு சில புல்லுருவிகள் இயேசுநாதரைச் சிலையில் வைத்து அறைந்ததற்காக, யூதர்களின் இறைநம்பிக்கையை நாம் குறைவாக மதிப்பிடுதல் தவறாகும்.) தமிழக வரலாறுகள் முதல் - இடை - கடை தமிழகெழுகூடல்களை உருவாக்கித் தமிழ் வளர்க்க சிவனும், முருகனும் திருவிளையாடல்களைப் புரிந்திருந்தனர் என எமக்கு அறிவுறுத்துகின்றன.

இதுபோலவே விவிலிய வேதம் இறைவன் சால்டியரின் ஊர் (Ur) நாட்டினைச் சேர்ந்த ஆப்ரஹாமினை* (அரவனை) அங்கிருந்து புலம் பெயர்ந்து செல்லும்படியும் அவனது இனத்திற்குப் புகழ்மிக்க நாடொன்றினைத் தான் அருள்பாலிக்க விருப்பதாகவும் உணர்த்தியிருந்தார். ஆப்ரஹாமும் இறைவன் ஆணைப்படி தன் குடும்பத்தாருடன் வடமேற்காகப் புலம்பெயர்ந்து செல்லும்பொழுது ஈசாக்கினை (Isaac) மகனாகக் கொடுத்திருந்தார். பின் ஆப்ரஹாமின் இறைபக்தியைச் சோதிக்கும் வகையில், ஈசாக்கினைத் தனக்குப் பலியிடுமாறு வேண்டினார். ஆப்ரஹாம் அவர் கட்டளையையேற்று ஈசாக்கினைப் பலிபீடத்தில் இருத்திக் கத்தியை ஓங்கி வெட்டமுயன்ற

* பழைய ஏற்பாட்டின்படி 'அப்ரம்' என்பவரின் பெயரைக் கடவுள் ஆப்ரஹாம் எனப் பெயர் மாற்றியிருந்தார் எனத் தெரிகின்றது.

போது, தேவதூதன் அதனைத் தடுத்து நிறுத்தியிருந்தார். பின் இறைவன் ஆபிரஹாமிற்கு வாக்குக் கொடுத்ததன் படி ஈசாக்கின் மகனான யேக்கப்பினைத் (Jacob) தேர்ந்தெடுத்து இஸ்ரேல் (இறைவனுடன் போராடுபவன் எனும் பொருள் தரும்) எனும் பெயரைச் சூட்டி, இஸ்ரேலிய நாட்டினை கி.மு. 1200ஆம் ஆண்டளவில் உருவாக்கிக் கொடுக்கப்பட்டிருந்ததாயினும், இஸ்ரேலியரும் தம்மைப் பற்றிய வரலாற்றுப் பதிவுகள் எதனையும் செய்திருக்கவில்லையென்பதும் சிறப்பாகக் கவனத்திற்கொள்ள வேண்டியதொன்றாகும். இவர் களுடைய வரலாறுகளை நாம் விவிலிய வேதத்திலிருந்தே பெற முடிகின்றது. இந்த இஸ்ரேலின் (யேக்கப்பின்) 12 பிள்ளைகளிலிருந்தே இஸ்ரேலிய இனம் என்ற மக்கள் சமூகம் பெருகி உருவாகி இஸ்ரேலிய நாட்டினையும், யூதமதத்தினையும் கட்டி எழுப்பியிருந்தது. இக்காலம் முதலாக இவர்கள் ஒரு தனித்துவ இனமாக அடையாளம் காட்டிக் கொண்டார்கள். அரசியல் போராட்டங்கள், சமூகப் போராட்டங்கள் ஏற்படும் பொழுதெல்லாம் எந்தப் பகைமைச் சக்திகளின் சூழ்ச்சி வலைகளிற் சிக்காமல் தங்கள் இனப் போராட்டங்களை முன்னெடுத்து வெற்றி கண்டார்கள். இதுவொன்றுதான் இவர்களைத் தமிழர் சமூகத்திலிருந்து வேறுபட வைக்கின்ற ஒரேயொரு காரணியாகும்.

யூதமதம் உருவாகுமுன் ஆப்ரஹாம் குடும்பத்தினர் உருவ வழிபாட்டினை மேற்கொண்டிருந்தனர். சுமேரியர்கள் நகரங்களில் சிக்குராட் (Ziggurat) எனப்படும் உயரிய மேடைகளை அமைத்து வழிபாடு நடத்தி யிருந்தனர். சிறப்பாக, தெய்வ வழிபாடுகள் நடத்தப்படும்



சுமேரியரின் சிகரவடிவிலான (Ziggurat) வழிபாட்டுத்தலம், தமிழரின் கோபுர வாயில்களுக்கு முன்னோடியானவை. இந்த வழிபாட்டுத்தலம் ஊரில் (கி.மு.2100) ஆண்டினைச் சேர்ந்த வரலாற்று எச்சமாகும்.

நாள்களில் திருமேனிகளைத் தேர்களில் வைத்து ஒரு கோவிலிலிருந்து இன்னோர் கோவிலுக்கு எடுத்துச் செல்வர். அப்பொழுது மக்களும் வீதிகளில் திரண்டு பின்செல்வர். (இது தமிழரின் தேர்த்திருவிழாக் கொண்டாட்டத்தினை நினைவூட்டுவதாகும்.) பபிலோனிய நகரின் கோவிலில் நிறுவப்படும் மர்துக் (Marduk) அல்லது பெல் (Bel) எனப்படும் கடவுள் முருகன் அல்லது வேலவன் எனும் தமிழ்க் கடவுளின் சாயலாகுமோ என்று எண்ணவும் தோன்றுகின்றது. சமூகங்கள் மாற்றமடையும் பொழுது மொழி திரிபடைதல் போல், வழிபாடுகளும் மாற்றமடைதல் இயல்பானதே. எனினும் சில அடிப்படைத் தத்துவங்கள் மாற்றம் பெறுவது என்பது கடினமே.

## சுமேரிய நாகரிகத்தின் எழுச்சியும் வீழ்ச்சியும்

இனி சுமேரிய நாகரிகத்தின் எழுச்சி, வீழ்ச்சி பற்றி சுருக்கமாக நோக்குதல் ஏற்றதாம். ஏற்கனவே குறிப்பிட்டது போல் சுமேரியரின் எழுத்து முறையானது மனித இன வரலாற்றில், இது ஒரு மைல் கல்லாகும். இன்று வரை 3000த்திற்கு மேற்பட்ட மொழிகள் உருவாகியிருந்த பொழுதிலும் நூறு மொழிகள் வரையே தமக்கென தனித்துவமான எழுத்து வடிவங்களை ஒலியமைதிகளுடன் உருவாக்கியிருக்கின்றன. இந்த வகையில் மனிதனின் எண்ணங்களை எழுத்துகளாலான சொற்றொடர்களில் பேண எடுத்த நடவடிக்கைகளுக்காக முன்னோடி முயற்சிகளை எடுத்து, இலக்கியங்களையும் யாத்திருந்தனர். உருக் (Uruk) நாட்டினை ஆண்டிருந்த கில்கமேஷ் (Gilgamesh - கி.மு. 3000) மன்னன் எழுதிய காவியம் சில உண்மை நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டெழுதப்பட்டதாகத் தெரிகின்றது. பின் கி.மு. 2300ஆம் ஆண்டளவில் செமிற்றிக் இனத்தைச் (Semites) சேர்ந்த சர்கன் (Sargon) மன்னன் பபிலோனியாவைக் கைப்பற்றியாண்டிருந்த காலமும், பின் சுமேரிய இன வழிவந்தோர் ஊரில் (Ur) தலைநகரை அமைத்து ஆண்டிருந்த காலமும், சுமேரிய நாகரிகத்தின் பொற்காலமெனக் கருதப்படுகின்றது. பின் ஹமுரபி மன்னன் ஆட்சியில் (Hammurabi-1792-1750 கி.மு.) நாட்டிற்கு வேண்டிய நலன்புரிச் சட்டங்கள் கற்றூண்களில் பொறிக்கப்பட்டமை மனித வரலாற்றில் இன்னோர் மைல்கல்லாகக் கணிக்கப்படுகின்றது. ஹமுரபியைத் தொடர்ந்து வந்த ஆட்சிகள் ஹிட்டைட்ஸ்

(Hittite - இன்றைய துருக்கிப் பகுதியில் பலம் வாய்ந்த அரசொன்றினை (கி.மு. 1600 - 1300) வைத்திருந்த இந்தோ - ஐரோப்பிய இனம்) என்போர் கி.மு. 1595இல் படையெடுத்ததனால் நிலை தளர்ந்திருந்தது. காலப்போக்கில் சால்டிய மன்னனான நபொபொலசர் (Nabopolassar) தன் காலத்தில் ஆக்கிரமித்திருந்த ஆசிரியர்களை கி.மு. 612இல் வெற்றி கொண்டு தனது ஆட்சியை உறுதி செய்திருந்தான். பின் இவன் மகன் நெபுசட்நசாரும் (Nebuchadnezzar- கி.மு. 605 - 562) எதிர்ப்புகளைச் சமாளித்துக் கொண்டு பபிலோனிய ராச்சியத்தினை பாரசீகக்குடா முதல் மத்தியத்தரைக் கடற்பிராந்தியம் வரை உறுதி செய்திருந்தான். இக்காலத்திலே தான் ஊர் நகர் பெருஞ்சுவர்களுடன் கூடிய எட்டு வாயில்களைக் கொண்டதாகவும், வழிபாட்டுத்தலங்கள் ஐம்பதினைக் கொண்டதாகவும் அமைக்கப்பட்டு, புறநகர்ச்சுவர்களாலும் அரண் செய்யப் பட்டிருந்தது. புகழ்மிக்க பபிலோனிய தொங்குதோட்டங் களும் இக்காலத்திலேயே அமைக்கப்பட்டிருந்தன.

இவ்வாறு, பலமிக்கதாகப் பபிலோனிய ராச்சியம் உறுதி செய்யப்பட்டிருந்த போதும், மீண்டும் பாரசீக மன்னனான (இன்றைய ஈரான் பகுதி) சைரஸ் (Cyrus) படையெடுத்து வந்து நகரைக் கைப்பற்றியதோடு, யூபிரரிஸ் ஆற்றின் நீரோட்டத்தினையும், அணைகள் மூலம் திசை திருப்பியதனால் ஆறு வரட்சியடையலாயிற்று. அதனால் நகருள் படைகள் எளிதாகப் புகுந்து கைப்பற்ற முடிந்ததென கிரேக்க வரலாற்றாசிரியரான ஹெரடோட்டஸ் (Herodotus கி.மு. 455) குறிப்பிட்டிருந்தார். இக்காலம் முதலாக சுமேரிய நாகரிகம் வீழ்ச்சியடையலாயிற்று.

## உசாத்துணை நூல்கள்

1. The Family Encyclopaedia of the BIBLE, Organising Editor, Pat Alexander, Chancellor Press, London W1, *1988*. *(ஆப்ரஹாம் ஊரிலிருந்து (Ur) புலம்பெயர்ந்து சென்ற படம் 196ஆம் பக்கத்தில் உண்டு.)*

2. Team Work, Art and History of EGYPT, 5000 years of Civilization, Bonechi, Italy (www.bonechi.it).

3. Graham Hancock, Underworld Flooded Kingdoms of the Ice Age, 2002, Penguin Books. www.grahamhancock.com.

4. H.Neville, The Taprobane, April 1887, pp 39 - 40. Arabian Colonization in India, also refer The Seba race of Arabia in India, June 1887. and The Arava speakers of India, June 1887. *மேலும் பார்க்க, மு.இராகவையங்கார் ஆராய்ச்சித் தொகுதிக் கட்டுரை, தமிழரும் ஆந்திரரும், 1964, 2ஆம் பதிப்பு, பக். 313-318.*



# குமரியர் புலம்பெயர்ந்து பாபிலோனியாவில் வளர்த்திருந்த சுமேரியர் நாகரிகங்களுக்கிடையில் ஒற்றுமைகளை வலியுறுத்தும் பெயரியல் ஆய்வுகள்

சுமேரிய மொழி பிறமொழிகளுடன் ஒப்பிட்டுப் படிக்க முடியா வகையிற் தனியியல்புகளைக் கொண்டதென ஆய்வாளர்கள் அவதானித்துள்ளனர். அது போலவே தமிழ்மொழி ஆய்வுகளும், தமிழ் மொழி தனக்கேயுரித்தான எழுத்துகளையும், ஒலியமைதிகளையும் கொண்டதாக அமைந்துள்ளது என்பதும் அவதானிக்கப் பட்டுள்ளது. அதனாலே குமரிக் கண்டத்தில் கடற் கோள்கள் ஏற்பட்ட காலத்தில் தென்பாண்டிய மக்களில் ஒருசாரார் பபிலோனியாவிற்குக் குடிபெயர்ந்து சென்றிருக்கலாம் எனக் கருதுவதிற் தவறில்லை எனலாம். சிறப்பாக கி.மு. 5200 அளவில் கொற்கையில் இரண்டாம் தமிழ்கெழுகூடல் அமைத்தாண்டிருந்த வேண்டேர்ச் செழியன் குடியினர் அங்குப் புலம் பெயர்ந்திருக்கலாம். இவர்கள் தம் நாட்டினைக் குமரியர் (சுமேரியர்) என்றும், இனத்தினைச் செழியர் (சால்டியன் அல்லது சாலி நாட்டார்) என்றும், மொழியை தமிழர் (அரவர்) என்றும்

அடையாளப்படுத்தியிருக்கலாம் என ஊகிக்க இந்தச் சொற்றிரிபுகள் சான்றுகளாகக் காணப்படுகின்றன.

இறைவன் அப்ரம் (Abrams) என்பவரையே ஊரிலிருந்து (Ur) புலம்பெயர்ந்து செல்லும்படியும், அவரது தலைமுறையினருக்கு நாடுகளிற் சிறந்த நாடொன்றினை வழங்குவார் என உறுதியளித்திருந்தார் எனவும் விவிலிய வேதம் குறிப்பிடும். இந்த அப்ரமினை ஆப்ரகாம் எனக் கடவுள் பெயர் மாற்றியிருந்தார். அதனால் அன்று முதல் ஆப்ரகாம் (நாடுகளின் தந்தை எனும் பொருளில்) அழைக்கப்படலாயினார். இந்த அப்ரம் சால்டிய மன்னன் வழி வந்த இனத்தவனாகவும், 'அரவர்' மொழி பேசிய பகுதிகளிலிருந்தவனாகவும் அடையாளம் காணப் பட்டிருப்பதனால், இவன் தமிழர் என அடையாளப் படுத்தப்படும் 'அரவர்' எனும் மொழிபேசுபவனாக இருந்துள்ளான் என்பதும் கருத்திற்கொள்ளத்தக்கது.

இனி, தமிழரின் மத நிகழ்ச்சிகள் காலமாற்றங்களோடு தொடர்புற்றிருப்பது போல, பழைய இஸ்ரேலியரின் மத நிகழ்ச்சிகளும் காலமாற்றங்களோடு தொடர்பு கொண்டவையாம். இவற்றுள் சித்திரை, வைகாசி, ஆனி மாதங்களில் இடம்பெறும் அறுவடைகளின் பின் சிவன், ஐயர் (Sivan, Iyyar) எனும் மாதங்களில்* நன்றி கூறும் விழாக்களை எடுத்திருந்தனர்.

---

* *The Family Encyclopaedia of the Bible, Chancellor Press, 1978, Page 134. விழாக்காலங்கள், தெய்வங்கள் குறிப்புகள் வரைபடம் மூலம் தரப்பட்டுள்ளன. முதலாம் மாதத்தினை நிசான் என்றும், இரண்டாம் மாதத்தினை ஐயர் என்றும், மூன்றாம் மாதத்தினை சிவன் என்றும் யூதர்கள் அழைத்திருந்தனர்.*

The Festivals

Weeks/
Pentecost
(seven
weeks)
21
Firstfruits
14
Passover
Unleavened
Bread
13/14
Purim
Vine
tending
General
harvest
Barley
harvest
Pulling
flax
Summer
fruit
Olive
harvest
Ploughing
Grain
planting
Spring
growth
1
New Year/
Trumpets
10
Day of Atonement
15-21
Tabernacles/Booths
25
Dedication/Lights
1
Nisan
2
Iyyar
3
Sivan
4
Tammuz
5
Ab
6
Elul
7
Tishri
8
Marchesvan
9
Kislev
10
Tebet
11
Shebat
12
Adar
April
June
August
October
December
February

யூதரின் அறுவடைக்கால விழாக்களில் சிவன், ஐயர் எனும் மாதங்களில் நடைபெற்ற வழிபாடுகள்

Source : The Family of Encyclopedia of the Bible - Chancellor Press 1978. p.134.

தமிழ் மரபுகளின்படி முதற் தமிழ்கெழுகூடல், இரண்டாம் தமிழ்கெழுகூடல், மூன்றாம் தமிழ்கெழுகூடல் களை அமைத்துத் தமிழ் வளர்த்தவர்களாகவே தமிழர் மரபுகள் சிவனையும், முருகனையும் தொடர்ந்து பாராட்டி வந்துள்ளன. இந்த வழிபாட்டு மரபுகள் ஆப்ரகாம் குடியினரால் தொடர்ந்தும் மேற்கொள்ளப்பட்டிருந்தன வெனவே இப்பெயர்கள் சுட்டுகின்றன. சிவன் எனும் சொல் போல் ஐயர் (Iyyer) எனும் சொல்லும் எத்தகைய திரிபுகளுக்குட்படாமல் இடம் பெற்றிருப்பதும் ஒரு சிறப்பியல்பாகும். தமிழில் ஐயனார், ஐயர் எனும் சொற்கள் கடவுளையும், மதகுருமாரையும் குறிப்பிடுவன வாம். அடுத்து, பபிலோனிய நாட்டினைக் காக்கும் தெய்வமாக மர்துக் (Marduk) அல்லது பேல் (Bel) எனும் கடவுள் போற்றப்படுகின்றார்.* இந்த மர்துக் அல்லது பேல் எனும் பெயர்கள் முருகன் அல்லது வேலன் எனும் சொற்களின் திரிபடைந்த நிலையாகக் கருதமுடிகின்றது.

மேலும், யூதர்கள் கி.மு.1200ஆம் ஆண்டளவில் இறைவனின் உறுதிமொழிப்படி இன்றைய இஸ்ரேலிய நாட்டினை தமது புதிய பாரம்பரியங்களை வளர்க்கும் நாடாகப் பெற்றிருந்தனர். அப்பொழுது அவர்கள் முற்று முழுதாக வேறுபட்ட வகையில் ஹீப்ரு மொழியை (Hebrew - Harran, Cannan - Egypt வரை நாடோடிகளாக வாழ்கையில் அந்தந்தப் பிரதேச மொழிகளும் ஊடுருவப் பெற்று உருவாகிய மொழி.) உருவாக்கியிருந்தனர்.

---

* *முற்குறிப்பிட்ட நூல், பக். 156 - 157.*

இந்த ஹீப்ரு மொழியிலேயே விவிலிய வேதம் எழுதப்பட்ட பொழுது கடவுளை மூன்று பெயர்களால் குறிப்பிட்டிருந் தனர்.

*1.* யஃவெஃ (Yahweh - ஆங்கிலத்தில் Jehovah எனத் திரிபுபெறலாயிற்று. இதன் பொருள் 'இறைவன் என்றும் உள்ளவன்' என்பதாகும்.

*2.* எலோகிம் (Elohim) - இது என் தந்தையே எனும் பொருள் கொண்டது.

*3.* அடோனை (Adonai) - இது ஆண்டவனே எனும் பொருள் கொண்டது. இச்சொல் திரிபடைந்த நிலையில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது.

இனி ஊர் (Ur) எனும் சால்டியரின் ஆட்சிப் பிரிவில் இன்றைய தமிழகக் கோவில்களின் வாயிற் கோபுரங்களை நிகர்த்த வகையில், படிப்படியாக குறுகிய சிறிய மாடங்கள் அமைத்து கோவில்கள் நிலாவிற்கு அமைக்கப்பட்டிருந்தன. இச் சிகரக் கோவில்களை சிக்குராட் என்றும் (Zigguarat), நிலாக் கடவுளை 'நன்னார்' அல்லது 'சின்' (Nannar or Sin) என்றும் அழைத்தனர். நன்னாரை நிலவுடனும், 'சின்' எனும் சொல்லினை சிவனுடனும் நாம் ஒற்றுமை காணலாம். தமிழ்மொழி ஒரு கணித மொழியென வலியுறுத்தும் ஆய்வாளர் சிவகணேசன் சிக்குராட்டினைத் தமிழ்ச் 'சிகரம்' என்பதன் திரிபே எனவும் அடையாளம் காண்பர்.*

---

* *என்.சிவகணேசன், முற்குறிப்பிட்ட தொலைக்காட்சி நிகழ்ச்சி.*

இனி, இஸ்ரேலியரின் ஆட்சியானது இரு ஆட்சிப் பிரிவுகளாக சொலமன் மன்னன் மகன் காலத்தில் உருவாகியிருந்தது. அப்பொழுது யூதா (Judah) ஆட்சிப் பிரிவின் மன்னனான ஜெரொபோம் (Jeroboam) பலிபீடத்தினை அமைத்து பசுக்கன்று (சைவத்தின் நந்தி வழிபாடு) வழிபாட்டினை ஏற்படுத்தினான் என்பதும் சிவ வழிபாட்டினைப் புதிய சூழலிலும் கைவிடமுடியாதிருந்தது எனலாம்.

யேக்கப்பின் (இஸ்ரேலியர்) மக்கள் 12 குழுவினராகக் கூடி வாழ்ந்திருக்கையில், அவர்கள் தம் தீர்க்கதரிசியான சாமுவேலிடம் தமக்கு மன்னர் ஆட்சி வேண்டுமென்று கோரியிருந்தனர். அப்பொழுது இறையருளால் சௌல் (Saul) என்பவன் மகன் தெரிவு செய்யப்பட்டான். இவன் மகன் பெயரான ஜொனாதன் (Jonathan) இன்று வரை இங்கிலாந்து முதலான நாடுகளில் நிலையூன்றி யிருக்கின்றது. இப்பெயரானது தமிழில் யோகநாதன், சொக்கநாதன், உலகநாதன், சிவநாதன் முதலான பெயர்களின் ஒலியமைதியினைக் கொண்டமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. இவ்விதமே விவிலிய வேதத்தில் இடம்பெற்றுள்ள ஈசையா (Isaiah), ஜெரமையா (Jeremiah), அதலையா (Athaliah), ஹெசகையா (Hezekiah), உசையா (Uzziah), மேசையா (Messiah) முதலான பெயர்களின் ஈற்று ஒலிகள் தமிழ்ப் பெயர்களான முருகையா, நேசையா, மூக்கையா, கந்தையா முதலான பெயர்களின் ஈற்றொலிகளைக் கொண்டமைந்திருப்பதும் சீர்தூக்கத்தக்கது.

அண்ணா (Anna) அண்ணாஸ் (Annas) எனும் சொற்கள் மூத்த அல்லது பெரிய குருமாரைக்

குறிப்பிடுவனவாம். இச்சொற்கள் தமிழில் மூத்த சகோதரனையும், வயதில் மூத்தோரையும் அழைக்கும் சொற்களாக அமைந்துள்ளன. இவ்வாறு ஊர் நகரிலிருந்து புலம்பெயர்ந்த பழங்குழுக்களிடம் தமிழ்ச் சொற்கள் பல ஏதோ ஒருவகையில் பாவனையில் இருந்தமையை நாம் அவதானிக்க முடிகின்றது.

**புதிய சூழலில் ஆப்ரகாமின் தலைமுறையினர் உருவாக்கிக் கொண்ட ஹீப்ரு மொழி பற்றியும், இவர்கள் கட்டாயமாக ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்த அரமைக் மொழி (Aramaic) பற்றியும் ஆராய்தலும் சில உண்மைகளைத் தெளிவுபடுத்தவல்லன.**

விவிலிய வேதம் உருவாகிய காலத்தில் யூதர்கள் இனக்கலப்புகளை அதிகம் பெற்றிருக்காவிடினும், புதிய மொழியான ஹீப்ரு மொழியை உருவாக்கியிருந்தார்கள். இவர்கள் தமது தாயகமான சாலி நாட்டார் அல்லது செழியன் நாட்டார் (Chaldeans of Ur) தலைநகரான ஊரிலிருந்து புலம் பெயர்கையில் முதலில் கரன் (Harran), பின் அதன் நாட்டுப் பிரிவான பட்டன் அரம் (Paddan - Aram) எனும் பட்டினத்திலும் தங்கியிருந்தனர். இவ்வாறு ஹரனிலிருந்து (Harran) மற்றும் கனான் (Canaan) வரை நாடோடிகளாக அலைந்து திரிந்தே தம் வாழ்க்கை யோட்டத்தினை ஓட்டிக் கொண்டிருந்தனர். இவ்வாறு கனானில் இருக்கையில் ஏற்பட்ட பஞ்சம், பசி காரணமாக எகிப்தை நோக்கிப் பயணித்து, அங்கு பிரமிட்டுகள், மற்றும் அரச கட்டடங்களைக் கட்டப் பாறாங்கற்களை இழுத்தல் போன்ற கடின வேலைகளுக்கு மனிதயந்திரமாகப் பயன்படுத்தப்பட்டிருந்தனர். இவ்வாறு இவர்கள் எகிப்தில்

தொழிற்பட்டிருந்தமை பற்றி மன்னன் ரமேசிஸ் II (Ramesses II - கி.மு. 1298-1235) பதிவுகள் இவர்களை 'அபிரு' (Apiru) என்று குறிப்பிட்டுள்ளன. அதாவது ஒரு நாடோ அல்லது உடைமைகளோ அற்று அகதிகளாக அங்குவந்து உடலால் கடினவேலைகளைச் செய்து பிழைப்பவர்களையே 'அபிரு' எனும் சொல்லால் பதிவு செய்திருந்தனர். இவ்வாறு நாடோடிகளாக வாழ்க்கையில் கற்றுக்கொண்ட புதிய மொழிகளின் சொற்கள் முதலானவற்றைக் கொண்டு உருவாகிய அபிருக்களின் மொழியே ஹீப்ரு என்னும் மொழியாகும். அதனாலே யூதர்களின் பழைய ஏற்பாடு உருவாகையில் விவிலிய வேதத்தின் 39 பகுதிகள் ஹீப்ரு மொழியில் எழுதப்படலாயின. இந்த விவிலிய வேதத்திலே தான் இவர்கள் பற்றிய வரலாறுகள் அனைத்தும் எமக்குக் கிடைக்கின்றன. அதற்கு முன்னர் இவர்களின் பூர்வீகம் என்ன? என்பதற்குத் தெளிவான செய்திகள் எதுவும் பதிவு செய்யப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

அடுத்து, இவர்கள் அரமைக் மொழியை (Aramaic) ஏற்று, விவிலிய வேதத்தின் டானியல் (Danial) எனும் பகுதியை ஏன் அரமைக் மொழியில் எழுதினார்கள் என்பது பற்றிச் சுருக்கமாக ஆராய்வாம். அரமியன்ஸ் (Aramaeans) என்பவர் செமிற்றிக் இனமக்களாவர். இவர்கள் பல இனக் குழுக்களாக இன்றைய சிரியாப் (Syria) பகுதியில் வாழ்ந்திருந்தவர்கள். ஆனாலும் மத்திய தரைக்கடலின் கிழக்குப் பகுதிகளில் ஈரவி அசிரியா, பபிலோனியா வரை வாழ்ந்திருந்தனர். அதனால் அரமைக் மொழி பல பகுதிகளில் அரசமொழியாகவும், வர்த்தக மொழியாகவும், பொதுமொழியாகவும் (கி.மு. 750

காலப்பகுதியில்) மதிக்கப்பட்டிருந்தது. அதன் விளைவாக பாரசீக மன்னர் சட்டங்கள், மற்றும் ஜெருசலத்தின் அரச சபை நிகழ்வுகளும் அரமைக் மொழியில் எழுதுவது ஒரு சிறப்பியல்பாகும். இந்த வகையில் விவிலிய வேதத்தின் டானியல் எனும் பகுதியும் அரமைக் மொழியில் எழுதப்பட்டதாகத் தெரிகின்றது. பின் கிரேக்கத் தளபதியான அலெக்சாண்டர் (கி.மு. 336 - 324) கிழக்கு நோக்கிப் படையெடுத்த காலத்தில் கிரேக்கமொழி இப்பகுதிகளுக்கு அறிமுகமாகியிருந்தது. இதன் பின்னர் அரமைக் மொழி செல்வாக்கை இழக்க கிரேக்கமொழி காரணமாக இருந்தது. அதனால் இக்காலத்தில் விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாடு கிரேக்க மொழியிலும் எழுதப்படலாயிற்று. (இது எதுபோலவெனில் ஆரியர் இந்தியாவிற்கு அறிமுகம் செய்திருந்த வடமொழியை ஏற்றிருந்த மாநிலங்கள், ஆங்கிலத்தின் அறிமுகத்தோடு ஆங்கிலமயமாகிவிட்ட நிலை போன்றதாகும்.)

கிரேக்கத்தை ரோமர்கள் கி.மு.146இல் வெற்றி கொண்டிருந்தாலும் ரோமர்கள் கிரேக்க மொழியை ரோம அரசின் கிழக்குப் பிராந்தியங்களின் அரசகரும மொழியாகவே வைத்திருந்தார்கள். அதனால் விவிலிய வேதத்தின் புதிய ஏற்பாடு கிரேக்க மொழியிலேயே எழுதப்படலாயிற்று. இதன் பின்னரே விவிலிய வேதத்திற்கு லத்தீன், சிரியக் (Syriac), எகிப்திய மொழிகளில் மொழி பெயர்ப்புகள் எழலாயின என்பதும் குறிப்பிடத்தக்கது.

## யூதர்களுக்கு இரு ஆட்சிப் பிரிவுகள் உருவாகிய பின்னணிகள்

ஆப்ரகாமின் பேரனாகிய ஜேக்கப்பினையே இறைவன் தேர்ந்தெடுத்து 'இஸ்ரேல்' என அவனுக்குப் பெயர் மாற்றி, இஸ்ரேலியருக்குரிய நாடொன்றினை வழங்கத் திட்டமிட்டிருந்தார். அதன்படி இஸ்ரேலின் 12 பிள்ளைகளும் குழுக்களாக வாழ்ந்திருக்கையில், இக்குடியினர் தமக்கு மன்னர் ஆட்சி முறையை உருவாக்கித்தரும்படி தீர்க்கதரிசியான சாமுவேலரிடம் கேட்டிருந்தனர். அப்பொழுது இறைவனின் அறிவுறுத் தலின்படி சௌல் (Saul) என்பவனே மன்னனாகத் தெரிவு செய்யப்பட்டான். ஆயினும், இவன் மகன் யொனாதன் (Jonathan) ஆட்சிக்கு உரித்தானவனாகக் கருதப்பட வில்லை. அதனால் இறைவன் கட்டளைப்படி சாமுவேலர் டேவிட்ட (Daivd - தேவனை) அரசனாக்கினார். அதன்பின் சொலமன் ஆட்சியாள்கையில், மக்கள் எதிர்பார்த்த சுகங்கள் எதுவும் கிடைக்கவில்லை. மாறாக கட்டாய வேலைப்பளுக்கள், வரிகள் என்பன சுமையாக இருந்ததனால், சொலமனின் மகன் ரெகோபோம் (Rehobaam) ஆட்சியேற்கையில், மக்கள் அவனிடம் இவற்றைக் குறைக்கும்படி கோரினர். அவன் மறுக்கவே வடபகுதியில் வாழ்ந்திருந்த இஸ்ரேலியத் தலைமுறை வந்த பத்துக் குழுவினரும், அவனுக்கெதிராகப் போராடி, ஜெரொபோமினைத் (Jeroboam I) அரசனாக்கி செசம்மைத் (Shechem - இப்பகுதியினர் இங்கிலாந்திற்குக் குடிபெயர்ந்த காலத்தில் உருவாகிய பகுதி Chesam எனத் திரிபடைய லாயிற்று.) தமது ஆட்சிப்பிரிவின் தலைநகராக்கி யிருந்தனர்.

இவ்வாறு இஸ்ரேலியரின் ஒரு பகுதியினர் பிரிந்து போன நிலையில் தெற்கிலிருந்த யூதா, பெஞ்சமின் ஆகிய இரு குழுவினரையும் உள்ளடக்கிய இரண்டாவது ஆட்சிப் பிரிவினை ரெகோபோம் (Rehobaam) ஏற்படுத்திக் கொண்டான். அப்பொழுது பழைய இஸ்ரேலிய அரசர்கள் தலைநகராக வைத்திருந்த ஜெருசலத்தினையே மீண்டும் தெற்கே உருவான யூதா அரசின் தலைநகராக அமைத்துக் கொண்டனர். இந்த ஜெரு (Jeru - Jebusite எனப்படும் குடிகள்) எனப்படும் குடிகளின் ஆதிக்கமுடைய சேலம் (Salem) அல்லது ஆட்சிப்பிரிவு எனப் பொருள் தரும். சேலம் என்னும் தமிழக ஆட்சிப் பிரிவினை நினைவு படுத்துவதாக இச்சொல் அமைந்திருத்தல் குறிப்பிடத் தக்கதாகும். இனி இங்குக் குடியமர்ந்த யூதா (Judah - Judair race or religion) இனத்தவரின் பெயராலே இஸ்ரேலியர்கள் யூதர் (Jews) எனும் பெயரையும் பெறலாயினர்.

இவ்வாறு ஊர் (Ur) எனும் நாட்டிலிருந்து புலம்பெயர்ந்து பல நாடுகளிலே நாடோடிகளாக வாழ்ந்த ஆப்ரகாம் குடும்பத்தினர், இறுதியாக கி.மு. 1200 ஆம் ஆண்டளவிலே தமக்குரிய இஸ்ரேலிய நாட்டைப் பெறலாயினர். அப்பொழுது முற்றிலும் மாறுபட்ட ஒரு புதிய சமூகமாக வளர்ந்திருந்தார்கள். அதனோடு தம் பூர்வீகத்தோடு தொடர்பற்ற ஹீப்ரு எனும் புதிய மொழியையும் உருவாக்கியிருந்தார்கள். இயேசுநாதரும் இந்த யூத இனத்தைச் சேர்ந்தவரே. ஜெருசலம் எனும் காணியை ஜெபு இனத்தவரிடமிருந்து டேவிட் மன்னன் வாங்கிக் கட்டிய கோவிலில் தான் இறைவனின் பத்துக் கட்டளைகளைக் கொண்ட பெட்டி பாதுகாக்கப்பட்ட தனால் அது புனித நகராகக் கருதப்படலாயிற்று. பின்

சொலமன் மன்னன் அங்குக் கடவுளுக்கென ஒரு பெரிய கோவிலைக் கட்டியதனால் அது மேலும் புனிதமயப் படலாயிற்று. விசேட தினங்களில் மக்களும் அங்குக் கூடினர். பின் யூதர்கள் இயேசுநாதரைக் கைப்பற்றி, விசாரித்துச் சிலுவையில் அறைந்ததும் ஜெருசலத்திலே தான். அதனால் காலப்போக்கில் கிறிஸ்தவ தேவாலயங் களும் அங்கு உருவாகலாயின. பின்னர் முகம்மது நபி அவர்கள் கி.பி. 610இல் இஸ்லாம் மதத்தை உருவாக்கிய காலத்தில் மெக்காவிற்குப் புனிதயாத்திரை மேற்கொண்டி ருந்தார். அப்பொழுது அவர் ஜெருசலத்திலிருந்து ஏழாவது சொர்க்கவாசலுக்குச் சென்றார் என்பதனால் இஸ்லாமியர் கி.பி.624க்கு முன் ஜெருசலத்தை நோக்கியே வழிபட்டனர் என்பதனாலும், பின்னரே மெக்காவை நோக்கி வழிபட்டனர் என்பதனாலும், ஜெருசலமும் அவர்களது வழிபாட்டில் ஒரு முக்கிய இடத்தைப் பிடித்திருந்தது என்பதும் கவனத்திற் கொள்ளத்தக்கது.

நாம் இந்தப் பெயர் ஆய்வினை மேற்கொள்ள விவிலிய வேதத்தின் ஆங்கிலம் அல்லது தமிழ்மொழி பெயர்ப்புகளையே துணையாகக் கொள்கின்றோம். யூதரின் ஹீப்ரு மொழியில் அல்லது அரமைக் மொழியில் இவற்றின் மூலங்கள் எவ்வாறு இருந்தன என்பது பற்றிய அறிவு எமக்கு இருப்பின், இன்னும் தெளிவாகவும் உறுதியாகவும் சில உண்மைகளை வெளிக்கொணர முடியும். ஏனெனில் தமிழ்மொழிபெயர்ப்பு "தன் ஜன்ம பூமியாகிய ஊர் என்கிற கல்தேயர் தேசத்துப் பட்டணம் (ஆதியாகமம் 11, 28, 31) என்கையில், ஆங்கிலமொழி பெயர்ப்பில்" "In the land of his birth, in Ur of the Chaldeans"

என்கிறது. அதாவது சால்டியனுக்கு, கல்தேயர்* எனத் தமிழ்மொழிபெயர்ப்பு அமைகையில் வரலாற்றுச் செய்தியை முழுமையாக விளங்கிக் கொள்வது இயலாததொன்றாகும். இது போலவே "ஐயா" ஈற்றுப் பெயர்கள் அதிகம் உள. அவற்றுள் ஆசையா (Asaiah - Ch-9, 5), யேடையா (Jedaiah Ch.*9, 10*) அடைஐயா (Adaiah - Ch.*9., 12*), சேமையா (Shemaiah Ch.*9. 14*) என்பன தெளிவாக ஐயா ஈற்றினைக் குறிப்பனவாக உள. பிற பெயர்கள் சிறிது வேறுபாடாக உச்சரிக்கப்பட்டுக் குறிக்கப்பட்டுள்ளமையும் கவனத்திற் கொள்ளத்தக்கது. எலியாத்தா (Eliathah Ch.*25, 27*) எனும் பெயரில் 'ஆத்தா' என்பது தமிழ் ஆகும். 'எலி' என்பது அரமைக் மொழியில் இறைவனைக் குறிப்பிடும் சொல்லெனத் தெரிகின்றது. எனவே, காலம் சென்றாலும் சில உறவுமுறைச் சொற்கள் ஏதோ ஒரு வடிவில் நிலையூன்றி விடுகின்றன என்பதும் புலனாம்.

விவிலிய வேதத்தில் இறைவனைக் குறிப்பிடும் 'ஈசன்' என்ற பெயரே மக்கள் பெயராகவும் வைக்கப்பட்டிருந்தது. ஈசர், ஈசௌ, ஈசாக், ஈஸ்தர், ஈசையா எனும் பெயர்கள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. தமிழிலும் இறைவனுக்குப் பெயர்கள் அதிகமாயினும், மக்களின் நாளாந்த வாழ்வில் அப்பனே! ஆண்டவனே! எல்லாம் வல்லவனே! ஈசனே! என்று உருவற்ற, ஒரு எல்லாம் கடந்த சக்தியையே மக்கள் இவ்வாறு கூவி அழைப்பர்.

---

* *இதற்குக் காரணம் ஆங்கில எழுத்தான C சந்தர்ப்பங்களுக்கமைய ச எனவும் க எனவும் உச்சரிக்கப்படுவதே காரணம். ஆகையினால் ஆய்வாளர்கள் ஆங்கில மொழி பெயர்ப்பினைப் பயன்படுத்தல் அவசியம் என்பது குறிப்பிடத்தக்கது.*

மணிவாசகர், அப்பர் சுவாமிகள், அருணந்திசிவாசாரியார் முதலானோரும் 'ஈசன்' என்று இறைவனைப் பல தடவைகள் குறிப்பிட்டுள்ளனர். ஈழத்தின் வரலாற்றுக்கு முற்பட்ட வரலாறுகள், அங்கு ஐந்து ஈசுவரர் கோவில்கள் (நகுலேசுவரர், திருக்கேதீசுவரர், முன்னேசுவரர், மாமாங்கேசுவரர், திருக்கோணேசுவரர்) இருந்தன என்பதனைக் குறிப்பிடுகின்றன. இவையனைத்தும் சிவலிங்க வழிபாட்டுக் கோவில்கள் என்றே அடையாளம் காணப்பட்டுள்ளன. இந்த வழிபாட்டு முறையை சிறிது வேறுபட்ட நிலையில் விவிலிய வேதம் குறிப்பிடும். அதாவது யூதர்கள் மூன்றாவது மாதத்தினைச் "சிவன்" என்று அழைப்பர் (Easther 8, 9). இங்கும் சிவவழிபாடு, மாறு வடிவத்தில் போற்றப்பட்டிருக்கலாம் எனக் கருத முடிகின்றது.

ஆர்மேனிய இனத்தவர் (Aramaneans) சிரிய நாடு முதல் அசிரியா, பபிலோனியா வரைப் பெருந்தொகையிற் பரவி வாழ்ந்தவர்கள் ஆவர். அதனால் கி.மு.750ஆம் ஆண்டு முதலாக அவர்களது மொழியான அரமைக் மொழி மத்திய கிழக்கு நாடுகளின் அரச சபை மொழியாக வளர்ந்திருந்தது. மோசசினால் எகிப்திலிருந்து மீட்கப்பட்ட இஸ்ரேலியருக்கு வழங்கப்பட்ட நாடான கனானிலும் அரமைக் மொழி பேச்சு மொழியாக இருந்து வந்துள்ளது. அதனாலே யகோவாவினால் வழங்கப்பட்ட கனானில் குடியமர்ந்த யூதர்கள் தமது புதிய மொழியான ஹீப்ருவுடன், அரமைக் மொழியையும் பேச்சு மொழியாக ஏற்றிருந்தனர் எனத் தெரிகின்றது.

(உண்மையில் இம்மக்கள் அனைவரும் நோவாவின் குடும்பத்திலிருந்து பரவிய கிளைக்குடிகள் ஆகையினால், இவர்கள் மொழிகளில் அதிக வேறுபாடுகள் இருக்கவில்லை

என்றும் தெரிகின்றது.) இந்தப் பின்னணியில் தான் விவிலிய வேதத்தின் முதல் ஏற்பாடு ஹீப்ரு மொழியிலும், அரமைக் மொழியிலும் எழுதப்பட்டிருந்ததும் புலனாம். அதனால் பலஸ்தீனத்தில் ஹீப்ரு மொழியில் விவிலிய வேதம் படிக்கப்பட்டபொழுது, அதற்கு அரமைக் மொழியில் தர்கும் (targum) அதாவது விளக்கம் கொடுப்பது வழமையாக இருந்துள்ளது. அதாவது தமிழ்ச் சொல்லான 'தர்க்கம்' எவ்வளவோ காலம் கடந்தும் பாவனையில் இருந்துள்ளமை புலனாம். அதனோடு இன்றும் தமிழர் கண்ணூறுபடாமல் தம்வீட்டு வாசல் நிலைகளில் வைக்கின்ற பிசாசு உருவங்களைப் பபிலோனியரும் வைத்திருந்தனர் என்பதனைத் தொல்லிய லாய்வுகள் வெளிக்கொணர்ந்துள்ளன. அவர்களும் இவற்றைப் பசாசு (Pazazu) என்றே அழைத்திருந்தனர். நீர் ஆற்றுமுகத்துவாரத்தை 'உலை' (Daniel *8 ; 2*) என்று குறிப்பிடுவதற்கும், நீர்மொண்டு அடுப்பில் வைக்கும் 'உலை'க்கும் வேறுபாடு இருப்பதாகத் தெரியவில்லை. 'சேலம்' எனத் தனியரசாட்சியொன்றும் இருந்துள்ளது (Genesis *14:18*).

இவ்வாறு சுமேரியரதும், சால்டியரதும் மொழி, எழுத்து, சமயம், சமூகநம்பிக்கைகள் போன்ற மனித விழுமியங்களை ஆராயின், ஆப்ரகாம் வழிவந்தோர் தமிழரின் ஒரு பிரிவினரே என்ற வரலாற்றுப் புதையலை நாம் கிளறிப் பார்த்திட முடிகின்றது. இந்த உண்மை பலருக்கு அதிர்ச்சியைக் கொடுக்கும். இருப்பினும் விவிலிய வேதம் தரும் வரலாறு, ஒரு புனித வழிபாட்டுடன் மனித இனத்தை உருவாக்க இறைவன் (யெகோவா) எடுத்த அயரா முயற்சியின் பெறுபேறேயாம்.

## உசாத்துணை நூல்கள்

1. The Family Encyclopaedia of the Bible, Chancellor Press, 1988. (இந்நூல் தொல்லியலாய்வுகளின் பெறுபேறுகள் தொகுக்கப்பட்ட நூலாகும்).

2. Sir Leonard Wolley, Ur of the Chaldees, London, 1952.

3. Swami Jnanaprakasar, Linguistic. evidence for the common origin of the Dravidians and Indo-Europeans, Tamil Culture.

4. A.Sathasivam, Sumerian - A Dravidian Language, Berkley. 1965.

5. Graham Phillips, Act of God, A 3000 year old Mystery - Moses, Tutankhamun and the Myth of Atlantis, Sidwich & Jackson, 1998.

6. My Book of Bible Stories, 1978, Watch Tower Bible and Tract Society of Pennsylavania.

7. முற்குறிப்பிட்ட விவிலிய வேத சங்கத்தினர் மொழிபெயர்த்திருந்த ஆங்கில, தமிழ்மொழி பெயர்ப்புகள் ஆகியன.

8. வி.ஆர்.இராமசந்திர தீட்சிதர், தமிழாக்கம், தமிழரின் தோற்றமும் பரவலும், 2006, தமிழ்மண் பதிப்பகம், சென்னை - 17.

9. அலெக்சாண்டர் காந்திரதாவ், தமிழாக்கம், பி.இராமநாதன், தமிழ்நாகரிகமும் சிந்துவெளி நாகரிகமும், 2006, தமிழ் மண் பதிப்பகம், சென்னை-17.

&&



# தமிழ்கெழுகூடல் இலக்கியங்களில் கிடைக்காத தமிழர் வரலாற்றினை விவிலியத்தில் தேடுதல் அவசியமாம்

*முதலிரு தமிழ்கெழுகூடல்கள் பற்றி தமிழ்ப்புலவர்கள் குறிப்பிடாவிடினும், தம் காலத்தைய மூன்றாம் தமிழ் கெழுகூடலை காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் புறநானூற்றில் குறிப்பிட்டுள்ளனர்.*

**தமிழ்கெழு கூடல் தன்கோல் வேந்தே**

***செய். 58***

*எனப் பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியைக் குறிப்பிட்டுள்ளார். பின்னர் பரஞ் சோதிமுனிவரும்,*

**கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து**

*எனத் தூய தமிழிலேயே குறிப்பிடுகின்றனர்.*

மூன்றாம் தமிழ்கெழுகூடல் எழுந்த காலத்தில், இதற்குத் தலைமை தாங்கியவர் வடமொழி மரபினரான் நக்கீரரே ஆவர். அப்பொழுது இவருக்குத் தமிழ் அறிவு போதாமையால், சிவன் அகத்தியர் மூலம் தமிழ் அறிவு புகட்டினார் என்பதனால் இவருடைய தமிழ் அறிவு குறைபாடுடையது என்பது புலனாம். அதனாலே தமிழ்கெழுகூடல்களை இவர் 'சங்கம்' என்று கூறினர் எனலாம். அதனோடு வடமொழியாளர்கள் சங்கம் அமைத்து இலக்கியங்களை உருவாக்கியவர்கள் அல்லர் என்பதும் நினைவு கூரத்தக்கது. எனவே 'சங்கம்' எனும் சொல்லும் தென்னாட்டு மரபுகளினடிப்படையிலேயே உருவாகிய சொல்லாகும். மூன்று தமிழ்கெழுகூடல்கள் பற்றிய விவரங்களை நக்கீரரே விவரிக்கும் பின்னணியில் கடல்ஆய்வாளரான கிரகம் ஹன்கொக் 'சங்கம்' எனும் சொல் வடமொழிச் சொல்லாகையினால், அவற்றின் பழமை பற்றி ஐயம் கொண்டிருந்தார். மைசூர் நாட்டுச் சாசனம் குறிப்பிடும் 'திரமிள சங்கம்' என்பதும் தமிழர் மரபினைப் பற்றிய சொற்பதமேயாம் என்பதும் புலனாம்.

இதுபோன்றதொரு குழப்பத்தினைச் சுமேரியர் நாகரிக ஆய்வாளர்களிடையேயும் ஏற்பட்டிருந்தமையை நாம் உணர முடிகின்றது. திரிபடையாமல் பாவனையிலிருந்த 'சிவன்'* 'ஐயர்' சொற்பிரயோகத் தொடர்புகள் பற்றி ஆய்வாளர்கள் எதுவுமே அறிந்திருக்கவில்லை.

---

* *கிருஷ்ணயசூர்வேதம் அனுவாகம் '10இல் 'சிவ' எனும் சொல் மூன்று தடவைகள் இடம்பெற்றுள்ளன.*
Ya te rudra *Siva* Tanūh
*Siva* visva habhelsaiji
taya no mrda sivase
*விவிலியவேதமோ 'சிவன்' எனத் தமிழ் மரபினைப் பேணியிருப்பது கவனத்திற் கொள்ளத்தக்கது.*

அதனால் அவைபற்றித் தம் கருத்துகளைத் தெரிவிக்க வில்லை எனலாம். ஜொனாதன் (சோதிநாதன்) நாதன் (நாதன்) ஈசையா (ஈசன்) முதலான சொற்களின் மூலமும் எங்கிருந்து வந்ததென ஆராயப்படாமலே, இன்று வரை யூதர்கள் பெயர்களாக இவை இருந்து வருகின்றமை யையும் நாம் கருத்திற்கொள்வது அவசியமாம்.

தமிழர் வழிபாட்டில் இப்பிரபஞ்சத்தினைப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் தொழில்களைச் செய்யும் இறைவன் ஒருவனே என்ற கோட்பாடு உறுதியானதாகும். ஆனால், கால நேரங்களின் தேவைகளுக்கேற்ப அந்த இறைவனுக்கு வடிவேற்றி வழிபடும் பொழுது அவர்கள் மனங்கள் பக்திமேலீட்டி னால், அவ்வுருவிலே மனங்களை ஒடுக்குவது இலகு வானது என்பதனை அனுபவ வாயிலாக உணர்ந்துள்ளனர். அந்த இறை அனுபவம் என்பதனை அந்தந்த பக்தனே அறிவான். இந்த வகையில் ஆதியில் தமிழ்க் குடிகள் கல்லையோ அல்லது கந்து ஒன்றினை நிறுத்தியோ, அவற்றை இறையாகப் பாவனை செய்து வழிபடும் முறையும் இருந்துள்ளமைக்கு இலக்கியங்கள் சான்றாக உள்ளன.

இந்த மரபினை ஆப்ராமின் பேரனாகிய யாக்கோபு காலையில் எழுந்ததும் தலையின் கீழ் வைத்திருந்த கல்லை எடுத்து நிறுத்தி எண்ணெய்பூசி வழிபட்டு, அக்கல்லினையே கடவுளின் உறைவிடமெனவும், தனக்குக் கிடைக்கும் வருவாயில் பத்தில் ஒருபங்கு இறைவனுக்குச் செலுத்து வதாகவும் வேண்டிக் கொண்டான் (ஆதியாகமம் - *29 - 18-22*) என விவிலிய வேதம் குறிப்பிடும். காலப்போக்கில்

இறைவன் இஸ்ரவேல் இனத்தவருக்கு அறிவுறுத்திய பத்துக் கட்டளைகளின்படி, இப்படியான உருவ வழிபாடுகள் அவசியமற்றவை என அறிவுறுத்தப்பட்டது. திருமேனி வழிபாடுகளுக்கு தெய்வங்களை வார்ப்பிக்கா மலும், சிலைகளை நிறுவாமலும், ஓவியங்களை வணங்குவதற்காக உண்டாக்காமலும், தன்னையே வழிபடுமாறு அறிவுறுத்தப்பட்டதனால் (லேவியராகமம் 19 அதிகாரம் 4, அதிகாரம் 26, 1) இஸ்ரவேலர்கள் வழிபாடு, உருவற்ற வழிபாடாகப் புதியமுறையில் அமையலாயிற்று. மேலும், இன்று வரை தமிழ்க் குடிகளிடையே பேணப்பட்டு வரும் மைத்துனர்களைத் திருமணம் செய்து கொள்ளும் மரபுகளையும் இவர்கள் பேணியிருந்தனர் (ஆதியாகமம், அதிகாரம் 28, 2). ஆனால், தொடர்ந்து இஸ்ரவேலர்கள் புலம்பெயர்வுகள் செய்திருந்த சூழலில் இந்த மரபுகள் கைவிடப்பட, பல இனக்கலப்புடைய சமூகமாக உருவாகிய நிலையில், இவர்கள் செமிற்றிக் இனத்தவர் என அடையாளம் காணப்பட்டனர்.

மேலைநாட்டாய்வாளர்களுக்கு ஆப்ராமினை 'ஊர்' நாட்டின் சால்டியன் மரபினன் என்று மட்டுமே அடையாளப்படுத்த முடிந்தது. ஏனெனில், குமரிக்கண்டக் கடற்கோள்கள், அங்கு வளர்ந்திருந்த தமிழர் நாகரிகங்கள் பற்றி எவருக்கும், தெளிவான கருத்துகள் அண்மைக் காலம் வரை இருந்திருக்கவில்லை. எனினும், சனல் 4 TV (Channel4 TV) நிதிஉதவியுடன் மிகவும் கடினமான வகையில் 2001ஆம் ஆண்டின் முற்பகுதியில் ஆழ்கடலில் மூழ்கி ஆய்வுசெய்து பல உண்மைகளை எமக்கறிவுறுத்திய கடல்

ஆய்வாளர் கிரகம் ஹன்கொக்கிற்குக்கூட, வரலாறுகள் அழிக்கப்பட்ட தமிழர் பூர்வீகத்தில் ஐயம் வெகுவாக எழுந்திருந்தது. அதனோடு மாலைதீவின் மொழி திவேஹி (Divehi) சிங்கள மொழியைப் போல், இந்தோ - ஐரோப்பிய இனத்திற்குட்பட்ட மொழியாகத் தெரிகின்றது என அவரால் அடையாளம் காணமுடிகின்றதே ஒழிய, சிங்களவரும், மாலைதீவில் குடியமர்ந்த பெண்களும் ஒரே குடும்பத்தினர் என்பதனை இவர் தெரிந்திருக்கவில்லை. அதாவது, மகாவம்சம் தரும் உண்மை வரலாற்றுக் குறிப்புகள், இவர் ஆய்வுகளுக்குக் கைகொடுக்கவில்லை என்பதும் புலனாம்.

மேலும், இலங்கையிற் கிடைக்கப்பெற்ற ஆதிமனிதனின் கல்லாயுதங்கள், அவன் அங்கு 120,000க்கு முன் வாழ்ந்திருந்தான் என்பதனை உறுதி செய்துள்ளன. ஐரோப்பாவில் நியந்தலால் மனிதன் எனப்படும் ஆதிமனிதன் 300,000 (முந்நூறாயிரம்) வருடங்களுக்கு முன் அங்கு தோன்றியிருந்தான் என்பதோடு, தற்கால மனிதனின் முன்னோடிகள் 100,000 (நூறாயிரம்) ஆண்டளவில் வாழ்ந்திருந்தான் என்பதற்காகிய சான்றுகளும் கிடைக்கப்பெற்றுள்ளன. இந்தியாவில் ஐந்து லட்சம் ஆண்டுகள் முதலாக தற்காலம் வரை மனித வரலாற்றுச் சுவடுகள் கிடைக்கப்பெற்றுள்ளன. இவ்வாறு ஒவ்வொரு பகுதியிலும் மனிதவளம் பெருகப் பெருக மனிதனின் முயற்சிகளும் அதிகமாயின. சிறப்பாக, மன்னர் ஆட்சிகளில் இவர்கள் மாடுகள் போல் சுகமிழந்து மன்னனுக்காகவே வாழ்நாள் முழுவதையும் விரயம் செய்திருந்தனர். (இன்றைய மக்கள் குடியரசுகள் வளர்ந்த ஒரு சில நாடுகளில், இன்னமும் மன்னர்கள் குடும்பங்

களை மக்கள் வரிகொண்டு பராமரித்து வரப்படுகின்ற நாடுகள் பல உள. அரேபிய நாடுகளில் தற்பொழுதுதான் மக்கள் விழிப்படைந்து மன்னர்களுக்கு எதிராகப் போராடி வருகின்றனர். ஆனால் இங்கிலாந்திலோ ஜெர்மனியைப் பிறப்பிடமாகக் கொண்டு உருவாகிய அரசுகளின் தலைமுறையினரை அரசும், மக்களும் அதிகமாகப் பாராட்டி* வருவதிலிருந்து, இவர்களின் பழைய கால ஆடம்பர வாழ்விற்கு இவர்கள் எவ்வளவு தூரம் உழைத்திருப்பார்கள் என்பதும் உய்த்துணரத்தக்கதாம்.) இவ்வாறான யந்திர வாழ்வு முறையை ஏற்றிருந்த குடிமக்கள் கற்களைக் குடையவும், பெரிய கற்பாறைகளைச் செதுக்கி பாதுகாப்பு அரண்களை அமைக்கவும், ஆடம்பரப் பொருட்களைப் புதிது புதிதாகச் செய்து கொடுக்கவும் தயாராக இருந்தார்கள்.

இனி, மெசொப்பொட்டேமியாவில் மனித இன நாகரிக வளர்ச்சிக்காலம் 30,000 ஆண்டுகள் வரை படிப்படியான வளர்ச்சி பெற்றிருந்தது. (குகை வாழ்வு, விவசாய முயற்சி, கிராம வாழ்வு, நகர வாழ்வு) என்பதற்கான சான்றுகள் அவதானிக்கப்பட்டிருந்தன. ஆனால் இதனையண்டிய தென்பகுதியான பபிலோனியாவில் திடீரென ஒரு நாகரிகம் இக்கலாசார வளர்ச்சிகளுடன்

---

* *இளவரசராக இருக்கும் சார்லஸ் வில்லியத்திற்கும், கேற் மிடில்ரனுக்கும் 29.4.2011 அன்று நடைபெற்ற திருமணத்தைக் கண்டு களிக்க மக்கள், வெள்ளமெனத் திரண்டிருந்தனர். திருமண ஆடை, மண்டப அலங்காரம், கேக் தயாரிப்பு முதலான அனைத்து விடயங்களையும் ஊடகங்கள் பல தடவைகள் அலசி, ஆராய்ந்து பாராட்டி வருகின்றன என்பதும் குறிப்பிடத்தக்கது.)*

தொடர்புபடுத்த முடியாத வகையில் அறிமுகமாகியிருந்தது. அதனோடு இந்த நாகரிகத்தின் மொழி ஒரு தனியியல்பினைக் கொண்டிருந்ததனால், அங்கு சமகாலத்தில் வளர்ந்துள்ள மற்ற எந்த மொழியினுடனும் தொடர்பற்றதொன்றாகவும் இருந்தது. அதனோடு இந்த நாகரிகத்தினர் கணக்கு வழக்குகளை வைக்குமுகமாக எழுதிய கணிதவகை எழுத்துகள் முக்கோண வடிவத்தை மையமாகக் கொண்டு அமைந்திருந்தது. இந்தப் புதிய கலாசாரமும், எழுத்தும் ஆய்வாளர்களுக்கு இன்று வரை ஒரு தெளிவற்ற நிலையினையே ஏற்படுத்தியிருந்தன. இது எங்கிருந்து, ஏன், எப்பொழுது இப்பகுதிக்கு அறிமுகமாயிற்று என்பதில் இன்று வரை தெளிவற்ற நிலையிலேயே இருந்து வருகின்றது.

இனி, மாமல்லபுரத்தில் கடல்கொண்ட சிற்பக் கோவில்கள் பற்றி மீனவர்கள் அவதானித்திருந்த பொழுதும், அவைபற்றிய கடலாய்வுகள் இதுவரை நடத்தப்படவில்லை. இருப்பினும் பூம்புகார் கடலுள் ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் இருபத்திமூன்று மீட்டர் ஆழத்தில் இருக்கின்ற U வடிவத்தில் சுற்றுப்புற மதிலும், அதனுள்ளே கட்டடங்கள் போன்றவையும் அவதானிக்கப் பட்டுள்ளன. இன்னும் இதற்கு 500 மீட்டர் தூரத்தில் வேறு அழிபாடுகளின் குவியல்களும் அவதானிக்கப் பட்டிருந்தன. இவை சுமேரிய நாகரிகத்தைக் காட்டிலும் ஏறக்குறைய ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டனவாகக் கருதப்படுகின்றன. இப்படியான கட்டட வளர்ச்சிபெற்ற நாகரிகம் ஒன்று 11,000 (பதினோராயிரம்) ஆண்டுகளுக்கு முன் உருவாகியிருக்கலாமா? என்பதனையிட்டு கிரகம் ஹன்கொக் ஐயம் கொண்டிருந்தார். பூம்புகாரின் பிற்கால

கடற்கோள் ஒன்றினைப் பற்றி மணிமேகலை குறிப்பிடும். அதற்கு முந்திய கடற்கோள்கள் பற்றிய தகவல்கள் தமிழ் இலக்கியங்களில் தெளிவாக இல்லை என்பது வழமையான செய்தியேயாம்.

மற்று பல ஔவையார்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் இடம் பெற்றிருப்பது போன்று, நக்கீரர்களும் ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் இருந்திருக்கலாம் எனத் தெரிகின்றது. அகத்தியரிடம் தமிழ்கற்றவரான நக்கீரர் மூன்றாம் சங்ககாலத்திற்கு முற்பட்டவராவர். இனி, மூன்றாம் சங்க காலத்தவராகக் கருதப்படும் நக்கீரர் இறையனாரகப்பொருள் உரையில் குறிப்பிடும் மூன்று சங்கங்களின் கால அளவைகளைச் சிலர், தான்தோன்றித் தனமாக அது ஒரு கட்டுக்கதையென மறுத்துள்ளனர். ஆனால், நக்கீரர் குறிப்பிட்ட முதற்கடற்கோளின் கால அளவும், பிளேட்டோ குறிப்பிட்ட அத்திலாந்தித் தீவு கடலில் மூழ்கிய கால அளவும் ஒரே காலமாகையால் (கி.மு.9600) இவையிரண்டும் ஒரேகாலத்தில் நிகழ்ந்த உண்மை நிகழ்ச்சிகளே என்பதில் ஐயமில்லை. எனவே தென்மதுரைக் கடற்கோளின் போதிலோ அல்லது பிற்பட்ட கடற்கோள்களின் போதோ புலம்பெயர்ந்த மக்கள், தம் வளர்ச்சிபெற்ற நாகரிகத்தினை சுமேரில், (ஆய்வாளர்கள் சந்தேகத்துடன் பார்க்கும் வகையில்) உருவாக்கியவர்கள் என்பதனை நாம் கருத்திற் கொள்வது தவறாகாது.

இவ்வாறு சுமேரிய நாகரிகம் பற்றி தெளிவற்ற நிலை நீடித்திருக்கையில், சுமேரிய நாகரிகத்துடன் மிகநெருங்கிய தொடர்புடைய 'ஊர்' எனும் பகுதியில் வாழ்ந்திருந்த

சால்டியன்ஸ் வரலாறும் இருட்டடிப்புச் செய்யப்பட்ட வரலாறாகவே இருந்து வருகின்றது. ஏனெனில் இன்றைய யூதர்கள் முற்றிலும் வேறுபட்ட வகையில் செமிற்றிக் இனமாக உருவெடுத்து, ஒரு புதிய வழிபாட்டினையும், புதிய மொழியொன்றினையும் உரிமைகோரும் நிலைக்குக் காலமும், சூழ்நிலைகளும் பின்னணிகளாக இருந்துள்ளன என்பதனை ஆய்வாளர்கள் இன்னமும் கருத்திற் கொள்ள முடியாத நிலையில் இருக்கின்றார்கள்.

உண்மையில் சால்டியன்ஸ் எனப்படும் இனம் தமிழரின் பாண்டி நாட்டுச் செழியன் மரபினர் அன்றேல் சாலி நாட்டார் எனப்படும் மரபின்வழி வந்தவர் என்பதனை உறுதிசெய்ய விவிலிய வேதம் தரும் தகவல்கள் உறுதுணையாக இருக்கின்றன எனில் மிகையாகாது. விவிலிய வேதத்தில் இராசாக்கள் என்ற பகுதியில் யூதர்கள் இறைவன் (கர்த்தர்) வேண்டிக்கொண்டதன்படி உருவ மற்ற மேலான பரம்பொருளை வழிபட முடியாதவர்களாக இருந்துள்ளார்கள் என்பது புலனாம். அதாவது, அவர் களது பூர்வீக வழிபாட்டுப் பாரம்பரியங்களை அவர் களால் கைவிட முடியவில்லை. இவர்கள் விடயத்தில் சிவன் - முருகன் வழிபாடாகிய உருவவழிபாட்டைக் காட்டிலும், மேன்மையான உருவற்ற வழிபாட்டு முறையை இறைவன் இவர்கள் மூலம் நிலைநாட்டத் திட்டமிட்டி ருந்தார். ஆனால் இந்த உயரிய வழிபாடானது சிறப்பாக யோகிகளாலேதான் பின்பற்றக்கூடியதொன்றாகும்.

இந்தியாவில் உருவாகிய மதப்பிரிவுகள் அத்தனையும் ஆரம்ப நிலை வழிபாடாக உருவவழிபாட்டினையே ஏற்றிருந்தன. பௌத்தம் கூட முதலில் கிரியைகளற்ற,

உருவற்ற வழிபாட்டு முறையிற் தொடங்கிப் பின் கிரியைகளுடன் கூடிய மதப்பிரிவினை உருவாக்க வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டதனாலே, ஹீனயானம் (தேரவாதம்) மகாயானத்தைக் (வைதுல்ய வாதம்) காட்டிலும் பொதுமக்கள் மதமாகத் திகழ முடிந்தது. இனி வேதாந்த, சித்தாந்தங்களை அறிவியலடிப்படையில் எடுத்துக் கூறிய யோக முனியாகிய திருமூலரே பாமர மக்களின் உளப்பாங்குகளுக்கேற்ற வகையில் சைவத்தைப் பொதுமக்கள் மதமாக மாற்றியிருந்தார். அதாவது மனத்தைக் கட்டுப்படுத்தி இறையனுபவத்தைப் பெறுவது மிகவும் கடினமானதாகையினால், பாமரமக்கள் இறைவனை ஆலயங்களில் வைக்கப்படுகின்ற திருமேனி களில் ஒன்றி, அவற்றை இறைவனாகவே பாவனை செய்து வழிபட்டுப் பயிற்சி பெறவேண்டுமென அறிவுறுத்தினார்.

இதனை,

நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெரு மானென்று
பாடுமின் பாடிப் பணியின் பணிந்தபின் ·
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே

*(திருமந்திரம் செய் 1445)*

என்று கூறுதல் முகமாக நாம் உணரலாம். இம்முதற்படி நிலையானது யூதரின் புதிய மத உருவாக்கத்தில் முற்றாக நீக்கப்பட்டிருந்தது. ஆப்ரகாம் முதலாகத் தொடர்ந்து வந்த யூதப் பரம்பரையினர் கடவுளின் ஆணையில் நம்பிக்கை வைத்திருந்தும் கூட, முற்று முழுதாகத் தமது பாரம்பரிய வழிபாடுகளைக் கைவிட முடியாமற் தவித்தார்கள்.

அதாவது, இவர்கள் பாரம்பரிய வழிபாடென்பது, இன்று உலகளாவிய அளவிற் பரவி வாழும் தமிழர் பாரம் பரியத்தினைப் பிரதிபலிப்பனவாகவே விவிலிய வேதம் எடுத்துரைக்கும். அதாவது, புலம் பெயர்ந்த தமிழர்கள் தம் வழிபாட்டிற்கென ஆலயங்களைக் கட்டி நாளாந்த வழிபாடுகளைச் செய்வதோடு திருப்தியடைவதில்லை. மாறாக, வேறுபல சமூகங்கள் வாழும் ஐரோப்பிய நகரங்களினூடாகத் தேர்த்திருவிழா போன்ற சமய வழிபாடுகளை இன்னமும் தவிர்க்க முடியாதவர்களாக இருக்கின்றார்கள். அதனோடு காவடியாட்டம், கற்பூரச் சட்டி எடுத்தல், தேரிழுத்தல், முதலான அனைத்துப் பாரம்பரியங்களையும் பேணுவது அவசியம் என்பதில் உறுதிபூண்டுள்ளனர். இதனடிப்படையிலே யூதரின் புதிய மதவழிபாடானது இயல்பாக வளர முடியாமற் பல தடவைகள் கைவிடப்படும் நிலை உருவாகியிருந்தது. இந்த மத வரலாற்றினைச் சுருக்கமாக ஆராய்கையில், வாசகர்கள் யூதரின் பூர்வீக வழிபாடுகள் முற்றுமுழுதாக சைவத்தின் இயல்புகளைக் கொண்டதென்பதையும் இனம் காண்பர் என நாம் நம்பலாம்.

இனி, யூத அரசு இஸ்ரேல், யூதா என இரு அரசு களாகப் பிரிந்த காலத்தில், இஸ்ரேல் ஆட்சிப் பிரிவின் முதல் மன்னனான ஜெரொபோம் (Jeroboam) தண் (Dan), பெதெல் (Bethel) எனுமிடங்களில் உருவத் திருமேனி வழிபாட்டினை மீண்டும் அறிமுகப்படுத்தும் வகையில் இரு எருதுக் கன்றுகளை பொன்னில் வார்ப்பித்து வைத்தான். இவ்வாறு இவ்வழிபாட்டினைத் தன் ஆட்சிப் பகுதியில் ஏற்படுத்தினால், மக்கள் ஜெருசலத்திற்கு வழிபாட்டிற்காகப் போவதனைத் தடுத்து நிறுத்தலாம்

என நம்பினான் (II இராசாக்கள் *10, 29*). யூதா எனும் ஆட்சிப் பிரிவினரும் உருவத்திருமேனி வழிபாடுகள், சூரிய, சந்திர வழிபாடுகளை மீண்டும் மேற்கொள்ளலாயினர் (II இராசாக்கள் *10, 25-28*). வேறு சிலர் நாக வழிபாட்டினை மேற்கொண்டிருந்தனர். இவைதவிர தீமிதித்தல், மரவழிபாடு, மலைகள் வழிபாடு, நிமித்தம் பார்த்தல், குறிசொல்லல் முதலான நம்பிக்கையுடையவர்களாகவும் யூத மக்கள் வாழ்ந்திருந்தனர். திரிகையின் அடிக் கல்லையாவது அதன் மேற்கல்லையாவது ஒருவரும் அடகு வாங்கக் கூடாது. அது உயிரினை அடகு வாங்குவது போலாகும் என யேசுநாதர் கூறுவதனால், (விவிலிய வேதம் - உபாகமம் - *24*ஆம் அதிகாரம் *6*) ஹாரப்பா நாகரிகத்தில் பேணப்பட்டிருந்த ஆண் - பெண் குறி படைப்புத் தத்துவம் (லிங்க - யோனி) இங்கும் மதிக்கப் பட்டிருந்தமை புலனாம்.

யூதரின் புகழ்வாய்ந்த சொலமன் மன்னன் ஜெருசலத்தில் இறைவனுக்கு பெருங்கோவில் ஒன்றினை எடுப்பித்த பொழுதும், அவ்வனால் இறைவன் விரும்பியவாறு உறுதியாக நடந்து கொள்ளமுடியவில்லை. எகிப்திய பரோவின் மகளைத் திருமணம் செய்ததனாலும், பிற மனைவியருக்காகவும் அவன் வழிபாட்டிற்காக கடவுளர்களைக் கோவிலில் வைக்க வேண்டியிருந்தது (I இராசாக்கள் அதிகாரம் *9 - 12*). பின் வந்த மன்னரும் இவனைப் பின்பற்றி உருவத் திருமேனி வழிபாடுகளை ஏற்றிருந்தனர். ஆனால் தீர்க்கதரிசிகள் அவர்களைப் புதிய வழிபாட்டில் வழிநடத்தும் இறைவன் விரும்பாத பிற வழிபாட்டு முறைகளால் ஏற்படவிருக்கும் நாட்டின் அழிவுகள் பற்றி முன்கூட்டியே எச்சரித்துள்ளனர்

என்பதும், இந்த யூதமதத்தினை ஒரு கட்டுக்கோப்புக்குள் வைத்திருக்க தீர்க்கதரிசிகளும் முயன்றிருந்தார்கள் என்பதும் புலனாம். நெறிதவறும் இவர்களை இறைவன் தண்டிக்கக் கையாண்ட வழிகளில் போரும், பஞ்சமும் முக்கியமானவை. இவை தொடர்ந்து இடம் பெற்றதனால் யூதர் வரலாற்றினைப் பல முனைகளில் திருப்பியிருந்துள்ளன.

இவ்வாறான தண்டனைகளை அனுபவித்த நிலையிலும், மன்னர்களால் இறைவன் ஆணையை முற்று முழுதாக ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அதனால் யூதர் ஆட்சிப் பிரிவின் மன்னனான மனசே இடிக்கப்பட்ட மேடைகளை மீண்டும் கட்டி பழைய வழிபாடுகளை மேற்கொள்ள வழிவகுத்திருந்தான் (II இராசாக்கள் 3,6). இவன் மகன் ஆமோனும் உருவத்திருமேனி வழிபாட்டினை ஏற்றிருக்கையில், இவன் மகனாகிய யோசியா இறைவன் கட்டளையை ஏற்றிருந்தான். அதனால் இவன் இறைவனின் ஆலயத்தினைப் புதுப்பித்திருந்த பொழுது, அங்கு முன்பு மோசேக்கு கடவுளால் அறிவுறுத்தப்பட்ட நியாயப் பிரமாணங் களைக் கொண்ட நூலொன்று கண்டுபிடிக்கப்படலாயிற்று (II இராசாக்கள் 22, 8). இது முதலிரு தமிழ்கெழு கூடல்கள் கடற்பெருக்குகளில் அழிவுற்றுப் போனபின், மூன்றாம் சங்கம், வடமதுரையில் உருவாக்கப்பட்டு, திருவிளையாடல்கள் நடைபெற்றிருக்கையில் 'இறையனாரகப்பொருள்' எனும் நூல் ஆலயத்தினுள் பூசகரால் கண்டுபிடிக்கப்பட்டது என்ற வரலாற்றுடன் ஒப்பிட்டு நோக்கத்தக்கதாம். யோசியா மன்னன் எல்லாப்

பழைய வழிபாடுகளையும் நீக்கி இறையாசியை இவ்வாறு பெற்றிருந்தான் எனத் தெரிகின்றது.

உண்மையில், பாமர மக்களுக்குத் தெய்வீக வழிபாடானது உடற்கிரியைகளை அதிகமாகக் கொண்டது என்பதனை அன்றிலிருந்து இன்று வரை நாம் அனுபவ வாயிலாகக் காணும் மறுக்க முடியாத உண்மையாகும். அதனால் பல தடவைகள் உருவத்திரு மேனிகள் அகற்றப்பட்ட நிலையிலும், மக்கள் வெறுமையாக்கப்பட்ட அந்த மேடைகளுக்குத் தீப, தூபங்களைக் காட்டி பலியிட்டு வந்தார்கள். (கிராமங்களில் வாழும் தமிழ்க் குடிகள் இன்னமும் தத்தம் ஊர்க்கோவில்களில் உயிர்ப்பலியிடுதலை நிறுத்த முன்வரவில்லை என்பதனால் பாமர மக்கள் தங்கள் பாரம்பரியங்களைப் பேணுவதில் அதிக அக்கறையுடையவர்கள் என்பதனோடு, கடவுள் பற்றிய அவர்கள் சிந்தனைகளின் தனியியல்புகளையும் நாம் எடைபோட முடிகின்றது எனலாம்.)

இதுவரை சால்டியன் நாட்டினைச் சேர்ந்த ஆப்ரகாமினை இறைவன் தேர்ந்தெடுத்து, ஒரு புதிய அரசினையும், மதத்தினையும் உருவாக்கவெடுத்த திட்டங்கள், எமக்கு இன்னோர் உண்மையையும் சான்றுகளுடன் நிறுவியுள்ளது. அதாவது உலகளாவிய அளவில் பொங்கி எழுந்த ஆழிப்பேரலைகள் மக்கள் வாழ்ந்திருந்த மண்ணினைக் கடலிற்குள் மூழ்கடித்த பொழுது, குமரிக்கண்டத்தில் வாழ்ந்திருந்த தமிழர்கள் புலம்பெயர நேரிட்டது என்பதாகும். இவர்கள் இவ்வாறு புலம்பெயர்ந்து குடியமர்ந்த பகுதிகளாக பபிலோனியா, ஊர், எழாம் என்பவை காணப்படுகின்றன. இவற்றுள்

ஊர் எனும் பிரிவு தமிழக ஊர்ப்பெயர்களுடன் மிகவும் பின்னிப்பிணைந்ததொன்றாகும். (கருவூர், தஞ்சாவூர், வேலூர், திருவாரூர் என அடுக்கிக் கொண்டே போகலாம்.) இந்த பபிலோனிய ஊரில் வாழ்ந்திருந்த ஆப்ரகாமினை இறைவன் புலம்பெயரவைத்து, பலவகையான துயரங்களின் பின் அவர்களுக்கு இஸ்ரேல் எனும் நாட்டினை வழங்குவதோடு, யூதமதத்தினையும், பின் கிறித்தவ மதத்தினையும் உருவற்ற பரம்பொருளின் பெருமையினை என்றும் இந்த மக்கள் பின்பற்ற வேண்டுமென்றும் வேண்டுதல் விடுத்திருந்தார். இந்த உருவற்ற முறை வழிபாட்டிற்குரிய கடவுளின் பெயராக 'யகோவா' என்று அறிவுறுத்தப்பட்டிருந்தது. கிறித்தவம் யேசுநாதருடன் தொடர்பான போதனைகளைப் பின்பற்றும் வகையில் உருவாகியிருந்தாலும், யூதர்கள் தமது பழைய யூதமதத்தினையே உறுதியாகப் பின்பற்றி வருபவர்களாவர்.

இனி, ஆப்ரகாம் ஊரிலிருந்து கி.மு. 2000ஆம் ஆண்டளவில் புலம்பெயர்ந்திருந்தமையினால், யூத இன மக்களின் தனித்துவமான வரலாறு இக்காலத்திலிருந்தே ஆரம்பமாகின்றது எனலாம். இவர்களுக்கு வழங்கப்பட்ட நாடு இஸ்ரேல் என்பதாகும். அதனால் 'நாடு' எனும் பொழுது இஸ்ரேலியர் என்றும், மதம் எனும்பொழுது 'யூதர்' என்றும் இவர்கள் பெருமைப்படுத்தப் பட்டனர். இக்காலத்திற்கு முற்பட்ட இவர்களின் தலைமுறைகள் வேர்விட்டுப் படர்ந்த நிலையில், முதலில் குமரியர் எனும் வரலாற்றினையும், இரண்டாவதாக சுமேரியர் என்ற வரலாற்றினையும், மூன்றாவதாக இஸ்ரேலியர் என்ற வரலாற்றினையும் நாம் அடையாளப்படுத்த முடிகின்றது.

இந்த மூன்றாவதான வரலாற்றுக் கட்டம் கி.மு.2000 முதல் கி.பி. 70 வரைக் காலத்திற்குட்பட்ட ஒரு வரலாறாகும்.

கி.பி.70ஆம் ஆண்டில் ரோம அரசன் டைட்டஸ் (Titus) என்பவன் இவர்களின் இஸ்ரேலிய நாட்டினைக் கைப்பற்றிக் கொண்டு, இவர்களை அங்கிருந்து புலம்பெயர வைத்திருந்தான். இந்நாள் முதல் கி.பி.70-கி.பி.1948 வரை இவர்கள் பட்ட சொல்லொணாத் துன்பங்களின் பின் தாயகத்தை நோக்கிப் பயணித்து இஸ்ரேலிய மண்ணினைப் பணம்கொடுத்து வாங்கியதோடு, பலஸ்தீனியரோடு போராடியும், தம் பூர்வீக மண்ணினைப் பெறலாயினர். இக்காலத்தில் உலகளாவிய அளவில் யூதமதத்தினை தனித்துவமாக வளர்த்திருந்தனர். அதனால் மீண்டும் தம் தாயகத்தில் யூதமத வழிபாட்டினை நிறுவமுடிந்தது. செமிற்றிக் இனமாக மாற்றுருவம் பெற்ற யூதர்கள், தாயக மண்ணை மீட்டுத் தமக்கென ஓர் அரசினை ஏற்படுத்திக் கொண்ட வரலாற்றினை நாம் நான்காவது கட்ட வரலாறாக அடையாளப்படுத்திக் கொள்ளலாம்.* இனிவருங் காலங்களில் இவர்கள் முன்னெடுக்கும் சமாதானப் பேச்சுகள் அமைதியான வாழ்வினை ஏற்படுத்திக் கொடுக்க வேண்டுமென்று இறைவனை வேண்டுவோமாக. இப்புதிய யூத சமுகம் எதிர்பாராத புலம்பெயர்வுகளினால் தன் மூலங்களைத் தகர்த்திருந்தாலும், அவர்கள் மூலம் எங்கேயிருந்து வந்ததென்பதனை விவிலிய வேதமே

---

* *மேலும் விவரங்களுக்குப் பார்க்க: தனபாக்கியம் குணபாலசிங்கம், ஆசிய ஆபிரிக்க ஐரோப்பிய இனங்களின் தனித்துவமான வரலாறு, 2009, மணிமேகலைப் பிரசுரம். பக் 1-121.*

எமக்கெடுத்துரைக்கின்றது. அதாவது, இன்று வரை தமிழரோ அல்லது யூதர்களோ அறிந்திராத வரலாறு ஒன்றினை விவிலிய வேதம் வெளிச்சமிட்டுக் காட்டி யிருக்கின்றது எனில் மிகையாகாது. இறைவன் ஒரு புதிய மதத்தினையும், நாடுகளிற் சிறந்தவொரு நாட்டினையும் சால்டியனான ஆப்ரகாமிற்கு வாக்குப் பண்ணியிருந்தார். அந்த ஆப்ரகாம் வேறொருவனுமல்ல. அவன் தமிழனே ஆவன். பபிலோனியாவின் ஊர் நாட்டிற்கும், தமிழக ஊர்களுக்குமிடையேயிருந்த தொடர்புகள், மத வழிபாடுகள், மற்றும் சொல்லாய்வுகள் என்பன ஆப்ரகாம் தமிழன் எனவே அடையாளம் காட்டுகின்றன.

ஆப்ரகாம் வரலாறு எமக்கறிவுறுத்துதென்னவெனில் தாயகம் என்பது ஒரு சில இனங்களுக்குக் காலவரை யறைக்குட்பட்டதாகும். அதுமட்டுமன்றி உலகளாவிப் புலம் பெயர்கையில் இனம் கூடப் பல இனச் சேர்க்கையால் ஒரு புதிய இனமாக வளர்ச்சி பெறுகின்றது. வேற்று மொழியினருடன் உறவு வைக்கும் சூழலில், மொழி கூட முற்றாக அடையாளம் காணப்படாவகையில் புதிய பெயரால் தன்னை அடையாளப்படுத்திக் கொள்கின்றது.

எனவே, நாம் விவிலிய வேதத்தினை யூத, கிறித்தவ மதக்கோட்பாடுகளை அறிந்து கொள்வதற்காக மட்டுமன்றி, சிதறுண்டுபோன தமிழர் வரலாற்றினைத் தரும் ஒரு ஒளிக்கீற்றாகவும் கருதிப் படித்தின்புறுவோமாக. ஒன்றே குலம் ஒருவனே தேவன். மதங்கள் அனைத்தும் அவன் வழிநடத்திய வழித்தடங்களே என்பதனையும் உய்த்துணருவோமாக.

## உசாத்துணை நூல்கள்

1. The Family Encyclopaedia of the Bible, Chancellor Press, 1978, Lion Publishing.

2. விவிலிய வேதம், இராசாக்கள் பகுதி.

3. Samel Noah Kramer, The Sumerians, Their History, Culture, and Character, 1963, The University of Chicago, 4th impression, 1970.

4. மேலும் பார்க்க, பேராசிரியர். லோகநாதனின் (மலேசியா) முன்னோடி ஆய்வுகள், திரு.அமலசிங், பார்தீபனூர், ராமநாதபுரம் (amalasingh@gmail.com), பிரபாகரன் (baskaran.prabhakaran@gmail.com), ஈழத்தவரான சிவகணேசனின் (ganeshan@live.co.uk) ஆய்வுகள் சுமேரிய எழுத்துகளும், தமிழ் எழுத்து களும் நெடுங்கணித அடிப்படையில் உருவாகிய எழுத்துகள் என்பதனால், இவை இரண்டின் மூலமும் ஒன்றே என்பர். இனி இந்தியாவிற்கு ஹாரப்பா முதல் தமிழகம் வரையிலான தொல்லி யற் கள, வரலாற்றியல் கள ஆய்வுகள் மூலம் எம்.பூங்குன்றன் தமிழ் எழுத்து வரலாற்றினை ஆய்வு செய்து படிக்கப்பட்ட கட்டுரையும் கவனத்திற் கொள்ளத்தக்கது. (The Negative influence of Grandha Character in Tamil Script, 39th Conference of Dravidian Linguists, Panjabi University, Patiala, 14.6.2011.)

5. Graham.Hancock, Underworld Flooded Kingdoms of the Ice Age, pp.245 - 268, 2002, Michael Joseph an imprint of Penguin Books. www.grahamhancock.com.




# விவிலிய வேதம் ஆப்ரம் பற்றிக் குறிப்பிடும் வரலாற்றுப் பின்னணிகள் யாவை?

விவிலிய வேதம் முதலில் உலகப் படைப்பையும், பின் உயிரினங்களைப் படைத்தமை பற்றியும் விவரிக்கின்றது. இவற்றையெல்லாம் படைததவர் 'யெகோவா' எனப்படும் இறைவனே என்றும் (Genesis2:4) குறிப்பிடும். மனிதனைப் பூமியின் தூசியிலிருந்து படைத்து, மூச்சை அவன் மூக்கினூடாக ஊதி அவனை உயிர்பெற்றவனாக்கினார். இதன் பின் அவனுக்கு வேண்டிய உயிரினங்கள், செடி, கொடிகள், மரங்கள், ஆறுகள் அனைத்தும் படைத்து அவனை வாழ வைத்திருந்தார். ஆனால் மனிதன் பெருகப், பெருக அவன் கொடூரமான செயல்களையே செய்யத் தொடங்கினான். அதனால் மனிதனைப் பூமியில் படைத்ததற்காகப் பச்சாத்தாபப்பட்டு, அவனை அழித்துவிட விரும்பினார். ஆனால் நோவா (Noah) ஒரு நீதிமானாக விளங்கியதனால், அவரை வெள்ளப்பிரளயத்திலிருந்து தப்புவித்து, மீண்டும் மனிதனின் இருப்பை பூமியில் நிலை நாட்டியிருந்தார்

என்பதனை எடுத்துக் கூறும் விவிலிய வேதம் நோவாவின் தலைமுறையினர் மூலம் மத்திய கிழக்கு நாடுகளில் உருவாக்கப்பட்ட நாடுகள் பற்றியும் விவரிக்கும்.

நோவாவிற்கு செம் (Shem), ஹம் (Ham), யாபெத் (Japheth) என மூன்று ஆண்மக்கள் இருந்தார்கள். இவர்களுள் மூத்த மகனான செம்மிற்கு எழாம் (Elam), அசூர் (Asshur), அர்பச்சத் (Arpachshad), லட் (Lud), அரம் (Aram) ஆகிய புதல்வர்கள் இருந்தனர். இவர்களுள் எழாம், எழாமிய நாட்டினையும், அசூர் அசிரிய நாட்டினையும் உருவாக்கியிருந்தனர். இரண்டாவது மகனாகிய ஹம்மின் தலைமுறையினரே குஷ் (Cush - இது இன்றைய வடசூடான். இதனை எத்தியோப்பியா என்றும் அழைத்திருந்தனர்.) எகிப்து, கனான், லிபியா முதலிய நாடுகளை உருவாக்கியவர்கள் ஆவர். இந்த ஹம்மின் பேரனாகிய நிம்ரொட் (Nimrod) மிகப்பலம் வாய்ந்த ஒருவனாகக் குறிக்கப்படுகின்றான். இவனே பபிலோனில் தன் அரசினை நிறுவிய பின், அசிரியாவில் நின்னேவா (Ninneveh) முதல், வேறு பல சிறப்புமிக்க நகரங்களையும் கட்டியிருந்தான். யாபெத்தின் தலைமுறை யினர், நாடுகளின் தீவுகளில் பரவி வாழ்ந்திருந்தனர். இவ்வாறு மத்திய தரைக்கடலின் கிழக்குப் பகுதி நாடுகள் அனைத்தும் 'செம்' தலைமுறையில் வந்தோரால் உருவாக்கப்பட்டமையினால் இந்த இனமக்கள் 'செமிற்றிக்' இனம் என அடையாளப்படுத்தப் பட்டனர். இந்தப் பின்னணிகளைக் கொண்டிருந்த இந்நாடுகளின் மொழிகள், சமயங்கள், சமூக விழுமியங்கள் அனைத்தும் வேறுபாடற்றவையாகவே நீண்டகாலமாக இருந்து வந்திருந்தன.

## ஆப்ரம் அடிகொடி வரலாறுகள்

மனிதசமூகம் பெருக்கமற்று இருந்த இக்காலத்தில் ஆயுட் காலமும் மிகநீண்டதொன்றாகவே நிர்ணயிக்கப் பட்டிருந்தது. புதிய மனித இனத்தின் தந்தையாக இருந்த நோவா 950 (தொளாயிரத்து ஐம்பது) ஆண்டுகளும், அவரது மூத்த மகன் செம் 600 (அறுநூறு) ஆண்டுகளும், செம்மின் மகன் அர்பச்சாத் 438 (நானூற்று முப்பத் தெட்டு) ஆண்டுகளும் வாழ்ந்திருந்தனர். இத்தலைமுறை யினரின் நீண்டகால வரலாற்றின் முடிவில் வந்தவனே ஆப்ரம் ஆவன். நோவா காலத்தில் இடம்பெற்ற வெள்ளப் பிரளயத்தின் பின், ஏறக்குறைய 3000, 2500 வரையிலான ஆண்டுகளின் பின்னரே ஆப்ரம் தோன்றியிருந்தான். இவன் பிறந்த மண் சால்டியரின் ஊராகும். ஊரில் செய்யப்பட்ட தொல்லியல் ஆய்வுகளின்படி இவன் கி.மு.2000 ஆம் ஆண்டுக் காலத்தைச் சேர்ந்தவன் எனக் காலக்கணிப்புகள் கூறுகின்றன. எனவே இவ்விருவகைக் கணக்குகளையும் துணைகொண்டு, நோக்கினால் நோவா காலத்தில் இடம்பெற்ற கடற்கோள் ஏறக்குறைய கி.மு.5000 ஆண்டிற்கு முன்பின்னாக இடம் பெற்றிருக்கலாம் எனக் கருத முடிகின்றது.

இனி, ஆப்ரமினுக்கும், ஊரினை ஆண்டிருந்த சால்டியன் (இவர்கள் பழம்பாண்டிய மன்னர் மரபில் வந்த வெண்டேர்ச்செழியன், வெற்றிவேட்செழியன், நெடுஞ்செழியன் முதலான பரம்பரையிலோ அல்லது இன்னமும் தமிழகத்தில் அடையாளம் செய்யப்படாத சாலிநாட்டினர் மரபிலோ வந்தவராகலாம்.) நாட்டினருக்கும் இன அடிப்படைத் தொடர்புகள் யாவை?

ஆப்ரமின் தந்தை தேர என்பதும், தேரவின் தந்தை நாகூர் (Nahor) என்பதும் சிறிது வேறுபாடான பெயர்களாகும். அதனோடு இவர்களது மனைவிமார் யாவர்? என்ற குறிப்புகள் எதுவும் தரப்படவில்லை. இந்நிலையில் தேரவின் பிள்ளைகளான ஆப்ரம் (Abram), நாகூர் (Nahor), ஹரன் (Haran) ஆகிய மூவரில், ஹரன், லொட் (Lot) எனும் மகனைப் பெற்றபின் தன் பிறந்த மண்ணாகிய ஊரிலேயே இறந்து விடுகின்றான் (Genesis 11 : 28).* அப்பொழுது ஆப்ரமும், நாகூரும் திருமணம் செய்திருந்தபொழுது, நாகூருக்குப் பிள்ளைகள் உண்டாகியிருந்தன. ஆனால் ஆப்ரமிற்குப் பிள்ளைகள் உண்டாகவில்லை. அதன் பின்னர் தேர தன் மகன் ஆப்ரம், மருமகள் சரை, பேரன் லொட்டுடன் சால்டியரின் ஊரைவிட்டு (Ur) நீங்கி கனான் எனும் ஊரை நோக்கி பயணித்தார். போகும் வழியில் ஹரன் எனும் இடத்தினை அடைந்தபொழுது அங்கு தங்கியிருந்தார்கள். தேரவிற்கு 205 வயது வருகையில் அவர் அங்கு காலமாகி விட்டார். அதனைத் தொடர்ந்து யெகோவா, ஆப்ரமினை அங்கிருந்து புறப்பட்டு கனானிற்குப் போகும்படியும், அந்த நாட்டினை ஆப்ரமிற்கு வழங்கிப் பெயர் பெறச் செய்வார் எனவும் வாக்குப் பண்ணியிருந்தார். அதன்படி ஆப்ரம் கனானின் சேசம் (Shecham) எனுமிடத்திற்குச் சென்றடைந்த பொழுது, யெகோவா "உனது தலைமுறையினருக்கு இந்த நாட்டினையே தருவேன் என்று உறுதியளித்தார்" (Genesis 12 : 6).

---

* *Genesis 15- 7, Genesis 11-28, 31, Genesis 24-10 இச்செய்தியில், ஆப்ரம் தன் மகன் ஈசாக்கிற்குப் பெண் எடுக்க தனது வேலையாளை மெசொபொட்டேமியாவிலுள்ள நாகூர் நகருக்கு அனுப்பியதான குறிப்புள்ளது. இது புலம்பெயர் தமிழர்கள் தொடர்ந்தும் ஈழத்திலுள்ள தம் உறவுமுறையினருடன் திருமணங்களைச் செய்துவரும் மரபுடன் ஒத்துநோக்கத்தக்கது.*

இவ்வாறு விவிலிய வேதம் ஆப்ரம் பிறந்து, வளர்ந்த நகரான ஊரினையும், சால்டியரையும் ஆப்ரமுடன் தொடர்புபடுத்திக் கூறுவது ஒரு சிறப்புச் செய்தியாகும். ஆப்ரம் ஹரனில் தற்காலிகமாகத் தங்கியிருந்த பொழுது "நீ உன் தேசத்தையும், உன் இனத்தையும், உன் தந்தை வீட்டையும் விட்டுப் புறப்பட்டு, நான் காண்பிக்கும் நாட்டிற்குப் போ. நான் உனக்கொரு பெருமைமிக்க நாட்டினை உன்பேரில் உருவாக்கி உன்னை ஆசீர்வதிப் பேன்" (Genesis 12; 1 - 3) என்கையில் சால்டியரின் ஊரே இவர்களின் சொந்த நாடு அல்லது பிறந்த மண் என்பது உறுதியாகின்றது. எனினும் தொல்லியல் ஆய்வுகள், மொழி ஆய்வுகள் என்பன மெசொபொட்டேமிய நாகரிக வளர்ச்சியில், புதிதாக ஊடுருவிய நாகரிகமே பபிலோனியாவில் வளர்ந்திருந்த சுமேரிய நாகரிகம் என்று அடையாளம் படுத்தியுள்ளன. சுமேரியப் பண்பாடுகளை மேற்கொண்டிருந்த சால்டியரும் சடுதியாகப் புலம் பெயர்ந்து வந்து குடியமர்ந்த ஒரு புதிய சமூகமக்களே ஆவர்.* ஆனால், பொதுவாக விவிலிய வேதம் ஆப்ரமிற்கு முற்பட்ட தலைமுறையினரையோ அல்லது நாடுகளையோ தொடர்புபடுத்திக் காட்டவில்லை. காலப்போக்கில் இவர்கள் புலம்பெயர்ந்து குடியமர்ந்த நாடுகள் அனைத் தும், அந்நியர் நாடுகளாகவே இனங்காணப் பட்டுள்ளன. குறிப்பாக, நோவாவின் இரண்டாவது மகனான ஹம் திராட்சை ரசத்தைக் குடித்ததனால் ஏற்பட்ட மதுவெறியில் ஆடைகளற்றுக் கிடந்த தந்தை பற்றி, மற்ற

---

* *விவிலிய வேதம் ஈசையா 23 ; 14 "Look! The land of the Chaldeans. This is the people - Assyria, did not prove to be the one - they founded her for the desert haunters. They have created their siege towers" என்பதனாலும் இது உறுதியாகின்றது.*

இரு சகோதரர்களுக்கும் தெரிவித்த பொழுது, அவர்கள் தந்தைக்கு ஆடையொன்றினை முதுகுப் புறமாக எடுத்துச் சென்று போர்த்திவிட்டனர். பின் சுயநினைவு பெற்று நோவா எழுந்து நடந்தவற்றை அறிந்து பொழுது, ஹம்மின் மகனான கனானுக்கும் அவனது தலைமுறையினருக்கும் அவர்களது, நாட்டினை இழந்து, அடிமைகளாவார்கள் எனச் சாபமிட்டிருந்தார் என்பதனாலே, இந்நாட்டினை ஆப்ரமின் பேரன் இஸ்ரவேலுக்கு (ஈசுவர வேலர் நாடு) வழங்கிப் புகழ்மிக்க நாடாக்க விரும்பினார் யெகோவா எனத் தெரிகின்றது. எவ்வாறாயினும் நோவா தலைமுறையினர் உருவாக்கிய நாடுகளும், அங்கு வாழ்ந்திருந்த செமிற்றிக் இனத்தவரும் காலப்போக்கில் பகைமை பாராட்டி அந்நிய மனிதர்களாக மாறிவிட்ட நிலைமைகளும் குறிப்பிடத்தக்கன.

இனி, ஈசையா எனும் பகுதியில் ஆப்ரம் பேரனான யேக்கப்பிற்கு (இஸ்ரேல் என்று பின் யெகோவாவால் பெயர் மாற்றப்பட்டிருந்தான்) "நான் உங்களுக்காக அரண்களெல்லாம் இடிந்து விழவும், சால்டியர்கள் தோணிகளிலிருந்து அலறிய பொழுது, அவர்களைப் பாலிலோனுக்கு அனுப்பினேனென்று, உங்கள் மீட்பரும் இஸ்ரவேலின் பரிசுத்தருமாகிய இறைவன் சொல்லுகிறார்" (Isaiah 43 : 14). "சமுத்திரத்திலே வழியையும், வீச்சுமிக்க அலையுடைய நீரின் மத்தியில் பாதையையும் உண்டாக்கி, தேர்களையும், குதிரைகளையும், படைவீரர்களையும் புறப்படப் பண்ணி பேரலைகளைப் பொங்கி எழாதபடி ஒரு திரி அணைகிறது போல் அணையச் செய்தவருமான கடவுள் கூறுவதாவது (Esaiah 43 : 16 - 17): "முந்தினவற்றை நினைக்க வேண்டாம். தற்பொழுது புதிய வழிகளைச்

செய்து வருகின்றேன். இன்று உங்களுக்குப் பாலைவனங்களில் வழிகளையும், வானம் பார்க்கும் பூமியில் ஆறுகளையும் உண்டாக்குவேன்." (முகு.43,18-19).

இவ்வாறு ஆப்ரமின் மூதாதையர்களை ஆழிப் பேரலைகளிலிருந்து (குமரிக்கண்ட பேரலைகளிலிருந்து) காப்பாற்றி அவர்களைப் பபிலோனுக்கு அனுப்பி வைத்தவர் யெகோவா ஆகிய இறைவனே என்பது அறிவுறுத்தப்பட்டுள்ளது. காலப்போக்கில் ஆப்ரம் புலம்பெயர்ந்த நிலையில் கலப்புத் திருமணங்களைச் செய்திருந்தார். அதனால் இனத்தூய்மை பேணப்பட வில்லை. ஆப்ரம் மூன்று திருமணங்களைச் செய்திருந்தார். இவரது மூத்த முதல் மனைவிக்கு பிள்ளைப் பாக்கியமற்ற நிலையில், அவள் விருப்பத்திற்கிணங்க எகிப்திய பணிப்பெண்ணான ஹகர் (Hagar) மூலம் இஸ்மெயில் எனும் ஆண் குழந்தை இவருக்கு கிடைக்கப்பெற்றிருந்தது. பின், சரைக்கு இறைவன் அருளால், ஈசாக் எனும் மகன் கிடைக்கப்பெற்றிருந்தான். அதனால் ஈசாக்கின் வாரிசு உரிமைகளுக்கு, இஸ்மெயில் தடையாக இருப்பான் எனக் கருதி இஸ்மெயிலையும், ஹகரையும் அனுப்பும்படி சரை, ஆப்ரமிடம் கோரினாள்.

அப்பொழுது யெகோவா "ஈசாக் மூலம் ஆப்ரமின் தலைமுறையினர் நிர்ணயிக்கப்படுமென்பதனால், பணிப் பெண்ணையும், மகனையும் வெளியேற்றும்படியும், அவனுக்கும் ஒரு நாட்டினைத் தான் ஏற்படுத்திக்கொடுப் பதாக" வாக்கு பண்ணினார் (இதன்படி சினாய் மலைக்கு இப்பாலுள்ள அரேபிய நாடு இஸ்மெயிலுக்கு பின்னர் வழங்கப்பட்டிருந்தமை குறிப்பிடத்தக்கது.) (Galathians4:24) சரை இறந்த பின்னர், ஆப்ரம் கேதுரா (Keturah) எனும் பெண்ணை மணந்து ஆறு ஆண்மக்களைப் பெற்றிருந்தார்

*(Genesis 25:1)*. இதுபோன்ற திருமணங்கள் இடம்பெற்றிருந்த நிலையில், இனங்களை அடையாளப்படுத்துவதென்பது கடினமானதொன்றாகும். ஆப்ரமின் மூதாதையர்களும் இவ்வாறு வேற்றினப் பெண்களைத் திருமணம் செய்திருக்கலாம். இவ்வாறான திருமணங்கள் இடம்பெறும் சூழ்நிலையிலும், ஆப்ரம் தன் மகன் ஈசாக்கிற்கு யெகோவா புறக்கணிக்கும் கனானியரிடமிருந்து பெண் எடுக்க விரும்பவில்லை. அதனால் மெசொபொட்டேமியாவிலுள்ள நாகூரில் தன் சொந்தத்தில் பெண் எடுக்க வேலையாளை அனுப்பி, தன் சகோதரன் நாகூரின் மகள் ரிபெக்காவைத் தருவித்து திருமணம் செய்வித்திருந்தார்.* *(Genesis 24 : 10)*

உண்மையில் ஆப்ரமினைத் தேர்ந்தெடுத்த யெகோவா "நான் உன் கடவுளாகிய யெகோவா. உன்னைச் சால்டியரின் ஊரிலிருந்து அழைத்து வந்து இந்த நாட்டினைத் தந்திருக்கிறேன். அதனை உரிமைகோர வல்ல வாரிசினையும் தருவேன்" *(Genesis 15; 5 - 7)*, "உனது வாரிசிற்கு எகிப்திய நதியிலிருந்து யூபரரிஸ் நதி வரையிலுள்ள நாடுகளையும் தருவேன்' *(Genesis 15 : 18)* என்றெல்லாம் வாக்குப் பண்ணியிருந்தும், ஆப்ரம் உயிர் துறக்கும் வரை வாக்குப் பண்ணிய நாட்டினைப் பெற்றிருக்கவில்லை என்பதும், பின் ஈசாக்கின்

---

* *ரிபெக்கா பட்டன்அரத்தைச் சேர்ந்த சிரியன் குடும்பத்தவனான பெதுவெல் மகள் என்ற வேறோர் குறிப்பும் உண்டு (Genesis 25:20). ஏனெனில் ஆப்ரம் கனானை நோக்கிப் பயணிக்கையில் ஹரன், பட்டன்அரம் ஆகிய இடங்களில் தங்கியிருந்தபடியினால், உறவினர் சிலர் இங்கு இருந்தனர் என்றும் தெரிகின்றது. பெதுவல், ஆப்ரமின் சகோதரன் நாகூரின் மகன் ஆவன் (Genesis 24 : 10).*

மகன் யேக்கப்பிற்கு இஸ்ரவேல் என்ற பெயரில் ஒருநாடு பல வாழ்க்கைப் போராட்டங்களின் பின்னரே வழங்கப்பட்டிருந்தது என்பதும், இக்காலம் முதலாகவே யூதஇனம், யூதமதம் என்பன உருவாகி வளர்ந்தன என்பதும் குறிப்பிடத்தக்கது.

## யெகோவா உருவாக்க முயன்ற யூதமதம் சந்தித்த சவால்கள் யாவை?

யெகோவா, ஆப்ரம் மூலம் யூதமதத்தினை உருவாக்கவே ஆப்ரமினைத் தேர்ந்தெடுத்துத் "தானே உண்மையான இறைவன். அனைத்தையும் படைத்துக் காத்து, அழிப்பவராகையால் தன்னையே வழிபட வேண்டுமென்று" அறிவுறுத்தியதன்படி, ஆப்ரம், ஈசாக், யேக்கப் முதலானோர், இறைவனாகிய யெகோவாவை மனதில் நிறுத்தியும், யெகோவாவை அடையாளப்படுத்தி வழிபட கற்களைப் பதித்தும் வழிபடத் தொடங்கினர். இவ்வாறு மக்களை வழிநடத்துவதற்காக இறைவன் "தன் எல்லாம் கடந்த நிலையிலிருந்து கீழிறங்கி வருகையில் ஒரு பெயர், ஒரு வடிவத்தை தாங்கி வருவான்" எனச் சைவம் கூறும். ஆனால் இங்கு நிலைமை அப்படியல்ல. உருவம் எதுவுமில்லை. ஆனால் பெயர் மட்டுமே 'யெகோவா' என்று கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால் மேகக் கூட்டங்கள் கீழிறங்கும் நிலையில் அசரீரியாகத் தோன்றித் தன் தெய்வீகத்தை வெளிப்படுத்தியிருந்தார். அதாவது ஹீப்ரு மொழியில் யிஃவ்ஃ (Yhwh) என்பது ஆங்கிலத்தில் 'யெகோவா' என்பதே அப்பெயராகும். இத்தெய்வீகப் பெயரானது விவிலிய வேதத்தின் உலகப் படைப்பு பற்றிய விவரம் விபரிக்கப்பட்டபின் ஆதியாகமம் (Genesis 2 : 4)

முதல், இறுதிவரை 6973 தடவைகள் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது. இவ்வளவு தடவைகள் அவர் நீதிமான்கள் அல்லது தீர்க்கதரிசிகள் பலருக்குத் தன்னை இஸ்ரேலியர்கள் உறுதியாக வழிபடமுடியாத நிலையில் ஏற்படவிருக்கும் தீங்குகளை அறிவுறுத்தவும், பின் தான் எப்படியெல்லாம் அன்புடன் தன்னை அழைக்கிறவர்களைப் பாதுகாப்பவன், மற்றும் பிற தெய்வச் சிலைகளை வழிபடுபவர்களைத் தண்டிப்பவன் என்பனவற்றை மட்டுமன்றித், தன் மதத்தின் கோட்பாடுகளை எவ்வாறு பின்பற்ற வேண்டுமென்பதற் காகவும் அசரீரி வடிவில் விடயங்களை அறிவுறுத்தி யுள்ளார் என்பதனை நூலின் 80% (எண்பது வீதமான) பகுதி எடுத்துரைக்கின்றது.

உண்மையில் யூதமதத்தினை நிலைநாட்டுவதற்கு ஆப்ரகாம் சந்ததியினரின் பாரம்பரிய மதமான சைவமதமே சவாலாக அமைந்திருந்தது. ஏறக்குறைய ஆயிரத்து நானூறு (1400) ஆண்டுகள் வரை, யூத மதத்தினை ஒரு தனியியல்பு கொண்ட மதமாக யூதரிடையே நிலைநிறுத்துவதற்கு யெகோவாவிற்கு எடுத்திருந்ததெனலாம். ஏனெனில் மனித இனம் குழுக் களாக வாழும்பொழுது சில நடைமுறைகளுக்குட்பட்டே வாழ்ந்துள்ளனர். அது தலைமுறை, தலைமுறையாகக் கொண்டு செல்வதே எழுதப்படாத வரலாற்றுப் பதிவு களாகும். சங்கத்தமிழ் நூல்கள் எமக்கு வரலாறுகளைப் பதிவுசெய்யாத நிலையில் சமூக, சமய வாழ்வு முறைகளை, இன்றுவரை தொடர்ந்து வந்த எம் தலைமுறையினராலே எடுத்து வரப்படலாயின. இப்பின்னணிகளில் சமய, சமூக பாரம்பரியங்களே வரலாற்று மையங்களாக அமைகின்றன. இந்த வகையிலேயே ஆப்ரகாம்

தலைமுறையினர், ஒரு புதிய வழிபாட்டினை ஏற்றுக் கொள்வதற்காக தமது பாரம்பரிய வழிபாடுகளைக் கைவிட முடியாது பல இன்னல்களுக்குட்பட்டிருந்தனர். சால்டியர் தலைமுறையில் வந்தவர்களானபடியினாலே இவர்கள் தமிழகக் குடிகள் பேணியிருந்த கற்றூண் வழிபாடு, பசுக்கன்று வழிபாடு, பாம்பு வழிபாடு முதலான வழிபாடுகளையும் (2 Kings 10 : 18 - 28; 2 Kings 17 : 9 - 12; Judges 3 : 7) மேற்கொண்டிருந்தனர். இவற்றை திருமுருகாற்றுப்படை "மன்றமும், பொதியிலுங் கந்துடை நிலையினும்" என்றும், பட்டினப்பாலை "வம்பலர் சேர்க்கும் கந்துடைப் பொதியிலும்" என்றும் குறிப்பிடுகின்றன. இவற்றைக் 'கடவுள் தூண்' அல்லது 'கடவுள் தறி' எனவும் அழைத்தனர். அதாவது மனதில் இறைவனை நிறுத்தி வழிபட ஓர் அடையாளமாகவே இவற்றைக் கையாண்டு மனத்தை வழிப்படுத்தினரேயொழிய, இவற்றைக் கடவுளே என்று கண்டார்கள் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

இத்தகைய வழிபாடுகளைச் சுமேரியர் அல்லது சால்டியர் மட்டுமன்றிப் பொதுவாக அசிரியா, ஜோர்டான், கனான், எகிப்து வரை பரவி வாழ்ந்த செமிற்றிக் இன மக்கள் அனைவரும் மேற்கொண்டிருந்தனர். குறிப்பாக யெகோவாவிற்குக் கூட எகிப்தில் பலிபீடமும், தூணும் அமைக்கப்படும் (Isaiah 19 : 19) என்பதனால், ஏற்கெனவே இருந்த இந்த வழிபாட்டு முறையினது இருந்ததே, மீண்டும் யெகோவாவிற்காக அமைக்கப்படும் நிலை ஏற்படலாயிற்று எனலாம். அசிரியரும், கனானியரும் எருதுவுடன் கூடிய பால் (Baal) எனும் பருவகாலக் கடவுளையும், சிங்கத்தின் மீது காலை வைத்திருக்கும் அசெரா (Asharah) எனும் பெண் தெய்வத்தினையும்

வழிபடுபவர்கள் ஆவர். அதனோடு கனானியரின் வழிபாட்டுத் தலங்களில் தெய்வங்களை அடையாளப் படுத்தும் வகையில் கற்றூண்கள் அல்லது கந்து எனப்படும் மரத்துண்டங்கள் அல்லது மரத்தின் அடிப்பகுதிகளும் வைக்கப்பட்டிருந்தன. இத்தகைய வழிபாட்டுத் தலங்களுக்கு மக்கள் சென்று தீபங்களை ஏற்றியும், தூபமிட்டும் வழிபடுவதோடு மிருக பலிகளையும் செய்து வருவர். அதனாலேயே ஆப்ரம் கனானில் வசித்திருந்தபொழுது தன் மகன் ஈசாக்கிற்கு அங்கு பெண் எடுக்காது, யெகோவாவின் வழிபாட்டினை உறுதியாகப் பேணக்கூடிய தனது உறவுப் பெண்ணான ரிபெக்காவினை ஹரனிலிருந்து தருவித்திருந்தார் (Genesis 24 : 3 - 4) என்று தெரிகின்றது.

யூதமக்களின் சமூக பாரம்பரியங்களாக சாவீட்டில் துக்கம் கொண்டாடுதல், தீட்டு, துடக்கு என்ற கோட்பாடுகளை மேற்கொள்ளுதல் என்பனவும் நடைமுறையில் இருந்துள்ளன. மேலும், துக்கம் கொண்டாடும் சமயங்களில் இவர்கள் சாம்பலைத் தலையில் கொட்டிக் கொள்வார்கள் என்பதனால், இவை ஆசைகளை அகற்றுவதற்காகச் சைவர்கள் பூசிக் கொள்ளும் திருநீற்றின் ஒரு பழைய பாரம்பரியத்துடன் தொடர்பு கொண்டதுமாகலாம் (Esther 4 : 1 - Daniel 9 : 3). இவ்வாறான வழிபாட்டு முறைகளை யெகோவா அடிக்கடி கண்டித்திருக்கின்றார். இவர்கள் பிற தெய்வங்களை வழிபடின் போர், பஞ்சம் முதலான வழிகளில் தொடர்ந்தும் தண்டித்து வந்தார் என விவிலிய வேதம் விவரிக்கும் (2 Kings 21; 1 - 15; Judges 3 : 7 - 8; Jeremiah 52) பிற்காலத்தில் சால்டியர், இஸ்ரேலியரின் ஜெருசலத்தினை படையெடுத்து வந்து அழிவு செய்த

வரலாற்றினைக் குறிப்பிடும்பொழுது (Jeremiah 32:3-5). இப்படையெடுப்பானது இஸ்ரேலியரைத் தண்டிக்க யெகோவா ஏற்படுத்தியது என விவரிக்கும் (Jeremiah 32 : 26 - 36 வரை). இப்படை எடுப்பினை விவரித்தபின், மீண்டும் தனது அன்பிற்குரிய இஸ்ரேலியரை பபிலோனிலிருந்து மீட்டு வருவார் என்பதனையும் விவரித்துள்ளமை (Jeremiah 32 : 38 - 46 வரை) தண்டனை, மன்னிப்பு என யூதர் வரலாறு ஒரு தொடர்கதையாக வளர்ந்திருந்தமை புலனாம்.

இவ்வாறு யெகோவா யூதர்களைத் தண்டிப்பதும் மன்னிப்பதும் அவர்கள் தன்மீது உறுதியான நம்பிக்கை வைத்திருப்பதற்காகவேயாம். அவர்களை முற்றாக அழித்து விடும் நோக்கம் அவர்க்கில்லை. அதனால் எப்பொழுதும் அவர்களைத் துயரங்களிலிருந்து மீட்டெடுத்தவராகவே விவிலிய வேதம் குறிப்பிடும். அசிரிய மன்னனான சென்னாசெரிப்பிடமிருந்தும் (கி.மு. 705 - 681) எகிப்திய மன்னனிடமிருந்தும் யூதர்களை மீட்டெடுத்தார் (Isaiah 36:13-20). பின்னர் இஸ்ரேலியருக்காகச் சால்டிய அரசினையும் நாசமாக்கி, இஸ்ரேலிய நாட்டினை உருவாக்கிக் கொடுப்பார் என ஜேக்கப்பிற்குக் கூறியிருந்தார் (Isaiah 13 : 19 - 12). ஜோர்டானுக்கு இஸ்ரேலியர்கள் செல்வதற்கு ஆற்று வெள்ளம் தடையாக இருக்கையில், யெகோவா கூறியபடி இஸ்ரேலிய குருமார் யெகோவாவின் உடன்படிக்கை எழுதப்பட்ட கல்லினை எடுத்துக் கொண்டு ஆற்றினுள் கால் வைக்கையில் வெள்ளம் வழிவிட்டிருந்தது (Joshua 3 : 13). இவ்விதமே எகிப்தில் அடிமைகளாகத் தொழில் புரிந்திருந்த இஸ்ரேலியரை யெகோவாவின் கட்டளைப்படி மோசஸ் விடுவித்துச் செல்கையில்

செங்கடல் வழிவிட்டிருந்தது (Exodus 14 : 21, 29). எனினும் தான் அவர்களுக்காக விதித்த பத்துக் கட்டளைகள், மற்றும் உடன்படிக்கைகளை இஸ்ரேலியர் அலட்சியப் படுத்தியபொழுது பபிலோனிய மன்னனான நெபுசட்நசாரை (கி.மு.597) இஸ்ரேலியர் மீது படையெடுத்துச் சிறைபிடித்துச் செல்ல வைத்திருந்தார் (Chronicles 36 : 17 - 20). பின், இஸ்ரேலியர் மன்றாடிய தனாலும், மற்றும் நெபுசட்நசார் யெகோவாவின் ஆலயத்தை எரித்துச், சொத்துகளை எடுத்துச் சென்றதனாலும், யெகோவா மீண்டும் நெபுசட்நசாரை பாரசீக மன்னன் சைரசினைத் தூண்டி, (Cyrus, The Persian King) பபிலோனிய அரசு, மீண்டும் தலையெடுக்க முடியாத வகையில் முற்றாக அழித்திருந்தார் என்பதனை எஸ்ரா (Ezra 1, 2 அதிகாரங்கள்) மற்றும் டானியல் - Daniel எனும் பகுதிகள் முழுமையாக இவ்வரலாற்றினையே விவரிக்கும்.

இவ்வாறு, யெகோவா ஆப்ரமிற்கு வாக்குறுதி யளித்ததன்படி, அவனது தலைமுறையினரைத் தொடர்ந்தும் பாதுகாத்து வந்திருந்தார். சால்டியரின் ஊருக்கு மற்ற யூதமக்களுடன் கைதிகளாக எடுத்துச் செல்லப்பட்ட டானியலுக்கும், அவனது நண்பர் மூவருக்கும் சால்டியரின் மொழியையும், எழுத்தினையும் கற்பித்து அரச சபையிலும், ஆட்சிப் பிரிவுகளிலும் பதவி கள் வழங்கப்பட்டிருந்தன (Daniel 1 : 4). இக்குறிப்பிலிருந்து ஆப்ரகாம் சால்டியரின் ஊரைச் சேர்ந்தவன் எனும் வகை யிலே அங்கிருந்து வெளியேறியிருந்தான். ஆனால், ஏறக் குறைய 1400 வருடங்களின் பின் அவன் தலைமுறையினர் ஒரு புதிய இனம் போல் மீண்டும் வந்து அங்கு சால்டிய மொழியைக் கற்றனர் என்ற செய்தி பதிவாகியதனால்

மனிதர்களின் மூலங்கள் அனைத்தும் வேரற்றுப் போகும் வகையில் காலம் மாற்றிவிட வல்லது என்பதும் புலனாம். அதனோடு சால்டியர்கள் பிற்காலத்தில், யூதர் மீது நிகழ்த்திய போர்களும், அவர்களது யூதமதத்தினை அவமதித்த நிலைகளும் காலம் செய்த கோலமே. இன்னும் நீண்ட காலம் கழிந்துவிட்ட நிலையில், குமரிக்கண்டப் பேரலைகளின் பின் பபிலோனியாவிற்குப் புலம்பெயர்ந்த சுமேரியரும், சால்டியரும் தம்மை நினைவு கூரும் வரலாற்றுப் பதிவுகளை வைத்திருக்கவில்லை. ஆனால் சுமேரியர் எப்பொழுதும் தம் பூர்வீகநாடு வேறொன்று என்ற கருத்துடையவர்களாகவே வாழ்ந்திருந்தனர். விவிலிய வேதத்தில் ஆப்ரம் தலைமுறையினர் பெயர் களைப் பட்டியல் இட்டு ஆய்வுகள் செய்யின் பெரும் பாலானவை தமிழ்ப்பெயர்கள் திரிபடைந்த நிலையிலே காணப்படுகின்றன. ஆழ்வன் (Alvan), ஓணம் (O'nam), ஐயா (Aiah), சேரன் (Cheran), அரன் (Aran), உண்ணி (Unni) (Chronicle1: 15 - 20, Chronicles 9 :5) முதலான பெயர்கள் (Chronicles 1 : 40 - 42) சேரநாட்டினை நினைவு கொள்ளும் வகையில் அமைந்துள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கது.*

## விவிலிய வேதம் எழுதப்பட்ட காலம் யாது?

சுமேரியர்கள் தமது வர்த்தகக் கணக்குகளைப் பதிவு செய்து கொள்வதற்காக முக்கோண வடிவில் (Cuneiform Writing) எழுத்துகளை கி.மு.3000ஆம் ஆண்டளவிலே உருவாக்கியிருந்தனர். முதலில் மத்திய கிழக்கு

---

* *இன்று யூதர்கள் வைத்திருக்கும் Morgan எனும் பெயர் முருகனையும், Moylan மயிலோனையும் நினைவுகூட்டுகின்றன எனில் மிகையாகாது.*

நாட்டினரும் இந்தக் கியுனிபோம் எழுத்துகளையே பாவித்திருந்தனர். சிறப்பாக குரியன்ஸ் (Hurrians), ஆர்மேனியன்ஸ் (Armenians), உறத்தியன்ஸ் (Urartians), பாரசீகர் (Persians), ஹிட்டைட்ஸ் (Hittites) முதலானோர், மற்றும் ஆப்ரமின் தலைமுறையினரும் இந்த எழுத்தினையே பாவித்திருந்தனர். ஆனால் காலப் போக்கில் இந்த இனங்கள் தத்தம் மொழிக்கென எழுத்துகளை உருவாக்கியிருந்தன. இவ்வாறு பாவனையிலிருந்த இவர்களது மொழிகள், எழுத்துகள் பற்றி விவிலிய வேதம் மேலோட்டமாகப் பல சந்தர்ப்பங்களில் குறிப்பிட்டுள்ளது. இந்த வளர்ச்சி நிலைகளுக்கிணங்க இஸ்ரேலியரும், பின்னர் கனானியர், பொனீசியர் எழுத்துகளைப் பின்பற்றி கி.மு.1000ஆம் ஆண்டளவில் ஹீப்ரு மொழிக்கு எழுத்துகளை உருவாக்கிக் கொண்டனர்.

ஆயினும், காலப்போக்கில் ஆர்மேனியருடைய எழுத்துகளைப் பின்பற்றி புதிய எழுத்துகளை உருவாக்கிக் கொண்டதோடு, அரமைக் மொழியையும் இரண்டாம் மொழியாக ஏற்று எழுதியும், பேசியும் வந்தனர். (இது எதுபோலவெனில் பிராமணர்களின் வடமொழியைப் பேசாவிடினும், தத்தம் மொழிகளில் கலப்படம் செய்து திரிபடைந்த தமிழ் மலையாளம் ஆகியது போலவும், மற்றும் இன்று வெள்ளித் திரைகளில் தமிழர்கள் ஆங்கிலச் சொற்களைக் கலப்படம் செய்து பேசியும், எழுதியும் தமிழின் அழகினைக் குன்றச் செய்வது போன்றதாகும்.) அதனால் விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாட்டினை யூதர்கள் ஹீப்ரு மொழியிலும், அரமைக் மொழியிலும் எழுதிக் கொண்டனர். ஆனால் மோசசிற்கு

சினாய் மலையில் யூதமத தத்துவங்கள், மனித சமூக வாழ்வு முறைகள், புதிய யூதமதத்தின் குருமார், வழிபாட்டிற்கான கூடாரங்களை அமைத்தல், வழிபாட்டு முறைகள் என்பனவற்றை விரிவாக ஹீப்ரு மொழியில் யெகோவா அறிவுறுத்தியிருந்தார். இக்காலம் முதலாகவே யூதமதம் ஒரு தனி மதமாக வளரத் தொடங்கலாயிற்று. எனவே இவை பற்றி மோசஸ் காலம் (கி.மு.1657) முதல் தொடர்ந்து இடம்பெற்ற நிகழ்ச்சிகள் அனைத்தையும் கால அட்டவணை செய்து ஆய்வாளர்கள் தயரித்துள்ளனர்.* இக்கால அட்டவணை ஊகத்தின் அடிப்படையிலானதாகும்.

தொல்லியலாய்வுகள் யூதரின் மொழிகளான ஹீப்ரு, அரமைக் என்பனவற்றில் விவிலிய வேதம் கி.மு.100-கி.பி.100ஆம் ஆண்டுக்கிடைப்பட்ட காலப் பகுதியில் எழுதப்பட்டிருக்கலாம் எனத் தெரிவித்துள்ளன. விவிலிய வேத எழுத்துருவாக்கத்தின் முதற் பிரதி வறண்ட கடலின் சுருள்கள் (Dead Sea Scrolls) என அழைக்கப்படும். ஏனெனில் ரோமர் கி.பி.68ஆம் ஆண்டளவில் இஸ்ரேல் மீது படையெடுத்த பொழுது இவற்றைப் பாதுகாப்பதற்காக இக்கடலின் அருகாமையிலிருந்த கியும்ரான் (Qumran) நூல்நிலையத்திலிருந்த பிரதியைத், தோல்பையில் வைத்து அருகிலிருந்த குகையில் மறைத்து வைத்தனர். ஆனால் யெகோவாவின் அருளால் மீண்டும் இவை ஏறக்குறைய 1900 ஆண்டுகள் கழிந்த பின்னரும், இன்றைய மக்கள்

* *பார்க்கவும், New World Translation of the Holy Scriptures, 3ஆம் பதிப்பு, 1984, பக். 1546, Watch Tower Bible Tract Society of Pensylvania.*

கைக்கெட்டப்பட்டுள்ளமை ஆச்சரியமே. அதாவது இப்பகுதியில் மந்தைகளை மேய்த்திருந்த இடைப்பையன் இதனை 1947ஆம் ஆண்டில் எடுத்திருந்தான். இதனைக் கேள்வியுற்ற தொல்லியலாய்வாளர், அவற்றைப் பெற்று ஆய்வுகளை மேற்கொண்டனர். இவற்றின் காலம் ஹீப்ரு மொழியில் எழுத்துகள் உருவாக்கம் செய்யப்பட்டபின் எழுதப்பட்டிருக்கலாம். அவற்றின் முதற் பிரதிகள் நாணல் புல்லில் செய்யப்பட்ட பைப்ரஸ் தாள்களில் எழுதப் பட்டிருந்தமையினால் ஈரலிப்பான நிலங்களில் பாதுகாக்கப் புதைக்கும் பொழுது அவை உக்கிச் சிதைவடைந்திருக்கலாம் எனக் கருதுவர். காலப்போக்கில் கி.பி.9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இன்னோர் பிரதியும் கிடைக்கப்பெற்றிருந்த நிலையில் இதற்கும் கியும்ரான் நூல் நிலையப் பிரதிக்கும் அதிக வேறுபாடுகள் இல்லை என்பதும் அவதானிக்கப் பட்டுள்ளது. இவை தவிர எகிப்தில் வாழ்ந்திருந்த யூதருக்காக பரோ தொலமி பிலடெபஸ் (Pharaoh Ptolemy Philadephus - கி.மு.285 - 246) காலத்தில் செய்யப்பட்ட கிரேக்க மொழிபெயர்ப்பின்படி, பழைய ஏற்பாட்டின் ஹீப்ரு பிரதிகள் காலம் பின்னோக்கித் தள்ளப்பட வேண்டியதொன்றாகும். எனினும் பழைய ஏற்பாட்டின் 39 பகுதிகளையும் எஸ்ரா என்பவரே (Book of Ezra) தொகுத்திருந்ததாக விவிலிய வேதம் குறிப்பிடும். இவரது காலம் கி.மு.537 - 467 வரையிலானது என முற்குறிப்பிட்ட கால அட்டவணை குறிப்பிடும். எனவே முதல் ஏற்பாட்டின் காலம் இன்னும் முன்னோக்கி நகர்த்தப்பட வேண்டும் எனலாம்.

## விவிலிய வேதமும் யேசுநாதர் பற்றிய வரலாற்றுச் சிக்கலும்

விவிலிய வேதம் யூதமதத்தினர் நெறிதவறிச் செல்கையில் உருவாகிய இன்னோர் மதமாக கிறித்தவ மதத்தினை அறிமுகம் செய்கின்றது. யூத மதத்தினர் ஆலயங்களில் ஆடு, மாடுகள், புறாக்கள் என்பன பலியிடுவதற்காக விற்கப்படும் நிலையில், அங்கு தெய்வீகத்தை மறுத்திருந்தது. அதனால் யேசுநாதர் மூலம் மீண்டும் தெய்வீகத்தின் பெருமையை நிலைநாட்டிய மதமே கிறித்தவமாகும். இதற்கிடையில் யேசுநாதரின் வாழ்வின் சில காலம் ஒரு மறைபொருளாகவே இன்று வரை இருந்து வந்துள்ளது. அதாவது யேசுநாதர் தன் பெற்றோருடன் தனது பன்னிரண்டாவது வயதில் நிசான்* மாதத்தில் இடம்பெறும் வருடப்பிறப்பு விழாவிற்கு ஜெருசலம் சென்று திரும்புகையில் காணாமற் போயிருந்தார். பின், அவரது பெற்றோர் அவரை ஒரு தேவாலயத்தில் போதித்துக் கொண்டிருக்கையில் கண்டுபிடித்தனர். அதன் பின் அவர் தன் பெற்றோருடன் சென்றதாகக் குறிப்பில்லை (Luke 2 : 44 - 47). பின், அவரது முப்பதாவது வயதிலேயே ஜோர்டான் ஆற்றில் யோனால் (John) ஞானமுழுக்குச் சடங்கினைச் செய்திருந்தார். அப்பொழுது புறாவடிவில் ஆவியானவர் இறங்குகையில் ஒரு குரல் ஒலித்தது. "நீர் என் மகன். நான் உன்னை ஏற்றுக் கொண்டுள்ளேன்" (Luke 3 : 22 - 23). இதனை யேசுநாதரும்

---

* *யூதரின் முதல் மாதம் நிசான் என அழைக்கப்படும்.*

யூத குருமாரிடம் 'தான் சுயமாக வரவில்லை என்றும் இறைவனாலே அனுப்பப்பட்டவர், அதனால் தான் இந்த உலகத்தினின்றும் உண்டானவரல்ல' என்பதனையும் (John 8 : 23 - 24, 42) அறிவுறுத்தியிருந்தார்.

இவ்வாறு யோனால் ஞானமுழுக்காட்டப் பின்னரே தான் யார்? என யூதர்களுக்கு அடையாளப்படுத்தி, அற்புதங்களை நிகழ்த்தியதனால், அதனால் கோபமுற்ற யூதர்களால் சிலுவையிலும் அறையப்பட்டிருந்தார். பின், புதைக்கப்பட்ட குகையிலிருந்த இவர் உடல் மூன்றாம் நாள் காணாமற் போயிருந்தது. அப்பொழுது தேவ தூதர்கள் யேசுநாதரைத் தேடிய மக்களுக்கு "அவர் மீண்டும் இறையுலகத்திற்குத் திரும்பிவிட்டார்" என்பதனை அறிவித்தனர். இதன் பின்னரே வேகமாக கிறித்தவ மதம் உலகளாவிய அளவில் பரவலாயிற்று.

இவ்வாறு கிறித்தவ மத வரலாறு இருக்கையில், யேசுநாதர் பற்றி அவரது பதின்மூன்றாவது வயது முதல் முப்பத்தேழாவது வயதுவரை அவர்பற்றி விவிலிய வேதம் எதுவும் குறிப்பிடுவதாக இல்லை. அதனால் அவரைச் சில ஆய்வாளர்கள், இவர் இக்காலத்தில் இந்தியா சென்று காஷ்மீர் பகுதியிலிருந்த பௌத்த மடாலயத்தில் (Monastery of Himmis) தங்கியிருந்து அங்கு பிராமணர்களால் ஒதுக்கப்பட்ட மக்களுக்காக தனது மதத்தைப் பரப்பினார் என்பதோடு, பௌத்தக் கோட்பாடுகளையும் ஆய்வு செய்திருந்தார் என்பர். இவர்களுள் சிறப்பாக ரஷ்ய வைத்தியரான நிக்கொலஸ் நோட்டோவிச் (Nicholas Notovitch) யேசுநாதரின் அறிந்து கொள்ள முடியாத வாழ்வுக் காலம் (The Unknown life of Christ) எனும் தமது

நூலில், மேற்குறிப்பிட்ட கருத்துகளைத் தெரிவித்திருந்தார். அங்கு யேசுநாதரை மக்கள் 'ஈசர்' 'ஈசானர்' 'ஈசை' எனும் பெயர்களால் அறிந்திருந்தனர். இத்தகைய கருத்துகளைப் பல கிறித்தவ ஆய்வாளர்கள் (ஒக்ஸ்போர்ட் பல்கலைக் கழகப் பேராசிரியரும், ஜெர்மனியருமான எப்.மக்ஸ்முல்லர் (F.Max.Mullar உட்பட) கொதித்தெழுந்து, நோட்டோவிச் கருத்துகள் அத்தனையும் பொய் எனக் கூறி மறுத்திருந்தனர்.

இதுவரை காலமும் உருவாகிய உலக மதங்கள் அத்தனையும் இறைவன் ஒருவனே, அதனால் அவரால் படைக்கப்பெற்ற அத்தனை உயிர்களுக்கும் அவரே தந்தை என்றே கூறியுள்ளன. இப்பூமிக்கு ஒரு சூரியனும், ஒரு சந்திரனும் சுடர்களாக இருப்பது போல அவரும் ஒருவரே. இவற்றுள் அன்றிலிருந்து இன்று வரை சைவ மதத்திலே அதிக தெய்வத் திருமேனிகளும், வழிபாடுகளும் உள. இது உடல் உழைப்புமிக்க பாமரமக்களின் மனதை இலகுவாகக் கட்டுப்படுத்தவும், காலப்போக்கில் தீவிர இறைபக்தியை உள்முகமாக வளர்த்தெடுக்க உதவும் முதற்படியேயாம். பூ, தீபம், தூபம், மணிஓசை, காற்றை பிரதிபலிக்கும் தாமரை வீசல், ஆகிய ஐந்து ஆராதனைகளும் ஐந்து பூத வடிவிலான மிகவும் நுண்ணிய பூசை முறைகளே. மற்று வருடாந்தம் எடுக்கும் விழாக்கள் சில அதிகம் புத்தி பூர்வமானவை இல்லாவிடினும், பாமர மக்கள் அவற்றால் ஈர்த்தெடுக்கப்படுகிறார்கள்.

இத்தெய்வீக விழாக்களில் கடலெனத் திரள் கிறார்கள். இது இன்று தமிழர் சமயவாழ்விலிருந்து பிரிக்க முடியாததொன்றாகி விட்டது. இனி நல்வினை, தீவினை,

பாவம், மறுபிறப்புக் கோட்பாடுகள் என்பன எல்லா மதங்களுக்கும் பொதுவானவையாக உள. எனவே, ஒவ்வொரு மதத்திலும் இருந்து அந்த மதவிதிகளை வழிகாட்டிகளாகக் கொண்டு வாழ்கையில், தெய்வீக அனுபவம் மேலோங்குகின்றது. அப்பொழுது மதங்கள் அங்கிருப்பதில்லை. மதங்களுக்கு மேலான கடவுளே அங்கு நிறைந்திருப்பார். இவ்வாறே பக்தர்கள் தெய்வீக அனுபவங்களைப் பெறுகின்றார்கள்.

எனவே, இறைமகனான யேசுநாதர் இந்தியா சென்றிருந்தால் அதுவும் இறைவனின் திருவிளையாடல்களில் ஒன்றேயாகும். யேசுநாதர் கால, தேசங்களைக் கடந்த ஒருவராகவே இறைவன் காட்ட விரும்பினார். யேசுநாதர் புத்தரிடம் படிப்பதற்கோ அல்லது • புத்தர் யேசுநாதரிடம் படிப்பதற்கோ எதுவுமில்லை. இவையெல்லாம் முக்காலமும் உணர்ந்த சித்தர்களின் மகிமைகளே. எனவே யேசுநாதர் வர்த்தகக் குழுக்களுடன் சில்க்ரோட்டு (Silk road - மத்திய கிழக்கு நாட்டிலிருந்து சீனா வரை இருந்த நடைபாதை) வழியாக அவர் செல்ல வேண்டியதில்லை. எனவே, அவர் புத்தர் வான்வெளியூடாக ஈழத்தின் வடபகுதிக்குச் சென்றமைபோல், இவரும் வான்வெளியூடாகச் சென்றிருக்கலாம். உண்மையில் ஒவ்வொரு மனிதனும் தான் பின்பற்றும் மதத்தில் நம்பிக்கையும், உறுதியும் வைத்து, அதனையே தனக்குரிய மேலான வழி எனக் கடைப்பிடிப்பான். பின் அந்த மதவழிப்படி உயரிய நிலையை அவன் அடைகையில், அவன் மதத்தைக் கடந்தவனாகின்றான். அப்பொழுது எல்லா மதங்களும் அவனுக்குச் சம்மதமே. இந்நிலையில்

*அவன் மதம், இனம், மொழி, நாடு என்ற பாகுபாடுகளைக் கடந்துவிடுகின்றான்.*

### தப்பிரபேன் ஆசிரியர் எச்.நெவில் தன் ஆய்வில் அரவமொழி பேசும் சால்டியருடன் தமிழகத்தினை ஏன் தொடர்புபடுத்தினார்?

*சால்டியரின் ஊர் பகுதியில் சேர் லேனாட் வூலி* (Sir Leonard Woolley) *1922-1934 ஆம் ஆண்டுகளுக் கிடைப்பட்ட காலத்திலே தொல்லியலாய்வுகளை நிகழ்த்தியிருந்தார். அப்பொழுது கி.மு.2400ஆம் ஆண்டளவில் அங்கு ஆண்டிருந்த மன்னர்களின் பொன், வெள்ளி, வைரக்கற்கள் உட்பட்ட செல்வங்கள், சாக்கடை நீர்களை வெளியேற்றும் திட்டங்களுடன் கூடியதும், நன்கு அமைக்கப்பட்டதுமான வீடுகள், தூர தேச வர்த்தகத் தொடர்புகளைத் தெரிவிக்கும் கியூனிபோம் எழுத்துத் தட்டுகள் என்பவற்றுடன் வெண்ணிலா* (Moon) *வழிபாட்டிற்காக அமைக்கப்பட்ட சிகரக் கோவில்கள் என்பன வெளிக்கொணரப்பட்டிருந்தன. ஆனால் இத்தகைய ஆய்வுகளுக்கு முன்னரே எச்.நெவில் 1887ஆம் ஆண்டளவில் தமது தப்பிரபேன் எனும் கட்டுரைத் தொகுப்பு நூலில் தமிழகத்தையும், சால்டியாவையும் மொழி, இன அடிப்படையில் தொடர்புபடுத்திப் பல கட்டுரைகளை எழுதியிருந்தார்.* (H.Neville, "The Arava speakers of India", June 1887, "The Seba race of Arabia in India", June, 1887, "The Arabian Colonization in India", April, 1887, The Taprabane.)

இவர் கருத்துப்படி சால்டியாவிலிருந்து குடிபெயர்ந்த மக்களே தமிழகத்தில் 'ஊர்' எனும் பெயரில் தாம் குடியமர்ந்த ஊர்களுக்குப் பெயரிட்டனர் என்பர். அதனோடு சால்டியரின் 'எழு' என்னும் சொல்லிலிருந்தே ஈழமும், எழுமொழியும் உருவாகின என்றும் கருதுவர். சால்டிய மொழியில் எழு என்னும் சொல்லும், தமிழில் 'எல்' எனும் சொல்லும் சூரியனைக் குறிப்பதனால், இத்தகைய குடியேற்றங்களே இதற்குக் காரணம் என்பர். இவ்வாறு இவர் ஒற்றுமைகாணும் இருநாடுகளின் பண்பாடுகளுக்கு ஒரு மூலம் இருந்துள்ளமையை நாம் ஏற்றுக் கொண்டு, அவர் கருத்தினை 1988ஆம் ஆண்டில் நான் வெளியிட்ட 'இலங்கையிற் தொல்லியலாய்வுகளும், திராவிடக் கலாசாரமும்' என்னும் எனது ஆய்வு நூலில் அப்படியே பதிவு செய்திருந்தேன். (பக். 48-49, 2ஆம் பதிப்பு, மணிமேகலைப் பிரசுரம், 2001, சென்னை.) ஆனால் இன்று தமிழகக் கடல்ஆய்வுகள், நக்கீரர் குறிப்பிடுகின்ற தமிழ்கெழுகூடல்களும், பின்னர் ஏற்பட்ட கடற் கோள்களும் உண்மையானவை என உறுதி செய்துள்ள நிலையில், நாம் சால்டியர்கள் (செழியர்கள்) தமிழகத்திலிருந்து தான் மெசொபொட்டேமியா, பபிலோன் நகரகப்பகுதிகளுக்கு சடுதியாகப் புலம் பெயர்ந்து சென்று அங்கு ஒரு ஊரினை (UR) ஏற்படுத்தியவர்களாகலாம் என்று கருதும் நிலைக்குத் தள்ளப்பட்டுள்ளோம். இதற்கு இன்னோர் காரணமும் உண்டு. சுமேரியர் சடுதியாகவே ஒரு புதிய கலாசாரத்தை அங்கு அறிமுகப்படுத்தியிருந்தமை, தொல்லியலாளர்

களால் அவதானிக்கப்பட்டுள்ளது. அதுபோல சால்டியரும் அங்கு சடுதியாகவே வந்து குடியமர்ந்தவர்கள் என்றே விவிலிய வேதமும் குறிப்பிடும் (ஈசையா *23 : 14*).

எனவே இவற்றினடிப்படையில் முழுமையாக சால்டியர் அல்லது சுமேரியர் அல்லது அரபு நாடுகளின் குடியேற்றங்கள் தமிழகத்தில் இடம்பெறக்கூடிய சாத்தியங்கள் குறைவாகவே உள. கடல்மார்க்க வர்த்தகத்திற்காக அரபு நாட்டுக் குடியேற்றங்கள் சில தமிழகம், கேரளம், ஈழம் முதலான இடங்களில் இடம் பெற்றிருந்தன எனினும் பெருமளவிலான புலம் பெயர்வுகளுக்குத் தமிழக புவியியல் அமைவுகள் ஈர்ப்புடையனவாக இருக்கவில்லையென்றே கருத முடிகின்றது. கடலுள் மூழ்கிப்போன பெரும்பகுதி நிலத்தினை ஈடுசெய்யும் வகையில் நிலங்கள் வடக்கே இருக்கவில்லை. அதனாலே புலம்பெயர்வுகள் இடம் பெறலாயினவாகத் தெரிகின்றது.

# CULTURE AND HISTORY OF THE CELTIC PEOPLE

## 1. Origin of The Celtic People (A brief speculation)

The Original home of the Aryans is to be identified. Some of the possible regions suggested are as follows : - North of the European USSR, Artic region, East Ukraine, and Central Asia. These views have to be dealt with, with archaeological and historical evidences. Then the distribution of the Aryans in different directions led to new elements being added to their cultural traits. Therefore, they became grouped as Indo - Aryans, Indo - Europeans, Indo - Iranians and Europeans. One among the latter group are the Celtic peoples. (The term 'Celt' has a linguistic connection. Ancient writers believed that all fair peoples living north of the Alps as homogeneous and the Greeks called them 'Keltoi' as they spoke a common Celtic language. This term was used up to the time of Julius Caesar but from 300 B.C the names Galli (Gauls) Galatae (Galatians) were used by the classical writers. Now the Celtic languages are spoken in the Highlands of Scotland, in parts of Ireland, in Walsh, in Brittany, in Nova Scotia and in the Herbrides Islands. The term Gaulish, is used for all the remaining Celtic

speech on the Continent, but very little is known about this language.) Their languages are more closely allied to the Italic and Germanic. Also, Celtic group of languages was the speech of much of the Western and Central Europe in the Pre and Proto - Historic periods. Even now the Celtic group of languages retains features that would mark them as one of the most archaic members of the Indo - European family.

## 2. Expansion of Celtic Cultures

During their westward migration of the Celtic people they had gone through 3 main Cultural traditions, namely the Urnfield, Hallstatt and La Te'ne Cultures.* These are associated with the Celtic settlement in Europe. It is through archaeological evidence that these distributions have been assigned to them. Archaeological studies also revealed that the expansion of the Celtic culture in the Europe had taken place from the 2nd millennium B.C to about the 1st Century B.C. They are as follows :

---

* *The first Phase of the European iron age is called as the Hallstatt Period (800 B.C) after an archealogical site in Austria where a quite number of iron swords were excavated. Then the Celts were learnt to produce metal work with decorations (BC 500). This new method of metal work is called La Tane after a Swiss lake site where iron and bronze materials were found.*

(a) South Eastern Germany between Rhine and Upper Danube region and in the Northern Alps in the bronze age (2000 B.C).

(b) Gradual move into the Eastern France, and later France became the Strong hold of Celtic Culture. Therefore, France was known as Gaul and the languages Gaulish. Even now some regions of France are known as Celtic or Alpine.

(c) Then the Urnfield Culture moved from the Upper Rhine region of France into Catolaonia and beyond in 700 B.C. Therefore, Northcentral Spain Celtibrians (Celtic + Iberian mixed culture) are dated as from 1000 B.C to 600 B.C. (The Celtic tribes of Spain are the Arevae, Belli, Titt and Lusones).

(d) In the 400 B.C the Celts got possession of the Northern Italy. Consequently the Po valley region of Northern Italy is also known as Gaul. Then the infiltration of the Celtic Culture into Etrusia, Delphi, Macedonia and Thrace occurred during 300 B.C. Also the Celts crossed Hellespont and occupied Asia Minor. Very soon the expansion of

the Celtic nation reached as far as Balgans, Carpathians, Bohemia and the Ukraine.

(e) Regarding the date and the nature of the Celtic settlement in the British Isles, there are two views.

(1) According to one view that the Celtic migration into the British Isles took place as early as 2nd millennium B.C.

(2) Another view is that the Celtic Cultures such as Urnfield and Hallstatt were brought from Lower Rhine and Seine Valley into Britain between 800 B.C and 500 B.C. The researches in linguistics have revealed that the Goidelic group of Celtic languages (Irish, Scotland were introduced into the British Isles during the 1st millennium B.C before the change in the pronunciation of q to p had taken place on the continent, while the Brythonic group (Welsh, Breton and Cornish) arrived there after this change had taken place.

*At this juncture we must take into consideration the views of H.G.Wells. According to him before the expansion of the Celtic culture into the British Isles, the Iberian or Mediterranean race migrated into Great Britain, Ireland,*

*France, Spain, Portugal, North Africa, South Italy, Greece and the Asia Minor. When the Celts migrated into these regions they mingled with the short dark Iberian tribes who built Megalthic tombs for the disposal of their dead.*

To what extent the Celtic migration affected the population of these areas is a matter for further research. The influence of the native cultures in the Celtic is inevitable. Therefore we may conclude that this may be the main reason for the development of the different vernacular dialects of the Celtic languages in Europe. However, the remarkable aspects of these languages are that they are more closely allied to the Italic and Germanic group of the Indo - European family while retaining the features of the centum group.

## Fall of Celtic Domination In and Around Europe :

In the early centuries of the christian era Celtic domination began to decline. In Italy the Cisalpine Gauls were defeated by the Romans at the battle of Telamon in 225 B.C. Then the Celtic territory, the Transapine was captured by the Romans in 124 B.C. Gradually, Roman supremacy was established'as far as the Alps. The Celtiberians also lost their city Numantia to Romans. At the same time Germans defeated the

Celts of the Rhine valley. In the east Attalus I of pergamum defeated the Celts in a series of battles and made them withdraw themselves into Phrygia, the interior area of the Asia Minor known as Galatia (Gauls of the Phrygia have been identified as the Galatians of the St.Pauls Epistle in the New Testament) Besides, the Celtic stronghold lost during the time of Caesar in 55 B.C and 54 B.C. Finally Emperor Claudius' expedition in 43 A.D gained control of much of the British Provinces. Following the Roman consquest, the German tribes of the Angles, Saxons and Jutes invaded Britain in the 5th A.D. During this invasion some Celtic people fled from the South West of Britain and settled in France which is now called as Brittany. However, Ireland and some parts of the Celtic areas were able to preserve their Celtic identity after the building of the Hadrians wall in northern Britain. Thus Brittany, the Isle of man, the Welsh and the Scottish Highlands managed to retain their Celtic cultures. But the ancient past cultures are preserved in them literary heritage in the form of folklore.

## Celtic Cultural Renaissance

The supremacy of the Celtic people in the Western Europe started to decline since the 1st century onwards. This does not mean that the Celtic people have lost everything that

they earned through the centuries. The contribution made by the Celts to the world civilization is a remarkable one.

Vernacular languages and religious beliefs and practises of the ancient Celts were identical with those of the other Indo - European groups. Besides, the Celtic Churches which grew up in Ireland from 432 A.D onwards were largely responsible for converting Europeans to Christianity. Evidently, it is obvious that the reconstruction of world civilization cannot be done without having a proper knowledge of the Celtic cultures. Therefore a knowledge of the Celtic renaissance is indispensable for an understanding of our past human societies. Also, the revival of Celtic culture would certainly serve us as a connecting link between the past and the present cultures of the European societies.

*(இவ்வாய்வுக் கட்டுரை 1996 ஆம் ஆண்டு எழுதப்பட்டு அயர்லாந்து பல்கலைக்கழகம், டப்லினுக்கு அனுப்பப்பட்டிருந்தமை குறிப்பிடத்தக்கது.)*



நடுகல் வழிபாடு (கி.மு.2100-1500) இங்கிலாந்து

இன்று ஐரோப்பாவில் பரவலாக வாழ்ந்துவரும் கெல்ரிக் இனமக்களின் பூர்வீகமும், பரவிய வழித்தடங்களும் (கி.மு.2000 - கி.பி.432 வரை).




இவ்வரைபடத்தில் குறிப்பிட்ட ஆறுகள், மலைகள் பற்றிய ஆய்வுகள் தரும் செய்திகள் அடுத்த பக்கத்தில் இடம்பெறுகின்றன

1. அல்ப்ஸ்மலை - இது பிரான்ஸ், சுவிஸ், இத்தாலி, ஒஸ்ரியா, யுகோசிலேவியா வரை 1000 கி.மீட்டர் வரை நீளமுடைய மலையாகும். இதன் உயரிய சிகரமான மொன்றப்பிளாங் (Mont Blanc) எனும் சிகரத்தின் கீழ்ச் செய்யப்பட்டுள்ள நிலவறைப் பாதையினூடாக வண்டிகள் ஓடமுடியும்.

2. ஊரல் மலை - இது ஐரோப்பாவையும், ஆசியாவையும் பிரிக்கும் மலையாக அமைந்துள்ளது.

3. வொல்கா ஆறு - ஐரோப்பாவின் நீண்ட ஆறான வொல்கா ரஷ்யாவின் எல்லையூடாக 3530 கி.மீட்டர் தூரம் ஓடுகின்றது.

4. தனுபே ஆறு - இது ஐரோப்பாவின் இரண்டாவது நீண்ட ஆறாகும். ஒன்பது ஐரோப்பிய நாடுகளினூடாக ஓடும் இந்த ஆற்றின் கரைகளிலேயே வியன்னா, புடாபெஸ்ட், பெல்கிரேட் முதலான நகரங்களும் அமைந்துள்ளன என்பது இதன் சிறப்பாகும்.

5. ரைன் ஆறு - இந்த ஆறு நெதர்லாந்து, ஜெர்மனி, சுவிஸ் ஊடாக ஓடினாலும், ஒரு செயற்கைக் கால்வாயூடாக தனுபே ஆற்றுடன் இணைக்கப் பட்டுள்ளது. அதனால் கப்பல்கள் ஐரோப்பாவின் குறுக்காவும் பயணிக்க முடிகின்றது.

6. கௌகசஸ்மலை - ஆசியாவின் எல்லையில் உள்ளது. இதன் சிகரமாகிய எல்பிரஸ் (Mt.Elbrus) என்பதே ஐரோப்பாவில் மிக உயரிய சிகரமாகும்.



# தெலுங்கு நாட்டினர், தமிழர் என இனம் காணும் அரவரின் பூர்வீகம் எது?

மனிதவினங்கள் பல காரணங்களுக்காகப் புலம் பெயர்ந்து நாடோடிகளாகச் சென்று புதிய இனத்தாருடன் கலக்கின்றனர். புதிய மண்ணில், புதிய இனத்தாருடன் கலக்கும் நிலையில் சில சமயங்களிற் தம் மொழி, கலாசாரங்களைக் கைவிட வேண்டியவர்கள் ஆகின்றனர். இருப்பினும் சில இனங்கள் எங்குச் சென்றாலும் தம் மொழி, மதம் மற்றும் மரபுவழிக் கலாசாரங்களை வழக்கிறந்துவிடாது பேணுவதில் அக்கறையுடையவர் களாக இருந்துள்ளனர். எனினும், இனங்களிடையே திருமணங்கள் மூலம் கலப்பேற்படுகையில், தாய்மொழியே கூடுதலாக நிலைத்து நிற்க வாய்ப்பேற்படுகின்றது. அதனால் இன்று தமிழக வரலாற்றை ஆராயும் பொழுது காலந்தோறும் பல இனமக்கள் புலம் பெயர்ந்து தமிழகத்தில் குடியமர்ந்துள்ளமை புலனாகின்றது. அதனால் தமிழ் பல்வகையில் திரிபுபட்டுப் பேச்சு மொழி யில் வளர்ந்துள்ளமை தவிர்க்கமுடியாததாகும். எனினும், தமிழ் இன்று அவர்களது தாய்மொழியாகி விட்டுள்ளது.

ஆனாலும் இனத்தால் அவர்கள் வேறுபட்டவர்கள் என்பதனை மரபணுவாய்வுகள், மானிடவியலாய்வுகள், மொழியாய்வுகள் என்பன அடையாளப்படுத்த வல்லவனவாம்.

இந்த வகையில் தமிழர்களை அன்றிலிருந்து இன்றுவரை ஆந்திரர்கள் 'அரவர்' என்றும், தமிழ்மொழியை 'அரவம்' எனவும் அழைத்து வருவர். இதனை வரலாற்று அடிப்படையில் நோக்கும்பொழுது சில உண்மைகள் புலனாகின்றன. அரவ மொழியைப் பேசிய ஆதிசால்டிய நாட்டு மக்கள் (Chaldians of Western Asia- இது ஈராக்கின் பழைய நாகரிக மக்களைக் குறிக்கும்.) கடல் வழியாக தமிழகத்திற்கு வந்து குடிபெயர்ந்தோர் எனத் தப்பிரபேன் (The Taprabane) எனும் நூலின் ஆசிரியரான எச்.நெவில் கருதுவர்.* ஆனால் தொல் காப்பியத்திற்கு உரையெழுதிய நச்சினார்க்கினியர் அகத்திய முனிவர் துவாரகையிலிருந்து பதினெண் குடிகளையும், அருவாளரையும் காஞ்சிபுரத்தையண்டிய பகுதிகளில் குடியமர்த்தினார் எனவும், அதனாலே அப்பகுதி அருவாளர்நாடு, அருவாவடதலைநாடு என இருநாட்டுப் பிரிவுகளாக உருவாகியிருந்ததென்றும் குறிப்பிடுவர். எனவே, நெவில் கருதுவது போல் சால்டிய நாட்டு அரவமொழி பேசும் மக்கள் முதலில் குசராட்டின் கடற்துறைப் பட்டினமாகிய துவாரகையில் குடியமர்ந்திருந்த பின்னரே, அகத்திய முனிவரால்

---

* *மேலும் இது தொடர்பான ஆய்வாளர் கருத்துகளுக்குப் பார்க்கவும், "குமரிக்கண்டம் முதல் சுமேரியர் வரை ஆய்வுகளுக்குப் புலப்படாத தமிழர் வரலாறுகள்."*

காஞ்சிபுரப் பகுதியில் குடியமர்த்த முடிந்தது என நாம் கருதமுடிகின்றது. இன, கலாசார அடிப்படையில், இக்குடிகள் தமிழகத்துடன் ஒன்றிணைந்து வாழக்கூடிய மக்களாக இருந்தபடியினாலே இந்தக் குடியேற்றம் சுமுகமாயிற்று எனலாம். காலப்போக்கில் இவர்கள் தமிழ்க் குடிகளுடன் கலந்துவிட்ட நிலையில் நிகண்டு நூலாரும் அரவர் எனில் தமிழர் என்றே பொருள் கொண்டிருந் தனர்.

இனி, காஞ்சிபுரம், ஆந்திர நாட்டிற்கு (தெலுங்கு நாட்டிற்கு) அணித்தாக இருந்தபடியினால், இக்குடியேற்ற காலம் முதல், இன்று வரை தெலுங்கு மக்கள், தமிழரை அரவர் எனவே அழைத்து வருகின்றனர். முதற் குலோத்துங்க மன்னனது (கி.பி.1070 - 1120) படைத்தளபதி கருணாகரத் தொண்டமான் 1112இல் வடகலிங்கத்தை நோக்கிப் படையெடுத்து வெற்றி பெற்றிருந்தான். இப்போரை விவரிக்கின்ற கலிங்கத்துப்பரணி (செய். 453) இத்தமிழர் படைகளைக் கண்டு கலிங்க நாட்டார் அருவர்! அருவர்! என்று அஞ்சினர் எனக் குறிப்பிடுவதும் இங்கு ஒப்பிட்டு நோக்கத்தக்கது. தண்டியலங்காரமும் கலிங்கப்போரில் தமிழர் படைகளைக் கண்டு மக்கள் 'அருவ ரருவரென' அஞ்சியதாகக் குறிப்பிடும் வெண்பா வொன்றினை மேற்கோள் காட்டுகிறது. எனவே, காஞ்சிபுரக் குடியேற்றங்களை வைத்து ஆந்திரர்களே தமிழரை முதலில் அருவர் என அழைத்திருந்தனர் எனலாம். பின் இம்மரபு கலிங்கருக்கும் எட்டியதாகலாம்.

இனி அரிகரன், புக்கன் எனும் ஆந்திர வீரர்கள் முகம்மதியர் ஆட்சிக்கெதிராக விஜயநகர அரசினை

18.4.1336 அன்று உருவாக்கியிருந்தனர். அதன் பின் தமிழகத்திலும் தமது ஆட்சியை நிலைநிறுத்தி 18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரை ஆண்டிருந்தனர். இம்மன்னர்கள் 'நாயக்கர்கள்' எனத் தமிழகத்தில் மட்டுமன்றி ஈழத்திலும் கண்டி வரை அறிமுகமாகி யிருந்தனர். இவர்கள் தெலுங்கு மொழியாளராகையினால் தமிழ்மொழியறிவற்றராகவும், ஈடுபாடில்லாதவர்களாகவும் இருந்து வந்துள்ளனர். இருப்பினும், தமிழ்ப்புலவர்கள் தமக்குப் பிடித்தமான மன்னர்கள் மீது கவிதைகளை எழுதும் முறைகளைக் கைவிடவில்லை. திருமலை நாயக்கன் மன்னர்களிற் சிறந்தவனாகையினால் சுப்பிரதீபக்கவிராயர் அவன் மீது 'திருமலை நாயக்கன் காதல்' எனும் நூலைச் செய்து, அவனது சபையில் அரங்கேற்றியிருந்தார். அப்பொழுது திருமலை நாயக்கன் "அரவம் அந்துவானம்" என்றானாம். அதாவது 'தமிழ் மோசம். இனிமையற்றது' என்பது இதன் பொருளாகும். இவ்வாறு தெலுங்கர் ஆட்சியில் தமிழ் பெருமையை இழந்திருந்தாலும் இக்காலத்தில் பல தமிழ்ப் புலவர்கள் தமிழை வளர்த்திருந்தார்கள் எனத் தெரிகின்றது.

இன்று தமிழகத்தில் பல்வேறு பகுதிகளில் பல்வேறு மொழிக் கலப்புகளுடன் தமிழ் பேசப்படுவதனால், இன்னும் சில காலத்தால் இவர்களுக்கு ஈழத்தமிழ் விளங்கிக் கொள்வதற்கு மிகக் கடினமாகிவிடும். பிராமணக் குடிகள், தெலுங்குக் குடிகள், கன்னடக் குடிகள், மராட்டியக் குடிகள், சௌராட்டிரக் குடிகள் எனப் பல குடிமக்களின் தாய்மொழிகளுடன் தமிழும் கலந்து விடும் நிலையில், இன்று தமிழ் மொழியில் பல பேச்சுமொழிகள் கிளைவிட்டுப் புதிய மொழியாய் உருவெடுப்பதனை நாம்

அவதானித்திருக்கின்றோம். வேற்று மக்கள் மொழியினை உள்வாங்குகின்ற மொழிகள் பல காலபோக்கில் புதிய மொழிகளாக உருவெடுத்திருப்பதனை மொழிகள் வரலாறுகள் அறிவுறுத்தியுள்ளன. இதற்குச் சிறந்த உதாரணம் மலையாள மொழியாகும். எழுத்து மொழி சில வரைவு இலக்கணங்களுக்குட்பட்டிருப்பதனால், எழுத்து மொழியால் 'நாம் தமிழர்' என எம்மை அடையாளம் காண்பதே இன்றைய நிலையாகும்.

தமிழர் எனும் சொல்லினை வடநாட்டார் காலந் தோறும் தம் மொழிகளிற் பல்வேறு முறையில் உச்சரித் தமையால் பலப்பல சொற்கள் உருவாகியிருப்பினும், இன்று எஞ்சி நிற்கும் சொல்லாகத் 'திராவிடர்' எனும் சொல்லினை இங்கு நினைவு கூர்தலும் ஏற்றதாம்.

❧



# தமிழ் இலக்கியங்கள் அல்லது தொல்லியல் ஆய்வுகள் தமிழர் பூர்வீகம் பற்றித் தெரிவிப்பதென்ன?

தமிழக இலக்கியங்கள் பழந்தமிழரின் நாடுகள், மலைகள், ஆறுகள் அனைத்தும் கடற்கோள்களினால் மூழ்கடிக்கப்பட்டு விட்டன என்பதனை நினைவு கூர்கின்றனவேயொழிய, அவை பற்றி வரலாற்றடிப்படையில் எதுவும் தெரிவிப்பனவாகவில்லை. எனினும், தமிழரின் பூர்வீக மண்ணாகக் குமரிக்கண்டத்தினையே வரலாற்றுச் செய்திகள் நினைவுகூர்வதாக உள்ளன. இவ்வாறு நெடுங்காலமாக தமிழக வரலாறுகள் வெற்றிடமாக இருந்து வந்துள்ளமைக்கு ஒரு முக்கிய காரணம் பழந்தமிழரிடம் இறைசிந்தனை வெகுவாகக் குறைந்திருந்தமையேயாம்.

விவிலிய வேதத்தினைப் போல், வடமொழி வேத நூல்களைப் போல், பௌத்தமத திரிபிடகம் போல் தமிழர் தம் இறைவன் பற்றியும், அவன் நெறிப்படுத்திய மனிதநேயக் கோட்பாடுகள் பற்றியும், அவன் பெருமை

பற்றியும் குறிப்பிட்டுத் தமக்கென ஒரு நூலை எழுத எவராவது சிந்திக்கவில்லை. இவ்வாறு இறைவன் மகிமையைத் தலைமுறையினருக்கு நெறிப்படுத்தாமையால் மக்கள் ஆன்மீக வழியில் பயிற்சிகள் அற்றவர்களானார் கள். அதுமட்டுமன்றி, இப்பூமி நீடிக்கும் வரையும் தொடர்ந்து வரவிருக்கும் தம் தலைமுறையினரை அடையாளப்படுத்தக் கூடிய ஒரு வரலாற்று நூலைக் கூட இவர்களால் பதிவு செய்து கொள்ள முடியாதிருந்துள்ளது. மாறாக,

**கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளொடு**
**முற்றோன்றி மூத்த குடி**

*(புறப்பொருள் வெண்பாமாலை. செய். 35)*

எனச் சுருக்கமான, ஆனால் நடைமுறைச் சாத்தியமற்ற ஒரு வரலாற்றினை எழுதிக் கொண்டார்கள். ஆனால் விவிலிய வேதத்திலோ ஆப்ரமின் தலைமுறையினரின் சமூக, அரசியல் வாழ்வு முறைகளுக்கு மேலாக ஒரு புனிதமான மதம் பற்றிய கருத்துகளே மேலோங்கி யிருந்தன. இக்கருத்துகளின் மேல் கட்டியெழுப்பப்பட்ட மதமே யூதமதமாகும். யூதமதம் ஒரு சமூகத்தை வழிநடத்துகையில், இறைவனின் பெருமையை மேலும் நிலைநாட்ட யேசுநாதர் மூலம் இன்னோர் மதமும் உருவாக்கப்படலாயிற்று. இந்த இரண்டு மதங்களின் உருவாக்கத்தின் பின்னால் குறிப்பிடப்பட்ட 'யெகோவா' ஒரு மறைபொருளாகவே இருந்து வருபவர் ஆவர். அவர் பெயர் கொண்டு ஒரு மதமும் உருவாக்கப்படாமையே இந்த இரு மதங்களின் பெருமையாகும். இவ்வாறே வடஇந்தியாவில் குடியமர்ந்த ஆரியர்கள் (ஆரியர் என்ற

பெயராலே இவர்கள் தம்மை அடையாளப்படுத்தி யிருந்தனர்.) தாம் வழிபட்ட இயற்கைத் தெய்வங்கள் மீது போற்றிப் பாடப்பட்ட நூலே இருக்கு வேதமாகும். இதனைத் தொடர்ந்து இன்னும் பல நூல்களைத் தொடர்ந்தும் இயற்றிக் கொண்டார்கள். கி.மு. 6ஆம் நூற்றாண்டளவில் புத்தர் போதித்த கோட்பாடுகள் 'திரிபிடகம்' எனும் நூலாக உருவாகியிருந்தது.

ஆனால் தமிழர்கள் தமிழ்கெழுகூடல்கள் அமைத்து தமிழையும், தம் உலகியல் அறிவினையும் வளர்க்கச் சிவனும், முருகனுமே முதலிரு தமிழ்கெழுகூடல்களிலும் திருவிளையாடல்கள் புரிந்திருந்தனர் என்பதும், குமரிக் கண்டத்தில் 49 நாட்டுப்பிரிவுகளை வைத்து ஆண்டிருந் தனர் என்பதும் மிகவும் பாராட்டப்பெற்ற செய்தி களாவன். ஆனால் எல்லாமே 'ஏட்டுச்சுரைக்காய்' என்னுமளவிலே பயன்தரவில்லை. காரணங்கள் யாவை? விவிலிய வேதம் ஒரு புதிய இனத்தையும், ஒரு புதிய மதத்தையும் இறைவன் (யெகோவா) திட்டமிட்டே உருவாக்கியிருந்தார் என்று குறிப்பிடும். அவ்விதமே தமிழ்மொழியையும், சைவத்தினையும் வளர்க்கும் முயற்சியில் இறைவன் திருவிளையாடல் சிவன், முருகன் எனும் அருட்கோலங்களை எடுத்திருந்தது. ஆனால் தென்மதுரை அரசுகளோ அல்லது கொற்கைப் பாண்டியர் அரசுகளோ இறைவன் அவர்களிடம் எதிர்பார்த்த வகையில் இறைசிந்தனை, அறங்கள், ஒழுக்கங்கள் ஆகியவற்றினை வளர்த்திருக்கவில்லை என்பதே உண்மை. அதாவது இறைவனுக்கு நன்றி கூறி அறவழியில் வாழ்வதே மனித வாழ்வின் மையம் என்பதனை அரசர்களும், புலவர்களும், பிறரும் உணரத் தவறியிருந்தார்கள்.

எவ்வளவோ இலக்கிய, இலக்கண நூல்கள் தமிழில் உருவாகியிருந்தன. ஆனால் அவற்றின் ஒன்றாவது இறைவனைப் போற்றிய நூல்களாக எழவில்லை. மனிதனே தன்னைப் படைத்துக் கொண்டான்; இயற்கையும் தன்னைப் படைத்துக் கொண்டது என்று கூறும் அளவிற்கு இவர்கள் வாழ்வு முறைகள் அமைந்திருந்தன. அதனாலே தான் கடவுளின் கோபத்தின் வெளியீடாக இருபெரும் கடற்பெருக்குகள் இவர்களது நாடுகள், அரசுகள், இலக்கியங்கள் அனைத்தையும் அள்ளிவாரிச் சென்றிருந்தன எனலாம்.

விவிலிய வேதத்தில், யெகோவா ஆப்ரம் தலைமுறையினர் தனக்கெதிரான நடவடிக்கையில் ஈடுபட்டுப், பின் கதறியழுது வேண்டும் நிலையில் பல தடவைகள் மன்னித்து வழிநடத்தியிருந்தார் என்ற குறிப்புகள் உள. அதே மாதிரி மீண்டும் வடமதுரைக்குப் புலம்பெயர்ந்த பாண்டியருக்கு உதவும் வகையில் சிவனும், முருகனும் திருவிளையாடல் புரிந்து தமிழ்வளர்த்திருந்தனர் எனத் திருவிளையாடற் புராணம் குறிப்பிடும் மூன்றாம் தமிழ்கொழுகூடல் காலத்திலும் தமிழ் நூல்கள் மீண்டும் எழலாயின. ஆனால் அவற்றிலும் மீண்டும் அகவியல், புறவியல் பற்றிய பாடல்களே மிகுதியாக எழுந்திருந்தன. இந்நூல்களின் உள்ளடக்கம் பற்றி விரிவாக திருமதி. நீற்றா பற்றிமாகரன் ஆராய்ந்துள்ளார். (சங்க காலத் தமிழர் வாழ்வும் கலைகளும், 2011, காந்தளகம், சென்னை.) இவ்வளவு நீண்ட இலக்கிய மரபில் தெய்வீகத்தைப் போற்றும் நூல் எதுவும் எழாமையென்பது ஒரு சாபக்கேடென்றே கருத முடிகின்றது. அதனாலே இறைவன் தொடர்ந்தும் பாராமுகமாகி, இவர்கள்

பெருமைகள், ஆட்சிப் புலங்கள் ஆகியவற்றைப் பதிவற்றனவாக்கி விட்டிருந்தார் எனலாம். சிலப்பதிகாரமும், மணிமேகலையும் மன்னர்கள் தவறிழைக்கையில், இறைவன் இயற்கையின் சீற்றம் மூலம் இவர்களைத் தண்டித்தார் எனக் குறிப்பிடுகின்றன.

தமிழில் முதன்முதலாக இறைவனை வேண்டி, உருகி அவனது கருணை வேண்டி எழுந்த நூல் திருமுருகாற்றுப்படையேயாகும். இதுவும் மூன்றாம் சங்கப் புலவராகிய இரண்டாவது நக்கீரரைப் பூதமொன்று பிடித்திருந்த பொழுது, தன்னைப் பூதத்தின் பிடியிலிருந்து விடுவிக்க முருகன் கருணை வேண்டிப் பாடிய பாடலே, (முருகன் மீது பிறரையும் ஆற்றுப்படுத்தும் வகையில்) இதுவாகும். பின் சிவன் தன் பக்தன் தருமி பொற்கிழியினைப் பெறும் வண்ணம் எழுதிக்கொடுத்த பாடலில் நக்கீரர் குற்றம் கண்டார். அப்பொழுது சிவன் தன் நெற்றிக்கண்ணைக் காட்டியதனால், அவ்வெப்பந் தாங்காது தடாகத்தில் மூழ்கியபடி சிவனைப் போற்றிப் பாடிய பாடலே 'கயிலை பாதி காளத்தி பாதி' எனும் இறையனுபவ நூலாகும். இவ்வாறு நக்கீரரின் துயரில்தான் இறைபுகழ்பாடும் நூல்கள் தமிழில் எழுந்தன. இதனைத் தொடர்ந்தே காரைக்காலம்மையார் பேய்வடிவத்தினை இறைவனிடமே கோரிப்பெற்று அற்புதத்திருவந்தாதியைப் பாடினார். இறைவனின் சுட்டுநிலை கடந்த இயல்பினை முதன்முதலாக இவ்விருவரும் தத்தம் அறிவிற்கெட்டிய படி வரையறை செய்ய முயன்றமையை நாம் அவதானிக்க முடியும்.

இவர்களது தெய்வானுபவங்கள் இலக்கிய வடிவில் வந்த பின்னரே தமிழில் இறை சிந்தனையுடன் கூடிய திருவாசகம், தேவாரம், திருமந்திரம் முதலான தெய்வீக நூல்கள் எழுந்திருந்தன. அதுவரை மக்களை இறைவனது நெறிப்படி வழிப்படுத்த வல்ல நூல்களை எழுதச் சங்கப்புலவர்களுக்கு தெய்வ அருள் கூடவில்லை என்பதே உண்மை. திருவள்ளுவர் முதலில் இறைவனைத் துதித்தே தன் பொதுமறைக்கு அழியாவரம் பெற்றிருந்தார். அது போலவே மக்களை நன்னெறி வழியில் ஆற்றுப்படுத்த எழுந்த சமண, பௌத்த நூல்களும் அழியாவரம் பெற்றுள்ளன. வைதீகமதம் அளவிற்குமீறிய கிரியைகளைப் பிரசாரப்படுத்தி தன்னை நிலைநிறுத்தியிருந்தாலும், தெய்வ நீதியை மையமாகக் கொண்ட மதங்களை யாராலும் அழித்துக்கட்ட முடியாது என்பதற்குப் பௌத்தம் சிறந்த எடுத்துக்காட்டாகும். சமணத்தின் தெய்வீக சிந்தனைக்கு முன்னால் உலக இயக்கம் ஈடு கொடுக்க முடியாத நிலையிலேயே அது தளர நேரிட்டது.

## சங்கத் தமிழ் எழுத்துக்களுக்கு நடந்ததென்ன?

திருவள்ளுவர் கூறுவதன்படி தமிழில் எண்களும், எழுத்துகளும் முழுவடிவம் பெற்றிருந்தன என அறிய முடிகின்றது. இதனை,

**எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
**கண்ணென்ப வாழு முயிர்க்கு**

*(குறள் 392)*

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
அந்தணன்* முதற்றே உலகு

*(குறள் 1)*

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்

*(குறள் 40)*

இவ்வாறு இவர் எண், எழுத்து, நூல் ஆகிய சொற்களைத் தன் அறிவுசார் சமூகத்தின் அடிப்படையாகக் கொண்டே கையாண்டுள்ளார். இவ்வாறு அறிவும், புலமையும் கொண்ட பேராசானாக விளங்கிய திருவள்ளுவர் கூறும் எழுத்துகளையும், நூல்களையும் தமிழ்ச்சமூகம் இழந்திருந்தது. அதனோடு திருவள்ளுவருக்கு முற்பட்டவரான தொல்காப்பியரும், 'முந்து நூல் கண்டு' 'என்மனார் புலவர்' எனத் தம் காலத்தைய நூல்களைக் குறிப்பிட்டுள்ளார். பாண்டியன் நெடுஞ்செழியன் பாடிய பாடலில் (புறம். செய்.183) கல்வியை மக்கள் எவ்வளவு பாடுபட்டாவது பெற்றுக்கொள்ளல் அவசியம் என்பதும் வலியுறுத்தப்பட்டுள்ளது. இவையெல்லாம் முதல், இரண்டாம் தமிழ்கெழு கூடல்களை உருவாக்கி மன்னர்கள் தமிழ்வளர்த்த பின்னணியில் உருவாகிய கருத்துகளே. ஆனால் இவை எங்கே? கடற்கோள்களுடன் இவையெல்லாம் அழிந்து போயினவா? என்ற கேள்விகள்

* *பகவன் எனும் சொல்லிற்குப் பதிலாக அவர் இறைவனைக் குறிப்பிட வேறோர் குறளில் 'அந்தணன்' என்ற சொல்லினைக் கையாண்டுள்ளமையினால் அதனையே இங்கும் கையாளுதல் மேன்மை தரும்.*

எழத்தான் செய்கின்றன. அதே சமயம் கி.மு.3000ஆம் ஆண்டளவில் சுமேரியாவில் கணித எழுத்து முறையானது பாவனையில் இருந்துள்ளது. பின் இதனைப் பல நாட்டினரும் தம் மொழிகளை எழுதப் பாவித்தனர் என ஆய்வுகள் தெரிவிக்கின்றன. ஆனால் தமிழகத்திலோ மூல எழுத்துகள் கைவிட்டகன்ற நிலையில் ஹரப்பா குறியீடுகளையே தமிழ் எழுத்துகளின் முன்னோடிகள் எனத் தேடும் நிலை ஏற்படலாயிற்று. எவ்வாறாயினும் இத்துறையில் ஆய்வுகளை நடத்தி வருகின்ற சிவகணேசன் சுமேரிய கணித எழுத்துகளுக்கும், தமிழ்நெடுங்கணக்கு எழுத்துகளுக்கும் மூலம் ஒன்றேயெனச் சான்றுகளை முன் வைப்பர்.

**தமிழுக்கும், எச்.நெவில் கூறும் அரவமொழிக்கும் உள்ள தொடர்புகளுக்குப் பின்னால் மறைந்திருக்கும் உண்மைகள் என்ன?**

சால்டியர் மொழி, எழுத்து என்று விவிலிய வேதம் குறிப்பிடுகின்றதேயொழிய (Daniel 1 : 4) அந்த மொழியை அரவமொழியென்று குறிப்பிடவில்லை. அதுபோலவே அரேபியர் மொழி பற்றியும் எதனையும் குறிப்பிடவில்லை யெனலாம். ஆனால், எச்.நெவில் அரேபியக் குடியேற்றங் களையும் குறிப்பிட்டு, அரவ மொழித் தொடர்புகளையும் குறிப்பிடுவர். அரேபியக் குடியேற்றங்கள் சில சேர நாட்டுக் கரையோரப் பகுதிகளில் இடம் பெற்றிருந்தன எனினும் அவை தமிழ்மொழியில் தாக்கத்தினை ஏற்படுத்தும் வகையில் இருக்கவில்லை. ஏனெனில், எம் கைகளுக் கெட்டிய முன்றாம் கெழுகூடல் தமிழ் இலக்கியங்களில்

'அரவ மொழி' பற்றிய குறிப்புகள் எதுவும் இல்லை. மாறாகத் தமிழை செந்தமிழ், பசுந்தமிழ், வண்தமிழ், கொடுந்தமிழ், தண்ணார் தமிழ், முத்தமிழ் போன்ற சொற்றொடர் களாலேயே குறிப்பிடுவதனைக் கருத்திற் கொள்ளல் அவசியம். அதனோடு யவனர், அரேபியரது வர்த்தக முயற்சிகளைக் குறிப்பிடுகின்றனவேயொழிய, அவர்களின் மொழிகளின் தாக்கம் தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றிருக்கவில்லை என்பதனையும் நாம் அவதானிக்க முடிகின்றது. அதனால் வேறுவழியில்தான் அரவ மொழி, அரவர் எனும் சொற்கள் தமிழையும், தமிழர்களையும் குறிக்க உருவாகியிருக்க முடியும். இது பற்றி எமது ஆய்வுகள் துவாரகையிலிருந்து, காஞ்சிபுரம், பின் கலிங்கத்து மக்கள் தமிழரை, 'அரவர்' என்று அழைத்ததன் காரணங்களைத் 'தமிழரை ஏன் ஆந்திரர்கள் 'அரவர்' என அழைத்தனர்' என்ற கட்டுரையில் ஆராய்ந் திருந்தோம். தற்பொழுது கடற்கோள்களுக்குப்பின் மெசொப்பொட்டேமியாவிற்குப் புலம்பெயர்ந்த சால்டியரே அங்கு தம்மை அரவர் என அடையாளப்படுத்தினர் எனக் கருதுவதனால் அதற்காகிய சான்றுகளை நோக்குவோம்.

பரவலாக பழைய மனித சமூகங்கள் அனைத்திலும் அரவவழிபாடு பேணப்பட்டு வந்துள்ளது. சைவம், கிறித்தவம், வைணவம், பௌத்தம் அனைத்திலும் அரவம் ஏதோ ஒரு வடிவில் தொடர்புபடுத்தப்பட்டு வருவதனை இந்த மதவரலாறுகள் தெரிவிக்கின்றன. இந்த வழிபாடு சுமேரிய நாகரிகம் முதல் எகிப்திய நாகரிகம் வரை பேணப்

பட்டிருந்தது என்பதும் வரலாற்றுத் தரவுகளாகும். இந்தியாவில் வடமாநிலங்கள் முதல் ஈழம் வரை பரவி வாழ்ந்த நாகர்கள் நாகங்களை வழிபடுவதனாலே 'நாகர்கள்' என அழைக்கப்பட்டிருந்தனர். விவிலிய வேதம் இவ்விதமான வழிபாட்டு முறையை யெகோவாவும், மோசசிற்கு அறிவுறுத்தியதனால், அவர் ஒரு பயங்கரமான பாம்பினைச் செப்பில் செய்து தூண் மீது பதித்ததாகவும், பாம்பு தீண்டப்பெற்ற மக்கள் அதனைப் பார்ப்பதன் மூலம் விடம் நீங்கப் பெறலாயினர் என்றும் குறிப்பிடும் (Numbers 21 : 4 - 9). மேலும், படைப்பின் ஆரம்பத்திலேயே யெகோவா படைத்த மிருகங்களில் பாம்பு குள்ளத்தன மானது என்பதனை அறிந்து அதற்கும், பெண்ணுக்கும் பகைமை உண்டாகும் என்று சபித்ததோடு, தொடர்ந்தும் இருவரின் வித்துகளுக்கு பகைமை தொடரும் என்றும் சபித்திருந்தார் (Genesis 3 : 14 - 15). இத்தகைய பின்னணி களினால் தமிழர்கள் இன்றும் நாக வழிபாட்டினை 'நாகதம்பிரான்' எனத் தனி வழிபாடாக மேற்கொண்டு வருகின்றனர் எனக் கருத முடிகின்றது. நவகோள்களுக்கு உருக்கொடுக்கையிலும் ராகு, கேதுகள் பாம்புடன் தொடர்புபடுத்தப் பட்டிருப்பதும் அரவ வழிபாடு எவ்வளவு தூரம் மக்கள் மத்தியில் செல்வாக்குடையதாக இருந்தது என்பதனை எடுத்துக் காட்டுகின்றது எனலாம்.

இத்தகைய பின்னணியிலேயே தமிழகத்தில் இடம் பெற்ற இரண்டாம் கடற்கோள் அழிவுகளைத் தொடர்ந்து சுமேரியா, ஊர்ப்பகுதிகளை உருவாக்கிய சால்டியர்கள் (செழியர்கள்) அரவ வழிபாட்டினை மேற்கொண்டிருந்த

மக்களாகலாமா? என்று ஒரு வினா இயல்பாகின்றது. ஏனெனில் பூர்வீக மட்டக்களப்புத் தமிழகத்தில் தமிழ் மதம் எனில் சைவம் என்றே பொருளாகும். அதுபோலவே 'அரவ. மதம்' சால்டியரைக் குறிப்பிடுவதாகக் கருத முடிகின்றது. இந்த அரவர்கள் கி.மு.3000ஆம் ஆண்டளவிலே உருவாக்கிய, இன்னோர் அரவர் குடியிருப்புகளே இந்துவெளி நதிக்கரையில் உருவாகிய அரப்பர் (Harappa) நாகரிகம் எனப் பெயர் பெற்றிருந்தது எனலாம். இவர்களின் ஆதிக்கம் பின் துவாரகையில் லோதால் துறைமுகத்தையண்டிய பகுதிகளிலும் இருந்துள் ளமையைத் தொல்லியல் ஆய்வுகள் வெளிக்கொணர்ந் துள்ளன. காலப்போக்கில் இவர்களையே அகத்திய முனிவர் அழைத்துச் சென்று காஞ்சிபுரப் பகுதியில் அருவாளர் நாடுகளை உருவாக்கியிருந்தார். இவ்வாறு புலம்பெயர்வுகளால் நாலாபக்கமும் பரவிய தமிழர்கள், மீண்டும் மாற்றுவழிகளில் ஒன்று சேர்ந்தார்கள் எனக் கருதின் தவறாகாது.

## ஆசிரியர் பின்னுரை

குமரிக்கண்டம் முதல் சுமேரியா வரை எனும் கட்டுரையினைத் தொடர்ந்து, என் விவிலிய வேதம் பற்றிய ஆய்வுகளைச் செய்ய என்னைத் தூண்டியவர் தம்பி சிவகணேசன் ஆவர். ஏறக்குறைய 2 அல்லது 3 மாதங்களுக்கு முன் சிவகணேசன் தன் ஆய்வுகளைத் தொலைபேசி மூலம் விவரித்துக் கொண்டிருக்கையில் ஒரு வினாவினைத் தொடுத்திருந்தார். யூதர்களின் தந்தையாகிய 'ஆப்ரம்' ஒரு தமிழன் என்று கூறினால் இன்றைய யூதர்கள்

ஏற்றுக் கொள்வார்களோ? என்பதுதான் அந்த வினா. என் சிந்தனையின் மீது தூவப்பட்ட இவ்வினாவை ஒரு நொடியாக எடுத்துக் கொண்டு, அதனை அவிழ்க்கும் முயற்சியில் விவிலிய வேதத்தின் மொழிபெயர்ப்புகளை பல தடவைகள் புரட்டிப், புரட்டிப் பார்த்ததன் விளைவே இக்கட்டுரைகள். இது மூடிமறைத்து வைக்கப் பட்டிருந்த ஒரு வரலாற்றுப் புதையலாகும். இதனைப் படித்து, உண்மைகளை உணரப் பக்குவம், பொறுமை, என்பவற்றுடன் இறையருளும் அவசியமே. இக்கட்டுரை களை என் முதுமைக்காலத்தில் எழுத எனக்கு ஆசானாக இருந்து ஏடு தொடக்கிவிட்ட சிவகணேசனுக்கு என் நன்றிகள். மற்றும் திராவிடரின் மரபணு என அடையாளப்படுத்தப்பட்டுள்ள M20 சுமேரியாவில் யூதரின் பழைய நகரான ரெல்பிரேக்கில் (Tellbreak) கிடைக்கப் பெற்றுள்ளமையும், இவர்களின் தாயகத் தொடர்புகளை அடையாளப்படுத்தும் தடயங்களில் ஒன்றாம். மேலும், உலகில் தமிழர்களே பொன் நகைகளை அதிகம் விரும்பி அணியும் இனம் என்பதில் ஐயமில்லை. ஊர் (Ur) நகரின் அகழ்வாய்வுகளின்போது வேலைப்பாடு கொண்ட பொன் நகைகள் கிடைக்கப்பெற்றிருந்தன. அதனோடு ஆப்ரமின் மகன் ஈசாக்கிற்கு பெண் கேட்டு மெசொபொட்டேமியா விலுள்ள நாகூருக்குச் சென்ற வேலையாள், முறைப் பெண்ணான ரிபெக்காவைச் சந்தித்தபொழுது, பவுனால் செய்யப்பட்ட மூக்கு வளையலும், 1 சோடி கை வளையல்களும் கொடுத்திருந்தமையும் ஒப்பிட்டு நோக்கத் தக்கது (Genesis 23-22).

ஃஃ



இந்துவெளியில் ஹாரப்ப நகர் அகழ்வாய்வுகளிற் கிடைக்கப்பெற்ற நடனமாதுவின் செப்பிலான (Copper) சிலை அணிகலன்கள் நடனத்திற்கேற்ற வகையில் அணியப்பட்டுள்ளன.



ஊர் தொல்லியல் ஆய்வுகளின் போது கிடைக்கப்பெற்ற சுமேரியர் அணிந்திருந்த அணிகலன்கள். இவ்விரு தொல்லியல் சிற்பங்களும் ஓரினச்சாயல் கொண்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

தலைசிறந்த நாடொன்றினை உருவாக்கிக் கொடுப்பதற்காக யெகோவா அப்ரமிற்கு வாக்களித்திருந்தார். அதனால் அப்ரம் சால்டிய நாட்டின் தலைநகரான ஊரிலிருந்து புறப்பட்ட வழித்தடங்கள், மற்றும் அரவர் புலம்பெயர் பெயர்வுகள்.





# தமிழர், திராவிடர் ஆகிய வரலாறு [மீளாய்வு]

ஆதியில் நாவலந்தீவு அல்லது ஜம்புத்தீவு* என அழைக்கப்பட்டிருந்த இந்தியாவின் பூர்வீகம் மிக அமைதியானதொன்றாகும். இங்கு வாழ்ந்திருந்த

---

* *"தீம்கனி நாவல் ஓங்கும் இத்தீவினுக்கு*
*ஒருதான் ஆகி உலகு தொழத் தோன்றினன்"*

*(மணி : காதை 15, வரி 20-21)*

*'சம்புத் தீவினுள் தமிழக மருங்கில்'*

*(மு.கு.காதை 17, வரி 62)*

*என மணிமேகலை காலத்தில் இந்தியாவினைத் தமிழில் நாவலந்தீவு எனவும், வடமொழியில் சம்புத்தீவு எனவும் அழைத்திருந்தனர். ஆனால் கி.மு.3ஆம் நூற்றாண்டில் படையெடுத்து வந்த கிரேக்கரே இந்து நதிக்கப்பால் வாழும் மக்களை இந்நதி பெயரால் 'இந்துக்கள்' என்றனர். இதனடிப்படையில் நாடும் இந்தியா எனக் காலப்போக்கில் பெயர் பெறலாயிற்று.*

சுதேசக் குடிகளில் கரிய நிறமும், தட்டைமூக்குமுடைய நீக்ரோ மக்கள், நீண்ட தலையையும், மெலிந்த மூக்கினையுமுடைய மத்தியதரை நாடுகளைச் சேர்ந்த மக்கள், மற்றும் மொங்கோலிய இனத் தொடர்புடைய இயக்கர், நாகர் குடிகள் எனப் பல்லின மக்கள் அடங்குவர். இவர்கள் சமாதானப் பிரியர்களாக இருந்தமையினால், தற்பாதுகாப்புப் படைகள் எதனையும் வைத்திருக்கவில்லை. ஆரியர்கள் கி.மு.3000ஆம் ஆண்டளவில் ஈரானூடாக வடமேற்கிந்தியாவினை குதிரைகள் இழுக்கும் வண்டிகளிலும், இரும்பாயுதங் களுடனும் படையெடுத்து வந்து மொஹன்ஜதாரோ-ஹாரப்ப நகரங்களைத் தாக்கிய பொழுது இவர்கள் எதிர்த்துப் போராட முடியாதவர்களாக இருந்தார்கள். ஆனாலும் இந்த ஆரியர்கள் இந்தியாவிற்குள் குடியமர்ந்த பின் எழுதிய தமது சமய நூலில், தாம் தாசர்களின் பாதுகாப்பரண்களையும், மந்தைகளையும், நகரங்களையும், கோட்டைகளையும் கடுமையாகப் போரிட்டே கைப்பற்ற முடிந்ததெனக் குறிப்பிட்டுள்ளனர் (இருக்குவேதம் X - 22.8). அதனோடு இந்த ஆரியர்கள் வெளிறிய நிறமும், நீண்ட மூக்கும், நெடிய உடற்கட்டையும் கொண்ட வீரர்களாக இருந்தனர். சிறப்பாக, பஞ்சாப் வீரர்கள் தலைப்பாகை அணிந்தவர்கள் என்ற குறிப்பும் இருக்குவேதத்தில் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு இவர்கள் வெற்றியீட்டிய பின் சுதேச மக்களாகிய தாசர் அல்லது தஸ்யுக்கள் என்போர் சிஸ்னாதேவர்கள் (அதாவது லிங்க யோனி எனும் குறிவழிபாடுடையோர் எனக் குறிப்பிட்டு சிவலிங்க வழிபாட்டினையே இகழ்ந்தனர்.) மற்றும் இவர்களது

பேச்சினைத் தெளிவற்ற பேச்சுடையோர் என்று தரக்குறைவாகக் கணிப்பிட்டனர். அதேசமயம் தாம் இயற்கைத் தெய்வங்களை தீயோம்பி மந்திரங்களை உச்சரித்து வழிபடும் சிஷ்டர்கள் (உயரிய இனத்தவர்) எனவும் தம்மைப் புகழ்ந்து கொண்டனர். காலப்போக்கில் தாம் குடியமர்ந்த பகுதிகளில் சுதேசக் குடிகளுடன் கலக்காமல் தம்மை 'ஆரியர்' என்றும், தாம் கைப்பற்றிய வடஇந்திய மாநிலங்களை 'ஆரியவர்த்தம்' அல்லது ஆரியாண்டம் எனவும் வரையறை செய்து கொண்டனர். விந்திய மலைக்குத் தெற்கே வாழ்ந்திருந்த மக்களை ஆந்திரர்கள், சபரர்கள், புலிந்தர்கள், புண்ட்ரர்கள் எனவும். குறிப்பிட்டிருந்தனர் (ஐதரேய பிராமணம்). விந்திய மலை தடையாக இருந்தமையால் பல காலம் இவர்கள் ஊடுருவல் தெற்கே இடம் பெறாமல் இருந்து வந்தது. ஆனால், இவர்கள் தாம் கைப்பற்றிய சுதேசிகளின் நிலங்களைத் தீயிட்டுத் தூய்மைப்படுத்திய பின்னரே அப்பகுதிகளில் குடியமரலாயினர். இவ்வாறு வடஇந்தியா முழுமையாகத் தீயினால் கருகிய பொழுது, இவர்கள் முதலில் குடியமர்ந்து வழிபட்டிருந்த சரஸ்வதி நதி வரட்சியடையலாயிற்று. அதனால் ஆரியரின் உயர்குடியினரான பிராமணப் புரோஹிதர்கள் தென் மாநிலங்களுக்குப் புலம்பெயர நேரிட்டது. இவ்வாறு புலம் பெயர்ந்த பிராமணர்களை திராவிட (தமிழ்) தைலங் (தெலுங்கு) கர்நாட (கன்னடம்) மத்தியதேசி (மகாராஷ்டிரம்) கூர்ஜர (குசராட்) என இவர்கள் குடியமர்ந்த மாநிலப் பெயர்களால் இவர்களை 'ஸ்கந்த புராணம்' அடையாளப் படுத்தினாலும் இவ்வாறு தெற்கே புலம்பெயர்ந்த பிராமணர்களைத் 'திராவிடப் பிராமணர்கள்' என ஒரு

பொதுப்பெயராலே குறிப்பிட்டிருந்தது. காரணம் அப்பொழுது தமிழகமும், தமிழும் இமயம் வரை புகழ் பரப்பியிருந்தன. இதனை சிலப்பதிகாரம்,

வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை ஆண்ட தென்னவன் வாழி

*(புகார்-காடுகாண்காதை. வரி 21-22)*

*கயல்* எழுதிய இமய நெற்றியின்
அயல் எழுதிய *புலியும் வில்லும்*
நாவலம் தண்பொழில் மன்னர்
ஏவல் கேட்பப் பார்அரசு ஆண்ட

*(மதுரைக்காண்டம் ஆய்ச்சியர் குரவை, வரி 1 - 4)*

வட ஆரியர் படை கடந்து
தென் தமிழ்நாடு ஒருங்கு காண

*(மு.கு. கட்டுரை, வரி 14-15)*

அருந்தமிழ் ஆற்றல் அறிந்திலர் ஆங்கு

*(வஞ்சி, கால்கோள்காதை, வரி-161)*

எனக் குறிப்பிடுவதிலிருந்து உணரலாம். இத்தகைய பின்னணியிலே தான் 'திராவிடர்' என்ற பெயர் கொண்டே தென்னக இனங்கள், மொழிகள் அனைத்தையும் வடநாட்டார் அழைக்கத் தொடங்கினர். மைசூர் நாட்டுச் சாசனம் ஒன்று 'திரமிள சங்கம்' எனத் தமிழ்ச் சங்கத்தைக் குறிப்பிட்டுள்ளது.

கலிங்கத்தில் காரவேலவின் கல்வெட்டு (கி.மு.155) மூவேந்தர் படையெடுத்துச் சென்றமையை 'திரமிரதேச

சங்காதம்' எனக் குறிப்பிடும். பின் வச்சிரநந்தி எனும் சமண குரு கி.பி.470இல் ஏற்படுத்திய திராவிட சங்கத்திலேயே சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி, பெருங்கதை முதலான சமணகாவியங்கள் எழுதப்பட்டிருந்தன. கி.பி. 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான குமரிலபட்டர் ஆந்த்ரா - திராவிட பாஷா என்கையில் தமிழைத் 'திராவிட' என்றே குறிப்பிட்டுள்ளனர். கி.பி.5ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்ட லலிதவிஸ்தாரம் எனும் பௌத்த நூல் தமிழை 'திராவிடி' என்றே குறிப்பிடும். ஆனால் கி.மு.2ஆம் நூற்றாண்டில் உருவாகிய சமவாயங்கன சுத்த எனும் நூல் தமிழை 'தாமிழி' என்று குறிப்பிட்டுள்ளமை தமிழைத் திரிபுபடாமல் குறிப்பிட எடுத்த முயற்சி ஆகும்.

மேலே சுருக்கமாக ஆராய்ந்து காட்டியதன்படி 'திராவிடம்' எனும் பெயர் இனத்தால், மொழியினால் ஒன்றுபட்டிருந்த மக்களுக்குப் பொதுவாகவும் தமிழருக்குச் சிறப்பாகவும் வடநாட்டாரால் இட்ட பெயராகும் என்பது புலனாம். எவ்வாறாயினும் காலந்தோறும் இடம் பெற்ற பழைய குடியேற்றங்கள் தமிழருடன் இரண்டறக் கலக்கும் நிலையில் செந்தமிழ் கொடுந்தமிழாயிற்று என்பதனைத் தொல்காப்பியர்,

> செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
> தங்குறிப்பினவே திசைச் சொற் கிளவி
> வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ

என்பதனால் மறைமுகமாகத் தமிழ்மொழி கலப்புற்றுத் திரிபடையும் நிலையைச் சுட்டியிருந்தனர். ஆனால் சிலப்பதிகார காலத்தில் இது,

**குமரி, வேங்கடம், குண, குட கடலா**
**மண்திணி மருங்கின் தண்தமிழ் வரைப்பில்**

செந்தமிழ், கொடுந்தமிழ் என்று இருபகுதியினர் உருவாகியிருந்தனர் எனக் கூறுவதன் மூலம் தமிழ் 'கொடுந்தமிழ்' ஆகி வளர்ந்துவிட்ட நிலையும் இனம் காணப்பட்டிருந்தது என்பது உறுதியாகின்றது.

இனி, பிற்காலப் புதிய குடியேற்றங்களால் தமிழகத்தில் தெலுங்கர், கன்னடர், மகாராஷ்டிரர், இராஷ்டிர கூடர், சௌராஷ்டிரர் என்போர் தமிழகத்தின் பல பகுதிகளிலும் பெருந்தொகையாக வந்து குடியமரலாயினர்.* அதனால் இந்த மக்கள் தம்முடன் கொண்டு வந்த மொழிச் சொற்களையும் சேர்த்துக் கொள்ள வேண்டியதாயிற்று. அதனுடன் கி.பி.12ஆம் நூற்றாண்டின் பின் தமிழகத்தை ஆண்டிருந்த மன்னர்கள் தனித்தமிழ் மரபையொற்றி வந்தவர்களும் அல்ல. அதனாலேதான் ஆங்கிலேயர் 1947இல் இந்திய நாட்டினை முழுமையாகக் கூட்டாட்சி முறைக்குக் கொண்டு வந்த பொழுது, அப்பொழுது தமிழகத்தை ஆண்டிருந்த தெலுங்கினத்தவரான நாயக்கர்களே தமிழ்நாட்டின் பிரதிநிதிகளாகக் கலந்து கொண்டிருந்தனர். இந்தப் பின்னணியிலே தான் அறிஞர் அண்ணா, பெரியார் ஆகியோர் 1967இல் திராவிடக் கட்சியை உருவாக்கினர் எனலாம். ஏனெனில், தனித்தமிழ்க் கட்சியை உருவாக்கக்கூடிய தலைமைத் துவத்தைத் தமிழகம் இழந்திருந்தது.

---

* *மேலும் விபரங்களுக்கு பார்க்க : புலவர் குழந்தை, கொங்கு நாடு, 2009, திருத்திய முதற்பதிப்பு, பூம்புகார் பதிப்பகம், சென்னை.*

இப்புதிய அரசியல், சமூகப் பின்னணிகள் ஒரு புதிய சொல்லை தமிழருக்கு உருவாக்கியிருந்தாலும், தமிழக இலக்கியம் எதுவும் தமிழைத் 'திராவிடம்' என அழைக்க முன்வரவில்லை எனலாம். மூன்றாம் கெழுகூடல் புலவரான நக்கீரர் ஒரு வடமொழியாளர். அப்படியிருக்க தமிழை அகத்திய முனிவரிடம் கற்றுக் கொண்டபின், தமிழே நீடூழிகள் வாழ வேண்டுமென்று வாழ்த்தியுள்ளார்.

இதனை,

**ஆரிய நன்று தமிழ்தீதென வுரைத்த**
**காரியத்தாற் காலக்கோட் பட்டானைச் - சீரிய**
**அந்தண் பொழில் அகத்தியனா ராணையால்**
**செந்தமிழே தீர்க்க சுவாகா!**

*(தொல் - பொருள் அதிகாரத்தில் இடம் பெறும் வெண்பா 490)*

என்பதனால் உணரலாம்.

திருமூலரும்,

**ஆரியமும் தமிழும் உடனே சொலி**

*(திருமந்திரம், செய். 65)*

**தமிழ்ச்சொல், வடசொல் எனும் இவ்விரண்டும்**
**உணர்த்தும் அவனை**

*(மு.கு., செய்.66)*

எனத் தமிழைத் தமிழாகவே போற்றியிருந்தார்.

இளங்கோவடிகளும் தன் தமிழ்ப் பற்றினைப் பல சந்தர்ப்பங்களிலும் வெளியிட்டிருந்தமை அவதானிக்கத் தக்கது. சேரர்கள், இன்று தமிழுக்கு அந்நியராகிப் போய் விட்ட நிலை காலம் செய்த கோலம் என்றே தெரிகின்றது. சேரன் செங்குட்டுவனின் தம்பியாகிய இளங்கோ செங்குட்டுவனின் பெருமையை 'தென் தமிழ் ஆற்றல் அறியாது மலைந்த ஆரிய மன்னரை' என்று குறிப்பிடு கின்றார். இங்கு 'தென் தமிழ் ஆற்றல்' என்பதனால் குறிப்பிடப்பட்டவன் சேர மன்னனாகிய செங்குட்டுவ னேயாம். மேலும், சிலப்பதிகார காலத்தில் மூவேந்தர் ஒற்றுமையை,

**வடதிசை மருங்கின் மன்னர்க்கு எல்லாம்**
**தென்தமிழ் நாட்டுச் செழுவில், கயல், புலி**
**மண்தலை ஏற்ற வரைக ஈங்கு**

என்பதனால் தனியே விற்கொடியை மட்டும் அனுப்பும்படி கூறாமல், சேர, பாண்டிய, சோழர் கொடிகளை அனுப்பி வைக்கும்படி குறிப்பிடுவதனால், இவர்கள் அனைவரும் இக்காலத்தில் ஒற்றுமையாகத் தமிழைப் போற்றியிருந்தமை யும் புலனாம்.

இதுவரை நாம் ஆராய்ந்து காட்டியதிலிருந்து தமிழர்கள் எப்பொழுதும் 'தமிழ்' எனும் சொல்லினை மிகப் புனிதமாகவே காப்பாற்றி வந்திருந்தனர். ஆனால், வடநாட்டார் இட்ட 'திராவிடம்' என்ற சொல்லுடன் திராவிடருக்கெதிராகப் பகைமையும், காழ்ப்புணர்வும் அதிகம் வெளிக்காட்டப்படலாயிற்று. இந்தப் பகைமை இன்று, நேற்று உருவாகியதொன்றன்று. ஆரியர்கள் எப்பொழுது இந்தியாவிற்குள் படையெடுத்தார்களோ

அன்றிலிருந்து இன்றுவரை பல்வேறு வடிவங்களில் வளர்ந்து வந்ததொன்றாகும். அதனோடு பிராமணப் புரோகிதர்கள் தம் வாழ்வாதாரத்தை வளர்த்துக் கொள்வதற்காக, மூவேந்தர்களுக்கு அறிமுகப்படுத்திய யாகங்களைச் செய்துகொண்ட, மூவேந்தர்களும் தம்முள்ளே பகைமையை வளர்த்துத், தமக்குள்ளே போரிட்டு வரலாற்றில் மறைந்தே போனார்கள். அதனால் தமிழ்மன்னர்கள் அற்ற தமிழக ஆட்சி இற்றைக்கு ஏறக்குறைய 800 ஆண்டுகளாகின்றன எனில் தவறாகாது. எவ்வாறாயினும் கடவுள் பெயராற் சகல வளங்களையும் சம்பாதித்துக் கொண்ட பிராமணர்கள் அன்று மட்டுமல்ல, இன்றும் தம் நிலைகளை இந்தியா எங்கனும் உறுதியாகவே வைத்திருக்கின்றார்கள். மாநிலங்களில் இவர்களது நிலைகள் கொஞ்சம் தளர்ந்திருந்தாலும், மத்திய அரசில் இவர்கள் பிடி அழுங்குப்பிடியேயாகும். அதனாலே தமிழகத்திலும், ஈழத்திலும் தமிழர்கள் வேண்டுமென்றே புறக்கணிக்கப்படுகின்றார்கள். ஆரியபாலா, ஆரியவதி போன்ற பெயர்களைச் சூட்டிக் கொள்ளும் சிங்களவர்கள் ஆரிய வழியினர் என்ற மாயைக்குள் சிக்கியிருப்பதனால், சிஷ்டர்களின் ஆதரவு அவர்களுக்கு எந்தவித முயற்சியுமில்லாமல் போய்ச் சேர்கின்றன. ஆனால் உலகத்தில் நீதி, நியாயங்கள் தளர்ந்திருக்கும் கலியுகத்தில் தமிழரை மன்னிக்கக் கடமைப்பட்டவர் கடவுள் ஒருவரே. அவரது நீதி, நியாயங்கள் நிலைநாட்டப்படும் நாள் விரைவில் வரலாம் என எதிர்பார்ப்போமாக!




# தமிழ் மூவேந்தர்களின் ஆட்சிப் புலங்கள் அவர்கள் கைகளை விட்டு நழுவியதேன்? இது ஈழத்தமிழருக்குப் புகட்டும் பாடம் என்ன?

தமிழகத்தை ஆண்டிருந்த மூவேந்தர்களின் புகழ் பரப்பும் நூல்களாகவே சங்க இலக்கியங்கள் உருவாகி யிருந்தன. இவர்களுள் பாண்டியர்களுக்கே அதிகப் புகழாரம் சூட்டப்பட்டிருந்தது. ஏனெனில் இவர்களே தென்மதுரை, கொற்கை முதலிய தத்தம் தலைநகரங்களில் முதலாம், இரண்டாம் தமிழ்ச் சங்கங்களை (கழகம், கூடல்) உருவாக்கித் தமிழ் வளர்த்தோராவர். தென் மதுரைப் பாண்டியர் ஆட்சியில் ஆட்சிப் புலங்கள் 49 பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுத் திறன்பட ஆளப்பட்டிருந்தன. இவ்வாறு இவர்கள் ஆண்டிருந்த நாடுகள் பற்றியும், தமிழ்ப்பணி பற்றியும் பழந்தமிழ் இலக்கியங்கள் எமக்கு அறிவுறுத்துகையில் நாம் பெருமையடைகின்றோம். அக்காலம் மீண்டும் வாராதா என ஏங்குகின்றோம். ஏனெனில், எம் மனித உரிமைகள்

அனைத்தும் அடகு வைக்கப்பட்ட நிலையிலேயே தமிழர்கள் இன்று வாழ்ந்து வருகின்றார்கள்.

தென் மதுரைப் பாண்டியர்களின் ஆட்சி எல்லைகளின் இடைப்பட்ட தூரம் தெற்கே குமரியாற்றுக்கும் பஃறுளியாற்றிற்கும் இடையே 700 காவதம் ஆகும். இப்பகுதியில் ஏற்பட்ட முதற்பெருவெள்ளத்தின் போது 49 நாட்டுப் பிரிவுகளும் கடலுட் தாண்டுவிட எஞ்சியது ஏழ்குறும்பனை நாட்டின் ஒரு பகுதியாகிய ஈழமேயாகும். இக்கடற்கோளின் பின் மன்னரும், மக்களும் வடக்கே புலம்பெயர்ந்து குமரியாற்றங்கரையில் கொற்கை நகர் அல்லது அலைவாய் எனும் இரண்டாவது தலைநகரை அமைத்துத் தமிழையும் வளர்த்திருந்தனர். இத்தமிழ்ச் சங்கமே பாண்டியர் உருவாக்கிய இரண்டாம் தமிழ்ச் சங்கமாகும். சில காலத்தால் மீண்டும் ஒரு கடற்கோள் ஏற்படவே, பாண்டியன் வடக்கே புலம்பெயர்ந்து வையை ஆற்றங்கரையில் இன்றைய மதுரை நகரை அமைத்து ஆண்டிருந்தான். இங்கும் தமிழை வளர்க்கவென மூன்றாம் சங்கத்தினை அமைத்திருந்தான். இதன் பின் பாண்டியர்கள் தமிழ்ச்சங்கங்களை அமைக்காமையினால் இதனைக் கடைச்சங்கம் என்றும் அழைப்பர்.

மூன்றாம் கடற்கோளின் பின் சேரர், சோழருடன் இணைந்து பாண்டியர்கள் நாட்டினை முத்தமிழகம் எனும் வகையில் ஒன்றுபட்டு ஆண்டிருந்தனர். முன்பெல்லாம் 'தண் தமிழ் பொது' எனப் பொறாதவர்களாக (புறம். செய். 51) இருந்து வந்த பாண்டியர்கள் தற்பொழுது 'முரசு முழங்குதானை மூவர்' (புறம். செய். 35) 'பொதுமைசுட்டிய மூவருலகம்' (புறம் 357) 'வண் புகழ் மூவர் தண்பொழில்

வரைப்பில்' (தொல்காப்பியம்) என்று போற்றும் வகையில் மூவரசர் மரபிற்குட்பட்டு கி.பி.3ஆம் ஆண்டு வரை ஒற்றுமையாக ஆண்டிருந்தனர். இக்காலத்தில் ஒருவர் நாட்டை இன்னொருவர் பிடித்தாள வேண்டுமென்ற மண்ணாசை சிறிதுமின்றி தத்தம் நாடுகளை ஆண்டிருந்தனர்.

இவ்வாறு ஒற்றுமையாக ஆண்டிருந்த மூவேந்தர் ஒற்றுமையைச் சிதறடித்தவர்களாக அடையாளப்படுத்தப் பட்டவர்கள் பிராமணப் புரோகிதர்களே ஆவர். மூன்றாம் சங்க இலக்கியங்களில் வட நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட வைதீகக் கிரியைகளில் வல்ல புரோகிதர்கள் போற்றப்படுதல் அல்லது அத்தகைய வேள்விகளைச் செய்து புகழ்பெற்ற மன்னர்களைப் போற்றுதல் என்பன முக்கிய செய்திகளாக இடம்பெற்றுள்ளன. அதனோடு இவர்களைக் கௌரவித்து மன்னர்கள் வழங்கிய ஊர்கள், கோவில்கள், கல்விக்கூடங்கள், பொன் முதலானவற்றைப் பற்றிய செய்திகளும் இடம்பெற்றுள்ளன. பதிற்றுப்பத்து எனும் நூலில் சேர மன்னர்கள் தம் ஆட்சியிற் கூட புரோகிதர்களுக்குப் பங்குகளை வழங்கிக் கௌரவித்தமை பற்றிய குறிப்புகள் உள. இவ்வாறான பின்னணிகள் உருவாகிய காலத்தில் மூவேந்தர்கள் சில வேள்விக் கிரியைகளைக் கூடியிருந்து கவனித்திருந்தனர். இதனை ஔவையார்,

ஒன்று புரிந்து அடங்கிய இருபிறப்பாளர்
முத்தீப் புரையக் காண்தக இருந்த
கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்தீர்

*(புறம், செய். 367)*

எனக் குறிப்பிட்டுள்ளார். ஆனால் காலப்போக்கில்

இவர்களிடையே யார் அதிக வேள்விகளைச் செய்து புகழடைவது எனும் போட்டி மனப்பான்மை முளை கட்டத் தொடங்கிற்று. அப்பொழுது வேள்விகளைச் சிறப்பாகச் செய்யும் புரோகிதர்களை அமர்த்திப் பல வேள்விகளைச் செய்வதில் மன்னர்கள் அக்கறை காட்டினார்கள்.

இவ்வாறு பல வேள்விகளைச் செய்து 'பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' எனும் சிறப்புப் பெயரை பாண்டிய மன்னன் ஒருவன் பெற்றிருந்தான். இத்தகைய சூழலில் புலவர்களும் வேள்விகளின் சிறப்புகளையும், அவற்றைச் செய்வித்த மன்னர்களையும் புகழ்ந்து பாடிப் பரிசில்களைப் பெற்றிருந்தார்கள். பாண்டியன் முது குடுமிப் பெருவழுதியை, நெட்டிமையார் எனும் புலவர்,

நற்பனுவல் நால் வேதத்து
அருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம் மலிஆவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூபம் நட்ட வியன் களம் பலகொல்
யாபல கொல்லோ! பெரும!

*(புறம், செய்.15)*

எனப் போற்றியிருப்பது சீர்தூக்கத்தக்கது. அடுத்து, எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் எனும் புலவர் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனது நாடு எப்பொழுதும் வேள்வித்தீயுடன் விளங்குகின்றது என்பதனை,

அறுதொழில் அந்தணர் அறம்புரிந்து எடுத்த
தீயொடு விளங்கும் நாடன்

*(புறம், செய், 367)*

என்று குறிப்பிட்டுள்ளமையும் கருத்திற் கொள்ளத்தக்கது. இக்கிள்ளிவளவனை வெள்ளைக்குடி நாகனார் முகமன் பாராட்டுகையில்,

மண்திணி கிடக்கைத் தண்தமிழ்க் கிழவர்
முரசு முழங்கு தானை மூவருள்ளும்
அரசு எனப்படுவது நினதே பெரும!

*(புறம், செய். 35)*

என உயர்த்திப் பாடுகையில், மற்ற இருவரும் தாழ்த்தப்படும் நிலை உருவாகியிருந்தது. மன்னர்கள் உள்ளங்களில் வடநாட்டுப் புரோகிதர்கள் பொறாமைத் தீயை மூட்டி விடப் புலவர்கள் அதனைக் கொழுந்து விட்டெரிய வைத்திருந்தனர். அதனால் மூவேந்தர்கள் ஒருவர்க்கொருவர் பகைகொண்டு போர்தொடுத்து-நாடுகளைப் பிடிக்கும் முயற்சிகளில் அக்கறையுடன் தொழிற்பட்டனர். இக்காலத்தில் இடம்பெற்ற தலையானங்கானத்துப் போர் என்பது பாண்டியன் நெடுஞ்செழியன் சேரர் மீது போர் தொடுத்து வெற்றியீட்டிய போர்க்களமாகும் (புறம், செய். 19, 23, 24, 26, 76). இப்போர் வெற்றியினைப் பற்றி நெடுநல்வாடை, மதுரைக்காஞ்சி என்பனவும் குறிப்பிட்டுள்ளன. அடுத்து, வெண்ணிப் பறந்தலைப் போரில் கரிகாட்சோழன், பாண்டியர்களையும், சேரர்களையும் வெற்றி பெற்றிருந்தான் (புறம், செய். 66, 74, 224). இப்போர் வெற்றி பற்றி பட்டினப்பாலையும் குறிப்பிடும்.

இவ்வாறு பக்தியற்றுக் கிரியைகளையே அதிகம் செய்யும் இயல்புடைய வைதீகமதம் தமிழகத்தில் ஊடுருவிய பின் தமிழகம் மூவேந்தர்களின் போர்க்களமாக

மாற்றம் பெற்றிருந்தது. இப்போர்களின் முடிவில் மன்ன னும் மக்களும் தங்கள் ஆட்சிப் பிரிவுகளை இழந்ததோடு, மனைவி மக்களையும் இழந்தனர். வெற்றிபெற்ற மன்னர்கள் தம் காசுகளில் தமக்கு வெற்றி ஈட்டித் தந்த யாகங்களின் பெருமைகளை நினைவு கூருமுகமாக குதிரை, யாகத்தூண், யாககுண்டம் ஆகியவற்றைப் பொறித்துக் கொண்டாடினர். இம்மன்னர் வழிநின்ற புலவர்களும் வேள்விகளின் பல்வகைப்பட்ட கிரியை நுணுக்கங்களை அறிந்து செய்திருந்த புரோகிதர்களைப் புகழ்ந்து பாட, மன்னன் அப்புரோகிதர்களுக்குப் பொன்னையும், பொருளையும், நன்நிலங்களையும் கொடையாக வழங்கினான். சேர அரசர் சிலர் தம் புரோகிர்களுக்குத் தம் ஆட்சிப் பிரிவினையும் பரிசாக வழங்கினர் எனப் பதிற்றுப்பத்துக் குறிப்பிடும். இவ்வாறு திசை மாறிய மூவேந்தர்கள் நாட்டின் ஆட்சியை முற்று முழுதாகத் தம் சொந்த நலன்களுக்காகவே மாற்றி யிருந்தனர்.

இந்நிலைகண்ட சில புலவர்கள் துயருற்று மன்னர் களுக்கு இந்த யாகங்கள் அனைத்தும் பிராமணர்களின் வருவாய் குறித்தே செய்கின்றனர் என்ற உண்மையை எடுத்துக் கூறத் தவறவில்லை. இதனை சிறுவெண் தேரையார்,

------------------ அந்தணாளீர்
நான்மறை குறித்தன்று அருள் ஆகாமையின்
அறம் குறித்தன்று பொருள் ஆகுதலின்

*(புறம், செய். 362)*

என்று கூறி அறிவுறுத்தியிருந்தார்.

ஔவையாரும் மூவேந்தரும் ஒருக்கிருந்து ராஜசூய வேள்வியினைப் பார்த்திருக்கையில் "தேவலோகத்தைப் போன்ற பூவுலகு உமதேயாயினும் அது உங்கள் இறப்பின் போது உடன்வராது. ஆகையினால் இரவலரை ஆதரித்து நல்வினையை ஆற்றுங்கள்" (புறம், செய். 367) என மறைமுகமாக நல்லறங்களைச் செய்யுங்கள், பயன் தராத வேள்விகளில் மனங்கொள்ளாதீர்கள் என அறிவுறுத்தி யிருந்தார். கருங்குழல் ஆதனார் எனும் புலவர் வேத வேள்விகளைச் செய்த கரிகாற்பெருவளத்தான் போரில் இறந்த பொழுது அதனை எடுத்துக்காட்டத் தவறவில்லை.

1. 'நீ வேள்வியியற்றிய யாக மேடை வட்ட வடிவில் பல அடுக்கில் கட்டப்பெற்று நடுவில் பருந்தை விழுங்க ஒரு யாகத்தூணையும் கொண்டிருந்தது என்பதனால் யாகம் வெறும் கிரியையே என அறிவுறுத்தினார் (புறம், செய்.224). மேலும், காரிக்கண்ணனார் சோழனையும், பாண்டியனையும் ஒற்றுமை பேணும்படி வேண்டியிருந் தமையும் நினைவு கூரத்தக்கது (புறம், செய். 58).

2. இளங்கோவடிகளும் நடுகல் காதையில், (131 - 132)

அறக்கள வேள்வி செய்யாது யாங்கணும்
மறக்கள வேள்வி செய்வோய் ஆயினை

என்றும்,

மன் உயிர் போற்றுக

எனவும் வலியுறுத்தியிருந்தார்.

இவ்வாறு மூன்றாம் சங்ககாலம் முதலாக மூவேந்தர்கள் ஒருவர்க்கொருவர் பகைமை காட்டத் தொடங்கியதனால் "பொதுமை சுட்டிய மூவருலகம்" (புறம். 357) காலப்போக்கில் முற்றாகப் பிளவுபடலாயிற்று.

## மூவேந்தர் வரலாற்றில் மறைந்த கதை

சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் தம் காலத்தில் மூவேந்தரின் ஆட்சிப் பெருமையினை முன்பொரு பொழுதுமில்லா வகையில் எடுத்தியம்புவது ஒவ்வொரு தமிழனையும் தலைநிமிர வைக்கும் என்பதில் ஐயமில்லை. இவர் கற்பனைக்கப்பாற்பட்ட ஒரு வரலாற்றுத் தகவலையே எமக்களிக்கின்றார். சேர மன்னன் செங்குட்டுவனின் தம்பியாக இருந்தும் அவர் அரசியலில் அதிக அக்கறை கொள்ளாத வகையிலே வாழ்ந்திருந்தார். எனவே, அவரது கூற்றுகளில் உயர்வு நவிற்சியணி என்பது தேவையற்றதாம். அதனால் அவரது வரலாற்றுத் தகவல்களை உதாசீனம் செய்யாவிடின், நாம் எம் வரலாற்றினைப் பேணும் பக்குவத்தினைப் பெற்று விட்டோம் என நம்பலாம். இனி, இளங்கோவடிகள் எமக்குத் தரும் செய்தி என்ன? என்பதனை நோக்குவோம்.

வடதிசைக்கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை ஆண்ட தென்னவன் வாழி

*(புகார் காண்டம் - நாடுகாண்காதை, வரி 21-22)*

கயல் எழுதிய இமய நெற்றியின்
அயல் எழுதிய புலியும் வில்லும்
நாவலம் தண் பொழில் மன்னர்
ஏவல் கேட்பப் பார்அரசு ஆண்ட

*(மதுரைக்காண்டம் - ஆய்ச்சியர் குரவை வரி 1-4)*

கொற்கை வேந்தே வாழி!
தென்னம் பொருப்பின் தலைவ! வாழி!
செழிய வாழி! தென்னவ வாழி

*(மதுரைக்காண்டம் - வழக்குரைகாதை, வரி 30-32)*

இத்தகைய பெருமையுடன் வாழ்ந்த மூவேந்தர்களை உட்பகைமை கொள்ளவும், பேரரசுகளைக் கட்டியெழுப்பவும், வேட்கையைத் தூவி, தமது வருவாயை ஈட்டிக் கொள்வதில் பிராமணப் புரோகிதர்கள் கண்ணும் கருத்துமாய் இருந்து தொழிற்பட்டார்கள். இவ்வழியைப் பின்பற்றிய கபிலர் எனும் புலவரும் ஒரு பிராமணரே யாவர். இவர் கடையெழு வள்ளல்களில் ஒருவரான பாரியின் கொடை பற்றி மூவேந்தர்கள் பொறாமை கொண்டு பகைத்தெழும்படி பின்வருமாறு கூறியிருந்தார்.

முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர்
யாமும் பாரியும் உளமே
குன்றும் உண்டு நீர்பாடினீர் செலினே

*(புறம். செய். 110)*

எனவே அவனது 300 ஊர்களும் கொடையாகப் போன நிலையில் பறம்பு மலை மட்டுமே எஞ்சியுள்ளது என்பதனைக் கபிலர் கூறியதோடு மூவேந்தர்களைப் பாரியிடம் சென்றால் மூவேந்தர்கள் எஞ்சியுள்ள பாரியையும், பறம்பு மலையினையும் கொடையாகப் பெறலாம் என்று மிகக் கொடுமையான முறையில் வார்த்தைகளைப் பிரயோகித்திருந்தார். அதனால், மூவேந்தரும் சூழ்ச்சி வலையிற் சிக்கி வெறும் பொம்மை மனிதர்களாகி அறிவிழந்தனர். பாரியை மூவரும்

இணைந்து வஞ்சகமாகக் கொன்றனர். இதுவே தமிழ் மூவேந்தர்களின் அழிவின் ஆரம்ப நிலையென நாம் கருதலாம்.

இவர்களில் இடையிடையே ஒரு சிலர் பெருவெற்றி களையீட்டித் தமிழக வரலாற்றின் பெருமன்னர்களாக அடையாளப் படுத்தியிருந்தாலும், 14ஆம் நூற்றாண்டு முதலாக முற்றாக தமிழகம் அயலார் ஆட்சிக்குட் படலாயிற்று. இக்கால வரலாறுகளின்படி வட இந்தியாவை ஆண்டிருந்த முஸ்லீம்களான ஆப்கானியரும், துருக்கி மொகலாயரும் தெற்கே தமிழகம் வரை தம் ஆட்சிகளை நிலைநிறுத்தியிருந்தனர். இக்காலத்தில் ஆந்திர நாட்டுத் தெலுங்கு வீரர்களான ஹரிகரன் - புக்கன் ஆகிய இருவரும் உருவாக்கிய விஜயநகர அரசு (இதற்குள் ஆந்திரருடன், கன்னடர் துளுவரும் உட்படுவர்.) தமிழகத்தை முஸ்லீம் ஆட்சியிலிருந்து மீட்டிருந்தது. குறிப்பாக விஜயநகர அரசின் குமாரகம்பண்ணன் காலத்தில் (கி.பி.1378) இவன் முகம்மதியரை வென்று நாயக்கர் ஆட்சியினைத் தமிழகத்தில் உறுதிசெய்திருந்தான். இவன் பின் கிருஷ்ண தேவராயன் (1509 - 1529) தமிழகத்தை மூன்று பிரிவாகப் பிரித்து நாயக்கர் தலைவர்களை நியமித்து ஆண்டிருந் தான். இந்த நாயக்கர் தலைவர்களின் கீழ் பழைய தமிழ் அரச மரபினரே அப்பகுதியையாண்டிருந்தனர். பின், விசுவநாதன் மதுரை நாட்டை (1535இல்) ஆள்கையில் மதுரை 72 பாளையங்களாகப் பிரித்தாளப்பட்டது. இப்பாளையக்காரரில் பெரும்பாலோர் தெலுங்கர் ஆவர். இவ்வாறு தொடர்ந்தும் தெலுங்கு மக்கள் குடியேற்றங்கள் தமிழ் நாடெங்கும் இடம் பெறலாயிற்று. இன்று இவர்கள்

தமிழ்நாட்டையே தமது தாயகமாகக் கருதி வாழ்ந்து வருகின்றனர்.

இவ்வாறான வரலாற்றுப் பின்னணியினாற்றான் தொல்காப்பியர் காலத்தில் தமிழ் எல்லையாக இருந்த வடவேங்கடம் ஆந்திர நாட்டாட்சிக்குட்படலாயிற்று. மேலும், தொல்காப்பியர் குறிப்பிட்ட "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பில்" என்ற பகுதிக்கு உட்பட்ட நாட்டியல்புகளும், மற்றும் காக்கைபாடினியார் குறிப்பிட்ட,

**வடதிசை மருங்கின் வடுகு வரம்பாகத்**
**தென்றிசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்**
**வரைமருள் புணரியொரு கரைபொருது கிடந்த**
**நாட்டியல் வழக்கமும்**

நிலைமாறிப் போயிருந்தன. (வடுகு - வடக்கிலுள்ளவர் எனப் பொருள் தரும்.)

இவ்வாறு தமிழகத்தில் விஜயநகரப் பேரரசர்கள் ஏறக்குறைய ஐந்து நூற்றாண்டுகளுக்கு ஆண்டிருந்தனர். இந்த நிலையேற்பட்டதற்கு முக்கிய காரணம் மூவேந்தரிடையே ஏற்பட்ட ஒற்றுமையின்மையேயாம். தெலுங்கு ஆட்சியாளர் தமிழ் வளர்க்கும் பணியில் ஈடுபட்டிருக்கவில்லை. அவர்களுக்கு அப்பொழுது தமிழும் தெரிந்திருக்கவில்லை. எனினும், சுப்பிரதீபக் கவிராயர் 'திருமலை நாயக்கன் காதல்' எனும் தமிழ்க் கவிதைத் தொகுதியை அவனது சபையில் அரங்கேற்றியிருந்தார். ஆனால் தமிழ்க் கவிதையை விளங்கிக் கொள்ளாத திருமலை நாயக்கன் 'அரவம் அந்துவானம்' அதாவது

'தமிழ் மோசம்' என்று கூறினானாம். (தெலுங்கர் தமக்கருகாயிருந்த அருவாளர் மொழி தமிழாக இருந்தபடியினால் தமிழை அரவம் என்றும், தமிழரை அரவர் என்றும் மிகப் பழைய காலம் முதல் இன்று வரை அழைப்பது வழமையாம்.)

இவ்வாறு தமிழும், தமிழகமும் வரலாற்றில் தொடர்ந்து அடிக்கப்பெற்ற பல சாவுமணிகளுக் கிடையேயும் இன்றுவரை பழம்பெருமையுடன் வாழ்கின்றதென்றால் அது தெய்வத்தின் திருவிளை யாடலால் வளர்க்கப்பட்ட மொழியென்பதனாலேயாம். அதனாலோ என்னவோ அங்குக் குடியமர்ந்த மக்கள் அனைவரும் தமிழ்ப்பற்றாளராக தமிழைப் பேணிக் காக்கின்றனர் எனலாம். சிறப்பாக, ஈழத்தில் தமிழை அழித்துக்கட்ட சிங்கள அரசுகள் காலந்தோறும் எடுத்து வந்த முயற்சிகள் அத்தனையும் தோல்வியையே தழுவியுள்ளன. மாறாக, இன்று ஈழத்தமிழர்களால் தமிழ் உலகெங்கும் எடுத்துச் செல்லப்பட்டு ஒரு ஆலமரம் போல் கிளைவிட்டுப் பல மேற்கத்தைய நாடுகளிலும் படர்ந்துள்ளது என்று தான் கூறவேண்டும்.

இனி, ஆங்கிலேயர்கள் தம் குடியேற்ற நாடு களிலிருந்து வெளியேறுகையில் உருவாக்கிக் கையளித்து விட்டுப்போன அரசியல் யாப்புகளில் சுதேச இனங்களின் தனித்துவ அடையாளங்களையோ அல்லது உணர்வு களையோ தூர நோக்கில் கணக்கெடுத்துப் பாதுகாக்கத் தவறியிருந்தனர். அதனால் ஒன்றுக்கொன்று முரணான இனங்கள் பெரும்பான்மையின ஆட்சியின் கீழ் அடக்குமுறைக்குள்ளாகும் நிலை முளைவிட்டு, மரமாக வளரும் நிலையே ஈழத்தில் எழுந்துள்ளது. இந்த

நிலையானது வடஇந்திய ஹிந்தி மொழி பேசும் பெரும்பான்மையினக் கூட்டாட்சியின் கீழ் தென்னக மாநில ஆட்சிகள் உட்படுத்தப்பட்டபொழுது அங்கும் உருவாகலாயிற்று. ஈழத்தில் தனித்துவமாக ஆட்சிபுரிந் திருந்த தமிழரசுகளை ஆங்கிலேயர் சிங்கள அரசாட்சி களுடன் இணைத்து ஆண்டிருந்தனர். அப்பொழுது தமிழர்கள் சிங்களவர்களைக் காட்டிலும் பலதுறைகளிலும் தம் ஆளுமைகளை வெளிப்படுத்தியிருந்தனர். ஆனால் பெரும்பான்மையினமான சிங்களவரிடம்* சிறுபான்மையினர் உரிமைகளுக்கு எந்தவிதப் பாதுகாப்பும் அரசியல் யாப்பில்

---

* *தீய பழக்கமுடையவர்கள் எனக் கடலில் விடப்பட்ட விஜயவனும் எழுநூறு தோழர்களும் ஈழத்தில் அப்பொழுது வாழ்ந்திருந்த இயக்க வழிபாடுடையோர் (இயக்கர்) நாக வழிபாடுடையோர் (நாகர்) சிவவழிபாடுடையோர் (தமிழர்) என்பவருடன் திருமணம் செய்து கொள்ளக்கூடிய சூழல்கள் இருக்கவில்லை. அதனால் பாண்டி நாட்டிலிருந்தே பெண்களைத் தருவித்துத் திருமணங்கள் செய்து கொண்டனர். ஆயினும், தம் தந்தைவழிப் பரம்பரை வழியிலேயே ஆட்சி பாரம் இருக்க வேண்டிடும் என்று கருதிய பின்வந்த சிங்கள அரசுகள், கடற்கோளினால் தமிழகத்திலிருந்து நேரடியாட்சி செய்து கொள்ள முடியாதிருந்த ஈழத்துச் சிற்றரசுகளுடன் காலந்தோறும் போர்களைச் செய்து தமது கட்டுப்பாட்டில் வைத்து, தென்னிலங்கையை முற்றுமுழுதாகச் சிங்களமயப்படுத்தினார்கள். காலவெள்ளத்தில் இத்தமிழர்கள் தமிழ் அடையாளங்களை இழந்து சிவங்களவரானார்கள். இவ்வாறே 700 (எழுநூறு) பேர் ஈழத்திற்கு வந்து, இன்று பெரும்பான்மையானோர் வரலாறாகும். இந்த உண்மையினை நிறுவ இவர்கள் எழுதிய தீபவம்சம் (ஒளி வம்சம்) மகாவம்சம் (பெரிய வம்சம்) எனும் நூல்களே சான்றுகளாக உள. தமிழனுக்கு வரலாறு எழுதுவதில் என்றுமே அக்கறையிருக்கவில்லை. அதனால் தன் தாயகத்தைச் சான்றுகளுடன் அவனால் நிறுவ முடியவில்லை. அதனால் 'போனால் போகட்டும் போடா' என்று கையறுந்த நிலையில் உலகளாவிய அளவில் (சீனா, ரஷ்யா, பாகிஸ்தான் தவிர்த்த) புலம் பெயர்ந்துள்ளான். அதனால் எஞ்சியுள்ள தமிழர்களும் முற்றாகத் தம் மண்ணை இழந்து விட்டுள்ளனர் என்று குறிப்பிடத்தக்கது.*

செய்யாமலே சிறுபான்மையினரின் ஆட்சியுரிமைகளையும் ஆங்கிலேயர் இவர்களிடம் கையளித்துவிட்டு வெளியேறியிருந்தனர். அதன் பலாபலன்களைத் தமிழர்கள் ஏறக்குறைய அறுபது வருடங்களாக இன அழிப்பு, சிங்கள குடியேற்றம், சீர்கெட்ட இராணுவ வலயம், மக்கள் விரும்பாத பௌத்த சிலைகளை எழுப்புதல் எனப் பலவழிகளிலும் துன்பங்களை அனுபவித்து வருவது உலகறிந்த உண்மையாகும்.

இனி, இந்த ஆரியபாலாக்கள் எவ்வாறு ஈழத்திற்கு உரிமைகோரித் தமிழர்களைக் காலந்தோறும் அழித்து வருகின்றார்கள் எனும் வரலாற்றைச் சுருக்கமாகப் பார்ப்போம்.

கி.மு.483ஆம் ஆண்டில் சிங்கபாகுவிற்கும், சிங்கவல்லிக்கும் பிறந்த மகனான விஜயன் ஒழுக்கம் தவறியவனாக இருந்தான். அப்பொழுது வங்கநாட்டு மன்னன் மக்கள் கோரிக்கைக்கிணங்கி, விஜயனையும் அவனது எழுநூறு தோழர்களையும், மனைவி மக்களையும் தனித்தனிக் கப்பல்களில் ஏற்றிக் கடலிற் போகவிட்டான். இவற்றுள் பிள்ளைகள் ஏற்றப்பட்ட கப்பல் நக்கதீபத்திலும், பெண்கள் ஏற்றப்பட்ட கப்பல் மாலைதீவிலும் கரையேறியிருந்தன. ஆனால் விஜயனும் தோழரும் ஏறிய கப்பல் ஈழத்தில் தம்பபன்ன (தாம்ரபண்ணி) எனுமிடத்தில் கரையேறியது என மகாவம்சம் குறிப்பிடும். இவ்வாறு ஈழத்தில் குடியமர்ந்த விஜயனும் தோழர்களும் முதலில் பாண்டிய நாட்டுப் பெண்களைத் தருவித்துத் திருமணம் செய்து கொண்டனர். பின் விஜயன் தன் அரசினைத் தமிழர், இயக்கர், நாகர் ஒத்துழைப்புடன் உருவாக்கி

யிருந்தான். ஆனால் பின் விஜயன் தன் இனத்தைப் பலப்படுத்தும் வகையில் வங்கத்திலிருந்து தனது தம்பி மகன் பாண்டு வாசுதேவனை வரவழைத்து ஆட்சி பாரத்தைக் கையளித்திருந்தான். அதன் பின் தம்மைச் சிகளமக்கள் என அடையாளப்படுத்தி இனவாத அரசியலைத் தொடர்ந்து முன்னெடுக்கலாயினர். பின் துட்டகைமுனு காலம் முதலாக தமிழர் நிலங்களைச் சூறையாடி வந்த வரலாற்றினையே மகாவம்சம் பதிவு செய்திருந்தது.

கி.பி.13ஆம் நூற்றாண்டில் மட்டக்களப்புத் தமிழகம் முற்றாகச் சிங்களமயப்படுத்தப் பட்டிருந்தது. அப்பொழுது மட்டக்களப்பையாண்டிருந்த சுகதிரன் கலிங்க தேசத்திற்கு அச்செய்தியை அறிவித்திருந்தான். அப்பொழுது கலிங்கத்தை ஆண்டிருந்த மனுவரதன் தன் மகன் மாகோனை (கி.பி.1215-1255) அழைத்து ஈழம் முழுவதிலும் தமிழ் மதத்தை நிறுவி, மட்டக்களப்பைச் சுகதிரனுக்குப் பட்டம் கட்டி வருமாறு இரண்டாயிரம் படைவீரர்களுடன் அனுப்பியிருந்தான். மாகோன் தன் படையுடன் வந்து சிங்களக் குடியேற்றங்களை அகற்றிப் புத்தர் கோவில்களையும் இடிப்பித்து அங்கு தமிழ்க் குடிகளின் பாரம்பரியங்களை உறுதி செய்திருந்தான். அப்பொழுது மாகோன் வந்து மட்டக்களப்புத் தமிழகத்தினை மீட்காதிருந்தால் இன்று மட்டக்களப்பு சிங்களமயப்படுத்தப்பட்ட ஒரு மாவட்டமாகவே அமைந்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இத்தகைய நிலைமைகள் யாழ்குடாவிலும் ஏற்பட்டிருந்தன. அப்பொழுது தமிழரசுகள் இவற்றை அகற்ற நடவடிக்கைகள் எடுத்திருந்தன. பாண்டிய வமிசத்துடன்

திருமணத் தொடர்பு கொண்ட பராக்கிரமபாகுவின் (கி.பி.1153 - 1186) ஆட்சியிலும், பின் சோழ வமிச திருமணத் தொடர்புடைய புவனேகபாகு VI வின் (கி.பி.1450. இவனது இயற்பெயர் செண்பகப் பெருமாள்) ஆட்சியிலும் யாழ்குடாவில் சிங்களக் குடியேற்றங்கள் மேற்கொள்ளப்பட்டிருந்தன. அதனாலே பின்னர் யாழ்குடாவில் ஆரியச்சக்கரவர்த்தி விக்ரமசிங்கையின் ஆட்சியிலும் (கி.பி. C 1330), பின் சங்கிலி மன்னன் ஆட்சியிலும் (கி.பி.1550) யாழ்குடாவில் தமிழ் - சிங்கள இனக்கலவரங்கள் ஏற்பட்டிருந்தன. அப்பொழுது சங்கிலி மன்னன் பௌத்த விகாரைகளை அழித்துவிட்டு, சிங்களக் குடியேற்றங்களையும் நீக்கியிருந்தான். ஆனால் கடந்த அறுபது ஆண்டுகளுக்குள் புத்தளம், மணலாறு, அம்பாறை, உன்னிச்சை, கரடியனாறு மற்றும் பொல்ல நறுவவைச் சூழ்ந்துள்ள தமிழ்கிராமங்கள் என்பன சிங்கள மயமாக்கப்பட்டு விட்டன. இவைபற்றி தமிழர் எவரும் இன்று அலட்டிக் கொள்வதில்லை. அங்குத் தமிழ் அடையாளங்கள் முற்றாகக் களையப்பட்டு விட்டமையினால் குரல் கொடுத்துப் பயனில்லை என்ற நிலையாகிவிட்டுள்ளது.

மூவேந்தர்கள் எவ்வாறு ஒற்றுமையின்மையால் வரலாற்றில் இடமில்லாமல் • முற்றாக அழிந்து போனார்களோ அதேநிலை தான் ஈழத்தமிழரதுமாம். தமிழனுக்குக் கால்மாறிப்போகவும் தன் இனத்தை முற்றாக அழித்துக் கட்டவும் ஒரு சிறு பதவி கிடைத்தாற் போதும். இவ்வாறு காலந்தோறும் எத்தனையோ தமிழன் தன் வரலாற்றில் தானே கறைபடியவைத்து தன் இனத்தினை விற்றிருக்கிறான் என்பதனை இன்றைய சிங்கள அரசே

உறுதி செய்துள்ளது. அமைச்சர் பதவிகளையேற்று ஒருவன் ஆடம்பரமாக வாழலாம் என்று கருதினோர் வரலாற்றில் பதிப்பது தமிழினப்படுகொலை ஒன்றையே தான். அதே சமயம் இனவாத சிங்கள அரசுகள் பொதுவிடயங்களில் எவ்வளவு மோதிக் கொண்டாலும், தமிழர் தாயகக் கோட்பாடு விடயத்தில் ஒன்றுபட்ட குரலிலே எதிர்த்துப் போராடுவார்கள். தமிழர் பாரம்பரிய நிலங்களைக் கொள்ளையடிக்க இவர்கள் ஒற்றுமை ஒன்றே காரணமாகும். இந்த ஒற்றுமையைத் தமிழன் சிங்களவனிடமிருந்து கற்றறிந்தால் அவனது தாயகம் முழுதாகக் காப்பாற்றப்பட்டிருக்கும் எனில் தவறாகாது.

தாம் காலம் காலமாகப் பேணி வளர்த்து வந்த தமிழ்மொழி, இறைமொழி என்பதனைத் தெரிந்திருந்தும், கிரியை மொழியான வடமொழியையும், கிரியைகளைப் பக்தியின்றி செய்துவரும் பிராமணர்களையும் நம்பிக் கெட்டார்கள். ஆனால் தமிழ்மொழியோ அநாதரவாகக் கைவிடப்பட்ட நிலையிலும், தான் உருவாக்கிய இலக்கியங் களைத் திரும்பிப் பார்த்தது. தான் புகழுடன் விளங்கிய பழந்தமிழர் மண்ணினை விட்டுப் பிரியமுடியாமல், தானாகவே வளர முயன்றது. வளர்ந்தது. ஈழத்தமிழர் புலம்பெயர்ந்த பொழுது தானும் புலம்பெயர்ந்து, இன்று உலகெங்கும் பரவியுள்ளது. தமிழ்மொழிக்கு உலகெங்கிலும் வரலாறுகள் பதிவாகும் நிலையில், தமிழ்மொழியைக் கைவிட்ட மூவேந்தர்களைத் தமிழர்கள் ஏறக்குறைய எண்ணூறு வருடங்களாகத் தேடுகின்றார்கள். ஆனால் அவர்களை எங்கும் காணமுடியவில்லை. ஆகையினால் தமிழ் மக்களே! இறைவன் உங்களுக்கென அருளிய இறை மொழியான தமிழ்மொழியினாலே இறைவனுடன் பேசுங்கள்.

தமிழில் எந்தக் குறைபாடுகளுமில்லை. எம்மிலேயே குறைகள் உள. இறைவன் விரும்புவது உறுதியான பக்தியேயாம். கண்ணப்பருக்கு கைகொடுத்த தெய்வீகம், நந்தனாருக்குக் கைகொடுத்த தெய்வீகம், அவர்களிடம் வடமொழியில் உச்சாடணம் பண்ணிக் கிரியைகளைச் செய்யுங்கள் என்று கேட்கவில்லை. அவர்கள் காட்டிய உறுதியான அன்பிலேயே அவர்களை நாயன்மார் வரலாற்றில் சேக்கிழார் பதிவு செய்திருந்தார். மூவேந்தர்கள் இறையருளிய மொழியான தமிழைக் கைவிட்ட நிலையில், காணாமலே போய்விட்டார்கள் என்பதனை நாம் உணர்ந்து கொள்வது அவசியமாம்.

முடிவாக இன்றைய வாழ்வு முறையில் ஓர் எடுத்துக்காட்டுச் சிறந்த எடுத்துக்காட்டாக அமையும். அதாவது சின்னத்திரைத் தொடரான மகாராணி கதையில் வரும் கதாபாத்திரமான ராணிக்கு தேவராஜ் என்பவர், அவளை மகளெனநம்பி தன் சொத்துகளை முன்யோசனையின்றி எழுதி வைத்ததனால், முடிவில் அவரும், அவர் மீது உண்மையான அன்புடைய ஒட்டு மொத்தக் குடும்பமே வீதிக்குத் தள்ளப்படும் நிலையொன்றினை இக்கதை சித்திரிக்கின்றது. இது போலவே வடமொழி, தமிழ்மொழியை அதன் சொந்த மண்ணிலிருந்து அகற்ற முயன்றது. அதுபோலவே மூவேந்தர்களும் வடநாட்டுப் பிராமணர்களைத் தருவித்து, குடியமர்த்தி எல்லா உரிமைகளையும் வரம்பு மீறிய அளவில் வழங்கியிருந்தனர். முடிவில் அவர்கள் கண்ட சுகம், பகைமையும், போரும் அழிவுமேயாம். இந்த அநீதியை தமிழ்ச் சமூகம் அன்றும் உணரவில்லை. இன்றும் உணரத்தகுதி பெற்றிருக்கவில்லை என்பதே உண்மையாம்.



# அன்பும், அறனும் குன்றிவிட்ட இவ்வுலகில் ஈழத்தமிழருக்கு ஏதாவது இறுதி முயற்சிகள் உளவா?

போரும், சமாதானமும் மனித மனங்களில் ஏற்படுகின்ற மாற்றங்களினாலே தான் ஏற்படுகின்றன. இந்த வகையில் கி.மு. 3ஆம் நூற்றாண்டில் மகதப் பேரரசினை ஆண்டிருந்த அசோகமன்னன், கலிங்க நாட்டைத் தன்னாட்சிக்குட்படுத்துமுகமாகப் படையெடுத் திருந்தான். அப்பொழுது கலிங்கத்து வீரர்கள் தம் தாயகத்தைக் காப்பாற்றுவதற்காக லட்சக்கணக்கில் போரிட்டு மடிந்தார்கள். இவர்களின் தியாகம் அசோக மன்னன் மனத்தில் பெருமாற்றத்தினை ஏற்படுத்தியிருந்தது. இவ்வளவு உயிர்களைக் கொன்று நான் ஆட்சிலிருக்க வேண்டுமா? என்பதுதான் அது. அதனால் பௌத்தம் தழுவி சமாதானத்தை நிலைநிறுத்த விரும்பினான். மனித வரலாற்றில் இந்த நிகழ்வு ஒன்றுதான் போரை முன்னெடுத்த ஒருவன், தன் போரினால் ஏற்பட்ட மனித அழிவுகளுக்காக மனம் கலங்கினான் என அறிகின்றோம்.

இனி, தமிழகத்தைப் பொறுத்தவரை பாண்டியரின் முதலாம், இரண்டாம் சங்க ஆட்சிக் காலங்களில் மன்னர்கள் நீதி நெறி தவறாது ஆண்டிருந்தமையால் போர்கள் இடம் பெற்றதற்கான குறிப்புகள் எதுவுமில்லை. ஆயினும், ஆரியர்கள் படையெடுப்பாளராக வந்து வடஇந்தியாவின் பல திக்குகளில் நாடுகளைப் பிடிக்கும் முயற்சிலீடுபட்டிருந்தனர். அதுவரை வடஇந்தியாவில் வாழ்ந்திருந்த சுதேசக் குடிகளும் சமாதானப் பிரியர் களாகவே வாழ்ந்திருந்தனர். இவ்வாறு ஆரியப் படையெடுப்பாளரின் நடவடிக்கைகளைப் பின்பற்றி ஒரு பெரும் சாம்ராச்சியத்தைக் கட்டியெழுப்ப நாகவம்சத்தவர் களால் உருவாக்கப்பட்ட மகத அரசும் செயல்பட்டிருந்தது.

இக்காலத்தில் சந்திரகுப்தனின் மகனான பிந்துசாரன் (கி.மு. 301 - 273) தமிழகத்தின் மீது படையொன்றினை அனுப்பிப் பெரும் அழிவுகளைச் செய்திருந்தான். இறுதியாக இந்த மோரியர் படைகளை இளஞ்சேட் சென்னி எனும் சோழன் வென்று துரத்தியிருந்தான். பின் மோரியரின் படையெடுப்பினை எதிர்கொள்ளுமுகமாக மூவேந்தரும் சிற்றரசர்களும் கி.மு.278இல் ஒன்றுகூடி ஒரு கூட்டணி அமைத்து இத்தகைய போர்களை முறியடித்தனர். இவர்களுள் பிந்துசாரன் மகனான அசோகனும் பலமுறை தமிழகத்தின் மீது படையெடுத்துத் தோல்வி கண்டவனே ஆவன். இந்த முறியடிப்புகளுக் கெல்லாம் காரணம் இம்மூவேந்தர்களின் மனங்களில் ஏற்பட்டிருந்த ஒற்றுமையேயாகும். அதனாலே அசோக மன்னன் கலிங்கப் போரின் பின் தெற்கேயிருந்த மூவேந்தர் களை தன் நட்பு நாடுகளாகக் கல்வெட்டுகளில் குறிக்க நேரிட்டது எனலாம்.

இதன்பின்னர் கலிங்கப் பேரரசனான காரவேலன் (கி.மு. 176 - 163) மூவேந்தர் கூட்டணிப் படையைத் தான் வெற்றி கொண்டதாகத் தன் கல்வெட்டுகளில் குறிப்பிட்டுள்ளான். ஆயினும், பின் அவன் தமிழகத்தின் மீது படையெடுத்துப் பலதடவைகள் தோல்வியுற்றிருந்தான். இதற்குக் காரணம் மூவேந்தர் ஒற்றுமையுடன் அமைத்திருந்த கூட்டணி முயற்சிகளேயாம்.

ஆனால், வடநாட்டு வைதீகமதத்தின் ஊடுருவலால் மூவேந்தர்களிடையே போட்டி பூசல்கள் உருவாகத் தொடங்கின. பௌத்த, சமண மதங்கள் தளர்வுற்ற நிலையில் வைதீகமதம் மீண்டும் வட இந்தியாவில் தலையெடுத்து, மன்னர்களைப் போர்களை முன்னெடுக்கவும், பேரரசுகளைக் கட்டியெழுப்பவும் தூண்டலாயிற்று. எந்த, எந்த யாகங்களைச் செய்தால் நாடுகளைப் பிடிக்க முன்னெடுக்கும் போரில் வெற்றி நிச்சயம் என அறிவுறுத்திய பிராமணப் புரோகிதர்கள் ஆடம்பரமான கிரியைகளைக் கொண்ட யாகங்களைச் செய்யத் தூண்டினர். இந்தப் பேரரசு வலையில் மூவேந்தர்களும் வீழ்ந்தார்கள். அதன் பயனாக நாட்டில் அன்பும், அறனும் குன்ற நாடும், மக்களும் மன்னர்களால் கி.மு. முதலாம் நூற்றாண்டு முதலாகக் கைவிடப்படலாயினர். அதனால் மூவேந்தர் மரபுகள் அழிந்தொழிய, தொடர்ந்து மாறி மாறிப் படையெடுப்புகள் ஏற்பட்டு கி.பி. 13ஆம் நூற்றாண்டளவில் இவர்கள் வரலாற்றில் மறைய, அயலாட்சிகளே தமிழகத்தில் ஏற்படலாயின.

இனி, இத்தகைய பின்னணிகளைக் கொண்ட மனித வரலாற்றில் இடம்பெற்ற அறம் குன்றிய ஆட்சிகளையும்,

தீர்வுகளையும் பின்னோக்கிப் பார்த்திடல் மனித இயல்புகளை முழுமையாக உணர்த்தவல்லது. வட இந்திய வரலாற்றில் பஞ்ச பாண்டவர்களுக்குரித்தான ஆட்சி யுரிமைகளைத் துரியோதனனும் சகோதரர்களும் மறுத்த துடன், அவர்களைக் கொலை செய்யவும் முயன்றிருந்தனர். பஞ்ச பாண்டவர்கள் முதலில் சமாதானத் தீர்வு ஒன்றிற்காகவே மனம் கொண்டிருந்தனர். அது முடியாத நிலையில் கிருஷ்ணரின் உதவியுடன் சூழ்ச்சியாகப் போரிட்டு அறத்தை நிலைநாட்டியிருந்தனர்.

அடுத்து, இயேசுநாதர் இறை தூதராக அவதரித்து மனித நேயத்தை மக்கள் மத்தியில் போதித்திருந்தவராவர். இது தமது பாரம்பரிய யூத மதத்திற்கு எதிரான நடவடிக்கையெனக் கருதிய யூத மதத்தினர் அவரைச் சிலுவையில் அறைந்து குகையொன்றினில் புதைத் திருந்தனர். இதன் விளைவுகளோ என்னவோ ரோமர்கள் தம் பேரரசின் விரிவாக்கத்திற்குத் தடையாக இருந்த யூதர்களை அவர்கள் தாய்மண்ணிலிருந்தே விரட்டியடிக்க முடிந்தது எனலாம். இது கி.பி.70 ஆம் ஆண்டில் நிகழ்ந்த தொன்றாகும். இக்காலம் முதலாக ஏறக்குறைய 1900 ஆண்டுகள் வரை யூதர்கள் உலக நாடுகளிற் தஞ்ச மடைந்து பல இன்னல்களுக்குட் பட்டிருந்தார்கள். இறுதியில் ஜெர்மனியின் சர்வாதிகாரியான ஹிட்லர் இவர்களை ஐரோப்பிய நாடுகளிலிருந்து அகற்றி, படுகொலை முகாம்களுக்கு அனுப்பித் துன்புறுத்திக் கொலை செய்வித்தான். பல ஐரோப்பிய நாடுகள் அறவழி நின்று இவர்களைக் காப்பாற்றியிருந்தன. ஆயினும் யூதர்களின் நாடற்ற நிலைமையை அவர்களால் தீர்க்க

முடியாதிருந்தது. அப்பொழுது பலநாடுகளிலும் வாழ்ந்து அந்தந்த நாட்டு மொழியறிவினை மட்டுமே கொண்டிருந்த தாலும், அவர்கள் தம் யூதமத நம்பிக்கையுடன் வாழ்ந்ததனால் தம் தாயகத்தை மீட்க ஒன்றுபட்டார்கள். அதனாலே அவர்களால் தாயகத்தை மீட்டெடுக்க முடிந்தது. மீண்டும் தம் ஜெருசலக் கோவிலில் எஞ்சியிருந்த மேற்கு மதிலைத் தம் வழிபாட்டுத் தலமாக்கிக் கொண்டனர். இவர்களின் துணிச்சலான போர் முன்னெடுப்புகளினாலும் ஒற்றுமையினாலுமே இவர்களால் தம் தாயகத்தை மீட்டெடுக்க முடிந்தது. மற்று, இவர்களது தாயக மண் பற்றிய வரலாறுகளை விவிலிய வேதத்தின் பழைய ஏற்பாடு விவரிப்பதன் மூலமே உலக நாடுகள் இவர்களின் தாயகமண் உரிமைப் போர்களை அங்கீகரித்திருந்தன.

யூதர்கள் வெளியேறிய பின் கைவிடப்பட்டிருந்த அவர்கள் பூர்வீக நிலங்களில் குடியமர்ந்திருந்த பலஸ்தீனியர்கள் அவற்றைக் கையளிக்கவோ அல்லது பணத்திற்கு விற்கவோ முன்வரவில்லை. அதனால் இன்னமும், உள்நாட்டுப் போர்கள் நீடித்தவண்ணமே இருக்கின்றன. ஆனால் இன ஒற்றுமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இருக்கும் யூதர்கள் தமிழருக்கு ஒரு பாடத்தினைக் கற்கை நெறியாக்கியிருக்கிறார்கள் என்று கூறின் தவறாகாது. அந்தக் கற்கைநெறி என்னவெனில் 'ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு' என்பதேயாம். அண்மையில் ஒரு யூதக் கைதியை விடுதலை செய்யின் தாம் ஆயிரம் பலஸ்தீனிய கைதிகளை விடுதலை செய்யத் தயார் என்று கூறியதிலிருந்து அவர்களின் இனப்பற்றினை உலகம் புரிந்திருக்கும் எனலாம்.

இனி, பல ஐரோப்பிய நாடுகளதும், அமெரிக்க நாட்டினதும் சமூக அநீதிகள் அனைத்தும் ஆயுதப் போராட்டங்கள் மூலமே தீர்க்கப்பட்டிருந்தன. எடுத்துக்காட்டாக இங்கிலாந்தில் 17ஆம் 18ஆம் நூற்றாண்டுகளில் மக்கள் கிறித்தவ மதத்தினைத் தம் அறிவுக்கு எட்டிய வகையிற் பல வழிகளில் மேற்கொண்டிருந்தனர். இவர்களுள் கத்தோலிக்கர், புரிதன்ஸ் (Puritans), குவேக்கர்ஸ் (Quakers) எனப் பல பிரிவினர் உட்பட்டிருந்தனர். அப்பொழுது புரட்டஸ்தாந்து வழிபாட்டினை ஏற்றிருந்த ஆங்கில தேவாலயம் இவர்களைத் துன்புறுத்தியது. இதற்கஞ்சிய இம்மக்கள் அச்சத்தினால் புதிய குடியேற்ற நாடான அமெரிக்கா வினைத் தோணிகள் மூலம் சென்றடைந்தனர்.

அப்பொழுது அங்கு பிரபு வல்ரிமோர் (Lord Baltimore) என்பவர் கத்தேலிக்கரை மேரிலாந்திலும், பென் (Penn) என்பவர் குவேக்கர் வழிபாட்டினரைப் பென்சிலவேனியாவிலும், ரோகர் வில்லியம் (Roger Williams) என்பவர் பலவகை தெய்வ வழிபாட்டினரை றொடே தீவிலும் (Rhode Island) குடியமர்த்தி வழிபாட்டுச் சுதந்திரத்தை வழங்கியிருந்தார்கள். ஆனால் இங்கிலாந்து அரசு அமெரிக்கக் குடியேற்றவாசிகளைத் தன் கட்டுப்பாட்டிற்குள் தொடர்ந்து வைத்திருக்க முனைந்த பொழுது குடியேற்றவாசிகள் அனைவரும் ஒன்றுதிரண்டு தாய்நாடான இங்கிலாந்துப் படையினருடன் போரிட்டு வெற்றியீட்டினார்கள். பின் தம் புதிய அரசினை 4.7.1776 அன்று ஒரு சுதந்திர அரசாகப் பிரகடனப் படுத்திக் கொண்டார்கள். இது ஒன்றுதிரண்ட

குடியேற்றவாசிகள் தமது சுதந்திரத்தை இலக்காகக் கொண்டு முன்னெடுத்த போரினாலே சாதிக்க முடிந்திருந்தது. தமது புதிய அமெரிக்க அரசினை உருவாக்கிய பொழுது இவர்கள் இறைவன் மீதும், அவரது நீதி நியாயங்களிலும் அதிக நம்பிக்கை வைத்திருந்தமை யினாலே, ஏறக்குறைய நூறு வருடங்களுக்குள் மற்ற உலக நாடுகளை வழிநடத்தும் ஒரு வல்லரசாக வளர முடிந்தது. எப்பொழுதும் அமெரிக்கத் தலைவர்கள் மக்களின் மதவழிபாட்டுச் சுதந்திரத்தையும், பிற உரிமைகளையும் அதிக அக்கறையுடன் மதித்திருந்தார்கள் எனில் மிகையாகாது.

இவ்வாறு குடியேற்றவாசிகளின் தனி மனித உரிமைகள் அரசியல் யாப்புகளில் உறுதிப்பட்டிருந்தாலும், தென் அமெரிக்கர்கள் தம் கரும்புத் தோட்டங்களில் தொழில் புரியும் ஆபிரிக்கர்களைத் தொடர்ந்தும் அடிமை களாகவே வைத்திருந்தார்கள். இதனைப் பொறுக்க முடியாதவராக இருந்த ஆப்ரஹாம் லிங்கன் இதனையும் போரின் மூலமே 9 சித்திரை 1865 அன்று முடிவிற்குக் கொண்டு வந்திருந்தார். அப்பொழுது ஆபிரிக்க அடிமை களுக்குரிய மனித உரிமைகள் அறவழி நிலை நாட்டப் படலாயிற்று. இவ்வாறு வட அமெரிக்காவிற்கும், தென்னாமெரிக்காவிற்குமிடையே இடம்பெற்ற உள்நாட்டுப் போரானது நல்ல மனிதர்களின் தூய சிந்தனை யினாலேயே இடம்பெற்று, அடிமைகள் விடுதலையாக்கப் படலாயினர். பின், அரசுத்தலைவர் ஆப்ரஹாம் லிங்கன் நாட்டு மக்களுக்கு ஆற்றிய உரையில் வேண்டிக் கொண்டதாவது,

"இறைவன் எமக்கு அருளியிருக்கின்ற நல்ல உள்ளம் நீதியை நோக்கிச் செல்வது போல, நீங்கள் அறத்தின் வழி உறுதியாக இருந்து அனைவருக்கும் உதவுங்கள். எவரையும் துன்புறுத்தாதீர்கள்" (With malice toward none, with charity for all with firmness in the right, as God gives us to see the right) என்பதாகும். இவ்வாறு ஆப்ரஹாம் லிங்கன் போன்ற நல்லெண்ணத் தலைவர்களால் அமெரிக்க நாடு வழிநடத்தப்பட்டமையினாலே தான், இன்று அங்கு 'பரக் ஒபாமா' அரசுத் தலைவராக மக்களாற் தெரிவு செய்யப்பட்டிருந்தார் எனில் மிகையாகாது.

இனி, பிரெஞ்சு மக்கள் தமக்குக் கொடுமைகளை இழைத்து வந்த ஆட்சியாளருக்கு எதிராகத் திரண் டெழுந்து போரிட்டு வெற்றியீட்டி, *14, ஆடி 1789* அன்று பிரெஞ்சுக் குடியரசினைப் பிரகடனப்படுத்தியிருந்தனர். இவ்வாறு, உள்நாடுகளில் மக்கள் நீதிக்காக ஆயுதப் போராட்டங்களை நடத்தியே நீதியை நிலைநாட்டியிருந் தார்கள் என்பது வரலாற்றுண்மையாகும்.

பின்னர் இரண்டு உலகப் போர்கள் அறம் குன்றிய நிலையில் தோன்றியிருந்தன. பல தடவைகள் மனித இனங்களிடையே அறம் குன்றிப்போன நிலையிலேயே இறைவன் பெருவெள்ளப்பெருக்குகளை ஏற்படுத்தி யிருந்தார் என்பது சமய வரலாறுகள் ஆகும். விவிலிய வேதத்தில் நோவா (Noah) எனும் பண்பான மனிதனை இறைவன் தப்ப வைத்தார் என்ற குறிப்பும், இந்தியாவில் 'மனு' எனும் நீதிமானைத் தப்ப வைத்தார் என்ற சதபிராமணம் எனும் வடமொழி நூலின் குறிப்பும் இதற்குச் சான்றுகளாகும். ஆனால், மீண்டும் மனிதன்

தன் நீதி நியாயங்களை மறந்து, மனிதர்களைக் கொன்று, குவிப்பவனாகவே இன்று வரை வாழ்ந்து வருகின்றான். குறிப்பாக 17ஆம் 18ஆம் நூற்றாண்டுகளில் ஐரோப்பிய நாடுகளில் விஞ்ஞான தொழில் நுட்பங்களால் ஏற்பட்ட வாழ்வியல் முன்னேற்றங்களால், முன்னொருபொழுதும் இல்லாத வகையில் மனிதனின் அன்றாட வாழ்வில் மாற்றங்கள் ஏற்படலாயின. இந்தக் கைத்தொழில், மற்றும் தொழில் நுட்பப் புரட்சியானது மனிதநேயமற்று மக்களைக் கொன்று குவிக்கவல்ல தற்கால போர்த்தளவாடங்களையும் உருவாக்கிக் கொண்டிருந்தது. பெரிய பிரித்தானியா கடற்படையைக் கட்டிக் கொண்டு உலகளாவிய அளவில் குடியேற்ற நாடுகளை உருவாக்கிக் கொண்டிருந்தது. ஜெர்மனியும் பிரித்தானியாவின் கடல் ஆதிக்கத்திற்குச் சமமான வகையில் கடற்படையையும், தரைப்படையை யும் கட்டிக்கொண்டு ஒரு பெரிய பேரரசினைக் கட்டி எழுப்ப அவாவுற்றிருந்தது. அதனால் ஐரோப்பாவில் அன்பும், அறனும் குன்றும் வகையில் மக்கள் வாழ வேண்டியிருந்தது.

இனி, ஆசியாவில் யப்பானும், சீனாவும் தங்கள் தங்கள் பாட்டினைப் பார்த்துக் கொள்ளும் அமைதியான நாடுகளாக 19ஆம் நூற்றாண்டில் இருந்து வந்தன. குறிப்பாக யப்பான் அமெரிக்காவுடனோ அல்லது ஐரோப் பியருடனோ வர்த்தகத் தொடர்புகளை வைத்திருக்க மறுத்திருந்தது. பின்னர் அமெரிக்கக் கப்பலொன்று பெரி (Perry) தளபதியின் தலைமையில் சென்று, அமெரிக்கக் கப்பல்களுக்குக் கரியையும், பிற தேவைகளையும் செய்து கொள்வதற்கு யப்பானியத் துறைமுகங்களில் அனுமதிக்கு

மாறு ஒரு கடிதம் ஒன்றினை 8 ஆடி, 1853 அன்று யப்பானிய மன்னரிடம் கையளிக்கப்பட்டு உடன்படிக்கை யொன்றும் செய்யப்பட்டிருந்தது. அப்பொழுது அமெரிக்க அரசுத் தலைவர் கைத்துப்பாக்கி, சுழல் துப்பாக்கி, தந்தி தகவற் தொடர்பு முறைகள், சிறிய வடிவிலான புகையிரத அமைப்பு முதலானவற்றையும் அன்பளிப்பாகக் கொடுத்தனுப்பியிருந்தார். நல்லெண்ணத்துடன் அமெரிக்கா அனுப்பியிருந்த விடயங்கள், எதிர்மறையான விளைவுகளை யப்பானியர் மத்தியில் ஏற்படுத்தலாயிற்று. யப்பானியர் இவற்றைப் பார்த்து ஆச்சரியப்பட்டுத் தாமும் கற்றுக் கொள்வதற்காக அமெரிக்காவிற்கும், ஐரோப்பா விற்கும் சென்று கற்றுக் கொண்டதுடன், பேரரசினைக் கட்டி எழுப்பும் ஆசையையும் வளர்க்கலாயினர்.

அதனால் யப்பானிலும் நாடுகளைக் கைப்பற்றும் பேராசையானது முதலாம் உலகப் போருக்கு முன்னரே ஏற்பட்டிருந்தது. அதனால் சிறிய நாடான யப்பான் 1905இல் ரஷ்யாவுடன் சிறிய போரைச் செய்து வெற்றியீட்டிக் கொண்டது. பின் 1910இல் கொரியாவைத் தம் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தார்கள். இவ்வாறு, யப்பான் உலக அமைதிக்கும், சமாதானத்திற்கும் அச்சுறுத்தல் ஏற்படும் வகையிலான போர்களில் அக்கறை காட்டியிருந்தது. பின் 1931இல் சீனாவின் வடமாகாண மான மஞ்சூரியாவைக் கைப்பற்றியது. இவ்வாறு, ஆசியாவில் யப்பானின் நடவடிக்கைகளும், ஐரோப்பா வில் ஜெர்மனியின் நடவடிக்கைகளுமே முதலாம், இரண்டாம் உலகப் போர்கள் உருவாவதற்குக் காரணிகளாய் இருந்துள்ளன. இந்த இரண்டு போர்களும் உலகளாவிய அளவில் அழிவினை ஏற்படுத்திய பின்,

ஓரளவிற்குச் சமூக நீதிகள் மீண்டும் உறுதி செய்யப் பட்டிருந்தன. ஆனால் இவையனைத்தும் பெயரளவிலே என்பதனை இரண்டாம் உலகப் போரின் பின் உலகளாவிய அளவில் இடம்பெற்ற 125 வரையிலான உள்நாட்டுப் போர்கள் எடுத்துக் காட்டியுள்ளன. இவற்றிலிருந்து மனிதன் அனுபவத்தினால் எந்தப் பாடத்தினையும் கற்றுக் கொண்டதாகத் தெரியவில்லை. மாறாகத் தொடர்ந்தும் மற்ற இனங்களை அடக்கி ஆள்வதிலேயே மனம் கொண்டவனாக இருக்கின்றான். அதனாலேயே அணுவாயுத உற்பத்திகளைப் புதிதாகக் கற்றுக்கொண்ட நாடுகள் சர்வதேசச் சட்டங்களை மீறிய வகையில் இரகசியமாக அணுவாயுதங்களை உற்பத்தி செய்தல், பிற நாடுகளின் பாதுகாப்பரண்களைப் பற்றி உளவு பார்த்தல் முதலானவற்றை மேற்கொண்டு வருகின்றன. எனவே, ஆயுதமற்றதும் அன்பும், அறனும், நீதியுமுடைய ஒரு சமாதான உலகமானது முயற்கொம்பு போன்றதேயாம்.

இனி, தமிழரின் இன்றைய சோக வரலாறுகளுக்கு இருகாரணிகள் இருந்துள்ளன. மூவேந்தர்கள் ஒருவர்க் கொருவர் பகைமை பாராட்டி, வரலாற்றில் நின்று நிலைக்க முடியாமல், அயலாரிடம் தம் ஆட்சியுரிமை களைக் கையளித்து விட்டமை முதற் காரணம். மற்று, தமிழர்களுக்கு தம் வரலாறுகளை எழுதிப் பேணி தம் தாய்மண்ணின் ஆட்சிப்புலங்களை அடையாளப்படுத்தி வைக்கும் வரலாற்றுணர்வு அன்றுமில்லை, இன்றுமில்லை என்பது இரண்டாவது காரணம். பல இனங்கள் தனித்துவமாகப் பூமியின் பல பகுதிகளிலும் உருவாகி, தம் ஆட்சிப் பெருமைகளைப் பதிவு செய்து பாதுகாத்து

வந்திருக்கின்றார்கள். அவர்கள் தனித்துவ இனங்களாக தம் பாரம்பரிய மண்ணில் பெருமையுடன் வாழ்ந்து வருகின்றார்கள். ஆனால் ஈழத்தமிழர்கள் தம் தாயகமண்ணிலிருந்து குடியேற்றவாசிகளான சிங்களவர்களால் விரட்டப்படும்பொழுது தம் தாயகம் யாது? தாம் ஏன் விரட்டப்படுகின்றோம்? என்ற கேள்விகளுக்கெல்லாம் விடைகாண முடியாதவர்களாக இருக்கின்றார்கள். ஏனெனில் எம் முன்னோர்,

'யாதும் ஊரே யாவரும் கேளிர்'

*(Every Country is my Country. Every one is my Kinsman)*

எனக் கூறியவாறு பொதுவுடமைவாதிகளாக, தம்மின உரிமைகளைக் கைகழுவியிருந்தார்கள். இக்கோட்பாட்டில் வழிநடத்தப்பட்ட தமிழினம் வாழ்ந்து கண்ட பலாபலன் தாயக மண்ணை இழந்தமையேயாம். யூதர்களின் தாயகம் பற்றிய வரலாறுகள் பற்றிய குறிப்புகள் விவிலிய வேதத்தில் இருப்பதனால், அவர்கள் தம் தாயகத்தை நோக்கிப் பயணித்த பொழுது உலகம் அதனை ஏற்றுக் கொண்டிருந்தது. தென்மதுரையில் முதற் சங்கம் வைத்து ஆண்டிருந்த பாண்டியரின் 49 ஆட்சிப் பிரிவுகளும் கடலுக்கிரையாகிய பொழுது எஞ்சியது ஏழ்குறுப்பனை நாட்டின் பகுதியாகிய ஈழமேயாம். இவ்வாறு தாயகத்திலிருந்து பிரிந்து போன ஈழத்தில் எஞ்சியிருந்த தமிழ்க்குடியினரே தொடர்ந்தும் வாழ்ந்து வந்தனர். ஆனால் அதிகாரபூர்வமான தமிழகத் தொடர்புகள் குறைவுற்றதனால், அங்கு வாழ்ந்திருந்த தமிழர்கள் ஒரு தனித்துவமிக்க ஈழத்தமிழர்கள் என அடையாளம் காணப்பட்டார்கள். இதுதான் ஈழத்தமிழரின் வரலாறு. ஆனால்

குடியேற்றவாசிகளாக தோணிகளில் ஒதுங்கிய சிங்கள இனம் இன்று ஈழத்தினைத் தனது என்று உரிமை கோருவ தனால், அவர்களின் உரிமைக் கோரிக்கைகளுக்கான வரலாற்றினையும் இங்கு பின்னோக்கிப் பார்த்தல் அவசியமாகும்.

லாலநாட்டரசன் சிங்கபாகுவிற்கும், சிங்க சீவலிக்கும் பிறந்த மூத்த மகன் விஜயன் ஒழுக்கம் தவறியவனாக சமூக விரோதச் செயல்களில் ஈடுபட்டிருந்தான். அதனால் மக்கள் கோரிக்கைக்கிணங்க மன்னன் விஜயனையும், அவனது எழுநூறு தோழர்களையும் ஒரு தோணியிலும், மற்றும் அவர்களது மனைவிமாரையும், மக்களையும் தனித்தனி வெவ்வேறு தோணிகளிலும் ஏற்றிக் கடலிற் போகவிட்டான். விஜயனும் தோழர்களும் பயணித்த தோணி ஈழத்தின் தாம்ரபர்ணியாற்றுத் துறையில் (தம்பபன்ன) கரை ஒதுங்கியிருந்தது. பெண்கள் பயணித்த தோணி மாலைதீவில் (மகிளதீவு, மகளிர் தீவு) கரை சேர, பிள்ளைகள் பயணித்த தோணி நக்க தீவினை (நிக்கோபார் தீவு, நக்காவரம்) அடைந்திருந்தது என சிங்கள வரலாற்று நூலாகிய மகாவம்சம் விவரிக்கின்றது.*

---

* *இதனைச் சில தமிழ் புத்தி ஜீவிகள் கற்பனைக் கதையென்று கூறி, சிங்களவர்களும் பூர்வீகக் குடிகளே என்பதற்கு மரபணுக்களை (DNA) சான்றாகக் காட்டுவர். உண்மையென்னவெனில் விஜயனும், தோழர்களும் முதலில் ஈழத்துப் பூர்வீக குடிகள் வழிவந்த குவேனியின் குலத்தவருடன் தொடர்பு கொண்டிருந்தனர். விஜயனுக்கு குவேனி மூலம் பிள்ளைகள் இருந்ததாகவும், ஆனால் அவன் சிங்கள அரசை உருவாக்குவதற்கு உதவியாக*

*பாண்டிநாட்டுப் பெண்கள் திருமணம் இருக்குமென்ற நோக்கில், பாண்டிநாட்டிலிருந்தே பெண்களைத் தருவித்து, தானும், தோழர்களும் திருமணங்களைச் செய்துகொள்ள விரும்பி அதனை நிறைவேற்றிக் கொண்டான். அதனால் பெண் வழியினர் ஈழத்தின் பூர்வீகக் குடிகளேயாவர். தலைமுறைகளை தாய்வழி மரபணுக்களே (DNA) நிர்ணயிக்கின்றன என்ற அடிப்படையில், பெண் வழியில் விஜயன் தலைமுறையினர் பூர்வீகக்குடிகளாகின்றார்கள். இந்த வழியில் இதனை ஏற்றல் அறிவுபூர்வமானதாகும். (BBC தொலைக் காட்சியில் பங்குனி - வைகாசி **2011**களில் மகாவெடிப்பு (The Big Bang Theory) எனும் தலைப்பின் கீழ், தாய்வழி மரபணுக்களே தலைமுறையினரை நிர்ணயிக்கின்றன என்ற ஆய்வு உறுதி செய்யப்பட்டிருந்தமை இங்குக் குறிப்பிடல் ஏற்றதாம்.*

*மற்று, மனிதர்கள் எப்பொழுதும் தாம் உயர்ந்தவர்கள் என்று காட்டிக் கொள்வதற்காகத், தம் தரக்குறைவான பழைய வாழ்வு முறைகளை மறைப்பதே வழமையாகும். சில சமயங்களில் தாய், தந்தையரைக் கூட அடையாளப்படுத்துவது தமது புதிய வாழ்விற்குக் களங்கமேற்படுத்துமென்று கருதி அவர்களைத் தவிர்ப்பதும் உண்டு. ஆனால் அறநெறி நிற்போர் இதற்குப் புறநடையானவரே. ஏனெனில், இவர்கள் உண்மை வழி நிற்பவர்களாவர். தலைமுறை தலைமுறையாக மனனம் பண்ணிப் பேணி வந்த வரலாறு 'மகாவம்சம்' எனும் நூலில் பதியப்படும் பொழுது, விஜயன் வரலாறு தம் இனத்திற்குக் களங்கம் தரும் என்று ஆசிரியர் இருட்டடித்திருக்கலாம். ஆனால் ஆசிரியர் அதனைச் செய்யாது வெளிச்சம் போட்டுக் காட்டியிருக்கிறார். அதனோடு மாலை தீவின் மொழியான திவேகி (Divehi) சிங்கள மொழித் தொடர்புடைய மொழியாகும். அதனால் பதிவு செய்துள்ள விஜயன் வரலாறு உண்மைச் செய்தி என்பது உறுதியாகின்றது.*

(இத்தகைய நிகழ்ச்சியொன்றினை ஈழவிடுதலைப் போராட்டக் குழுக்களில் ஒன்றான (EPRL) எனும் விடுதலை இயக்கமும், வரலாற்றில் பதிவு செய்துள்ளனர். 1987ஆம் ஆண்டில் இந்திய - இலங்கை சமாதான அடிப்படையில் அனுப்பப்பட்ட இந்திய ராணுவத்தினை இந்திய அரசு, திருப்பி அழைத்தபோது, ராணுவம் 1990ஆம் ஆண்டு பங்குனி மாதம் 27, 28, 29, 30 திகதிகளில் திரும்புகையில் வடகிழக்கு மாகாண தலைமை அமைச்சர் வரதராசப் பெருமாளும் தஞ்சம் கோரி ராணுவப் பாதுகாப்புடன் இந்தியா சென்றிருந்தார். அதனால் அநாதரவான EPRL இயக்க விடுதலைப் போராளிகளும் தோணிகளில் எங்கே தஞ்சம் கிடைக்கும் என்று தெரியாமல் பயணித்தனர். அப்பொழுது தமிழக முதலமைச்சராக இருந்த கலைஞர் கருணாநிதி அவர்களுக்குத் தஞ்சம் கொடுக்க முன்வரவில்லை. பின்னர் ஒரிசா கரையை அவர்கள் தோணி அடைந்த பொழுது, அங்கு தஞ்சம் வழங்கப்பட்ட வரலாறு விஜயன் வரலாற்றுடன் ஒப்பிட்டு நோக்கத்தக்கது.)

விஜயனது தோணி கி.மு.483இல் ஈழத்தில் கரைசேர்ந்திருந்தது என்பதனால் மகாவம்சம் இக்காலம் முதலாகவே சிங்கள வரலாற்றின் தொடக்கத்தினை வரையறை செய்துள்ளது. பின் உள்நாட்டில் இயக்கப் பெண்ணான குவேனியின் உதவியினை விஜயன் முதலில் பெற்றிருந்தான். காலப்போக்கில் பாண்டி நாட்டிலிருந்து பெண்களைத் தருவித்துத் தானும் தோழர்களும் திருமணம் செய்து கொண்டு, தனக்கொரு ஆட்சிப் பிரிவினை உருவாக்கியிருந்தான். பின்னர் இவனுக்குப் பிள்ளைகள் இல்லாமையினால், வங்கத்தினை ஆண்டிருந்த தம்பி

மகன் சுமிதனின் மகனாகிய பாண்டு வாசுதேவன் முப்பத் திரண்டு உதவியாளருடன் துறவி வேடத்தில் திருகோண மலைத் துறைக்கு வந்து இறங்கியிருந்தான். இதனைத் தொடர்ந்து வந்த சிங்கள அரசுகள் சிங்கள இனத்தின் தனித்துவத்தைப் பேணுவதில் அதிக அக்கறையுடை யனவாய் இருந்ததோடு, தமிழரின் பூர்வீக நிலங்களையும் தம் போர் நடவடிக்கைகளினால் படிப்படியாக அபகரிக்கத் தொடங்கின. குறிப்பாக, மகாவம்சம் விவரிக்கும் துட்டகைமுனு - எல்லாளன் போர் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். துட்டகைமுனு (கி.மு. 101 - 77) அனுராதபுரத்தில் ஆட்சியிலிருந்த தமிழரசன் எல்லாள னுடன் படையெடுத்துச் செல்கையில் மகாவலிகங்கைப் பகுதிகளில் பரவலாக ஆண்டிருந்த முப்பத்திரண்டு தமிழ்ச் சிற்றரசுகளை ஏதோவொரு வழியில் தன்படையுடன் இணைத்திருந்தான். இச்செய்தி இரண்டு உண்மைகளை வெளிச்சத்திற்குக் கொண்டு வருகின்றது. முதலாவதாக ஈழம் முழுவதும் தமிழ்ச் சிற்றரசுகள் பலரின் ஆட்சியின் கீழ் இருந்துள்ளது. (அக்காலத்தைய பண்ணை முறை ஆட்சியாளராகலாம்.) இவையனைத்தையும் தம் போர்முயற்சியினால் மட்டுமன்றி, சூழ்ச்சித் திட்டங் களாலும் துட்டகைமுனு தன்னாட்சிக்குட்படுத்தி யிருந்தான். இரண்டாவதாக, தமிழர்களிடையே தமது ஆட்சியினை ஒற்றுமையாக உறுதிப்படுத்தும் வகையில் படைகளும் இருக்கவில்லை. மாறாக, இன்றுபோல் அன்றும் சிங்கள இனவாதிகளின் சூழ்ச்சி வலைகளில் விழுந்து தமிழர் நிலங்களை சிங்களமயப்படுத்த உதவியிருந்தார்கள். அதனால் தென்னிலங்கைத் தமிழர் களும், சிங்களமயமானார்கள் என்பதும் மறுக்க முடியாத

உண்மையாகும். (தட்டுகரனவா, தள்ளுகரனவா, வீசிக்கரனவா போன்ற சிங்கள மொழிச் சொற்பிர யோகங்கள் இவ்வினக் கலப்பினாலே, மொழிக் கலப்பும் ஏற்படலாயிற்று என்பதற்காகிய சான்றுகளாம்.) இந்த பலவீனங்கள் தொடர்ந்தும் இடம் பெறும் நிலையிலேயே இன்று தமிழர்கள் உலகநாடுகளை நோக்கிப் புலம் பெயரலாயினர் எனலாம்.

எவ்வாறாயினும் போர்த்துக்கேயர் (கி.பி.1505 - 1638இல்) ஈழத்தைக் கைப்பற்றி ஆண்டபொழுது அங்கு வடகிழக்கு, வன்னி மாநிலப் பிரிவுகளைத் தமிழரசர்களே ஆண்டிருந்தனர். இக்காலத்தில் புத்தளமும் தமிழர் ஆட்சிப் பிரிவிற்குட்பட்டே இருந்தது. பின், டச்சுக்காரர் (கி.பி. 1638 - 1795) தமிழரசுகளைக் கைப்பற்றியாண்டிருந்த பொழுது யாழ்குடாவை தேச வழமைச் சட்டத்தின் படியும், மட்டக்களப்புப் பகுதியை முக்குவர் சட்டங்களின் படியுமே ஆண்டிருந்தனர். இவ்வாறு போர்த்துக்கேயரும், டச்சுக்காரரும் தமிழ் இனத்தின் மொழி, பாரம்பரியங் களைக் கௌரவித்து ஆண்டிருந்தார்கள். ஆனால், பிரித்தானியர் 1796இல் ஈழத்தை வடபகுதித் தமிழர் உதவியுடன் படிப்படியாகக் கைப்பற்றிய பொழுது தமது இலகுவான நிர்வாகத்திற்காகத் தமிழரது ஆட்சிப் பிரிவுகளை சிங்கள ஆட்சிப் பிரிவுகளுடன் இணைத்து ஆண்டனர். ஆனால் அவர்கள் 1947இல் வெளியேறிய பொழுது பெரும்பான்மையின சிங்கள அரசியல்வாதியான டி.எஸ்.சேனநாயக்காவிடம் ஆட்சிப் பொறுப்பினைக் கையளித்து விட்டுச் சென்றனர். இது மீண்டும் எலி சிங்கத்தின் வலையில் சிக்கிய கதையாக, இன்று வரை தொடர்ந்து வந்த சிங்கள ஆட்சியாளரால் தமிழர்கள் பலவித துன்பங்களுக்குட்படுத்தப்பட வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்திருந்தது.

குறிப்பாகச் சிங்கள மொழியை விட மிகப் பழமையும், இலக்கண, இலக்கியங்களைக் கழகங்கள் உருவாக்கி வளர்க்கப்பட்ட தமிழ்மொழியும், மக்களும் இருண்டவன் கண்களுக்கு மருண்டு போய்க் கிடந்தன. அதனால் பெரும்பான்மை என்ற குருட்டு அளவுகோலைப் பாவித்து சட்டங்கள் பல இயற்றப்பட்டன. இந்த நடவடிக்கையில் உருவாக்கப்பட்ட முதற் சட்டம் 1948ஆம் ஆண்டில் நடைமுறைப்படுத்தப்பட்ட இலங்கைக் குடியுரிமைச் சட்டமாகும் (The Ceylon Citizenship Act). இச்சட்டத்தின்படி தேயிலைத் தோட்டச் செய்கைக்கென தமிழ்நாட்டிலிருந்து கொண்டு வந்து குடியமர்த்தப்பட்ட ஒரு மில்லியன் தொழிலாளர்கள் தம் குடியுரிமையை இழந்தனர். பின் 1955இல் பண்டாரநாயக்காவினால் உருவாக்கப்பட்ட இலங்கை சுதந்திரக்கட்சி ஆட்சியைக் கைப்பற்றி 1956இல், 'சிங்களம் மட்டும்' எனும் மொழிச் சட்டத்தினை நிறைவேற்றி, தமிழ் மாணவர்களின் அடிப்படை மனித உரிமைகளை சிங்கள அரசு மறுத்திருந்தது. இதனைத் தொடர்ந்து 1958ஆம் ஆண்டில் தமிழ்மக்களுக்கெதிரான இனக்கலவரங்களும், இனப்படுகொலைகளும் ஏற்படுத்தப் பட்டபின், அரசாங்கப் பதவிகளிலும் பாரபட்சமான முறையில் தமிழர்கள் நடத்தப்பட்டார்கள். இக்காலம் முதலாகப் படித்த தமிழர்கள் வேலை தேடிப் பெரிய பிரித் தானியா, அமெரிக்கா, அவுஸ்திரேலியா முதலான நாடுகளுக்குப் புலம் பெயர்ந்தார்கள்.

1972ஆம் ஆண்டில் சர்வகலாசாலைத் தெரிவுகளுக்குத் தமிழ் மாணவர்கள் திறமையின் அடிப்படையில் தெரிவு செய்யப்படாமல், விகிதாசாரப்படி தெரிவாகும் முறை அறிமுகப்படுத்தப்பட்டது. 1983ஆம் ஆண்டில் கொழும்பில் காடையர்களால் கட்டவிழ்த்து விடப்பட்ட இனக்கலவரமும், இனப்படுகொலைகளும்

தமிழர்களை அங்கிருந்து பெருந்தொகையாக விரட்டியடித்திருந்தது. இத்தகைய அனைத்துக் கொடுமைகளையும் தாங்கிக் கொள்ள முடியாத இளைஞர்கள் தம்மின விடுதலைக்காக ஆயுதம் தாங்கி முப்பது வருடங்களாகப் போரிட்டு, தம் இன்னுயிர்களைத் தம் தாய்மண் மீட்பிற்காகவும், இனவிடுதலைக்காகவும் அர்ப்பணித்திருந்தனர். ஆனால், பெரும்பான்மையென்ற போர்வைக்குள் இருக்கும் சிங்கள அரசுகள் அசோக மன்னனைப் போல் பௌத்தம் தழுவி, அறத்தை நிலைநாட்ட முன்வரவில்லை. மாறாகத் தமிழருக்கு மனித உரிமையென்பது அவர்களால் கற்பனையில் கூடச் சிந்திக்க முடியாத ஒரு புதிராகும். ஏனெனில் அவர்கள் பிறந்து, வளர்ந்த பின்னணிகளே அவர்கள் நல்ல அறமும், நீதியும் கொண்ட சமூகத்திற்குத் தகுதியற்றவர்கள் என்றே அடையாளப்படுத்தியுள்ளதனை நாம் இங்கு நினைவு கூரலும் அவசியமாகும்.

அதாவது, மனிதனாக உருவெடுத்திருந்தாலும், அவன் சிறுபான்மையினத்தில் உருவெடுத்திருந்தால் அவன் மனித உரிமைகளுக்கு அப்பாற்பட்டவனே. பெரும்பான்மை யினமே அவனுக்குத் தாம் விரும்பும் உரிமைகளை வழங்க முன்வர வேண்டும் என்பதே சிங்கள அரசுகள் தொடர்ந்தும் வலியுறுத்தி வருகின்றன. அதனால் சிங்கள அரசு சித்திரை - வைகாசி 2009இன் காலப் பகுதியில் வான்தாக்குதல்கள் மூலம் அப்பாவித் தமிழ் மக்களைக் கொன்று குவித்திருந்தது. பின் இதற்கு வெற்றி விழாவும் எடுக்கலாயிற்று. இந்த வெற்றியை மகாவம்சத்தில் பதிவு செய்யும் முயற்சிகளும் உள.

உண்மையென்னவெனில், அன்றிலிருந்து இன்று வரை மகாவம்சம் சிங்கள இனவாத அரசுகளால்

நடாத்தப்பட்டு வரும் தமிழினப் படுகொலைகள் பற்றிய பதிவேடேயன்றி வேறொன்றுமல்ல. இன்றைய அரசுத் தலைவர் இராஜபக்ச செய்த தமிழின அழிப்புகளைப் பதிவு செய்ய மூன்று இயல்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. அவரது இன அழிப்பிற்குப் பின்புலமாக இருந்த இந்தியா, சீனா, பாகிஸ்தான் போன்ற நாடுகளின் பங்களிப்புகள் இருட்டடிப்புச் செய்யப்படும் என்பதில் ஐயமில்லை. தமிழர் வரலாறு திரிவுபடுத்தக் கூடாது எனும் நோக்கில், இப்பதிவு இங்கு இடம்பெறுகின்றது.

இந்தத் தமிழ்இனப் படுகொலையை சிங்கள அரசு நடத்திக் கொண்டிருக்கையில் ஐ.நா. மன்றமும், மனித நேயமிக்க நாடுகளும் தம் கண்களை மூடிக் கொண்டிருந் தன. அப்பொழுது (வைகாசி 2009) உலகநாடுகளின் நீதிக் கதவுகளைத் திறக்கக் கோரி தமிழகத்தில் முத்துக்குமரன் உட்பட்ட 19 நீதிமான்கள் தற்கொலை மூலம் உயிரை மாய்த்துக் கொண்டனர். ஜெனிவா ஐ.நா.முன்றலில் முருகதாஸ் எனும் ஈழத்து இளைஞன் தனக்குத் தீயூட்டி உயிரை ஆகுதி செய்திருந்தான். இன்னும் சிலர் ஒரு வெள்ளையர் உட்பட (Tim Martin) லண்டன் வெஸ்ட் மினிஸ்டர் (West Minister) முன்றலில் உண்ணாவிரதமிருந்து அறப்போர் நிகழ்த்தினார்கள். நீதிகோரிய பயணங்கள் பல. இவற்றுள் சிவந்தன் நீதிகோரி (2010) லண்டனிலிருந்து ஜெனிவா ஐ.நா. மன்றம் வரை கால்நடைப் பயணத்தை மேற்கொண்டிருந்தார். பின் வைகாசி 2011இல் இரு இளைஞர்கள் துவிச்சக்கர வண்டி மூலம் டென்மார்க்கி லிருந்து நெதர்லாந்தின் தலைநகரான ஹேக் நகரிலுள்ள உலக குற்றவியல் நீதிமன்றத்திடம், தமிழ் இனப் படுகொலை விசாரணைகளை நிகழ்த்துமாறு ஒரு மனுவைச் சமர்ப்பித்திருந்தார்கள்.

இவையனைத்தும் உலக நீதிமன்றங்களின் கண்களைத் திறக்காத நிலையில் மீண்டும் ஒரு நடைப் பயணம் நீதியைத் தேடி 28.01.2012 அன்று லண்டனிலிருந்து ஜெனிவாவை நோக்கி ஆரம்பமாகி இருக்கின்றது. ஜெனிவாவில் பங்குனி 2012இல் இடம் பெறவிருக்கின்ற மனித உரிமை மாநாட்டில், ஈழத் தமிழினத்திற்கு நீதியைக் கோரி ஒரு மனுவினைச் சமர்ப்பிக்க இந்த நடைப்பயணம் மேற்கொள்ளப்படு கின்றது. இந்த நடைப்பயணத்தில் மனித உரிமைகளுக் காகக் குரல்கொடுக்கும் ஆங்கிலேயர்களான போல் (Paul) சோன் (Shon) ஆகியோருடன், மனித உரிமைகளையிழந்து நிற்கும் ஈழத் தமிழர்களான அமர்நாத், ஜெயசங்கர், குமார், சிவச்சந்திரன் முதலானோரும் சைபீரிய பனிமலை இறக்கத்தினால் பரவிய கடுமையான பனிக்குளிரையும் பொருட்படுத்தாது ஒரு மாதகாலத்திற்குப் பயணிக்கிறார் கள். இதுவும் ஒரு வரலாற்றுப் பதிவேயாம்.

ஆபிரிக்க கறுத்த இனமக்களின் மனித உரிமைகளை நிலைநாட்டுவதற்காக நீதிமானாகிய ஆப்ரஹாம் லிங்கன் தன் வெள்ளையினத்தவருடனே போரிட்டு நீதியை நிலைநாட்டியிருந்தார். ஆனால் பிரித்தானியர்களோ ஆப்ரஹாம் லிங்கனின் நீதிப்போராட்டங்களை அறிந்திருந்தும், வேற்று மண்மக்களின் உரிமைகளைக் கணக்கில் கொள்ளாமல், தமிழரின் ஆட்சியுரிமைகளை, மனித நீதிகளை விளங்கிக் கொள்ள முடியாத சிங்கள வர்களிடம் தாரை வார்த்து விட்டு வெளியேறியிருந்தனர். அசோகனுக்கு போதித்த பௌத்தம், சிங்களவரிடம் தோல்வி கண்டது தான் மிச்சம். ஆனால் அறம் என்றும் நலிந்ததில்லை. எம் அன்பும், அறனும் ஓங்கிட நாம் அறவழி நிற்போமாக!

ஐஐ



# இறைமொழியான தமிழ் உலகெங்கும் பொங்கிடும்

பழம் பாண்டியர்கள் தென்மதுரையிலும், கொற்கையிலும் முறையே முதலாம், இரண்டாம் தமிழ்கெழு கூடல்களை அமைத்துத் தமிழ்வளர்க்க சிவனும், முருகனுமே திருவிளையாடல்களைப் புரிந்திருந் தனர் என்பது தமிழ்மொழியின் தோற்றத்தைப் பற்றிய வரலாறாகும். அதனால் தான் தமிழ் இறைமொழி, பக்தி மொழி, முத்தமிழ்மொழி, தனித்துவமான மொழி என்றெல்லாம் பாராட்டப்பட்டு வருகின்றது. ஆனால் பாண்டியர்கள் வளர்த்திருந்த முதலிரு கழகங்களுடன், பழந்தமிழ் நாடுகள் அனைத்தும் இறைவன் திருவிளை யாடலால் என்னவோ, ஊழிப் பெருவெள்ளங்களுட் தாண்டு அழிவுறலாயின. அதனால் அதன் முழுமையான வரலாறுகளை ஆய்வதென்பது எம் ஆற்றல்களுக்கு அப்பாற்பட்டதாகும். அண்மையில் யப்பானில் இடம்பெற்ற (*2011 பங்குனி முற்பகுதியில்*) பூமி அதிர்வுடன் கூடிய ஆழிப்பேரலைகள் முப்பது அடிவரை

பொங்கியெழுந்து 25,000 மக்களையும், அவர்களது கட்டடங்கள், கப்பல்கள், கார்கள் முதலான அனைத்தும் சுக்கு நூறாக்கி அடித்துச் சென்ற கொடூரங்களை நாம் ஒப்பிட்டு நோக்கின் அன்றைய அழிவுகளை நாம் ஓரளவிற்கு மனத்தின் கண் திரைபோட்டுப் பார்க்கலாம். ஆனால் இந்தக் கடற்கோள்கள் தமிழை முற்றாக அழித்து விடவில்லை.

இறைவனின் திருவிளையாடல் மீண்டும் வடமதுரைக்குப் புலம்பெயர்ந்த பாண்டியர்களைத் தமிழ் வளர்க்க ஊக்கின. அதனால் கடல்கோளிற் தப்பி வந்த பாண்டியன் முடத்திருமாறன் வடமதுரையில் மூன்றாம் தமிழ்கெழுகூடலை அமைத்துத் தமிழ் வளர்த்திருந்தான்.* இக்காலத்தில் எழுந்த நூல்களே இன்று நாம் வியந்து படிக்கின்ற எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய இலக்கியங்கள் ஆவன. இவையனைத்தும் 'தமிழ் ஒரு கட்டுக்கோப்பான மொழி' என எமக்கு உணர்த்துகின்றன. இன்னும் சொல்லப்போனால், இக்காலத்தில் வளர்ந்திருந்த தமிழை இன்று நாம் 'ஒரு அற்புதமான மொழி' என்றே பார்க்கின்றோம். மூன்றாம் தமிழ்கெழு கூடல்

---

* *இக்காலத்தில் தமிழ்மொழி மீண்டும் பொங்கியிருந்தது. இதனைப் பரஞ்சோதி முனிவர்,*

***கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து***
***பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமிழ் ஏனை***
***மண்ணி டைச்சில விலக்கண வரம்பிலா மொழிபோல்***
***எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ***

*என்று போற்றுவதன் மூலம், நாமும் உணரலாம்.*

இலக்கியமான புறநானூற்றுக் காலத்துப் பாணர்கள் இனிய பாடல்களைப் பாட அவர்களுக்கு நூலறிவு கையெனவும், நா மருப்பு எனவும், இவற்றினாலே தான் இவர்கள் மன்னரையும் பிறரையும் வெல்கின்றனர் (புறநானூறு, செய். 388) என்றும் பாராட்டப்பட்டுள்ளனர். இந்தப் பாணர்கள் மொழியை 'உயர் மொழிப் புலவீர்' என்பதனால் (புறநானூறு, செய். 394) இவர்களது தமிழ் மொழிவன்மை போற்றப்பட்டிருந்தது என்பதும் புலனாம்.

இனி, இவற்றுள் சிறப்பாகப் போற்றப்பட வேண்டிய நூல் திருவள்ளுவரின் திருக்குறளாகும். இதனை அன்றே ஔவையார் அணுவுடன் ஒப்பிட்டுப் போற்றியிருந்தார். அதாவது, தமிழின் அணுநிலையை வள்ளுவராலேயே உறுதிப்படுத்த முடிந்திருந்தது. இன்று வரை வேறு எவரும் இவருக்கிணையாகத் தோன்றவில்லையென்பதும் குறிப்பிடத்தக்கது. இளங்கோவடிகள் 'பொய்யில் புலவன்' என்றும், சீத்தலைச் சாத்தனார் 'பாமுறைதேர் வள்ளுவர்' என்றும் பாராட்டியிருந்தனர். இன்றும் அவருடைய தமிழ் மொழியின் பெருமை கன்னியாகுமரிக்கடலிலிருந்து கொண்டு உலகுக்குப் பறைசாற்றப்பட்டு வருகின்றது. இதற்கிணையான ஒரு நூல் வேறு எந்த மொழியிலும் உருவாகியிருக்கவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. இந்தக் குறளிலே தான் தமிழ்மொழி பேசியவர், நீதி, நியாயங்கள் எத்தகையனவாய் இருந்தன என்பது நிலைநாட்டப்பெற்றிருந்தது. அநீதியான முறையில் மக்களைப் பாகுபாடு செய்த வடமொழி நூலான மனுதர்ம சாத்திரத்தை, மனிதநீதிகோரிய அம்பேத்கார் கிழித்தெறிந்தது போல், தமிழர்கள் நீதியை உள்ளடக்கிய திருக்குறளை எவரும் கிழித்தெறிவதற்கில்லை.

இனி, தமிழர்கள் மூன்று கெழுகூடல்களை அமைத்து தமிழுக்கு ஒரு பொற்காலத்தையும், அதன் முழுமைக்கு ஒரு மணி மகுடத்தையும் ஏற்படுத்திச் சூட்டியிருந்தார்கள் என்பது உண்மையே. ஆனால், பொதுவாக சில மனிதர்களுக்குத் தம் மண்ணை விட பிறர் மண்ணிலே தான் அன்றும், இன்றும் பேராசை ஏற்படுகின்றது என்பதனை வரலாறுகள் எடுத்தியம்புகின்றன. இந்த வகையில் கி.பி.3ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.6ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் 'களப்பிரர்' எனும் சமண ஆட்சியாளரின் ஊடுருவலால் பாண்டியர் அரசில் ஒரு வெற்றிடத்தை நாம் அவதானிக்க முடிகின்றது.

உண்மையில் இக்காலத்தில் தமிழ்மன்னர்களால் தமிழ் வளர்க்கப்படவில்லையென்பது உண்மையே. ஆனால் சமண முனிவர் விஜயநந்தி கி.பி. 470ஆம் ஆண்டில் சமண சமயக் கருத்துகளை தமிழ்மொழியூடாக வெளியிட ஒரு தமிழ்ச் சங்கத்தினை ஏற்படுத்தியிருந்தார். இந்தச் சங்கம் மூலம் தமிழ் ஒரு புதிய வடிவத்தில் வளர்ந்தது. இத்தமிழ்ச் சங்கத்தினரால் யாக்கப்பட்ட நூல்களே சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி, பெருங்கதை முதலான சமண சமயக் காவியங்கள் ஆவன. இவை பௌத்த காவியங்களான சிலப்பதிகாரம், மணிமேகலை என்பனவற்றின் இன்னோர் வடிவமாக உருவாகின. ஆனால் இளங்கோவடிகள் தமிழகத்தையும், பாண்டியர், சோழர்களையும் வடநாட்டு மன்னரிடமிருந்து காப்பாற்றவே சேரன் செங்குட்டுவன், இவர்களைத் தன்னாட்சிப்படுத்தினான் என்று நியாயப்படுத்துகையில் ஒட்டுமொத்தத் தமிழகத்திலும், அவர் கொண்டிருந்த பற்று புலனாவதற்குக் காரணம், அவர் ஒரு தமிழ்வளர்க்கும்

புலவர் ஆகையாலேயாம். அதனோடு இவர் புகார்க்காண்டத்தில் தமிழின் எட்டுவகைக் கூத்து, பதினொருவகை ஆடல், யாழிசை முதலான பல்வகைத் தமிழ்ப்பண்களை தவறாமல் குறிப்பிட்டுள்ளார். தமிழை வளர்க்கும் பணியில் இயல், இசை, நாடகக் கலைகள் முதற்தமிழ்கெழுகூடல் காலம் முதலாகவே இருந்துள்ளன. பெருநாரை, பெருங்குருகு என்பன முதற்தமிழ்க் கழகக் காலத்து இசை நூலாகவும், அகத்தியம் மற்றும் நரம்பின் மறை எனும் நூல்கள் இரண்டாம் தமிழ்க்கழக இசை நூல்களாகவும் அடையாளப்படுத்தப் பட்டுள்ளன. இந்தத் தமிழிசைகளை கி.பி.13ஆம் நூற்றாண்டில் காஷ்மீரிலிருந்து தமிழகம் வந்த சாரங்கதேவர் ஆராய்ந்தே வடமொழியில் சங்கீதரத்னாகரத்தை வடமொழியில் எழுதினார் என்பதனால், தமிழ் மூவேந்தர் ஆதரவைத் தமிழ் இக்காலத்தில் முழுமையாகப் பெறவில்லையாயினும் ஒவ்வொரு தமிழ் மகனும் அதனைப்,

பெற்ற தாயும் பிறந்தபொன் னாடும்
நற்றவ வானினும் நனிசிறந் தனவே

எனக் கருதி வளர்த்திருந்தனர் என்பது கண்கூடு. அதனோடு கி.பி.3ஆம் நூற்றாண்டில் அரிமர்த்தன பாண்டியனின் அமைச்சராக மாணிக்க சுவாமிகள் இருந்த காலத்தில், இறைவனே பாண்டியராக இருந்து தமிழ் வளர்த்தார் என்பதனை, அவர்,

தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானை

என்று சிவனை விளித்துப் பாடுவதனால் தமிழ் இறைவனிடமிருந்து சாகாவரம் பெற்ற மொழி என்பது உறுதியாகின்றது.

இனி, உலகியலில் மட்டுமல்லாமல் துறவு நிலையை ஏற்றிருந்த சித்தர்கள், முனிவர்கள் என்போராலும் தமிழ் வடக்கே இமயம் முதல், தெற்கே குமரிமுனை வரை வளர்க்கப்பட்டிருந்தது என்ற உண்மையை நாம் உணர்ந்து கொள்ளத் தவறியுள்ளோம் என்பதும் குறிப்பிடத்தக்கது. பூமியின் புவியியல் அமைவானது பூமிஅதிர்வுகள், எரிமலைக் குமுறல்கள், கடற்பெருக்குகள் முதலான இயற்கை அனர்த்தங்களால் காலந்தோறும் மாறலாயிற்று எனப் பூமியின் வரலாறுகள் தெரிவிக்கின்றன. முதலாம் தமிழ்கெழுகூடல், இரண்டாம் தமிழ்கெழுகூடல் நாடுகள் இருபெரும் கடற்பெருக்குகளினால் அழிவுற்றது போல, பின் எஞ்சியிருந்த பகுதிகளை கடல் கொண்டிருந்தது, இதனை இளங்கோவடிகள்,

குமரிகொல்லம் முதலிய பன்மலை நாடும்
காடும் நதியும் பதியும்தட நீர்க்குமரிவட
பெருங்கோட்டின் காடும்
கடல் கொண்டொழிதலாற்
குமரியாகப் பௌவமென்றார்

*(சிலம்பு - 8-12)*

எனக் குறிப்பிடுவதிலிருந்து, எவ்வளவு நிலப்பரப்பினை கடல் உறிஞ்சிக் கொண்டது என்பது உய்த்துணரத் தக்கது. இந்த இயற்கையனர்த்தங்கள் ஏற்பட்ட காலங்களில் வடக்கேயிருந்த உரேசியன் நிலத்தட்டுடன், தெற்கேயிருந்த நிலத்தட்டு மோதியதனால் கடற்பாறைகள் மேலெழுந்து இறுக்கம் பெற்று இமாலயமலை உருவாகலாயிற்று. இதனைத் தொடர்ந்து கங்கை, யமுனை நதிகளும் உருவாகியிருந்தன. தென் தமிழகத்தில் முனிவர்களுக்கும், சித்தர்களுக்கும் உறைவிடங்களாக இருந்த மகேந்திரமலை,

குமரிமலை, மணிமலை ஆகிய பன்மலைகளும், பஃறுளி ஆறு, குமரி ஆறு, தாமிரப்பர்ணி முதலான ஆறுகளும் கடலுட்தாண்டு போயின.* அதனால் தென்னக முனிவர்கள் வடக்கே உருவாகியிருந்த இமயமலைச் சாரலைத் தம் தவத்திற்கு ஏற்ற இடமாகக் கருதிப், புலம் பெயர்ந்தனர். தவத்திற்கேற்ற சூழலைக் கொண்ட இமயத்தின் குகைகளிற் தவமிருந்த இவர்கள், தம் இறைமொழியாகிய தமிழை அங்கும் வளர்த்திருந்தார்கள். இவர்களில் ஒருவரான திருமூலர்,

**என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே**

என்பதனால் தமிழ் வளர்த்த முனிவனாகவே தன்னை அடையாளப்படுத்துகிறார். அதனோடு இவர் காலத்தில் தமிழில் 51 எழுத்துகளே இருந்தன என்பது பற்றியும், அவை எந்தெந்த உடல் உறுப்புகளால் எழுப்பப்பட்டு வெளியே ஓசை பெறுகின்றன என்பதனையும் இவர் விரிவாகக் குறிப்பிட்டுள்ளார் (திருமந்திரம். 2698, 2699, 2700, 2701). இவற்றுக்கு மேலாகத் திருமூலர் தமிழ் ஒரு கணிதமொழி** என்பதனையும்,

**கணக்கறிந்தார்க்கன்றி காண வொண்ணாது**
**கணக்கறிந்தார்க்கன்றி கை கூடாக்காட்சி**

* *இந்த அழிவுகளை புலவர் குழந்தை தன் கண்முன் நிறுத்திப் பார்த்துத் துயருற்றதனால், உருவாகிய காவியமே இராவணகாவியமாகும். இவ்வளவு கொடுமை செய்த கடலையே "பாழ்ங்கடலே! நீயொரு நாட் பாழாய்ப் போகக் காணோமோ" என்று திட்டி ஆறுதல் காண்கிறார் புலவர் குழந்தை.*

** *லண்டனில் வதியும் சிவகணேசன் இதுபற்றிச் சில ஆய்வுகள் செய்திருக்கின்றார் என்பது குறிப்பிடத்தக்கது.*

என்று அறிவுறுத்துவதனால் தமிழில் இறைவழிபாடும் ஒரு மர்மமான கணிதத்தினுள் உள்ளடக்கப்பட்டிருப்பது புலனாகும். அதாவது முதலில் 'நமசிவாய' என ஐந்தெழுத்தின் மகிமையைக் குறித்துப் பின், 'ஓம்நமசிவாய' என ஆறு எழுத்தின் மகிமையும் குறிப்பர். பின் இவற்றைவிட 'ஓ' எனும் ஓரெழுத்துக் கொண்டு உயிரை இறைவன் திருவடிகளில் நிலை நிறுத்துவது மேலானது என்பதனைக் கணிதவரிசையில் சுருக்கிக் காட்டியுள்ளார் (திருமந்திரம். செய். *926, 963*). திருவள்ளுவரும்,

> அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
> பகவன் முதற்றே உலகு

என்று குறிப்பிடுவது, உலகமொழிகளின் ஒலிகள் அனைத்தும் இறைவன் எழுப்பிய முதல் ஒலியான 'ஓம்' என்பதிலிருந்தே பிறக்கலாயின என்ற கோட்பாட்டினை வலியுறுத்தவேயாம். இந்த உண்மையை நன்கு உணர்ந்து கொண்ட தமிழ் தான் வளர வேண்டும் எனக் கருதி, மற்ற இனங்கள் மீது திணிக்கப்படாமலே வளரும் பண்புடையதாம்.

தமிழ் பதினெண் சித்தர்கள் அனைவரும் இன, மொழி, நாடு என்னும் பற்றற்ற பொதுமைவாதி களானாலும், தாம் பிறந்து, வளர்ந்து, அனுபவித்த தம் தமிழ்க் குடிகள் நன்மை கருதி, சித்த மருத்துவம், யோகதத்துவம், சோதிடம் எனப் பல துறைகளிலும் தமிழில் பாடி வைத்துள்ளார்கள். விஞ்ஞானம் இன்று ஆய்வதனை, இவர்கள் அன்றே முடிந்த முடிவுகளாக அறிவித்து, வழிநடத்தியிருந்தார்கள். நாம் இவர்கள்

வழிகாட்டலை எவ்வளவு தூரம் பயன்படுத்தினோம் என்பதற்கு விடை எம்மிடத்திலிருந்தே பிறக்க வேண்டும்.

இவர்களைத் தொடர்ந்து தமிழ் உலகம் கண்ட ஒரு புதிய வளர்ச்சியாக தேவார, திருவாசகம் முதலான பக்தி இலக்கியங்கள் தோன்றி, தமிழைப் பட்டிதொட்டியெல்லாம் பாட வழிநடத்தியிருந்தன. அப்பொழுது பாமரமக்களும் இறைவனைத் துதித்துப் பாடி, ஆடி மகிழ தமிழ் கைகொடுக்கலாயிற்று. எல்லோரும் யோகிகள் ஆக முடியாத நிலையில், இறைவனுடன் நேரடியாகப் பேசி மகிழவைத்த பக்திநெறி என்ற குடைக்கின் கீழ் மக்கள் அனைவரும் ஒருங்கிணைக்கப் பட்டனர். ஏற்கனவே தமிழகத்தில் சமணம், பௌத்தம் முதலான மதங்கள் மக்களை வழிநடத்த முடியாமற் கைவிட்ட நிலையில், தேவார ஆசிரியர்கள் எளிமையான தமிழில் இறைவனைப் போற்றி வழிபட்ட பாக்கள், மக்களின் உள்ளங்களைத் தொட்டலாயின. தமிழும் ஒரு புதிய வடிவில் தோன்றிப் படித்தோர், படியாதோர் என்ற வேறுபாடில்லாமல் அனைவரும் இறைவனைப் பாடியுருக வைத்திருந்தது.

இவ்வாறு மக்கள் மனங்களைத் தொட்ட தேவாரங்களை தமிழ்பக்தர் ஒருவர் கேதாரநாத்திற்கும் எடுத்துச் சென்றுள்ளார் என்பதனை கேதாரநாத் மடத்தின் சுற்று மதிலில் எழுதப்பட்டிருக்கும் தேவாரங்களே பறைசாற்றுகின்றன எனில் மிகையாகாது. இமாலயத்தில் பனியுறையும் பகுதிகளான பத்ரிநாத், கேதாரநாத் பகுதிகளுக்கு ஆதிசங்கரரே கேரளத்து நம்பூதிரிப் பிராமணர்களைக் குடியமர்த்தி சிவ வழிபாட்டினை நிலைநிறுத்தியவராவர். மிகவும்

கடினமான போக்குவரத்தினைக் கொண்ட இப்பகுதியில் தமிழ்மொழி இறைவனைப் போற்றிக் கொண்டிருக்கிறது எனில், அதன் தெய்வீகமே காரணமாகும். கி.பி.12ஆம் 13ஆம் நூற்றாண்டுகளில் தமிழ் 'சைவ சித்தாந்தத்தை' நெறிப்படுத்திய தத்துவமொழியாகவும் மிளிரத் தவறவில்லை.

தமிழர் இறைவழிபாட்டிற்கென்றே பிறப்பெடுத்தவர் கள் என்பதனைக் காலந்தோறும் எழுந்த திருவிளை யாடல்கள் நிகழ்ந்த கோவில்கள் மட்டுமன்றிச் சந்துக்குச் சந்து, வீதிக்கு வீதி எழுப்பப்பட்டிருக்கும் சிறு சிறு கோவில்களும் எமக்கு நினைவூட்டியிருக்கின்றன. இந்நிலை வடமாநிலங்களில் இல்லை. அங்குக் கோவில்கள் தென்னகக் கோவில்கள் போன்று பக்தர்களைப் பரவசமாக்கும் வகையில் அன்றி வெறும் கிரியைகளைக் குறிக்கோளாகக் கொண்டனவாகவே காணப்படுகின்றன. காசிக்குத் தென்னக மக்கள் பக்தி மேலீட்டினால் சென்று வருவர். அதனால் அங்கும் தமிழின் செல்வாக்கு இருப்பதாகவே சில சான்றுகள் தெரிவிக்கின்றன. அதாவது காசி விசாலாட்சி அம்மன் கோவில் வாயிலிலுள்ள அறிவுப்புப் பலகையில் அழகிய தமிழில் 'பிராமணச் சிறுவர் கல்விக்கு நன்கொடைகள் வழங்குமாறு' கோரிக்கை விடப்பட்டிருந்தது. (எழுத்தாளர் 2008ஆம் ஆண்டு யாத்திரை மேற்கொண்ட பொழுது இது அவதானிக் கப்பட்டது.) அங்கு தமிழக நாட்டுக்கோட்டைச் செட்டி யார் மடங்கள் தமிழ் வளர்க்கும் பணியிலிருப்பவர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. வசிஷ்டர் குகை புனிதமானதெனப் பேணப்பட்டுவரினும், அங்கும் தமிழகத்தைச் சேர்ந்த சதானந்த சுவாமியே வாழ்ந்து

வருகின்றார். அங்குள்ள நினைவுத் தூணில் 'மாத சிவராத்திரி' எனத் தமிழில் ஒரு குறிப்பு பதியப்பட்டிருந்தது.

ரிஷிகேசத்தில் வாழ்ந்த தமிழ் முனிவர்கள் மரபினடிப்படையில், அங்கும் தயானந்த சுவாமி மடம், சிவானந்த சுவாமி மடம் என்பன தமிழர்கள் உருவாக்கிய மடங்களாகவே காணப்படுகின்றன. இவர்களுள் சிவானந்த சுவாமி, தமிழ்நாட்டைச் சேர்ந்த அப்பையர் தீட்சிதர் குடும்பத்தைச் சேர்ந்தவர். இவர் முதலில் வைத்தியராகத் தொழில் புரிந்து செய்த தொண்டுப் பணியினாலே துறவு நிலையை எட்டியவர். இவர் எழுத்துகள் வடமொழி மூலங்களைக் கொண்டவையாய் இருப்பினும், அவர் உருவாக்கிய மடத்தில் தமிழில் 'ஓம்' எனும் மந்திரத்துடன், தமிழக முருகனின் கோலம் கொண்ட படமொன்றினையும் என்னால் அவதானிக்க முடிந்தது.

கடற்கோள்களினாற் பாதிக்கப்பட்ட சித்தர் பலர் இமாலயம் நோக்கி நகர்ந்த நிலையில், தொடர்ந்தும் தமிழ்மொழி பேசுவோர் அங்கு ஆன்மீக வாழ்வினை மேற்கொண்டு வருகின்றனர் என்பதனைத் தற்கால வரலாறுகளும் உறுதிசெய்கின்றன. ஆனாலும் இவர்கள் வடமொழித் தாக்கத்திற்குட்பட்ட வகையிலேயே மாறியிருப்பதனால், அவர்கள் தம் அடையாளங்களை இழந்திருப்பது உணரத்தக்கதாம். எடுத்துக்காட்டாக பரங்கிப்பேட்டையில் கி.பி.203ஆம் ஆண்டில் பிறந்தவரான பாபாஜி நாகராஜர் பூர்வீகமும் அறியப்பட முடியாத வகையில் திரிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத் தக்கதாம்.

தமிழர்கள் வரலாறுகளை எழுதி, தம் அடையாளங்களைப் பேணிக் கொள்ளவில்லை என்பது உண்மை தான். அதற்காகத் தமிழும் அழியவில்லை, தமிழினமும் அழியவில்லை என்பதும் நன்கு நிறுவப்பட்ட உண்மையே. மாறாகப் பூமியின் அனைத்து மண்ணிலும் தமிழ் தன் வேர்களைப் பதித்து வளர்ந்து வருகின்றது. தமிழகத்தில் ஆங்கில மோகத்தினால் சிலர் தமிழை ஆங்கிலத்துடன் கலந்து பேசியும் எழுதியும் வருகின்றார்கள். ஒருகாலத்தில் பதிற்றுப்பத்து பாடல்களின் கருவூலங்களாக இருந்த சேரமன்னரும், மக்களும் எவ்வாறு தமிழ்மண்ணைக் காத்தார்கள் என்பதனை அறிந்து கொள்ள இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம் சான்றாக அமைகின்றது.

கி.பி.12ஆம் நூற்றாண்டு முதலாகவே வடமொழி மயமாகிய சேரநாட்டுத் தமிழ், மலையாளமாகத் தன்னை அடையாளங்காட்டிக் கொண்டது. ஆனால் அப்படியானதொரு தமிழ் இன்று ஆங்கிலக் கலப்புடைய மொழியாக உருவாகாமல் பாதுகாக்கவல்ல, தமிழ்ப் பற்றாளர்களைத் தமிழகம் நிறைவாகப் பெற்றிருக்கின்றது. ஈழத்தமிழர்கள் இந்தத் தமிழுக்காகவும், தமிழ் மண்ணுக்காகவும் தம் உயிர்களை துச்சமாகக் கருதிப் போராடி வருகின்றார்கள். உண்மையென்னவெனில் இனப்படுகொலைகள் மூலம் ஒரு இனத்தை அழிக்கும் பொழுது அது மேலும், மேலும் வீறுகொண்டெழுவதே இயல்பாகும். இவ்வாறு தமிழின் குரல் அங்கு நசுக்கப்படும் பொழுது தமிழர்கள் வீறு கொண்டெழுந்து தமிழை வளர்க்க அனைத்து வழிகளிலும் முயல்கின்றார்கள்.

தற்காலம் கணினியுகமாக மாறிவிட்ட நிலையில் தமிழும் கணினிமொழியாகி விட்டுள்ளது. எனவே, இறைமொழியாகிய தமிழ் ஆரம்பம் முதல் இன்றுவரை தன் தனித்துவத்தையிழக்கவில்லை. கடற்கோள்கள் தாக்கினால் என்ன? ஆரியமாயை மயக்கினால் என்ன? தமிழினப்படுகொலைகள் தாக்கினால் என்ன? யாராலும் தமிழை அழித்துவிட முடியாது. புலம்பெயர்ந்த நாடுகளில் உருவாகியுள்ள தமிழ்க்கல்விக் கூடங்கள், தூய தமிழைப் பாதுகாப்பதில் அதிக அக்கறையுடன் தொழிற்படுகின்றன. இந்நாடுகளில் வாழும் இளைஞர்கள் அனைவரும் தமிழை வீட்டிலும், சமூகத்திலும் வளர்க்கும் பணியில் ஈடுபட்டு வருகின்றார்கள். அதாவது, தமிழ் வளர்க்க மன்னர்கள் அற்றுப் போன நிலையில், தமிழ் தன்னைத் தானே வளர்க்க வேண்டி உலகளாவிச் சென்றுள்ளது என்பதே உண்மை. ஒவ்வொரு தமிழனதும் பங்களிப் பிலேயே இந்நிலையேற்படலாயிற்று. அதனால் தமிழ் உலகத்தமிழர் மொழியாகிப் பொங்கிடும் நிலை தவிர்க்க முடியாததாகும்.

22.7.2011 அன்று GTVயின் வெளிச்சம் நிகழ்ச்சியில் ஊடகவியலாளர் தினேஷ்குமார், பேராசிரியர் நா.கண்ணனை நேர்காணுகையில், அவர் தெரிவித்த தமிழின் பெருமைகள் பற்றியும் இங்கு குறிப்பிடல் அவசியமாம். விஷ்ணு வழிபாட்டினரான ஆழ்வார்கள் இறைமொழியான தமிழில் வடிக்கப்பெற்ற நாலாயிரத் திவ்வியப்பிரபந்தத்தினை கருவறைக்குள் கொண்டு போன நிலையில், வடமொழி அதன் பின்னே செல்ல வேண்டிய நிலையேற்படலாயிற்று என்பதனை அனுபவித்துக்

கூறினார். அதனோடு தென்கொரிய மொழியில் தமிழின் செல்வாக்கினால், அங்கு அப்பா, அம்மா எனும் சொற்கள் நிரந்தர இடத்தைப் பெற்றிருந்தன என்றும், தமிழில் போலவே ப, வ எழுத்துகளின் பாவனை இருப்பதோடு, ப எனும் எழுத்து தமிழ் வடிவத்திலே தான் அமைந் துள்ளது என்பதனையும் தெரிவித்தார். பிற்காலச் சோழப் பேரரசு காலத்தில் இந்நிலையேற்பட்டிருக்கலாம். இது ஒரு தற்காலிக செல்வாக்கு. ஏனெனில் தமிழ் எப்பொழுதுமே பிறமொழிகள் மீது தன்னைத் திணித்துப் பரவ முயலவில்லை. அது இலக்கிய, இலக்கணங்களின் நிறைவுபெற்றுத் திகழ்ந்த நிறைமொழியாகையால், தன்னை நேசிக்கும் மக்களுடனேயே வாழவிரும்பிற்று.



# பாராமுகமாகிய தெய்வம்

பௌர்ணமி நிலவு பூமியின் அழகைக் கண் கொட்டாது பார்த்துக் கொண்டிருந்தது. இசைஞான மில்லாத புள்ளிச் சேவல் நடுநிசியிலே "கொக்கரக்கோ கொக்கரக்கோ" எனக் குரல் கொடுத்தது. அதனைத் தொடர்ந்து அயலட்டைச் சேவல்களெல்லாம் பக்க வாத்தியம் மீட்கத் தொடங்கின. அப்பொழுது உறக்கத்தில் களை ஆறிய மக்கள் மூன்று மணியிருக்கும் என்ற எண்ணத்தில் மறுபுறம் புரண்டு போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டனர். மீண்டும் உறக்கம் தழுவும் சமயத்தில் குருவியினங்கள் இராகம் மீட்டி இசைக்கத் தொடங்கின. உயிர்களுக்குப் படியளக்கும் இறைவனுக்குப் பாடும் திருப்பள்ளி எழுச்சிதான் அது. திருப்பள்ளி யெழுச்சியைக் கேட்டு விழித்துக் கொண்ட பொன்னிப் பசு "ம்மா ம்மா" என்று தானும் துதிபண்ணிவிட்டு முன்னாற்கிடந்த பனங் குரும்பைத் துண்டங்களை அசைபோடத் தொடங்கியது. படலையில் காவலிருந்த

கட்டியன் நடமாட்டம் கேட்டு "வவ் வவ்" என்று குரைக்கத் தொடங்கியது. ஒழுங்கையால் மிளகாய்த் தோட்டத்திற்கு தண்ணீர் இறைக்கப் பட்டையுடன் சென்று கொண்டிருந்த முருகேசம்மானும், மகனும் "டே... டே உனக்கு ஆள் தெரியாது போல, அது நாங்க பிள்ளை, இண்டைக்கு சந்தைக்கு வியாபாரத்துக்கு போக வேணும் அதனால்தான் இருட்டோட தோட்டத்துக்கு போறம், கட்டியனும் நல்லா வேலை செய்யிறான்டி" எனக் கூறிக் கொண்டே வேகமாகப் போய்விட்டார்கள்.

கப்புதூர் சனசந்தடியற்ற குக்கிராமமாயினும் அங்கு வாழ்கின்ற சகலரும் ஒரு குடும்பமென வாழ்வதனால் ஏற்படுகின்ற சத்தம் சந்தடிகள் எவ்வளவு கலகலப்பை ஏற்படுத்துகின்றன என நினைத்துக்கொண்டே அம்பி தலைமாட்டிலிருந்த நெருப்புப் பெட்டியைத் தடவி எடுத்துத் தட்டி மங்கலான வெளிச்சத்தில் கடிகாரத்தைப் பார்த்தாள். "சரியாய் நாலு மணி, ஆண்டவன் படியளக்கிற நேரம்" என உதடுகள் கூற எழுந்து கிணற்றடிக்கு ஓடினாள்.

அண்ணாந்து வானத்தைப் பார்த்தாள். பூர்ண சந்திரன் அவளைப் பார்த்து நகைத்தது. விடிவெள்ளியும் கண்களைச் சிமிட்டியது. அவள் எண்ணமெல்லாம் இறைவனின் அற்புதக் கோலங்களில் மூழ்கியது. எங்கெங்கெல்லாம் காலை நேரம் ஏற்படுகின்றதோ அங்கங்கெல்லாம் உலகமாந்தர் மௌன விரதம் பிடிக்க, இயற்கை தான் மங்களகரமான காலைப் பொழுதை வரவேற்கின்றது. எவ்வளவு அழகு நிரம்பியது காலைப்பொழுது!

என நினைத்துக்கொண்டே தண்ணீரை மொண்டு இழுத்து ஆரச்சோர நீராடிக் கொண்டாள். வழமை போல் அலரி மரத்தை வளைத்து பூக்களைக் கிள்ளி எடுத்துக்கொண்டு சாமி அறைக்குள் புகுந்தாள்.

நல்லாய் விடிஞ்சு போச்சு? என்று தனக்குள் கூறிக்கொண்டே விளக்கைத் தூண்டிவிட்டு பூக்களை அர்ப்பணித்து வழிபாட்டை நிறைவேற்றிக் கொண்டாள்.

கனகம், தாய்மையின் பொக்கிசம்! அம்பிக்கு முன்னாடியே எழுந்து காலைக்கடனை முடித்து சாமி விளக்கை போட்டுவிட்டு "அப்பனே முருகா! நீதான் எங்களுக்கு துணை" என்று உதடுகள் அசைய மாட்டுக் கட்டைக்குச் செம்பும் கையுமாகப் போய் பாலைக் கறந்தாள். காலையில் எழும்பினால் மாலைபடும் வரை மாட்டுக்கட்டை, ஆட்டுக்கொட்டில், கோழிக் குடாப்பு, பனந்தோப்பு, மிளகாய்த் தோட்டம், வயல், வேலியடைப்பு, சமையல், கோவில் என்று சுற்றிச் சுழன்றாலும் மனம் அடிக்கடி அப்பனே முருகா! என்று முருகனோடு பேசிக் கொள்ளும். ஒரே மகள் அம்பி படித்துப் பட்டம் பெற்றது கனகத்திற்கு உள்ளூரப் பெருமை. ஆனால் வெளியில் காட்டிக் கொள்வதில்லை. அம்பி வழிபாட்டை முடித்துக் கொண்டு அம்மா! என்றதும் கனகம் தேநீர்க் கோப்பை யுடன் வந்து அப்பனே முருகா! என்று சொல்லிக் கொண்டே 'இந்தா பிள்ளை' என்று தேநீர்க் கோப்பையை நீட்ட, அன்பு கலந்த பார்வையுடன் அம்பி கோப்பையை வாங்கிக் கொண்டு படிப்பு மேசைக்குப் போனாள். நாற்காலியை இழுத்து பெருமூச்சுடன் உட்கார்ந்த

அம்பியை நேற்றைய அகழ்வாய்வுகள் பற்றிய அறிக்கையை எழுதிமுடிக்க வேண்டும் என்ற எண்ணம் கவ்வியது. ஆனால் பேனாவைத் தூக்கிய அம்பியின் எண்ணங்கள் கட்டுக்கடங்காமல் தமிழினத்தின் பழைய காலங்களுக்குச் சிறகடித்துச் செல்லத் தொடங்கின.

பூநகரியில் நேற்று நிகழ்த்தப்பட்ட ஆய்வில் இரண்டாவது பரிசோதனைக் குழியில் கிடைக்கப்பெற்ற மட்பாண்டங்களில் 'ஈழம்', 'வேளிர்' போன்ற வாசகங்கள் எம்மைத் தலைகால் தெரியாதவாறு ஆனந்தத்தில் மூழ்கடித்திருந்தன. ஏற்கனவே ஆனைக்கோட்டையில் கிடைக்கப்பெற்ற 'கோவேதன்' என்ற வாசகமும் வரலாற்றிற்கு முற்பட்ட ஈழத்தமிழரின் அரசாட்சிகள் பற்றிப் பறைசாற்றும் ஆதாரமாகும்.

இவற்றையெல்லாம் அவதானித்த பேராசிரியர் ஈழவேந்தன் என்னைப் பார்த்து 'அம்பி இங்குதான் உமது ஈழத்தின் தமிழ்த் தாய்க்குலம் 3,000 ஆண்டுகளுக்கு முன்னரே தமிழன்னையின் அரியாசனையில் வாழ்ந்து மரித்தவர்கள். நாம் தமிழன்னைக்கு தூபி எழுப்புவதாயின் இங்குதான் எழுப்ப வேண்டும்' என்று குரல் தழுதழுக்கக் கூறினார். எம் வரலாற்றின் அடிக்கற்களாக "ஈழம்", "வேளிர்", "கோவேதன்", என்ற சாசனங்களே அமையப் போகின்றன. அந்தப் புனித வரலாற்றினை நீயே எழுத வேண்டும். அதனோடு அம்பி பொம்பரிப்பு, அனுராதபுரம் முதலான அகழ்வாய்வுகளில் கிடைக்கப்பெற்ற வேலா யுதங்களையும், திராவிடக் குறியீடுகளையும் பிற தடயங்

களையும் ஒப்பிடும் பொழுதுதான் ஈழத்தமிழர் ஆதிவரலாறு முழுவடிவைப் பெறும் என்று கூறிய பேராசிரியரை உற்று நோக்கினேன். அவரது கண்கள் கலங்கியிருந்தன...

'எவ்வளவு வரலாற்றுணர்வு. தமிழனுக்கு ஒரு வரலாறு கட்டி எழுப்ப வேண்டுமென்ற துடிப்பு. ஆயினும் அந்தப் பொறுப்பினை என்னிடம் கையளித்து விட்டிருந்தார். நானும் கண்ணியமான அப்பொறுப்பினை ஏற்றுக்கொண்டேன். என் தந்தையார் தமிழின் இனிமையைச் சுவைத்துப் பருகியதோடு எனக்கும் தமிழ்ப் பற்றினை ஊட்டியிருந்தார். அவர் இறந்து பல ஆண்டுகள் உருண்டோடி விட்டன. ஆனால் அவர் ஊட்டிய தமிழ்ப் பற்றிலேதான் நான் வாழ்ந்துகொண்டிருக்கிறேன். எம் மக்கள் அன்றிலிருந்து இன்று வரை தெய்வத்தை நம்பியே வாழ்கிறார்கள். ஆனால் அவர்கள் அனுபவிக்கும் கொடுமைகளோ சொல்லுக்கடங்காதவை.

ஈழத்தில் இன்று நடக்கின்ற மனித நேயமற்ற கொடுங்கோல் ஆட்சியையும், போரையும், மக்களின் சின்னாபின்னப்பட்ட வாழ்க்கையையும் தெய்வம் எப்படித்தான் சகிக்கின்றதோ? தமிழரிடையே உறுதியும் ஒருமைப்பாடுமில்லை என்பதனை நினைத்து தெய்வம் சிரிக்கின்றது. பாராமுகமாகி விடுகிறது. தமிழினம் ஒரு குடையின் கீழ் நின்றிருந்தால் போரும், அழிவுகளும் தலையெடுத்திருக்காது. அதுமட்டுமல்ல விடுதலைப் போராட்டம் என ஆயுதமேந்திய சில போராளிக் குழுக்கள் மண்ணையும் மக்களையும் பாதுகாத்தல் என்ற

குறி தவறி தமக்குள்ளே போட்டுக் கொண்ட சண்டைகள் தான் சிங்கள அரசின் கொள்வனவு செய்யாத முதற்தரமான ஆயுதமாயிற்று. அதனோடு மாற்று வழிகளில் சிங்கள அரசுகள் உலகநாடுகளின் உதவியுடன் செய்த சூழ்ச்சி வலையில் தமிழினம் தொடர்ந்து அழிக்கப்பட்ட வரலாறுதான் கடந்த அரை நூற்றாண்டின் ஈழத் தமிழர் வரலாறாகும். குமரிக் கண்டத்தில் உருவாகிய அன்பு மதமே சைவமாகும். இது காலப்போக்கில் பல அன்பு மதங்களை உலகளாவிய அளவில் உருவாக்கி மக்களை நெறிப்படுத்தியிருந்தது. ஆனால் தமிழன் இன்று தனக்கென இறையாண்மையுடைய நாடு ஒன்று கிடைக்குமா? என்ற ஏக்கத்துடன் உலகெங்கும் தேடித் திரிகின்றான்' என்றெல்லாம் குழப்பமுற்றிருந்த அம்பி பெருமூச்சினைத் தீயெனக் கக்கினாள். தமிழன்னையே கொதிப்புற்றுக் கக்கியது போல் அவள் மூச்சு நீண்டிருந்தது. அப்பொழுது அவள் கையிலிருந்த பேனாவும், தமிழன்னையின் சோகத்தினை எழுதும் கருவியாக இருக்கக்கூடாது என்று கருதி நழுவி விழுந்து கூரை உடைத்துக் கொண்டது.

அப்பொழுது அம்பி கோபக் கனலுடன் பேனாவை வெறித்துப் பார்த்தாள். அவளுக்கு இதென்ன மானிடம்? இதென்ன உலகம்? என வெறுப்புணர்வுகள் கொந்தளிக்க சிலையாகிக் கிடந்தாள். அப்பொழுது அவளது அம்மா சாப்பிட அழைத்த குரலும் அவளுக்குக் கேட்கவில்லை. தாயும் அவளைப் புரிந்து கொண்டு மௌனியானாள். இறைவன் என்ன நினைத்தார் தெரியுமா?

குமரிக்கண்டத்தில் பாண்டிய அரசுகளை உருவாக்கி நானே சிவனாகவும், முருகனாகவும் திருவிளையாடல் செய்து தமிழினத்தை வழிநடத்தியிருந்தேன். ஆனால் தமிழினமோ என்ன மறந்து, நான் வகுத்த அறநெறிகளையும் நழுவவிட்டிருந்தது. அதனால் நானும் அவர்களை நழுவவிட்டேன். கடல்கோள்கள் அவர்களது பூர்வீக மண்ணினை அழித்தன. இறையாண்மை கொண்ட நாடுகளையிழந்தார்கள். வரலாறுகளை இழந்தார்கள் எனத் தனக்குள்ளே நொந்து கொண்டார்.




# அலறிய கோவில் மணி

அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த பூமியின் ஒரு பகுதி உயிரினங்களைத் தட்டி, எழுப்பிவிடுவதற்காகச் சூரியன் அவ்வழியே வந்து கொண்டிருந்தார். அவரை வரவேற்கும் ஆவலில் மேகக்கூட்டங்களும் தம் வெண்திரைகளை விரித்துக் கொண்டு வேகமாக ஓடிக்கொண்டிருந்தன. பூமியிலும் இத்தெய்வீகத்தின் தன்னலமற்ற சேவையை எதிர்பார்த்திருந்த பல மனிதர்கள் எழும்பி சுறுசுறுப்பாக தம் அன்றாடத் தொழில்களைத் தொடரும் பணியில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். செம்பியன்பற்று இளவரசனான செம்பியனும் அவசரமாக வெளியே வந்தான். அவன் தலையோ நிமிர்ந்து நடக்க முடியாதவாறு ஒரு யோசனைப் பொதியைச் சுமந்திருந்தது. அதன் பாரத்தைக் குறைக்கத் தலையினைக் கைவிரல்களினால் கோதிவிட்டபடியே தன் 'ராஜநடை' எனும் குதிரை மீது ஏறி அமர்ந்தவாறே தன் நாட்டின் வளங்களை கண்ணுக்கெட்டிய தூரம் வரை நோட்டம் விட்டான். பச்சைப் பசேல் என விளைந்திருக்கும்

நெல்வயல்கள், கலகலக்கும் பனந்தோப்புக்கள், குலை குலையாக இளநீர்களைச் சுமந்தும், சுமக்காதது போல் ஆடி அசைந்து கொண்டிருக்கும் தென்னைகள் அனைத்தின் அழகினையுமே அவன் கண்கள் அள்ளிப்பருக, பெருமிதத்துடன் ராஜநடையைத் தட்டிவிட்டான்.

ராஜநடைதான் செம்பியனின் உயிர்த்தோழன். சொற்கள், அன்புரைகள் என்பன அங்கு இல்லையென்பது உண்மைதான். ஆனால் உற்ற தோழனைப் போல் அவனுக்குப் பக்கபலமாக இருந்து கொள்ளும். இன்றும் செம்பியனின் உளக்கிடக்கையின் ஆழத்தினை அளந்து கொண்டது போல் தன் கால்களின் வேகத்தைக் கூட்டியிருந்தது. புதர்களையும், பற்றைகளைக் குதறியபடி மறைந்து நின்று நோட்டமிடும் காற்றையும் கிழித்தபடி செம்பியன்பற்றுக் கடலோரமாக ஓடிக்கொண்டிருந்தது.

இவர்கள் இருவரதும் உளவேகத்தை அவதானித்த கடற்காற்று, அவர்களை அன்பாக வருடி உடலின் கனலைத் தணித்து விடலாயிற்று. கடலோரமாகக் காவற்தொழிலில் ஈடுபட்டிருந்த காவலாளிகள் கைகளை உயர்த்தி வணக்கம் செலுத்தினர். தமக்கு அன்றைய பொழுது எல்லாமே நன்மையாக வேண்டுமென்று சூரிய பகவானை வேண்டிக் கொண்டிருந்த மீனவரும், ராஜநடையின் வேகத்தினால் முன்கூட்டியே செம்பியனின் வருகையை அறிந்து கொண்டு தம் வணக்கத்தை அவனுக்கும் செலுத்தினர். இவற்றையெல்லாம் அவதானித்திருந்த கடலும் தன் அலைகளை நுரையுடன் எதிரும் புதிருமாக ஓடிவிளையாடும்படி பணித்திருந்தது.

தன் கடலும் தன்னை வரவேற்று மகிழ்வதாகக் கருதிய செம்பியன், ராஜநடையை மீண்டும் தட்டி விட்டான். ராஜநடையின் கால்களின் வேகம் இயற்கையுடன் போட்டி போட்டிருக்க, செம்பியனின் சிந்தனைகள், சென்ற வருட நிகழ்ச்சிகளுக்குப் பின்னால் ஓடி மீட்டுக் கொண்டிருந்தன.

முதலில் தன் பூர்வீக மண்ணிற்கேற்பட்டிருந்த சாபங்களையும், சோதனைகளையும் எண்ணிப் பார்த்தான். தென்மதுரையிலிருந்து 49 ஆட்சிப் பிரிவுகளை ஆண்டிருந்த பாண்டியரின், ஆட்சிப் புலங்கள் அனைத்தும் கடற்கோளுட் தாண்டு அழிய, எஞ்சி நின்றது ஈழமே. ஈழம் தனித்தீவாகிய பின் சிற்றரசுகளின் ஆட்சிகளின் கீழே விடப்படலாயிற்று. இவ்வாறு தனித்துப்போன ஈழத்தில் வாழ்ந்திருந்த பழந்தமிழ்க் குடிகள் பல அரசியல் இன்னல்களுக்கும், இன ஊடுருவல்களுக்கும் ஆளாகியிருந்தமை, ஒரு வரலாற்றுச் சோகமே. இருப்பினும், வடவீழம் இன்னமும் தமிழ்ப் பாரம்பரியங்களைக் கொண்ட மண்ணாகவே மிளிர்கின்றது. மூவேந்தர்கள் தென்னீழத்தை ஆக்கிரமித்த சிங்கள இனத்தை கட்டுப்பாட்டில் வைத்திருக்கப் படைதிரட்டி வந்து பலமுறை நிலைதளர வைத்துள்ளனர். ஆனால் பிற்காலத்தில் முதற்குலோத்துங்க சோழன் பொல்லநறுவையில் தனது அதிகாரத்தை ஏற்படுத்தியிருந்தும், முதலாம் இராசராசன் ஏற்படுத்தியிருந்த 'ஈழமான மும்முடிச் சோழமண்டலப் பிரிவினை' தக்க வைத்திருப்பதில் அக்கறையில்லாமல் தனது மகளைச் சிங்கள இளவரசனுக்குத் திருமணம் செய்து வைத்திருந்தான். அதனால் பொல்லநறுவையில் தனது அதிகாரத்தை

இழந்திருந்த நிலையில், வடக்கே யாழ்குடா நாட்டின் வருவாயைப் பெறும் நோக்கில், தளபதி கருணாகரத் தொண்டமானை அங்கு அனுப்பியிருந்தான்.

இவ்வாறு யாழ்குடாவைப் பொறுப்பேற்ற கருணா கரத் தொண்டமான், யாழ்குடாத் தமிழரசுகளை யெல்லாம் தன் கட்டுப்பாட்டிற்குட்படுத்தி, நெல், உப்பு முதலானவற்றினைக் கப்பமாகப் பெற்று சோழ நாட்டிற்கு அனுப்பி வந்தான். அதனோடு தனது உள்நாட்டு அதிகாரத்தை உறுதி செய்து கொள்ளுமுகமாகத் தொண்ட மான் தன் பாசறையை இணுவிலில் அமைத்திருந்தான். அதனோடு தனது வழிபாட்டிற்காக கருணாகரப் பிள்ளையார் கோவிலையும் கட்டியிருந்தான். இக்கோவிலின் வருடாந்தத் திருவிழாவின் போது வடவீழச்சிற்றரசுகள் அனைவருக்கும் அழைப்புகளை விடுத்து, அவர்கள் கலந்து கொள்ளும் வகையிலும் ஏற்பாடுகளைச் செய்திருந்தான்.

இவ்வாறு வருடா வருடம் கருணாகரப் பிள்ளையார் கோவில் திருவிழாவினை முன்னிட்டுச் சிற்றரசர்கள் மட்டுமன்றி, மக்களும் திரண்டு வந்து பங்கு பற்றி வந்தனர். நாட்டு மக்களனைவரும் ஒன்றுபட்டு திருப்பணிகளைச் செய்வதனால், இணுவில் நகரமே தேவலோகமாக காட்சியளிக்கும். அங்கு சிற்றரசுகளுக்குப் பாடிவீடுகள் அமைத்துக் கொடுப்படுதலினால், சிற்றரசர்கள் குடும்பத்தினருடன் வந்து தங்கி, தத்தம் இறை பணிகளையும் நிறைவேற்றி இன்புறுவர். அதனோடு தொண்டமானுக்கும் கையுறைகளை வழங்கிக் கௌரவித்துத் திரும்புவது வழமையாகும்.

சென்ற வருடம் நடைபெற்ற இந்தத் திருவிழாக் கொண்டாட்டத்திற்றான் தான் இளமைப்பருவத்தை எட்டிவிட்டதாக செம்பியன் உணர்ந்து கொண்டான். அதுவரை காலமும் விளங்கியிருக்காத உளமாற்றங்களையும், உடல்மாற்றங்களையும் அவனால் அனுபவிக்கத் தவறவில்லை. இளமை களைகட்டியதனால் அவன் ஓர் ஆண் அழகன் எனும் வகையில் தோற்றமளித்தான். தாய், தந்தையருக்கு அவன் தோற்றம் அதிக கற்பனைக் கோட்டைகளை உருவாக்கி விட்டிருந்தது. ஆனால் இன்று நிலைமைகள் சற்று விலகிச் செல்லத் தொடங்கலாயிற்று. செம்பியன் பெற்றோருடன் வந்திருந்தாலும் சுதந்திரமாக கோவிற் திருவிழாவில் கலந்துகொள்ள அனுமதிக்கப் பட்டிருந்தான். அதனால் தெய்வீகமயமாக்கப்பட்ட கோவிலைச் சுற்றி வலம்வர விரும்பினான். கோவில் வாயிலின் இருமருங்கும் நாட்டப்பட்டிருந்த வாழை மரங்கள் கனிந்த வாழைக் குலைகளின் பாரம் தாங்காது சரிந்து கிடந்தன. இயற்கைக்கு மேலும் அழகூட்டுவதாக மாவிலைத் தோரணங்களும், நிறைகுடங்களும் காட்சி கொடுத்தன.

இத்திருவிழாவிற்கு வருகை தந்த சிற்றரசர்களில் ஒருவரான கப்புதுரகண்டர் 'ஓம்' எனும் மூல ஒலியை எட்டுத்திக்கும் ஊடுருவிச் செல்லவல்ல காண்டாமணியை அறக்கொடையாக வழங்கியிருந்தார். அதனை அன்றைய சுபநேரத்தில் மணிக்கூண்டுக் கோபுரத்தில் கட்டி ஓங்கி ஒலிப்பதற்காகப் பலர் அந்த மணியைக் கம்புகளில் கட்டித் தோளிற் சுமந்து வந்து கட்டியதனைக் கண்ட மக்கள் அனைவரும் கைகூப்பி வணங்கினர். பின்

கப்புதூகண்டரே மணியின் கயிற்றினை இழுத்தடிக்க மணியோசை 'டாங் டாங் டாங்' என்று எட்டுத்திக்கும் எதிரொலித்துக் கொண்டிருந்தது. பின், காற்றில் ஒலி கலந்து விட எல்லா ஒலிகளுமே அடங்கிப் போய்விட்டது போன்ற ஓர் அமைதி அங்கு ஏற்படலாயிற்று. ஆனால், தூரத்திலிருந்து பேச்சொலிகள், சிரிப்பொலிகள் என்பன அமைதியைக் கிழித்து வேகமாக வந்து செம்பியனின் செவிப்பறையில் மோதின.

அப்பொழுது செம்பியன் அவ்வொலிகள் வரும்திசையில் பார்வையைச் செலுத்தினான். அங்கு கருணாகரத் தொண்டமான் சிற்றரசர் கப்புதூகண்டரிடம், மக்கள் நலம், நாட்டுவளம், மற்றும் குடும்பச் சிறப்புகளைக் கேட்டு அளவளாவிக் கொண்டிருப்பது தெரியவந்தது. தொண்டமான் எத்தகைய நட்பினைக் கப்புதூகண்டருடன் வைத்திருக்கின்றார் என்பதனை அறிந்து கொள்ளும் துடிப்புடையவனாக, மக்கள் கூட்டத்தைக் கடந்து சென்று அவர்கள் உரையாடல்களை, அருகிலிருந்த தென்னை மரக்கிளையில் உட்கார்ந்திருந்த கிளிகளைப் பார்த்து ரசிப்பவன் போல் கேட்டுக் கொண்டிருந்தான்.

அப்பொழுது அப் பாடிவீட்டிலிருந்து கோவிலை நோக்கிச் சென்று கொண்டிருந்த இளம் நங்கையரின் கலகலப்பான நகை ஒலியே அதுவென்பதனால், அத்திசை சென்ற கண்கள் வெட்டாமல் அவர்கள் பக்கம் திரும்பினான். அவன் கண்களை நம்பமுடியவில்லை. அது கனவா? நனவா? என்று கூட அவனால் உணர்ந்து கொள்ள முடியவில்லை. அங்கே கப்புதூகண்டர் மகள் கயல்விழி அழகோவியமாக அசைந்து சென்று

கொண்டிருந்தாள். படைப்பின் ரகசியம் தான் என்ன? என்று சொல்லவோ, உணரவோ முடியாது திணறினான் செம்பியன். அவளும், தோழியரும் கைகளில் பூமாலை களை ஏந்தியவண்ணம் சென்று கொண்டிருந்தனர். அழகுப் பதுமையான கயல்விழி அக்கணமே அவன் நெஞ்சத்தில் நிறைந்துவிட்டாள். அதனால் அவன் செயலிழந்தான். அவளுக்கு அடிமையாகினான். 'இவள் யாரோ?' எனக் கேள்விகள் அவனைக் குடையுமுன்னரே, கப்புதூரகண்டர் தன் மகளை தளபதி கருணாகரத் தொண்டமானுக்கு அறிமுகம் செய்து வைக்க விரும்பி, தன் மகளை "கயல்விழி!" என அழைத்திருந்தார். அது கேட்டு அவள் பெயர் கயல்விழி, அவள் கப்புதூரகண்டர் மகள் என அறிந்து கொண்டான்.

கயல்விழி தந்தையின் அழைப்பையேற்று அவரை நோக்கி நகர்ந்தாள். கப்புதூரகண்டர் அவள் தனது மகள் எனத் தொண்டமானுக்கு அறிமுகம் செய்து வைத்தார். பின் தந்தையின் பின் நகர்ந்து மறைந்து நின்றாள். தொண்டமான் அப்பொழுது கப்புதூர் நெல்விளைச்சல் பற்றிப் பேச்சினை மாற்றியிருந்தான். தென்னை மரத்தின் பின்னால் மறைவாக நின்ற செம்பியன் மீண்டும் கயல்விழியின் அழகினை தன் மனத்திரையில் ஓவியமாகத் தீட்டிக் கொண்டிருந்தான். அவள் நடையானது காற்றில் அசைந்தாடும் கொடியானது அப்படியும் இப்படியும் துவள்வது போல் துவண்டு காணப்பட்டது. அதற்கேற்ப அவளது கருநாகமென பின்னிவிடப்பட்ட அவளது நீண்ட பின்னலும் அவளது நடைக்குத் தாளம் போடுவது போல் அசைந்தாடிக் கொண்டிருந்தது. விழிகள் 'கயல்விழி'

என்ற பெயருக்கேற்றவாறு அங்குமிங்கும் கருவிழிகளை ஓடவிட்டுக் கதைகள் பல சொல்லிக் கொண்டிருந்தன.

சந்திரன் தனது காந்த அலைகளால் கடலை ஆட்டி அசைப்பது போல், அவனை அவள் முகம் ஈர்ப்பலை களால் அசைப்பது போல் உணர்ந்தான். செம்பியன் பலவாறு முயன்றும் அவள்மீது வைத்த தன் கண்களை மீட்க முடியாது தவித்தான். ஆனால் அவன் தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டான். இத்திருவிழாவில் பிரம்மன் என்ற சிற்பி அணுவளவான கருக்களைக் கொண்டு படைத்த பெண்மையின் அழகைப் பருகுவதும் தெய்வீகமே. படைப்பின் நோக்கமே உலகை இயங்க வைப்பதுதான். அச்சிலோ அல்லது கைத்திறனாலோ வார்க்கப்படாததும், செதுக்கப்படாததுமான அழகு அங்கு தெய்வீகத்தையே நினைவூட்டுவதாகக் கருதினான். அவ்வாறு அவன் எண்ணங்கள் சுழன்று கொண்டிருக் கையில் தந்தையின் பின்னால் நின்றிருந்த கயல்விழி முதன்முறையாக தென்னை மரத்தின் பின்னால் நின்று தன்னை உற்றுநோக்கும் செம்பியனை நோக்கினாள். இருவர் கண்களும் சந்தித்துக் கதைபேசிக் கொண்டன. நாணத்தால் முகம் சிவந்த கயல்விழியின் கண்கள் மெதுவாக நகர்ந்து நிலத்தை நோக்க முயன்றன. அங்கு ஒரு தெய்வீகக் காதல் முளைவிட்டிருந்ததனை அவதானித்த தோழிகள் அவளைச் சட்டென இழுத்துக் கொண்டு போய் சனக் கூட்டத்தில் மறைந்து விட்டனர்.

அப்பொழுது சுயநினைவுக்குத் திரும்பிய செம்பியன் தான் கண்டதும், அனுபவித்ததும் கனவெனச் சந்தேகம் கொண்டான். அங்கு கப்புதூகண்டர் மட்டுமே நின்றிருந்

தார். கண்களால் கண்ட காட்சிகள் மாயமாய் மறைய, அங்கு எல்லாமே வெறுமையாகித் தோன்றின. மீண்டும், மீண்டும் கயல்விழியைப் பார்த்து கண்களால் பருகி மகிழ்ந்திடத் துடித்தான். ஆனால் அவளை மீண்டும் சந்திக்காமலே சென்ற வருடத் திருவிழா நிறைவேறி யிருந்தது. அதனால் இன்று வரை அந்த ஏக்கமும், தவிப்பும் அவனுக்குள்ளேயே அடங்கிக் கிடந்தன.

இன்று மீண்டும் கருணாகரப்பிள்ளையார் திருவிழாவிற்காகிய அழைப்பினை ஏற்றுச் செல்லும் பயணத்தில் அந்தப் பழைய காட்சிகள் அவனது உள்ளத்தில் மீண்டும் மீண்டும் தோன்றி அலைகளை மோதவிட்டிருந்தன. கயல்விழியை மீண்டும் காணநேரிடின், அவளிடம் தன் காதல் உணர்வுகளைப் பகிர்ந்திட வேண்டும் என்ற முடிவுடனேயே இம்முறை திருவிழாவிற்கு வந்து கொண்டிருந்தான். ராஜநடை செம்பியன்பற்றுக் கடல் எல்லையினை அடைந்ததும், செம்பியன் தன் தந்தையின் ஆட்சிப் பிரிவின் எல்லைக் கடலை கனிவோடு நோக்கினான். கடல் தன் இளவரசனின் உள்ளுணர்வு களைப் புரிந்து கொண்டு வானவில்லால் அலங்கரிக்கப் பட்டிருந்த அடிவானத்தைத் தழுவிச் சுமந்திருந்தது. சூரியனும் அவனது உடலை மென்மையான ஒளிக்கீற்றி னால் வருடி விட்டிருந்தது.

கடலோரத்தின் இயற்கையழகு ஒரு கணம் அவனைக் கடலையே ஊடுருவி ஆராய வைத்திருந்தது. கடல் அலைகள் ஒரு கையால் அடிவானத்தினையும், மறுகையால் பூமியின் எல்லையையும் தொட்டுக் கொண்டு இருகரையும் ஓடிவிளையாடிக் கொண்டிருக்கின்றன.

அதனோடு தன்னைத் தஞ்சமாகக் கொண்டு பிழைக்கும் மீனவர்களுக்கு இல்லையென்று சொல்லாது, மீன் இனங்களை வாரி வாரிக் கொடுத்துக் கொண்டே இருக்கின்றது. இவ்வாறு தனக்கிருக்கும் கடல்வளமும், பூமிவளமும் தன் மக்களை என்றைக்கும் நிறைவாக வைத்திருக்க வல்லன என நினைத்துத் தனக்குள்ளே மகிழ்வடைந்தான். தன் கடலைப் பார்த்துப் பெருமிதம் அடைந்து கொண்டு வானத்தை அண்ணாந்து பார்த்தான். அப்பொழுது அங்கு வெண்திரைகளைக் காணவில்லை. அழகு சொட்டும் கடலின் வானத்தைப் பார்த்து செம்பியன் மெய்சிலிர்த்து நிற்பதனைக் கண்ட மேகங்கள் பொறாமை கொள்ளலாயின. அதனால் கட்டம், கட்டமாக கடல்நீரை மொண்டு கருமேகக் கூட்டங் களாக உருவெடுத்திருந்தன. ஒரு நொடிப்பொழுதில் அங்கு நிலவிய இயற்கையெல்லாம் நிலைதளர்ந்தன. பூமியின் நிலப்பரப்பில் முக்காற்பங்கினை தனக்காக்கிக் கொண்டு, பூமியைச் சுற்றி வளைத்திருக்கும் கடலோ பொறுமையுடன் ஆட்டம் அசைவின்றி உயிரற்றது போல் படுத்துக் கிடந்தது. உண்மையில் பருவமழைக்காலம் அல்லாத காலமாயினும், கோவிற்திருவிழாக் காலங்களில் வானத்திலிருந்து நீரைச் சொரிந்து உயிரினங்களை வாழ்த் தவே அன்றைய மேகக்கூட்டங்கள் முயற்சியிலீடு பட்டிருந்தன. இருப்பினும், அன்று சற்று மாறுதலாகவே மேகங்கள் செயற்பட்டிருந்தன. அடிவானமும் பூமியும் தொட்டு விளையாடுகின்ற எல்லைகள் எங்கே என்று தேடும் நிலையை அங்கு இருள் ஏற்படுத்தி விட்டிருந்தது. செம்பியனை ஒளிக்கீற்றுக்களாற் தடவிவந்த சூரியனும் சட்டென ஒளிந்து கொண்டான். பூமியின் நடவடிக்கை

களைப் பார்த்து மகிழ வானத்தில் எவருமே காணப்பட வில்லை. உயிரினங்களை அச்சுறுத்தும் வகையில் இடிமுழக்கம், மின்னல் என்பவற்றுடன் மழை 'சோ' என்று கொட்டிக் கொண்டிருந்தது. வெளியே உணவு தேடிக் கொண்டிருந்த குருவி இனங்கள் நனைந்த இறகுகளை அடித்துப் பறப்பதற்கு முயன்று கொண்டிருந்தன. கடலோரப் புதர்களில் உறங்கிக் கொண்டிருந்த மிருகங்கள் தமக்குப் பாதுகாப்பளிக்கக்கூடிய மேட்டுநிலப் புதர்களை நோக்கி ஓடின. ஆனால் கடலின் கரைகளை அழகூட்டும் வகையில் அங்கு ஓங்கிவளர்ந்திருந்த தென்னைகள் வேர்களை வேகமாக இழுத்துக் கொண்டு ஓட முயன்றன. ஆனால் பரிதாபம். காற்று எதிர்த்து வீசவே அவை சட சட என ஓலமிட்டுக் கொண்டு கடலுக்குள்ளேயே வீழ்ந்து ஒப்பாரி விட்டழுதன.

செம்பியனுக்கு அதுகாலம் வரை இயற்கை இவ்வளவு கொடூரமாகத் தொழிற்படும் என்று தெரிந்திருக்கவில்லை. அன்பே வடிவான சிவம் ஊழித்தாண்டவத்தில் கோர வடிவெடுத்து ஆடுவார் என்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கின்றான். அவ்வளவு தான். ஆனால் இன்று அந்த ஊழித் தாண்டவம் எப்படியிருக்கலாம் என்பதனை சிறிதள வாவது உணர்ந்து கொண்டான். கருமேகங்கள் பூமியின் மீது நீரை வாரி வாரி இறைத்துக் கொண்டிருந்தன. செம்பியன் ஒரு கணம் திடுக்கிற்றான். அவனுக்கு பழந்தமிழ் நாடுகள் ஒரு பெருவெள்ளத்திற்குள் தான் தாண்டு முற்றாக அழிந்துபோன போது பஃறுளியாறும், பன்மலைகளும் முற்றாகத் தம் அடையாளத்தை

இழந்திருந்தன. அப்பொழுது எஞ்சிய நிலத்துண்டு 'ஈழம்' எனும் ஏழ்பனைநாடே என்ற வரலாற்றுக் கதையை நினைவுக்குக் கொண்டு வந்தான். இவ்வாறு இறைவன் தமிழர்களைக் கொடூரமாகத் தண்டிக்க, இவர்கள் இழைத்த பாவங்கள் தான் என்ன? அது இன்னது என்று தான் இதுவரை அவனுக்குப் புரியாத புதிராகவே இருந்து வருகின்றது. யூதர்கள் இறைதூதனான யேசுநாதரை சிலுவையில் அறைந்து துன்புறுத்தினார்கள் என விவிலிய வேதம் பதிந்து வைத்துள்ளது. இவர்களுக்கு அப்படி ஒரு பதிவும் இருப்பதாகத் தெரியவில்லையென உதடுகள் முணு முணுத்துக் கொண்டன. பெருமூச்சொன்றும் அதிவேக மாக வெளியேறியது.

மீண்டும் ஒரு கடற்பெருக்கின் முன் நடவடிக்கை களாக இவையிருக்குமோ என்று கருதிக் கடலைக் கண்ணுக்கு எட்டிய தூரம் உற்றுப் பார்த்தான். கடலின் செல்வர்களான மீனவர்கள் வலைகளை இழுத்துச் சுருட்டி வள்ளங்களில் போட்டுவிட்டு கரையை நோக்கி வந்து கொண்டிருந்தனர். கடலின் இரகசியங்களை இவர்களேயறிவர். அதனால் கரையாத மனத்துடன் வாழ்வர் என்பர் சிலர். செம்பியனுக்கோ அவர்கள் அவனது குடிமக்கள். அதனால் அவர்கள் அனைவரும் பாதுகாப்பாகக் கரையேறுவதனையிட்டு ஆறுதலடைந் தான். பொதுவாக நாட்டு வளப்பங்களைத் தெரிந்து கொள்வதில் மன்னர்கள் அதிக அக்கறையுடன் அவர் களது குடியிருப்புகளையணுகி ஆராய்வர். இந்த வகையில் தந்தை செம்பியன் மாதேவனுடன் செம்பியனும் செல்வது வழக்கமாகையால், இன்று அந்தவுணர்வு அவனிடத்திலும் மீதூரப் பெற்றிருந்தது.

சோவெனக் கொட்டிய மழைக்கு செம்பியனும், ராஜநடையும் ஒரு மீனவர் கொட்டிலிலேயே ஒதுங்கி யிருந்தனர். மழை திடீரென ஓய்ந்தது. மேலே அண்ணாந்து பார்த்தான். எதுவுமே நடக்காதது போல் வெண்மேகக் கூட்டங்கள் வேறோர் அலுவலுக்காக ஓடிக்கொண்டிருந் தன. செம்பியன் பயணத்தைத் தொடர ராஜநடை மீது ஏறி உட்கார்ந்தான். ராஜநடையும் தனக்குப் பழக்கப்பட்ட பாதையூடாக தொண்டமானின் பாசறையை நோக்கி ஓடத் தொடங்கியது.

சரியாக காலை ஒன்பது மணிக்கு இணுவிலையடைய, தொண்டமானின் காவலாளிகள் செம்பியனை வரவேற்ற னர். செம்பியனும் ராஜநடைக்குரிய தங்குமிடத்தில் அதனை ஓய்வெடுக்க விட்டுவிட்டு, தனக்கேயுரித்தான பாணியில் அரச மரியாதைகளையேற்றுக் கொண்டு உள்ளே சென்றான். அப்பொழுது தொண்டமான் அவனை வரவேற்று உரையாடிக் கொண்டிருக்கையில், சில சிற்றரசர்கள் ஏற்கனவே திருவிழாவிற்குச் சமூகமளிக்க முடியாத நிலைமைகளை அறிவித்திருக்கிறார்கள் என்பதனைத் தெரிவித்தான். அப்பொழுது கப்புதூகண்டர் குடும்பத்தினர் அன்றைய விழாவிற் பங்குபற்ற மாட்டார்கள் என்பதனை ஊகித்துக் கொண்டான். அதனால் அவனுக்கு நிற்பதென்பது ஒரு முடியாத காரியமாகி விட்டிருந்தது. வழமை போல் கருணாகரப் பிள்ளையார் கோவில் விதானங்கள் கட்டப்பெற்று, வாழை மரங்கள், மாந்தோரணங்கள், பூமாலைகள் என அலங்கரிக்கப் பெற்றிருந்தது. அவையனைத்தும் கயல்விழி இல்லாமையினால் அர்த்தமற்றவையாய்க் கிடந்தன.

மனிதர்கள் தம் சுயதேவைகளை நிறைவேற்றவே தெய்வத்தை நாடுகிறார்கள். இன்று அவனுக்குத் தெய்வத்திடம் என்ன கிடக்கின்றது? எதுவுமே இல்லை. அவன் சாதாரண மனிதனாகிவிட்டிருந்தான்.

அதனால் பிள்ளையார் கோவில் முதற்பூசையைப் பார்த்துக் கொண்டு செம்பியன்பற்றுக்குத் திரும்ப முடிவு செய்து கொண்டான். தொண்டமான் கோவிலின் கிழக்கு வாயில் தேரோட்ட அலுவல்களைக் கவனித்துக் கொண்டிருந்தான். அப்பொழுது அவனருகிற் சென்று செம்பியன் தான் அவசரமாக வீட்டிற்குப் போக வேண்டுமென்பதனைத் தெரிவித்தான். அதற்குச் சம்மதம் தெரிவித்த தொண்டமான், கப்புதூகண்டரிடம் திறைவிடயமாக தூது ஒன்று போகமுடியுமோ? என்று வினவினான். அப்பொழுது செம்பியனுக்குக் கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்து நின்று அருள்புரிவதாகக் கருதி, சம்மதித்தான். அப்பொழுது பிள்ளையாருக்கு நன்றி கூறுமுகமாக மனத்தில் தெய்வீகத்தை நினைவு கூர்ந்தான். பின் அவனது தூதுச் செய்தியினை அறிய விரும்பி, தொண்டமானை நோக்கினான். அப்பொழுது தொண்டமான் 'கப்புதூகண்டர்' வருடாவருடம் திறையாக சோழநாட்டிற்கு அனுப்புகின்ற நெல்மூட்டைகளை வழமை போல் அனுப்பி வைக்காமையால், அதன் காரணத்தை செம்பியன்பற்று இளவரசர் சென்று அறிந்து வருதல் ஏற்றதாகக் கருதுவதாகக் கூறினான். செம்பியனுக்கு கப்புதூருக்குத் தூதுவனாகச் செல்வதானது 'பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல்' இருந்தது. அதாவது செம்பியன் எடுத்துச் செல்லவிருக்கும் தூதுச் செய்தியானது

விரும்பப்படாததொன்றாயினும், அங்கு மீண்டும் கயல்விழியை அவளது தந்தையின் அரண்மனையிலேயே காணும் வாய்ப்பானது, அவனிடத்தில் இனம்தெரியாத மனநெகிழ்வினை ஏற்படுத்தியிருந்தது. ஆனாலும் அவளது தந்தையிடம் தொண்டமானது திறையைக் கேட்டுச் செல்லும் தூதினை கௌரவக் குறைவாகவே கருதினான். முடிவில், கயல்விழியே அவனை அழைப்பதாகக் கருதி, தனது போராட்டத்தைத் தணித்திருந்தான்.

மாலை ஐந்து மணிக்கெல்லாம் ராஜநடையும், செம்பியனும் தமது அரண்மனைக்குத் திரும்பியிருந்தனர். வழமை போல் திருவிழாவில் கலந்து கொள்ளாமல் அன்றே செம்பியன் திரும்பி வந்தமையையிட்டு, அவனது தாய் செம்பியன் மாதேவி தனயனிடம் விசாரித்தாள். அப்பொழுது திருவிழா வழமை போல் சிறப்பாக நடைபெறினும், பல சிற்றரசர்கள் இம்முறை சமூகமளிக்க வில்லையென்பதனையும், அதனால் தானும் திரும்பி விட்டதாகத் தெரிவித்தான். இருப்பினும் கப்புதூரகண்டரிடம் தான் எடுத்துச் செல்லவிருக்கின்ற செய்தியையும் குறிப்பிட்டான். அப்பொழுது செம்பியன் மாதேவி தாம் சோழப் பேரரசின் ஆட்சியதிகாரத்திற்குட்பட்டவர்களாகையினால், அப்பணியைச் செய்தல் வேண்டும் என்பதனை ஏற்றிருந்தாள். அதனோடு கருணாகரத் தொண்டமானின் வருகைக்குப் பின், வடவீழத்துச் சிற்றரசர்கள் குடும்ப விழாக்களுக்கு அழைப்பு விடுத்தல், கூடிக் குழாவுதல் என்பன குறைந்து விட்ட நிலையில், கப்புதூரகண்டரின் தற்போதைய அரசியல் நிலைமைகள் பற்றித் தனக்கு ஏதும் தெரியாது என்றும் சலித்துக்

கொண்டாள். எனினும் அதிகாலையிலே புறப்பட்டுப் பயணத்தை மேற்கொள்ளும்படி பணித்துவிட்டு அவள் சென்று விட்டாள்.

செம்பியன் பிரயாணக் களைப்பால் சிறிது நேரம் தன்னை மறந்தும், உலகை மறந்தும் தூங்கிக் கொண்டிருந்தான். ஆனால் வாயில் காவலில் இருந்த மாணிக்கதேவன் எனும் நாய் திடீரென ஊளையிடவும், பணியாட்கள் அதனைப் பார்த்து அச்சமடைந்து ஆரவாரப்படும் சத்தங்களைக் கேட்டும், கண்களை விழித்துக் கொண்டான். ஏதோ துர்க்குறி என்று நினைத்த வனாய் இப்படியும், அப்படியும் புரண்டு படுத்துக் கொண்டிருந்தான். சிறிது நேரத்தால் ராஜநடையின் கனைப்பைக் கேட்டு, தலையை உயர்த்திச் சாளரங் களூடாக வானத்தைப் பார்த்தான். அங்கு விடிவெள்ளி நேரத்தைச் சொல்லிக் கொண்டிருந்தது. உடனே எண்ணங்களைச் சுமையாகச் சுமந்து கொண்டு படுக்கையை விட்டெழுந்து, காலைக்கடனை முடித்துக் கொண்டு இறைவனிடம் 'எல்லோருமே இன்புற்று வாழ வேண்டு'மென்று வேண்டிக் கொண்டு, கயல்விழியை மீண்டும் சந்திக்க வாய்ப்பேற்படும் என்ற முடிவுடன் ராஜநடையின் கொட்டகையை நோக்கி விரைந்தான். ராஜநடை ஏற்கனவே தயாராகி பயணத்திற்குக் காத்திருந்தது.

அப்பொழுது சூரியனும் அன்று ஏனோ தானோ என்று வெளியேறிக் கொண்டிருந்தான். உலகத்தின் கண்ணாகிய சூரியனுக்கு பூமியில் அறம் தழம்பும் காலங் களில் சோர்வானது தவிர்க்க முடியாததொன்றாகும்.

இருப்பினும் கிழக்கு வானில் கதிர்களை விரித்திருந்த சூரியனை நோக்கி, வணங்கிக் கொண்டு செம்பியன், ராஜநடை மீது ஏறி அமர்ந்து கடலோரமாக குடாரப்பு, நாகர்கோயில், அம்பன், குடத்தனை வரை சென்று, பின் குறுக்காக வரணி, அந்தணந்திடல் ஊர்களைக் கடந்து கப்புதூரைச் சென்றடைந்தான். அப்பொழுது கப்புதூகண்டர் குடும்பத்தின் வழிபாட்டுத் தலமான பிள்ளையார் கோவிலின் பூசையை ஊர்மக்களுக்கு அறிவிக்கும் ஆயத்த மணி 'டாங் டாங்' என ஒலித்துக் கொண்டிருந்தது.

காலை ஏழு மணிக்கெல்லாம் கப்புதூகண்டரின் அரண்மனையை அடைந்திருந்தான். வாயிலில் காவலாளிகள் எவரும் இல்லாமையால், கப்புதூரில் அரசனுக்கு காவலாளிகள் எவரும் தேவைப்பட்டிருக்க வில்லையென்பது புலனாகியது. அங்கு எல்லோருமே ஒரு குடும்பத்தவர் போல் வாழ்ந்திருந்தனர். எனவே செம்பியன் கப்புதூரின் சிறப்பென்ன? என்று அறிந்து கொள்ள கண்களை நாலு திசைகளிலும் செலுத்தினான். நிலமோவெனில் முதல் நாள் மழைக்குக் குளிரூட்டப்பட்டு பச்சைப்பசேல் எனப் புதுமை பெற்றிருந்தது. கொஞ்ச தூரத்தில் உழவர்கள் தத்தம் நெற்களஞ்சியங்களில் நெல்மூட்டைகளைப் பழுதுபார்த்து பாதுகாப்பரண்களில் அடுக்கிக் கொண்டிருந்தார்கள். வேறுசிலர் ஈரநிலத்தை ஏர்பூட்டிக் கிளறிவிட்டுக் கொண்டிருந்தார்கள்.

பெண்கள் தம் பராமரிப்பிலுள்ள ஆடு, மாடு, கோழி, பூனை ஆகியனவற்றை அழைத்து வைக்கோல், புண்ணாக்கு, மற்றும் தின்பண்டங்களைக் கொடுத்துக்

கொண்டு நின்றார்கள். எங்கு பார்த்தாலும் ஒன்றுபட்ட கடும் உழைப்பும், சுயதேவைகளையிட்ட முயற்சிகளுமாகவே காணப்பட்டன. இவர்களுக்கு யாரும் எதையாவது கொடுக்க முயன்றால் அது தவறாகவே தெரியும். ஏனெனில் அடுத்தவன் உழைப்பில் தங்குவது என்பது இவர்களுக்குத் தன்மானமற்ற வாழ்வாகும். அப்படியான இம்மக்களின் கடும் உழைப்பின் பயனை இவர்கள் தாமே அனுபவிக்காது சோழ நாட்டிற்குத் திறையாகச் செலுத்துவது என்பது செங்கோன்மைக்கு இழுக்காகும் என்று செம்பியனும் கருதினான்.

அவ்வாறு கப்புதூர் நாட்டு வளத்தில் மனம் கொண்ட செம்பியன் அங்கு அசையாது நின்று கொண்டிருந்தான். ஆனால் கல, கல என்ற சிரிப்பொலி கேட்டதும், மெய்சிலிர்க்கத் திரும்பினான். அப்பொழுது அவன் கண்களை நம்பமுடியவில்லை. எதிரும் புதிருமாக கயல்விழியும், தோழியரும் கைகளில் பூத்தட்டங்களுடன் வாயிலை நெருங்கிக் கொண்டிருந்தனர். அவன் வாயிலின் ஒருபக்கமாக ஒதுங்கி நின்று கயல்விழியையே பார்த்துக் கொண்டு நின்றான். அதனையுணர்ந்த கயல்விழி வெட்கத்தில் நாணிக் கொண்டு, விரைவாகக் கோவிலை நோக்கி நடந்தாள். கண்ணுக்கெட்டிய தூரம் அவள் போன திசையே பார்த்துக் கொண்டிருந்த கண்கள், அவள் மறைந்த பின்னும் அத்திசையையே நோக்கியிருந்தன. அப்பொழுது சுவாமி அறையில் தியானத்திலிருந்து எழும்பிய கப்புதூகண்டர் வழமைபோல் பொதுமக்கள் யாராவது தன்னைக் காண்பதற்கு வந்திருக்கிறார்களா? என்று பொதுமக்கள் கூடத்தை எட்டிப் பார்த்தார்.

அதுவரை எவரும் வந்திருக்கவில்லை என்பதனை உறுதிசெய்து கொண்டு வாயிலை அணுகினார்.

அப்பொழுது இளவரசன் செம்பியன் எதனையோ பார்த்து மனம்குவிந்து விட்ட நிலையில் அங்கு நின்று கொண்டிருந்ததனை அவதானித்தார். எனினும் அவனின் எளிமையான போக்கினையிட்டு உள்ளூர மகிழ்ந்து கொண்டு அவனது தோள்களில் கையினை வைத்தபடியே "இளவரசே! நீங்கள் இங்கே ஏன் காத்திருக்கிறீர்கள்? உள்ளே வாருங்கள்" என வரவேற்று உள்ளே அழைத்துச் சென்று, இருக்கையைக் காட்டி உட்கார வைத்தார். பின் தனக்குள்ளேயே அவன் அழகுத் தோற்றத்தினை ரசித்துக் கொண்டு, கயல்விழியுடன் செம்பியனைச் சோடி போட்டும் பார்த்துக் கொண்டார். பின், அவன் வந்த காரணம் யாதோ? என்ற தோரணையில் அவனை நோக்கினார். செம்பியன் தன் இக்கட்டான நிலையைச் சமாளித்துக் கொண்டு, "அரசே! அப்படியொரு பெரிய விடயங்கள் எதுவுமில்லை. கருணாகரப் பிள்ளையார் கோவில் திருவிழாவிற்கு நான் சென்றிருந்த சமயம், தொண்டமானின் பிரதானிகள் திருவிழாவினைக் கவனிக்கும் பொறுப்பில் இருப்பதனால், உங்களது திறையாகிய நெல் மூட்டைகள் வரத் தவறியதற்காகிய காரணத்தை என்னை அறிந்து வரும்படி என்னிடம் கோரியிருந்தார். அவ்வளவு தான். எனக்கும் உங்களைப் பார்த்துப் போகக் கூடிய வாய்ப்பு இதுவென்று ஏற்றுக்கொண்டேன்" என்று கூறி நிறுத்தினான்.

கப்புதூகண்டர் சலனமெதுவுமின்றி அமைதியான குரலில் விடையளித்தார். "செம்பியன்பற்று இளவரசரே!

உங்கள் ஆட்சிப்பிரிவில் கடல்வளம், நிலவளம் என இருவகை வளங்கள் உள. ஆனால் நாம் நிலவளத்தினை மட்டுமே எம் மக்கள் நலனுக்காகக் கொண்டிருக்கின்றோம். இருப்பினும் எம் பிரிவில் வெள்ளைப் பரவை, கரணவாய் முதலான பகுதிகளில் உப்பு விளையும் சிறுபகுதிகள் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் சோழங்களில் பாளையம் போட்டிருக்கின்ற தொண்டமானின் அதிகாரிகள் அங்கு விளையும் உப்புகளைச் சூறையாடி சோழநாட்டிற்கு அனுப்பி விடுகின்றார்கள். அதனால் நாம் உப்புப் பற்றாக்குறைக்குள்ளாக்கப் பட்டிருக்கின்றோம். நெல் விளைச்சலிலே தான் எம்மக்கள் வாழ்வும், தாழ்வும் தற்பொழுது தங்கியுள்ளதனால், நாம் நெற்களைக் களஞ்சியப்படுத்தி வருகின்றோம். மக்கள் நலன் தான் என் தலையாய பணியாகும். 'சோழநாடு சோறுடைத்து' எனப் பிதற்றிக் கொள்ளும், அவர்கள் ஏன் எம் மக்கள் நலனில் அக்கறையில்லாதவர்களாக இருக்கின்றார்கள். எனவே இளவரசே! இம்முறை நெல்மூட்டைகளுக்குப் பதிலாக, எம் குடிமக்களின் பழைய ஏர்களையெல்லாம் சேகரித்து அனுப்பிவிடுவேன் என்றும், அவர்களை எமது ஏர்களின் துணை கொண்டு உழுதுண்டு வாழும்படியும் கூறிவிடுங்கள்" என்றார்.

இச்செய்தியைக் கேட்ட செம்பியனுக்கு கப்புதூகண்டரின் நியாயங்களும், முடிவுகளும் மிகவும் ஏற்றதாகத் தெரிந்தது. ஆயினும், தொண்டமான் அச்செய்தியை நியாயமானதாக எடுக்காமல், சவாலாக எடுப்பின் தான் கயல்விழி மீது வைத்திருக்கும் காதலுக்கு இடையூறு விளையலாமோ என அச்சமுற்றான். இருப்பினும் கடமை,

கண்ணியம் எனும் கோட்பாடுகளில் அதிக நம்பிக்கை யுடையவனாதலால் மன உறுதியுடன் கப்புதூகண்டரிடம் விடைபெற்றுக் கொண்டு, ராஜநடையுடன் அரண்மனை வாயிலின் வெளியே வந்ததும், மீண்டும் கயல்விழி சென்று மறைந்த கோவில் பக்கமாகவே அவன் கண்கள் சென்றன. ஆம், அங்கே காலைப்பூசை வழிபாடுகளை முடித்துக் கொண்டு கயல்விழி திரும்பிக் கொண்டிருந்தாள்.

சென்ற வருடம் திருவெம்பாவை விரதத்தை நற்கணவரை வேண்டிப் பிடித்ததன் பலனோ என்னவோ, அவளும் அரைகுறையாகச் செம்பியனைப் பார்த்திருந் தும், முழுமையாக மனதைப் பறிகொடுத்திருந்தாள். உண்மையில் அவன் செம்பியன் யார்? அவன் ஊர் பெயர் யாவை? என எதுவுமே அறிந்திருக்கவில்லை. ஆனால் இன்று தம் வாயிலில் நின்று கொண்டு தன்னைப் பார்க்கும் செம்பியன் எதிரில் போய் நின்று, அவன் யார்? என்று அறியத்துடித்தாள். தோழியருடன் அரண்மனையை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள். செம்பியன் கற்சிலையென அங்கேயே நின்று கொண்டிருந்தான். கயல்விழி தன்னை நோக்கிக் கொடிபோல் துவண்டு வருவதனைக் கண்டு, சுயநினைவு பெற்றான். ராஜநடையும் ஏதோ உணர்ந்து கொண்டது போல் கனைத்து அவனைத் தன்பக்கம் ஈர்த்து உசார்படுத்தியது. ராஜநடையின் சமயோசிதத்தினை உணர்ந்து கொண்டு, ராஜநடையினை அழைத்துக் கொண்டு அவள் வந்த திசையை நோக்கி நகர்ந்தான். அவளும் தோழியருடன் அவனை நோக்கியே வந்து கொண்டிருந்தாள்.

செம்பியன் சிறிது தூரத்தில் நின்று கொண்டே, “இளவரசியே! நான் செம்பியன்பற்று இளவரசன். என் பெயர் ‘செம்பியன்.’ தங்கள் தந்தையாருக்குத் தளபதி தொண்டமானிடமிருந்து ஒரு செய்தியை எடுத்து வந்திருந்தேன். இச்சந்தர்ப்பத்தில் உங்களைச் சந்திக்காமல் போவதென்பது எனக்கு முடியாத காரியமாகி விட்டுள்ளது” என்று தன் காதலை மறைமுகமாகக் கூறியிருந்தான். அப்பொழுது கயல்விழி நாணத்தால் தலையைக் குனிந்தபடியே மௌனித்துப் போயிருந்தாள். இவ்வாறு அவளது சம்மதத்தைப் பெற்றுக் கொண்ட செம்பியன் “நான் போய் வருகிறேன் கயல்விழி” என்று கனிவுடன் கூறிக்கொண்டு ராஜநடையுடன் புறப்பட்டான். கண்ணுக்கெட்டிய தூரம் வரை திரும்பிப் பார்த்த வண்ணமே போய்க் கொண்டிருந்தான். கயல்விழியும் அவன் மறையும் வரை அங்கேயே நின்றிருந்தாள்.

பெண்மையை நாணமுறச் செய்து, காதல் வயப்படுத்தி விட்டுச் செம்பியன் சென்றுவிட்டான். இளமைப் பருவத்தை அவளும் அடைந்திருந்ததனால், உலக நியதியை அவளால் மீறிக் கொள்ள முடியவில்லை. அதனோடு பாவை நோன்பினைப் பிடித்துவரும் கயல்விழி, இப்படியான சகுணங்களை எதிர்பார்த்த வளாகவே இருந்தாள். தோழியர் அந்தக் காலத்தில் காதல் தாபத்தைத் தணிக்க, காதலரிடையே தூதுவர்களாகப் பணியாற்றியிருந்தனர். இங்கு அப்படியான நடவடிக்கை களுக்கு அவசியம் இருக்கவில்லை. ஏனெனில் கப்புதூகண்டர் ஏற்கனவே செம்பியன் மீது ஒரு கண் போட்டிருந்தார். அதுபற்றி அரசியிடமும் எடுத்துரைத்

திருந்தார். அதனால் கயல்விழியின் காதல் பெற்றோர் ஆதரவுடன் திருமணம் வரையும் அவளை இழுத்து விட்டிருந்தது.

செம்பியன், கயல்விழியினிடம் துளிர்த்திருந்த காதல் வெளிப்பாடுகளை மீண்டும், மீண்டும் தன் மனக்கண் முன் வைத்து ரசித்திருந்தான். ஆனால்! ஆனால்! அவனது தூதுச் செய்தியானது விபரீதங்களை விளைவிக்குமோ என்று அடிக்கடி நினைத்துக் குழம்பியுமிருந்தான்.

கருணாகரத் தொண்டமானின் பாடி வீட்டை நோக்கி ராஜநடை மெதுவாகப் போய்க்கொண்டிருந்தது. ஏனெனில் செம்பியனின் மனம் பின்னோக்கி கயல்விழியிடம் சென்றிருந்தமையால் ஆறுதலாகப் போகலாயிற்று. ஆனால் கருணாகரத் தொண்டமானின் அதிகாரிகள் இவன் வரவை எதிர்பார்த்திருந்தமை யினால், ஆவலோடு எதிர்கொண்டு வந்து அழைத்துச் சென்றார்கள். தொண்டமான் முகமலர்ச்சியுடன் செம்பியனே! நீர் கொண்டு வந்திருக்கும் செய்திதான் யாதோ? எனும் வகையில் அவனை நோக்கினான்.

செம்பியன் அங்குள்ள சூழ்நிலைகளை முற்றாக உணர்ந்து கொண்டு தணிவாகப் பதிலளித்தான். கப்புதூகண்டர் பிரிவில் உற்பத்தியாகும் உப்புகளை சோழநாட்டுப் பணியாளர்கள் முற்றாக சோழநாட்டிற்கு அனுப்பி விடுவதனால், அங்கு உப்புப் பற்றாக்குறை அதிகமுண்டென்பதனை விவரித்தான். அதனால் கப்புதூகண்டர் மக்கள் நலனைக் கருத்திற் கொண்டு இம்முறை நெற்களை களஞ்சியப்படுத்தி விட்டார்.

அதனால் தமது பழைய ஏர்களை அனுப்பவே அவர் முயற்சி செய்து கொண்டிருக்கிறார். அவற்றை சோழ நாட்டுக் குடிமக்களுக்கு வழங்கினால் அங்கும் அபரி மிதமான நெல் விளைச்சல் ஏற்பட முடியும் என்றும் அவர் தெரிவித்ததாகக் குறிப்பிட்டான்.

அப்பொழுது தொண்டமானின் கன்னங்கள் சிவந்தன. குரல் கரகரத்தது. நெஞ்சு படபடக்க சொற்கள் திணறின. உரமாகக் கத்தினான். "அப்படியா? அங்குள்ள நிலைப்பாடுகள். கப்புதூகண்டர் யாருடன் விளையாட்டைத் தொடங்கியிருக்கிறார் என அறிவாரா? சோழர்களில் இன்றும் வரலாற்றில் மிகச் சிறந்தவனாகப் போற்றப்படும் கரிகாட்சோழனைப் பற்றி அவர் அறிந்திருக்கவில்லை போலும். சிங்களவர் 12ஆயிரம் பேரைக் கைதிகளாக எடுத்து வந்து காவேரிக்கு அணைகட்டிய எமது ஆட்சிப் பலத்தினை இவர் கடுகளவும் மதித்ததாகத் தெரியவில்லை. சோழநாட்டுக் கழனிகளில் விளைச்சல் என்பது என்றுமே குறைவடையாது. இவரது ஏர்களை அங்கு விறகாகவே எரிப்பர். இன்று நேற்றல்ல. கடலால் பிரிக்கப்பட்ட பின்னரும் ஈழம் என்றைக்கும் தாய் நாட்டிற்குத் தன் உற்பத்தியை அனுப்ப வேண்டுமென்றே எதிர்பார்க்கப் பட்டிருந்தது. இதனையே பட்டினப்பாலை 'ஈழத்து ஆக்கம்' எனக் குறிப்பிட்டிருந்தது. தாயகக் கடமைகள், இப்படியிருக்க, இன்று இவர்கள் ஏதோ வேறு நாட்டவர்களுக்கு அடிமைப்பட்டவர்கள் போல் புத்தி பேதலித்துக் கிடக்கிறார்கள்'' என்று கத்தியபடியே பிரதானிகளை அருகில் வரும்படி கையை அசைத்தான். பின்பு அவர்களை நோக்கிக் கூறினான் "பிரதானிகளே,

சோழநாடே ஒரு நெற்களஞ்சியம். அப்படிப்பட்ட நாட்டிற்கு நெற்கொடை பண்ணி மகிழ்வதனை விட்டு, கப்புதூகண்டர் ஏன் அவமதித்து நடக்கிறார்?" என்று வினவினான்.

பிரதானிகளில் ஒருவன் பதிலளித்தான். "தளபதியே! கப்புதூகண்டர் தன்நாட்டு வளத்தினையிட்டு தற்பெருமை கொள்கிறார். அதனால் அவருக்குரிய தண்டனை யாது?" என்று வினவினான்.

"தளபதியே! கப்புதூகண்டர் சோழ நாட்டை விட தன் நாட்டு வளம் உயர்ந்தது என கர்வம் அடைந் துள்ளார். அதனால் அவர் நிலவளம் பாழாய்ப் போகும்படி கடலிலிருந்து ஒரு கால்வாயை வெட்டி, அவர்களது மண்ணை உவர்நிலமாக்கி விடுதலே சரியான தண்டனையாகும்" என்று கூறினான்.

"மிகவும் ஏற்ற தண்டனை இதுதான். ஆகையினால் செம்பியனே உனது தந்தையாட்சிக்குட்பட்ட மக்களை அழைத்துச் சென்று வளலாய்க்கடல் எல்லையிலிருந்து வடமராட்சி, தென்மராட்சி ஊடாக கடல்நீர் உள்நாட்டில் பரவ விடுங்கள். இந்த உப்பாற்றுக்கு தொண்டமானாறு என்று பெயரிட்டு காலந்தோறும் நினைவு கூரட்டும்" என்றான் கருணாகரத் தொண்டமான்.

தொண்டமானின் இந்த முடிவையறிந்து செம்பியன் சீற்றமடைந்தான். தன் காதுகளை ஈட்டியால் குத்தித் துன்புறுத்துவது போன்ற வேதனையுடன் அங்கு குழுமியிருந்தோர் காதுகள் அதிரும்படியாகக் கூறினான்.

"தளபதியே! சோழநாட்டிற்குக் காவேரி, உங்களுக்கு நீர் வழங்கி வளம் செய்வது போல் எமக்கு எந்த ஆறுகளும் கிடையாது. நாம் நீதியாக மக்களை ஆட்சி புரிகின்றோம். இயற்கையும் மும்மாரி தவறாது மழையைத் தந்து எம் மண்ணை வளம்படுத்துகின்றது. எமது பூமி வானம் பார்த்த பூமி. அதனால் வானத்திற்கே பயப்படுவோம். வேறு எவருக்கும் பயப்பட மாட்டோம். அதனால் என் தந்தையின் குடிகளும் தொண்டமானாற்றினை வெட்டி எம் மக்கள் நிலங்களைப் பாழ்படுத்த உடந்தையாக மாட்டார்கள்" என்று கூறி நிறுத்தினான்.

அப்பொழுது தொண்டமான் "செம்பியனே! நீயே போய் வெட்டு" என்று கட்டளையிட்டான்.

அதற்கு செம்பியன் "தொண்டமானே! நீயே போய் வெட்டு" என்று தன் கோபக்கனலை வார்த்தைகளாகக் கக்கினான்.

அப்பொழுது தொண்டமான் "இவனைச் சிறை யிலிடுங்கள்" என்று அதிகாரிகளை நோக்கிக் கட்டளை யிட்டான்.

இச்செய்தி உடனடியாக வடவீழத்துச் சிற்றரசர்கள் எல்லோர் காதிலும் விழுந்தது. எல்லோரும் இந்த நாசகார வேலைக்குத் தமது குடிமக்களைத் துணை போக விடுவதில்லையென உறுதி கொண்டனர். அதனோடு தம் இளைஞர்களுக்கு போர்ப் பயிற்சியளித்து தமது ஆட்சிப் பிரிவுகளைப் பாதுகாத்தல் அவசியம் என்றும் உணர்ந்தனர். தொண்டமானோ தனது வேலையாட்களை அனுப்பித் தொண்டமானாற்றை வெட்டுவித்து கப்புதூர்,

வரணியூடாக தெற்கே செம்பியன்பற்று, உடையார்துறை வரை உப்பு நீரை ஓடவிட்டான். அதன் நன்செய்நில மெல்லாம் உவர்நிலமாகின. எனவே வடவீழச்சிற்றரசு களான வல்லிபுரம், மணற்றி, செம்பியன்பற்று, ஆனைக் கோட்டை, மாந்தை, பூநரி என்பன கப்புதூகண்டர் தலைமையில் கூடி, தொண்டமான் சமூகவிரோதச் செயல்களில் ஈடுவடுவதனால், தமது மக்களும், தாமும் அவனது மேலதிகாரத்தை விரும்பவில்லையென்பதனால், அவனை சோழநாட்டிற்கு அழைத்து, தமது துயரங்களைத் தீர்த்து வைக்கும்படி குலோத்துங்கசோழனுக்கு எடுத்துக் கூற, ஒரு தூதுக் குழுவினரை அனுப்பியிருந்தனர். அதனோடு செம்பியனைச் சிறையிலிருந்து விடுவிக்கு மாறும் கேட்டிருந்தனர்.

செம்பியன் சிறையிடப்பட்ட செய்தி கயல்விழியின் காதில் விழுந்ததும், புயற்காற்றால் சரிந்து விழும் கொடிபோல் மயங்கி விழுந்தாள். அவள் தோழியர் கப்புதூகண்டர் மாதேவியிடம் அவள் நிலையை எடுத் துரைத்தனர். மாதேவியும், கப்புதூகண்டரும் மகளின் துயரத்தைக் கண்டு தமக்குள்ளே தேம்பிக் கொள்கின்றனர். பின் கப்புதூகண்டர் தன்னைத் தேற்றிக் கொண்டு கயல்விழியையும் ஆறுதல்படுத்தி செம்பியனைச் சிறையிலிருந்து மீட்டு அவளுடன் இணைய வைப்பார் என்றும் உறுதிமொழி வழங்கினார். பின்னர் செம்பியனை மீட்கும் திட்டத்திற்குக் கயல்விழியும் ஒரு பிரதானி வேடத்தில் தம்முடன் வரவேண்டுமென்றும் பணித்தார். கயல்விழியும் மாறுவேடத்தில் தந்தையின் பின் அமர்ந்து கொண்டாள். இச்செய்தியானது இணுவில் பொது

மக்களுக்கு ஒற்றர்களால் முன்கூட்டியே எடுத்துச் செல்லப்பட்டிருந்தது. செம்பியனும் புத்துணர்வுடன் கப்புதூகண்டரின் திட்டத்தினை நிறைவேற்றிவைக்க ஆயத்தமானான்.

மக்கள், மற்றும் உயிரினங்கள் அனைத்தும் ஆழ்துயிலில் மூழ்கியிருந்தன. சாமம் 2 மணியாகியிருந்தது. 'மின்னல்' எனும் குதிரை தன்முன்னே தீப்பந்துகளை எடுத்துச் செல்லும் மக்களின் காலடிகளைப் பின் தொடர்ந்தது. மின்னலும் நேரகாலமறிந்து தனது குதிரைப் பாய்ச்சலைக் கைவிட்டு நான்கு கால்களையும் தூக்கி வைப்பது தெரியாமலே நடைபோட்டுக் கொண்டிருந்தது. தொண்டமானின் பாசறையை நெருங்கியதும், செம்பியனுக்குச் செய்தி தெரிவிக்கப்பெற்று சிறைக்கதவுகள் திறக்கப்பட்டன. மாறுவேடத்தில் நின்றிருந்த கயல்விழியை வெளியே வந்த செம்பியன் முதன்முறையாக கட்டி அணைத்துக் கொண்டான். கப்புதூகண்டர் அக்காட்சியைக் கண்ணுற்று உள்ளம் பூரித்து இறைவனை வேண்டினார். அப்பொழுது அவருக்கு முடிந்தது அதுவொன்றேதான். அப்பொழுது பாண்டிய சிற்றரசன் மாறவர்மன் சீவல்லபனின் படகு மன்னார்க்கடலில் காத்திருப்பதாக காவலாளிகள் செய்தியினைத் தெரிவித்தனர். கப்புதூகண்டர் தாமதிக்காமல் அவர்கள் இருவரையும் ராஜநடையில் ஏற்றி அனுப்பிவிட்டு நிம்மதியாகப் பெருமூச்சு விட்டுக் கொண்டே மின்னல் மீது ஏறி அமர்ந்து தன் ராசதானியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார். ராஜநடை செம்பியனையும், கயல் விழியையும்

எதிர்பார்த்திருந்த பாண்டியர் படகினரிடம் ஒப்படைத்து விட்டு, செம்பியன்பற்றுக் காவலாளிகளுடன் திரும்பிக் கொண்டிருந்தது.

முதலாம் குலோத்துங்கன் கீழைச் சாளுக்கிய வழியில் வந்தவன். திருமணத் தொடர்புகளால் சோழநாட்டு ஆட்சியைக் கைப்பற்றியவன் ஆவன். அதனால் தமிழ்ப்பற்றினை விட ஆட்சி விரிவாக்கப் பற்றே இவனிடமிருந்தது. கருணாகரத் தொண்டமான் இவனுக்கு வடகலிங்கப் போரில் பெரும் வெற்றியை ஈட்டிக் கொடுத்தவன். அதனால் கருணாகரத் தொண்டமானுக்கு எதிராக நடவடிக்கையெடுப்பதற்குப் பதிலாக அவனுக்கு உதவியாக தன் கடற்படையணியொன்றினை அனுப்பியிருந்தான்.

அதற்கிடையில் செம்பியனையும், கயல்விழியையும் ஏற்றிச் சென்ற பாண்டியர் படகு மீன் கொடியைப் பறக்க விட்டுச் சென்றது. இவர்கள் இராமேசுவரக் கடலை நோக்கி விரைகையில், குலோத்துங்கனின் கடற்படையும் புலிக்கொடியுடன் விரைவாக மன்னார்க்கடலை நோக்கி வந்து கொண்டிருந்தது. செம்பியன் சிறையிலிருந்து தப்பி கயல்விழியுடன் பாண்டி நாட்டிற்குச் செல்வதனை தொண்டமானும் சிலமணி நேரங்களில் அறிந்து கொண்டான். அதனால் கோபமுற்ற தொண்டமான் தானே அவர்களைச் சுற்றி வளைத்துப் பிடிக்க வேண்டும் என்ற முடிவுடன் தன் படகினருடன் வேகமாகச் சென்றான். தூரத்திலே படகுகள் நீரை வலித்துக் கொண்டு போவதை அவனால் உணர முடிந்தது. ஏனெனில் இன்னும் இருள் கொண்ட மேகங்களே கடலை

மூடியிருந்தன. சிறிது நேரத்தால் நிலந்தெளிய கடலும் தன்னைக் கவ்வியிருக்கும் இருளின் பிடியிலிருந்து விடுபட்டுவிடும். எனினும் செம்பியன் படகினைப் பிடித்து, அவனை மீண்டும் சிறையிலடைக்கும் எண்ணத்தில் தன் படகின் வேகத்தைக் கூட்டியிருந்தான். கும்மிருள் தன்பிடியிலிருந்து விலக, தூரத்திலிருந்த சூரியக்கதிர்கள் பலதிக்கிலும் சிதறிக்கொண்டிருந்தன. அதனால் கடலிலே வேகமாக ஓடிக்கொண்டிருந்த மூன்று படகுகளும் தம்மை யார்? என்று அடையாளம் காட்டிக் கொண்டன.

பாண்டியர் படகோட்டி வடக்கேயிருந்தும், தெற்கேயிருந்தும் புலிக்கொடியுடன் இருபடகுகள் வந்து கொண்டிருப்பதனை அவதானித்தவனாய் செம்பியனிடம் கூறினார். "இளவரசே! சோழர் படைகள் எம்மைச் சிறிது நேரத்திற்குள் சுற்றி வளைப்பார்கள் போற் தெரிகின்றது" என்றான். அப்பொழுது செம்பியனும், கயல்விழியும் அப்படகுகளை அடையாளம் காணக்கூடியதாக இருந்தது. உடனே செம்பியன் "பாண்டியர் படகோட்டியே, இந்த எம் படகோட்டிக்கு செம்பியன்பற்றிற்கு திரும்பிச் செல்ல ஒரு படகினைக் கொடுத்துதவுங்கள். நாமிருவரும் இறைவன் அருளால் ஒன்றாக இணைந்தோம். தற்பொழுது எமது உடல்களை மட்டுமே கடலிற்கு இரையாக அளித்து விட்டு, இறைவனின் திருவடிகளை நினைக்கின்றோம்" என்று கூறிக்கொண்டே கடலுட் குதித்து மூழ்கினர். அப்பொழுது காத்தல் தெய்வமான மகாவிஷ்ணு கடலுள் ஆதிசேடன் மீது படுத்தவண்ணமே சக்கரத்தை உயர்த்திக் காட்டினார்.

பாண்டியர் படகோட்டி சொற்கள் எதுவுமற்ற நிலையில் மௌனியாக நின்றான். செம்பியன்பற்று படகோட்டி கண்ணீர் தாரை தாரையாகச் சொரிய படகினைச் சற்று தூரமாக ஓட்டிச் சென்று, பாண்டியன் படகோட்டியை அனுப்பிவிட்டு செம்பியன்பற்று நோக்கி வந்து கொண்டிருந்தான். கடல் பொங்கியெழுந்து ஆர்ப்பரித்து அழுவதனைக் கண்டு மனங்கலங்கிய படகோட்டி, இவர்கள் பெற்றோர் உண்மையை அறியின் என்ன ஆவார்களோ என்று கலக்கமுற்றான். நன்மை தருமாயின் பொய் சொல்வதில் தவறில்லை எனும் வள்ளுவர் அறிவுரை நினைவுக்கு வந்ததும், ஒரு பொய்யைச் சொல்லி அவர்களை ஆறுதல்படுத்தலாம் என்ற எண்ணத்துடன் கரையை அடைந்தான்.

அங்கு மக்கள் கூட்டம் கவலை தோய்ந்த முகங்களுடன் காத்திருந்தது. படகிலிருந்து இறங்கியதும் உற்சாகத்தை வரைவழைத்துக் கொண்டு, "செம்பியன்பற்று மக்களே! நாம் தொண்டமானின் படகுகளைக் கண்டதும் எம் இளவரசரையும், இளவரசியையும் பாண்டிய நாட்டு மீனவர் படகுகளில் பாதுகாப்பாக ஏற்றி அனுப்பி விட்டோம். பாண்டி நாடு சென்றதும் அவர்களது செய்திகள் எம்மை எட்டும்" என்று கூறிவிட்டுக் கடலை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். படகோட்டியின் கூற்றினை நம்பிய மக்கள், அவர்கள் சொந்த மண்ணை விட்டு உயிருக்காக வேற்று மண்ணில் தஞ்சமடைந்தார்கள் என்பதனை நினைத்து மனம் வெதும்பிக் கண்ணீர் சொரிய அங்கேயே நின்றிருந்தார்கள். அப்பொழுது சூறாவளியும், மழையும் சேர்ந்து விரட்டவே, அவர்கள் வேறுவழியின்றித் தத்தம் வீடுகளுக்குத் திரும்பியிருந்தார்கள்.

நாள்கள் கிழமைகளாகி, கிழமைகள் மாதங்களாகி மாதங்கள் ஒருவருடமாகிவிட்ட நிலையில் செம்பியன்-கயல்விழி பற்றிய செய்திகள் எதுவும் வராமையினால் வடவீழச் சிற்றரசர்கள் இராசதானிகள் அனைத்தும் செயலற்றிருந்தன. குறிப்பாக கப்புதூகண்டர் இராச தானியும், செம்பியன்பற்று இராசதானியும் சோகக்கடலில் மூழ்கி, வெளியே வரமுடியாமல் தவித்தன. கயல்விழி பூசைக்குப் பூப்பறிக்கும் பூங்கா அவளின் நடமாற்றமற்றுப் போனதால், பூக்களைத் தரையிலே கொட்டி வாடவிட்டிருந்தது. கோவிற் பூசைகளில் கலந்து இறைவனுக்கு நன்றிசெலுத்தி இசைக்கும் இசையைக் கேட்டு மகிழ்ந்திருந்த கோவிலின் காண்டாமணி 'ஓம்' நாதத்தினைக் கரையவிட்டிருந்தது. அதனால் மக்கள் கோவில் மணியும் ஐயோ! ஐயோ! என்று அலறுவதாகக் கருதினார்கள். மக்கள் சிலர் இவர்கள் சென்ற கடலோர வழியினைப் பார்த்து இவர்கள் பற்றிய செய்திகளை யாரும் கொண்டு வருவார்களா? என கடல் வழி மீது விழிவைத்துக் காத்திருப்பர். அவ்வாறு அங்கு வெகுநேரமாக நின்று மீண்டவர்கள் "இருவர் கதைத்துச் சிரிப்பது தம் காதுகளிற் கேட்டதாக"க் கூறுவர். அதனை நம்பியோர் தாமும் கேட்கலாம் என்று அக்கடலோரம் பலமணி நேரம் நின்றும் எதுவும் கேட்க முடியவில்லையென்ற ஏமாற்றத்துடன் திரும்புவர்.

செம்பியன்பற்று மக்கள் சோகம் வேறுவிதமாக அமைந்திருந்தது. செம்பியனையும் கயல்விழியையும் ஏற்றிச் சென்று கடலோரம் விட்டுப் பயணம் அனுப்பி விட்டு வந்த ராஜநடையிடம் எங்கே உன் இளவரசன்?

என அடிக்கடி கேட்டு வந்தனர். ஒரு நாள் செம்பியன் பற்றுப் பிரதானியொருவர் கடலோரமாகச் சென்ற பொழுது செம்பியன் அசரீரியாக "என் ராஜநடையை நாளை அழைத்து வந்து காட்டுங்கள்" என்று கூறியதாகக் கூறியிருந்தார். அதனால் ராஜநடையை மக்கள் அழைத்துச் சென்றதாகவும், அப்பொழுது "ராஜநடை என்னைக் கயல்விழியுடன் செம்பியன்பற்றுக்கு ஏற்றிச் செல்வாயா?" என்ற ஒலி காற்றலைகளில் மிதந்து வருகையில், ராஜநடை கடலை நோக்கிப் பாய்ந்து ஓடிக்கொண்டிருக்கையில், பேரலைகள் அதனை அடித்துச் சென்றுவிட்டிருந்தது. அன்று முதல் மக்கள் கடலோரம் செம்பியனைத் தேடிப் போவதை நிறுத்தியிருந்தார்கள். கப்புதூர் பிள்ளையாரும் "உயிர்கள் இப்பூமியில் ஆற்ற வேண்டிய விடயங்கள் நிறைவு பெற்றதும் திரும்பி விடுவார்கள்" என்று கூறுவது போல் கற்சிலையாகி விட்டார்.

*(முதலாம் குலோத்துங்கன் (1070 - 1120) ஆட்சிக் காலத்தில் தொண்டமானை வடவீழத்திற்கு அனுப்பிய வரலாறு, அவனது செயற்பாடுகள் உண்மையானவை. கப்புதூரகண்டர் வரலாறு பற்றி கப்புத்தூரைச் சேர்ந்த சண்முகத்தார் எனும் பெரியவர் சொல்லக் கேட்டிருந்தேன். மற்றும் காதல் தொடர்பான கதை அனைத்தும் கற்பனையே.)*



# அவளொரு தெய்வம்

பூமித்தாய் பம்பரம் போல் வேகமாகச் சுழன்றாலும் அவள் தன்னுள் உயிர்வாழ்கின்ற அனைத்து உயிர் களையும், இயற்கை வளங்களையும் அன்புடன் பாதுகாத்து வருகின்றாள். அவள் ஒருபொழுதும் தன் வேதனைகளைக் கொட்டித் தீர்ப்பதில்லை. மாறாக, தான் உருளுவதனைக் கூட உயிர்கள் உணராவண்ணமே காத்து வருகின்றாள். ஆனால் நீரோ அப்படியானதல்ல. அதற்குப் பொறுமை என்பது வெகுதூரம். அளவுகடந்து சென்றால் பொறுமையான பூமியைக் கூட ஆக்கிரமித்து விழுங்கிக் கொள்ளும். இருப்பினும் தான் அமைதியாகவும், மகிழ்ச்சியாகவும் இருக்கும் வேளைகளில் தன் நுரைகளாகிய பற்கள் தெரியும்படியாகச் சிரித்து வரவேற்கும். அதனோடு தன்னை நம்பி வாழும் மீனவர்கள் தன்மீது வலைகளை வீசும் பொழுது, தானும் மென் அலைகளால் நீரைப் பின்னவைத்து, அவர்கள் வலைகளை ஆழ்கடல் வரை எடுத்துச் சென்று உதவிடும். இவையெல்லாம் அதனின் இயற்கை சுபாவம் எனினும்,

அநீதிகள், அட்டூழியங்கள் மனிதர் மத்தியில் தலை விரித்தாடும் பொழுது, நல்லவன், கெட்டவன் என்று அது பிரித்துப் பார்ப்பதில்லை. கோபத்தினால் பொங்கியெழும் தன் பேரலைகளால் தன் தலையில் அடித்து ஆர்ப் பரித்துப் பூமியை உதைக்கும். பின் தாவிப்பாய்ந்து எவ்வளவு தூரம் போகவேண்டுமோ அவ்வளவு தூரம் சினத்துடன் ஓடி எல்லாவற்றையும் வாரி எடுத்துக் கடலின் அடியில் தாட்டுவிடும். இதுவரை இத்தகைய பேரழிவுகளை எத்தனை தடவைகள் செய்திருந்ததோ நாமறியோம். ஆனால் பலவற்றைப் பதிவு செய்த மனிதர்கள், தாம் திருந்தியதாக என்றாவது பதிவுகள் செய்தார்களா? இல்லவே இல்லை. இக்கடலின் அனுபவங் களைப் போல் பல தடவைகள் தேவன் தன் வாழ்க்கையில் துயரங்களை அனுபவித்திருந்தான்.

மருத்துவ விடுதி மணி ஓங்காரத்தை ஒலிமூலம் பரவவிட்டிருந்தது. தேவன் திடுக்கிட்டவனாய் தலையை நிமிர்த்திக் கடிகாரத்தை நோக்கினான். காலதேவன் ஓயாது தன் வழியே ஓடிக்கொண்டிருந்தாலும், மனிதனின் வாழ்நாள்களை அளவையிட்டுச் சொல்பவனாகையால், கடிகாரமும் அதன்படி நேரம் மாலை 4 மணி எனக் காட்டிக் கொண்டிருந்தது. அது பார்வையாளரை 'உள்ளே வாருங்கள்' என அழைத்துவிட்டு, தொடர்ந்தும் ஓடிக் கொண்டிருந்தது. அதன் கடமைகளைச் சரியாகப் புரிந்து கொள்ள முடியாத தேவன் அதன் மீது கோபமடைந் தான். 'சீச்சீ எவ்வளவோ கஷ்டப்பட்டு நித்திராதேவியை அரவணைத்து, அமைதியை நாடிய என் தூக்கத்தினை இந்த மணி குழப்பிவிட்டதே' என்று அங்கலாய்த்துக் கொண்டு திரும்பவும் தலையணையில் தன் சோக

முகத்தைப் புதைத்தான். இம்முறை தூக்கம் அவனை இரக்கத்துடன் பார்த்துவிட்டு, ஒதுங்கி நின்றது. 'இவனுக்கு ஆழ்மனத்தில் அதிக துயரங்கள் உண்டு. அதனால் இவனை எப்படி நான் தூங்க வைப்பது' என்று முணுமுணுத்துவிட்டு, பக்கத்துக் கட்டில் நோயாளியைப் பார்த்து நோட்டம் விடலாயிற்று. தேவனுக்கு வேறுவழியெதுவும் தோன்றவில்லை. அந்நேரம் பார்த்து அவனது மனம் மேலெழும்பி எண்ண அலைகளை அப்படியும், இப்படியும் மோதவிட்டுக் கொண்டிருந்தது.

ஊரிலும், கொழும்பிலும் சிங்கள அரசு கட்டவிழ்த்து விட்டிருந்த தமிழ்இனப்படுகொலைக்கு அஞ்சி இரவோடு இரவாக அம்மா என்னை ஒரு முகவருக்கு பணத்தைக் கட்டி அனுப்பி வைத்தாள். தமிழனின் பூர்வீக மண் பற்றியோ, அல்லது இன்றைய உலகில் இனிமையாகப் பேசப்படுகின்ற மனித உரிமைகள் பற்றியோ அம்மாவிற்கு ஒன்றும் தெரியாது. தன் மகனின் உயிர் பிழைத்தாற் போதுமென்றே அந்தப் பெத்தமனம் நினைத்திருந்தது. வரலாறுகளைத் திரித்து எழுதி, பிறர் மண்ணை அபகரிக்கவென்று ஒரு கூட்டம் வாளேந்தி நிற்கையில் எம் மூதாதையரோ,

"யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா"

என்று மனித நேயம் பேசி, தமிழர் ஆட்சிநிலங்களை யெல்லாம் அவர்களுக்குக் கையளித்திருந்தனர். அதனால் தமிழினம் வேரற்ற மரம் போல் சாய, காற்றுக்கடிபடுகிற கொம்பர்களும், இலைகளும் அப்படியும், இப்படியும் பல

திசைகளை நோக்கிச் செல்வது போல நாமும் பரவலாகப் புலம்பெயரத் தொடங்கினோம். அந்த மனிதர்களுள் நானும் ஒருவன் ஆவன். என்னைக் காப்பாற்ற வேண்டுமென்று துடித்த தாய்மை, தான் எப்படிப் போனாலும் பரவாயில்லையென்று ஊரிலேயே தங்கிவிட்டது. நானும் பலநாள் பயணங்களின் பின் லண்டனை அடைந்து அகதியாகப் பதிந்து வருடங்கள் பத்து ஓடிவிட்டன. ஆரம்பத்தில் வேற்று மனிதர் கலாசாரத்தில், சூழலில், வாழ்க்கையில், எதனையோ நான் இழந்து விட்டது போன்ற உணர்வு ஒன்று என்னை உறுத்திக் கொண்டேயிருந்தது. நாள்கள் ஓட, ஓட எல்லாமே சமாளிக்கப்பட வேண்டியவை என்பதனை நான் உணரவும் தலைப்பட்டிருந்தேன்.

ஊரிலிருந்து அம்மா துயரத்தோடு எழுதும், தமிழ் மக்களின் அடிமைத்தனமான வாழ்வு முறைகளும், மற்று இதுவரை காலமும் மிருகங்கள் செய்திராத மனித இனப்படுகொலைகளும் என்னைக் கோபப்படுத்தும் வேதனைகளாக இருந்து வந்தன. எம் தமிழினம் சிங்கள வெறியர்களின் கைகளில் சிக்கி, உயிர் பிழைக்க உலகத்தின் ஓர் மூலையில் இடம் கிடைக்குமா? என்று தேடி, ஓடிக்கொண்டிருக்கையில், நானும் என்னுடைய உயிரைப் பெரிதாக மதித்து ஓடிவந்த நிலையையிட்டு வெட்கப்படுவதுண்டு. என் தாய் மண்ணை நான் நேசிக்கவில்லை. மாற்றானுக்கு நானாகவே என் மண்ணை வீசிவிட்டு வந்து இங்கு நான் கண்ட சுகம் தான் என்ன? எனக்குப் பழக்கப்படாத குளிருடன் எதிர்நீச்சல் போட்டுக் கொண்டு வேலைக்கு ஓடுவதும், வேலை முடிந்து திரும்பியதும் அன்பாகப் பேசி எண்ணங்களைப் பரிமாறிக்

கொள்ள எவருமற்ற அறையினுள் சடம்போல் அடைபட்டு இரவைக் கழிப்பதுமே தான் என் லண்டன் வாழ்க்கை முறையாகி விட்டது. ஆங்கிலேயர்கள் எமக்கு நல்லது, கெட்டது என்ற இரண்டினையுமே செய்திருக்கிறார்கள். பிராமணர்கள் கடவுளைத் தம் மந்திரத்திற்குட்பட்டவர், தாமே அவரால் பூமிக்கு அனுப்பப்பட்டவர் என்று ஒரு மாய வலையை விரித்து, எமக்குக் கடவுள் என்பவர் அந்நியமானவர் என்று கூறி, எம் வாழ்வினைச் சூனியமாக்கவிட்ட நிலையில், கிறித்தவ மத போதகர்கள் கடவுளை எம் அன்பராகக் காட்டி எம் ஆன்மீகத்தை வளர்த்தெடுத்தார்கள். அப்பொழுதுதான் கடவுளின் அன்பினை நாம் அனுபவிக்கத் தொடங்கினோம்.

அதுதானோ என்னவோ கடவுள் எம்மை உலகளாவிய அளவில் எம்மொழியை வளர்க்கவும், எம் கடவுள் அனுபவங்களை நாலாதிக்கிலும் பரப்பவும் தூண்டுகோலாய் பின்னணியில் வேலை செய்கிறார் என்று கூட நான் பலதடவைகளில் நினைத்தாலும், மனிதனும், ஒருவர்க்கொருவர் அன்பைப் பரிமாறுகையிலே மனிதனின் வாழ்வில் ஒரு ஆன்மீகச் சுடர் பிரகாசிக்கத் தொடங்குகின்றது என்பதனை எவரும் மறுப்பதற்கில்லை. லண்டன் வாழ்க்கையில் தமிழர் பலரின் புதுமுகங்களை நாம் சந்தித்தாலும் அவர்களின் முகமூடிகள், மனித நேயங்கள் என்பன சந்தேகத்திற் கிடமானவையேயாம். ஒரு சில மனிதர்கள் சந்தர்ப்பத்திற்கேற்றவாறு முகமூடிகளைப் போட்டுக் கொண்டு, கடவுளின் நீதி, நியாயங்களைக் குழிதோண்டிப் புதைத்து விடுகின்றார்கள். அதனால் அச்சத்துடன் தனிமையாக வாழ்க்கையை ஓட்டப் பழகியிருந்தேன்.

இத்தகைய இயந்திர வாழ்க்கை அலுத்துவிட்ட நிலையிலேயே எனக்கு, அருள்மொழியின் சந்திப்பு ஏற்படலாயிற்று. நான் எதிர்பாராத வகையில் அன்பை அவள் எனக்கு அள்ளித்தரவேதான் நான் பயணிக்கும் ஈலிங்புரோட்வே நிலவறைத் தொடரூந்தில் பயணம் செய்துகொண்டிருந்தாள். அவளோ வாட்டசாட்டமான அமைதியான பெண். எந்தச் சூழ்நிலையிலும் ஆடம்பர வாழ்வை மதிக்காத ஓர் அற்புதப் பெண். அவள் முகத்தில் எப்பொழுதும் பெண்ணிற்கியல்பான அன்பு, பண்பு, நாணம், தெய்வீக ஒளி என எல்லாமே அவள் முகத்தில் ஒன்று சேர்ந்து மிளிர்ந்திருந்தன. அவள் ஒரு தமிழ்ப்பெண் என்பதனை ஊகித்துக்கொள்ள அதிக நேரம் வேண்டியிருக்கவில்லை. வெறுமையாகி விட்ட என் வாழ்வு நிலையில் ஒரு உறவை, என் அம்மாவிற்கு அடுத்ததாக ஏற்கத் தயாராக இருந்தேன்.

ஒரு நாள் நானாகவே தன்னம்பிக்கை கொண்ட வனாக "தாங்கள்..." என்று இழுத்து உரையாடலை ஆரம்பித்திருந்தேன். அவளும் என் கருத்தினை உணர்ந்தவள் போல் புன்னகையுடன், "என் பெயர் அருள்மொழி. நானும் ஈழம் தான்" என்று அமிழ்தமென இனிய வார்த்தைகளை வாரிக் கொட்டினாள். என் காதுகளுக்கு அவை இன்னிசை விருந்தினை அளித்திருந்தன. அதன் பின் முன்னரை விட என் துணிச்சலானது எனக்கு உதவ ஓடிவந்திருந்தது. அதனால் நானும் தொடர்ந்து, அப்ப, அருள்மொழி நீங்களும் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த நீங்களோ? என்றிழுத்தேன். அவள் பதில் என் பாழாய்க்கிடந்த நெஞ்சத்தில் ஈட்டியால் குத்துவது போல் உணர்ந்தேன்.

அவள் சொன்ன பதிலாவது, "நானா? யாழ்ப்பாணமா? நான் வந்து..." என இழுத்துவிட்டு, பின் "சரியாகச் சொல்லத் தெரியவில்லை. என் அம்மா அடிக்கடி தன் ஊரைப் பற்றிப் பெருமையாகப் பேசிக் கொள்வார். தன் ஊர் புலோலி. அப்பாவைக் கலியாணம் கட்டி கொழும்பிற்கு வந்தபின் ஓரிரு தடவைகளே அங்கு சென்று வந்ததாகக் கூறிக்கொள்வார். அதனோடு தாம் கார்காத்த வேளாளர் என்பதனால், வருடம் முழுவதும் நெல் மூட்டைகள் தம் களஞ்சியங்களில் குறைவடைவ தில்லையென்றும் பெருமைப்பட்டுக் கொள்வார்.

ஆங்கிலேயர் ஆட்சியில் அவளது அப்பாவின் பாட்டன், பூட்டன் முதலானோர் கொழும்பிலேயே குடியமர்ந்ததனால், அவளுக்குத் தன் பூர்வீகநிலம் பற்றி அதிகம் தெரிந்திராத பொழுதும், அவர்களுக்கு சுதுமலைத் தொடர்புகள் இருந்து வந்துள்ளன என அம்மா இடையிடையே கூறியிருக்கின்றார். அப்பாவிற்கு இந்த வகையான இனப்பற்று, நாட்டுப்பற்று, மொழிப்பற்று என்பனவெல்லாம் வீண்பொழுதுபோக்கு... வெறும் உணர்ச்சிக் கூட்டங்கள். படித்தோம், பட்டம் பெற்றோம். கைநிறையப் பணம் வந்தால் போதும் என்ற குறுகிய கண்ணோட்டத்திலேயே வாழ்க்கையை நோட்ட மிட்டிருந்தார். அதனால் அப்பா கொழும்பிலேயே படித்து, கொழும்பிலே சட்டத்தரணியாக வேலை செய்தவராகையால் எனக்கும் கொழும்பே சொந்த ஊராகிப் போய்விட்டது. அதுவும் கொழும்பில் வெள்ளவத்தையிற்றான் நான் பிறந்து வளர்ந்தேன். அதனால் அதுவே என் சொந்த ஊராகும்" என்று கூறி முடித்தாள்.

அருள்மொழி கூறியதிலிருந்து அவள் அப்பா கொழும்பில் ஒரு பெரும் புள்ளி. கறுப்பு மேலங்கிகளை அணிந்து கொண்டு நீதிமன்றங்களில் வாதாடும் சட்டத்தரணி. அதனால் சட்டத்தரணிகளுக்கு கைவந்த கலை, நீதிதேவதையுடன் நேராகவே போரிட்டு, கறுப்பை வெள்ளையென்றும், வெள்ளையைக் கறுப்பென்றும் நிரூபித்து கைநிறையப் பணம் சம்பாதிப்பது. முடிவில் நீதி தேவதையின் தீர்ப்பினை தாமும், தம் தலைமுறையினரும் ஏதோ ஒரு வழியில் அனுபவித்துவிட்டு, தாம் செய்த தவறுகளுக்காகப் பச்சாத்தாபப்பட நேரமின்றி சாவைத் தழுவிக் கொள்வது ஆகும்.

அதனால் என்னுடன் அருகில் ஒரு இளம்பெண் வந்திருந்தும், என்னிடம் காதல் துளிர்க்குமோ என்பதில் நான் நம்பிக்கை கொண்டிருக்கவில்லை. அதனோடு இருமனங்கள் ஒன்றாகக் கலந்துவிட்ட நிலையில் உருவாகின்ற காதலுக்கு எம் சமூக அமைப்புகளும் இடம் தருவதில்லை. சாதி, சமயம், சாத்திரம், செல்வம், தகைமை போன்ற பல்வேறுபட்ட அளவுகோல்களால் அளந்து, எதிரும் புதிருமான இருமனங்களை வலிந்து இழுத்துக் கட்டிவிட்டு தம் பொறுப்பைக் கழித்து விடுகின்றனர். இத்தகையோர் திருமண வாழ்வு இடையில் அறுந்து தொங்குவதும், தொங்காததுமாய் இருக்கையில், தம்பதியர் முகமூடிகளை அணிந்து தமக்கிடையே எதுவும் நடக்காதது போல் உலகத்திற்குக் காட்டிக் கொள்வார்கள். இது திரைமறைவில் இடம்பெறும் ஒரு நாடகமாகவும் கணிக்கப்படலாம். இவ்வாறு பொருத்தம் பார்த்துக் கட்டி விட்ட திருமணங்கள் பாதிவழியில் அறுந்து, தள்ளாடும்

பொழுது காரணம் என்ன? என்று எவரும் ஆராய்வதில்லை. ஒன்றும் முடியாத கட்டத்தில் விதியின் மீது கல்லை வீசிக் கையை விரித்து விடுவார்கள்.

ஊரில் என் சமூகம் தமிழருக்கென இறைவன் அருளிய கற்பகத் தருவாகிய பனைவளத்திற்கும், அதன் பயன்பாட்டிற்கும் உரிமையுடையவர்கள் ஆவர். தமிழனின் ஆதிவரலாறு குமரியாற்றிற்கும் பஃறுளி யாற்றிற்குமிடையே இருந்த 700 காதம் எனும் நிலப்பரப்பில் ஏழ்தெங்கநாடு, ஏழ்குன்றநாடு, ஏழ்முன் பாலைநாடு, ஏழ்பின்பாலைநாடு, ஏழ்குறும்பனைநாடு, ஏழ்மதுரைநாடு, ஏழ்குணகரைநாடு எனப் பூமியின் வருவாயை ஒட்டிப் பிரித்து ஆட்சி செய்யப்பட்ட 49 நாடுகள் பற்றிக் குறிப்பிடுகின்றன. இவையனைத்தும் ஊழிப்பெருவெள்ளத்திற் கடலுட் தாண்டுபோக ஏழ்குறும்பனை நாட்டின் ஒரு பகுதியாகிய ஈழமே எஞ்சலாயிற்று. அதனால் இது தாயகத்தில் இருந்து பிரிக்கப்பட்டு தாயையிழந்திருந்தது. அக்குறையை நிவர்த்திக்கும் சமூகமாக நாமே காலம் காலமாகத் தொழிற்பட்டு வருகின்றோம்.

அதனோடு கார்காத்த வேளாளர் ஊர்மக்களுக்கு உணவு வழங்கியது போல், நாம் அயராது உழைத்துக் களைத்துப் போனவர் ருசித்து மெய்மறக்க கள்ளினை பனை மரங்களிலிருந்து வடித்து எடுத்து, யாவருக்கும் வழங்கிவந்தோம். அதனால், எம்மை 'ஈழவர்' என்றே அழைத்திருந்தனர். எங்கள் முற்றத்தில் தான் ஊரிலுள்ள எல்லோரும் உயர்வு, தாழ்வு வேறுபாடின்றி கள்ளை

ருசிப்பார்கள். வானூர்திகளிலிருந்து வானை மனிதன் அளக்கு முன் துணிச்சலான நாமே பனை உச்சியிலிருந்து வெண்முகில் கூட்டங்களின் இயல்புகளை அறிந்தவராவர். கள்ளை அருந்தி மூளைக்குச் சாவியும், உடலுக்கு ஒரு மயக்கத்தையும் கொடுத்தபின், மனித இயல்புகள் சடுதியாக மாறுபடுவதனை நாம் கண்டு, இந்தப் பனைநீரின் சக்தி என்ன? என்பதனை அறிவோம். அதற்குள் சுண்ணாம்பைப் போட்டால், அது இனிப்பாக மாறி உடல் ஊட்டத்திற்கேற்றதாவதும் கள்ளின் மறுபக்க ரகசியமாகும். ஆனால் கள்ளின் போதையில் வேதாந்தம், சித்தாந்தம், சனநாயகம், சோசலிசம், சர்வாதிகாரம் எனப் பல சமய, அரசியல் படிப்புகளை இலவசமாகவே நான் பெற்றிருந்தேன். ஆனால் இதே மனிதர்கள் என்னைத் தெருவிலோ, கோவிலிலோ, பாடசாலையிலோ பார்க்க நேரிடின் என்னை முன்பின் தெரிந்தவர்களாகக் காட்டிக் கொள்ளமாட்டார்கள். அவர்களது நெஞ்சங்களில் அவ்வளவிற்கு ஏதோவொன்று குடிகொண்டிருப்பதாக நான் உணர்வேன். யாரை நோவது. இதெல்லாம் நாம் முற்பிறப்பிற் செய்த வினைப்பயன் என்று, நான் என்னைச் சமாதானப்படுத்திக் கொள்வேன்.

மனிதர்கள் கோவிலில் வைக்கப்பட்ட இறை திருமேனிகளைக் கூட வழிபட உரிமையற்றவர்களாகப் பலகாலமாகப் பிராமணர்களால் ஒதுக்கப்பட்டிருந்தார்கள். சாதாரண மனிதர்களான சிற்பாசிரியர்கள் முதலில் தம் மனக் கண்களில் தெய்வீகத் திருமேனிகளை வடித்தபின், செப்பிலோ அல்லது கருங்கல்லிலோ அல்லது மரத்திலோ உருவங்களை வார்ப்பர் அல்லது செதுக்குவர். பின்னர்

இவை கோவில் வழிபாட்டிற்காக குடமுழுக்குச் செய்தபின், பிராமணர்கள் அத்தெய்வத் திருமேனிகளைத் தமது உடைமைகளாக்கிக் கொண்டு பொதுமக்களைத் தீண்டக்கூடாதவரென அந்நியப்படுத்தி விடுவர். உண்மையில் இயற்கை வழிபாடியற்றி வந்த பிராமணர் களிடம் எம் மூவேந்தர்கள் கோவில் நிர்வாகத்தைக் கொடுத்ததனால், இறைவன் எல்லோருக்கும் பொதுவானவர் என்ற படைப்பு ரகசியமும் முற்றாக மறுக்கப்பட்டிருந்தது. அதனால் இறைவன் மீது அயராக் காதல் கொண்டிருந்த நந்தனாரை, இறைவனே திருவிளையாடல் புரிந்து உள்ளே அழைப்பித்திருந்தார். அதனோடு வேடுவனாகிய கண்ணப்பர், இறைவனின் கண்களிலிருந்து இரத்தம் வடிவதனைப் பொறுக்க முடியாது, தன் கண்ணைப் பிடுங்கி அவரது கண்களில் வைக்க முனைகையில், இறைவன் கண்ணப்பரின் உறுதியான பக்தியைக் கண்டு அசைவுற்று 'கண்ணப்பா!' என்று அழைத்து அதனைத் தடுத்திருந்தார். அதனால் ஒருவன் சமூகக் கட்டமைப்பில் ஒருவர்க்கொருவர் உதவும் வகையில் செய்யும் தொழில்கள் பலவகைப்பட்டன வாயினும், அவற்றைத் தரப்படுத்துவதனால் அச்சமூகம் ஒற்றுமையையிழந்து போகின்றது.

உலகம் இன்றைய நிலையை எட்ட வெள்ளையர் களின் ஆட்சியும், அவர்கள் அறிமுகப்படுத்திய ஆங்கிலக் கல்வி என்பனவும் அடிப்படையாக அமையலாயின. அதனாலே நான் சுங்க இலாகாவில் எல்லாச் சாதியினரும் ஐயா! என்று அழைக்கக்கூடிய தலைமை அதிகாரப் பதவியைப் பெற முடிந்தது. ஆனால் ஆங்கிலேயர்

நாட்டை விட்டு வெளியேறிய பொழுது, தமிழனின் பாரம்பரிய ஆட்சிமுறைகள், கலாசார விழுமியங்கள் அனைத்தையும், ஓரினம் உருவாக்கி வளர்த்தெடுக்க எத்தனை தலைமுறைகள் அயராது உழைத்திருப்பார்கள் என்பதனைச் சிறிதும் சீர்தூக்காது, சிறுபான்மையினரின் மனித உரிமைகளைப் பெரும்பான்மையின அடக்கு முறையாளர்களிடம், தாரை வார்த்திருந்தனர். அதாவது சனநாயக ஆட்சியில் சிறுபான்மையினத்தின் மனித உரிமையென்பது ஆட்சியதிகாரத்தில் இருக்கும் பேரினவாதிகள் வழங்கும் சலுகையாகும்.

உண்மையில் சனநாயகத்தின் மறுபக்கம் கூறும் கதையென்னவெனில், போர்க்குணத்துடன் ஆக்கிரமிப்புச் செய்யும் இனமானது சுதேசிகள் மீது தன் மொழி, கலாசாரங்களைத் திணித்து சாயம் பூசி இனச்சுத்திகரிப்புச் செய்து ஆட்சியை நிலைநாட்டிக் கொண்டதனையே உலக வரலாறுகள் பெரும்பான்மையின ஆட்சியென வர்ணித்து வருகின்றன. மரபணுக்கள் இனம் காட்டும் ஒரேநிறம், தோற்றம் பெற்ற இனங்கள், இனச்சுத்திகளினால் கால வெள்ளத்தில் முற்றாகத் தம் மூல அடையாளங்களை இழந்து விடுகின்றன. இதற்குடன்படாத இனப்பற்றாளர் களை இனப்படுகொலை செய்வதன் மூலம், அவர்கள் விரட்டியடிக்கப்படுகின்றார்கள். இந்நாள் முதலாக குரங்கின் கையில் அகப்பட்ட ஆப்பென சிங்களம் தமிழரைக் கையாளத் தொடங்கியதனால், ஒட்டுமொத்த மான தமிழினம் தம் பூர்வீக மண்ணிலிருந்து பல்வேறு நடவடிக்கைகள் மூலம் விரட்டியடிக்கப்பட்டார்கள். இவ்வாறு விரட்டியடிக்கப்பட்ட தமிழர்களில் நானும் ஒருவனே.

அருள்மொழி கொழும்பைப் பிறப்பிடமாகக் கொண்டாலும், அவளும் தமிழச்சியே. அதனால் அவளும் என்னைப் போல் நாட்டை விட்டு ஓடிவந்தவளாகத்தான் இருப்பாள் என்று நான் யோசிக்கையில், அருள்மொழி என் எண்ணங்களை வாசித்தபடியே, 'திருவாளர்!' என்று என்னை நோக்கி அழைத்தமையை என் செவிகள் உள்வாங்கியிருக்கவில்லை. அதனால் தன் கையிலிருந்த நாளேட்டினால் மெதுவாகத் தட்டி 'உங்களைத் தான்' என்றாள். அப்பொழுது தான், நான் என் கற்பனா உலகிலிருந்து விடுபட்டு வெளியே வந்து, நான் தொடரூந்து வண்டியில் வேலைத் தலத்தினை நோக்கிப் போய்க் கொண்டிருப்பதனை உணர்ந்தேன். என் நிலைமைகளைச் சமாளித்துக் கொண்டு அவள் பக்கம் திரும்பி "அருள்மொழி! என்ன கூறவிரும்புகிறீர்கள்?" என்று கூறிவிட்டு, அவளை மீண்டும் ஆழமாக உற்று நோக்கினேன். அவள் முகம் நாணத்தால் சிவந்திருந்தது. எனினும் "உங்கள் பெயர்...." என இழுத்தாள். "தேவன்" என்றதும் கடவுளை எப்பொழுதும் நினைவூட்டும் பெயர் என்று கூறிக்கொண்டே, 'ஊர்' என்றாள். வதிரி என்று கூறுமுன்னரே, அது யாழ்ப்பாணத்தில் எங்கே? என்று வினவினாள். உங்கள் அம்மாவின் ஊரான புலோலி யிலிருந்து நாலைந்து மைல்கள் தூரம் தான். அங்குதான் நாம் பனைவளச் சங்கத்தினை அமைத்து தமிழரின் பாரம்பரிய கைத்தொழிலான கூடைகள், பாய்கள், நீர் இறைக்கும் பட்டைகள் என அனைத்தையும் அழிந்து போகாமல் பாதுகாக்க முயற்சிகள் எடுத்து வருகின்றோம். நானும் இங்கிருந்து பணம் அனுப்பி அதன் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வருகின்றேன் என்றதும், அவள் "நீங்கள்

எவ்வளவு நாட்டுப்பற்றும், இனப்பற்றுமுடையவராக இருக்கின்றீர்கள். என் தந்தையார் அப்புடி வாழ்ந்ததாகத் தெரியவில்லை'' என்று தன் ஆதங்கத்தைத் தெரிவித்துவிட்டுக் கவலை தோய்ந்த முகத்துடன் யோசனையில் ஆழ்ந்துவிட்டாள்.

அவளது சோகமான முகத்தில் ஏராளமான துயரக் கதைகள் மறைந்திருக்கின்றன என்பதனை அறிந்து கொண்டு என் மனிதநேயத்தைப் பயன்படுத்தி ஆறுதல் வார்த்தைகளை அவள் மீது தூவி, அவளை மனத் தைரியம் கொண்ட பெண்ணாக ஆக்க விரும்பினேன். முதலில் அவளிடம் சிறிய விசாரணைகளை ஆரம்பித்தேன்.

அருள்மொழி! இங்கு யாருடன் இருக்கின்றீர்கள்? என்ற கேள்வியை முதலிற் கேட்டிருந்தேன். அதுவும் ஒரு பெரிய சோகக் கதையைச் சுமந்திருந்தது என்பதனைப் பின்புதான் உணரமுடிந்தது. அவள் எதிர் இருக்கைகளில் தத்தம் கைகளிலிருக்கும் நாளேடுகளில் அனைவரும் மூழ்கியிருப்பதனை அவதானித்தபின், தன் கதையை ஆரம்பித்தாள். நீர்த்துளிகள் அவள் கண்களை நிரப்புவதனை அவதானித்த நான், அவள் குரல்விட்டு அழுது விடுவாளோ என்றும் பயந்தேன். ஆனால் அவள் கண்ணீர் உடனே வற்றி மறைய, அவளிடம் உறுதி எப்படியோ வந்திருந்தது. ஒரு கதாசிரியனைப் போல் தன் துயரக்கதையை விவரித்தாள்.

"கொழும்பில் என் தந்தையின் பாட்டன், பாட்டி முதலானோர் காலம், காலமாக வாழ்ந்திருந்த அழகான

வீடு அது. அதனைத் தமிழர் வாழ்வு முறைக்கேற்ப கட்ட விரும்பிய என் பாட்டனின் முதற் தலைமுறையினர், யாழ்ப்பாணத்திலிருந்து பல கட்டட வல்லுநர்களைத் தருவித்துக் கட்டியிருந்தனர் என்பதனைப் பழைய பெட்டகங்களில் பாதுகாத்து வைக்கப்பட்ட நாட்குறிப்புப் பதிவுகளிலிருந்து நான் அறிந்திருந்தேன். பின்னர் அப்பா தன் தேவைகளுக்காக வீட்டைத் திருத்துவதற்கு தமிழ்நாட்டுக் கலைஞர்களைத் தருவித்துத் திருத்தினார் என அவர் தன் நண்பர்களுடன் உரையாடும் பொழுது கூறிவந்தமையையும் என் காதுகள் கேட்டு, கேட்டு மரத்துப் போயிருந்தன. ஆனால் அந்த அழகான வீட்டில் நாமெல்லோருமே தனித்தனி அறைகளை வைத்திருந்தோம். அப்பா தன் வேலைகளுக்கென இரு அறைகளை வைத்திருந்தார். வேலைகள் முடிந்ததும் பூட்டித் திறப்புகளைத் தன்னுடனே கொண்டு திரிவதனால், அந்த அறைகளின் ரகசியங்கள் பற்றி எமக்கு எதுவும் தெரிந்திருக்கவில்லை. அதனால் அம்மா இடையிடையே சித்தாந்தம் பேசிக் கொள்வார். "எவரும் போகும் பொழுது கண்ணில்லாத ஒரு சிறிய ஊசியையாவது எடுத்துச் செல்வதில்லை. இவருடைய சொத்துகளை இவருடன் எப்படி அனுப்பலாம் என்று யோசிக்கின்றேன்" என்று கூறிவிட்டு, சடார் என்று சமையல் கட்டிற்குச் சென்று, தன் சமையல் வேலைகளை மீண்டும் ஆரம்பிப்பார்.

அன்று அப்பா ஒரு வழக்கு விடயமாக அறைக்குள் விடயங்களைத் தேடித் தொகுத்துக் கொண்டிருந்தார். என் கைகளால் அவருக்குத் தேநீரை அன்றுதான் இறுதியாக வழங்கியிருந்தேன். ஆடிமாதம் 1983ஆம் ஆண்டு ஈழத்துத் தமிழர் என்றும் மறக்க முடியாத மாதம்.

கொழும்பில் தமிழினப் படுகொலைகள் முன்எப்பொழுதும் இல்லாத வகையில் இடம் பெற்றுக் கொண்டிருப்பதனை அவர் அறியாமல் இல்லை. கொழும்பே அவரது பூர்வீகமண் என்று வாழ்ந்துவிட்டதனால் பாதுகாப்பற்ற மனிதனாக இருந்தார். சிங்கள அரசியற் காடைத்தனம் அங்கு எந்தத் தமிழனையும் விட விரும்பவில்லை. காலம் காலமாக தமிழரின் பூர்வீக நிலங்களையும், மக்களையும் சிங்கள மொழித்திணிப்பு மூலமும், குடியேற்றங்கள் மூலமும் தன் சனத்தொகையைச் சிங்களம் கூட்டியிருந்தது. அதனால் அவர்கள் மிகவிரைவில் சனத்தொகையினால் சக்தி பெற்றனர். காலந்தோறும் இனச்சுத்திகரிப்புச் செய்யப்பட்ட தமிழ்ப் பகுதிகள் கைவிடப்பட்ட, தமிழர் வடக்கிலும், கிழக்கிலும், வன்னியிலும் முடங்கிக் கொண்டனர். இந்த வரலாறுகள் அப்பாவிற்கு தெரிந்திருக்கவில்லை. என் நண்பிகள் 1977ஆம் ஆண்டில் கொழும்பில் இடம்பெற்ற சிங்களக் காடைத்தனம் தம்மீது அவிழ்த்து விடப்பட்டபொழுது, தாம் வடக்கிலும், கிழக்கிலும் மாதக்கணக்காகத் தங்கியிருந்த பின்னரே, திரும்பி வரமுடிந்தமை பற்றிக் கூறிய பல துயரமான கதைகளைக் கேட்டிருந்தேன். அந்நேரம் நாம் பாதுகாப்பாக இருந்தோம் என்பது உண்மைதான். ஆனால் அது தற்காலிகமானது என்பதனை 1983ஆண்டு இனப்படுகொலைகள் உறுதிப்படுத்தியிருந்தன.

எம் வீட்டு முன்வாயில் கதவினை சிங்களக் காடையர்கள் “பறதெமிள எலியட்ட எண்ட” (பறைத் தமிழனே வெளியே வா) என கூக்குரலிட்டுக் கொண்டு பெற்றோல் தகரத்துடன் உள்ளே ஓடிவந்தவர்கள் நேரே அப்பாவின் அறைக்குள் சென்று, அவர் மீது பெற்றோலை

ஊற்றி நெருப்பிட்டனர். இந்த யமன்களின் பயங்கரமான சத்தத்தினைக் கேட்ட நானும், அம்மாவும் எம் உயரிய மதிலில் ஏணியை வைத்து ஏறிக் குதித்துப் பின் வீட்டுப் பெரேராவின் வீட்டிற்குள் அழுது கொண்டு ஓடினோம். அவரும் ஒரு சிங்களவர்தான். ஆனால் மனித உருவுடையவர் என்பதனால் அவரிடம் அடைக்கலம் தேடி இருந்தோம். அவர்களிடம் பாதுகாப்பிற்காக கையளிக்கப்பட்ட நகைகள், பணங்கள் என்பனவற்றை அவர்களும் சுரண்டியிருந்தார்கள். ஆனாலும், எம் உயிர்கள் மீது கொஞ்சம் இரக்கம் காட்டியிருந்தார்கள். அவ்வளவுதான் வித்தியாசம். பெரேரா வீட்டில் பாதுகாப்புக் கிடைத்தாலும், நாங்கள் இரவு முழுவதும் விழிப்பாகவே இருந்தோம். பயங்கரமான மரண ஓலத்துடன் தமிழர்கள் உயிர்ப்பிச்சை கேட்டுப் பல சிங்களவரிடம் அடைக்கலம் தேடி ஓடுவதனை நம்மால் ஊகிக்க முடிந்தது. நானும் அம்மாவும் பயபீதியினால் ஒருவரையொருவர் நோக்கிக் கண்களாலே பேசிக் கொண்டோம். வாய்கள் பேசச் சக்தியற்றிருந்தன. அப்படியும், இப்படியும் ஓடித்திரிகின்ற மனத்திற்கு ஒரு சவாலாகவே எல்லாம் அமைந்திருந்தன. அப்பாவின் நிலைபற்றி நாமிருவரும் எதுவும் அறிந்து கொள்ள முடியாத உறவுகளானோம்.

அடிக்கடி நிலம் தெளிந்துவிட்டதா? என்று யன்னல் ஓட்டைகள் வழியாக எட்டிப் பார்த்துக் களைப்புற்ற நிலையில் அம்மா நிலத்தில் சரிந்து படுக்க நேரிட்டது. சூரியன் தனது நேரக்கணிப்பின்படி மெதுவாக தன் நுனிக்கீற்றுகளை விரித்து, எம் அறைக்குள் எட்டிப்

பார்க்கத் தொடங்கியதும், நான் அம்மாவைத் தட்டிப் பொழுது விடிந்ததனைத் தெரிவித்தேன். அம்மா நிம்மதிப் பெருமூச்சுடன் எழுந்து வெளியேவர, பெரேராவும் எதிரே வந்திருந்தார். அவருக்கு எம் சோகப் பார்வை மூலம் நன்றி தெரிவித்துவிட்டுக் கைகூப்பினோம். பின், நானும் அம்மாவும் ஏணியை வைத்து மதில் மீது ஏறிக் குதித்தோம். அம்மாவின் முதுமையடைந்திருந்த கால்களுக்கு எங்கிருந்துதான் பலம் வந்ததோ தெரிய வில்லை. சாவா? வாழ்வா? என உயிர் போராடுகையில் கால்களைப் பற்றி யார்தான் கவலைப்படப் போகின்றார் கள். எம் காலடிச் சத்தமே எம்மைப் பயப்படுத்துகையில், காதுகள் பயனற்றவையாகிக் கிடந்தன. எங்கள் வருகையை மோப்பமிட்டுக் கொண்ட எங்கள் ஜிம்மி நாய், பின்புறம் வந்து வாலை ஆட்டி வரவேற்று விட்டு, சோகத்துடன் வாயிலில் போய் உட்கார்ந்து கொண்டது. அது மிகவும் நன்றியுள்ள நாய். அதனை விட்டுப் பிரிவதென்பது மனித நேயத்திற்கு அப்பாற்பட்டதொன்றாகும்.

நாம் பின் வீட்டிற்குள்ளே எட்டிப் பார்த்தோம். அப்பாடா! ஒரு சூறாவளிக் காற்றுக் கோபமுற்று எதிரிலுள்ள அனைத்தையும் வேரோடு பிடுங்கி, அப்படியும், இப்படியுமாக வீசி விடுவது போல், எமது பொருட்கள் எல்லாம் வீசப்பட்டுக் கிடந்தன. தனிமனிதருடன் ஏற்பட்டிருந்த இப்போர்க்களங்களை அவரவரே அறிவர். பிறருக்கு அவற்றின் அனுபவம் இல்லாவிடில், அவை வெறும் சொற்களம்தான். கால் வைத்து நடக்க முடியாத நிலையில் எட்டி, எட்டிப் பொருட்களை அகற்றிவிட்டு அப்பாவின் அறையை எட்டிப் பார்த்தோம்.

அம்மா, ஐயோ என் கடவுளே! என்று அலறிக் கொண்டு மயங்கி விழுந்துவிட்டார். அப்பா நாற்காலியில் கட்டப்பட்ட நிலையில் கருகிக் கிடந்தார். பெற்றோர் நாற்றம் இன்னமும் வீசிக்கொண்டிருந்தது. என் தலையும் சுழலுவது போல் உணர்ந்தேன். நானும் அநாதையாகச் சாவைத் தழுவக் கூடாது என்ற உறுதியுடன் வீட்டுக்குப் பின்னால் பந்தலிடப்பட்டிருந்த மல்லிகைச் செடியருகே ஓடினேன். மல்லிகை தன் நறுமணத்தால் என்னிடம் இயல்பான மூச்சினை உள்ளே இழுத்து, வெளியே விட உயிர்ப்பிச்சை போட்டிருந்தது. அப்பொழுது சாவு என்னிடம் ஒரு கேள்வியைக் கேட்டது. "தலைக்கு மேல் விடயங்கள் போன பின் நீ வாழ்ந்தென்ன? செத்த பிணத்தில் உன் உயிர் ஆடினாலும் நீயும் நடைப்பிணமே" என்று கேட்டிருந்தது. அக்கேள்வியுடன் சாவை நினைத்துப் பயப்படுவது வீண் விரயம். அது எப்பவோ முடிந்த காரியம். அதிலிருந்து எவருமே இப்பூமியில் தப்பினதாக வரலாறில்லை என்பதனால் வீதியை நோக்கி ஓடினேன். அவசரகால நிலையென்ற ஒரு போலிச்சட்டம் பிறப்பிக்கப்பட்டிருந்தது. அதனால் தமிழர்கள் முடக்கப் பட, சிங்களக்காடையர்கள் முடியுமான தமிழர் செல்வங்களை சூறையாடிக்கொள்ள தமிழர் வீடுகளுக் குள்ளே குடிகொண்டிருந்தனர் எனத் தோன்றிற்று. எனவே வீதிகள், சந்துகள் எல்லாம் வெறிச்சோடிக் கிடந்தன. ஆனால் நான் எதிர்பாராத வகையில் ஒரு வெள்ளை வாகனம் வெள்ளைக் கொடியுடன் தூரத்தில் வருவது தெரிந்தது. அந்த வாகனம் நெருங்கியதும் கையைப் பலமாக அசைத்தேன்.

சிவப்பு நிறத் துணியில் வெள்ளைச் சிலுவை வரையப்பட்ட கொடியாகையினால், அது செஞ்சிலுவைச் சங்கத்திற்குரியது என்பதனை உணர்ந்தேன். என்னருகில் நிறுத்தப்பட்ட அந்த வாகனத்திலிருந்து ஒரு வெள்ளைக் காரப் பெண் இறங்கவும், நான் ஓடிச்சென்று எங்கள் குடும்பத்திற்கு நிகழ்ந்த கொடுமைகளை எடுத்துக் கூறினேன். ஆயிரக்கணக்கான இனங்களின் துயரங்களைத் துடைப்பதற்காக மனித நேயத்தைப் பணயம் வைத்துச் செய்யும் அவள், உடனே என் கையைப் பிடித்த வண்ணமே வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். முதலில் அப்பாவின் கருகிய உடலை ஒரு பொலிதின் பையில் அடைத்தாள். பின் அம்மாவின் மூச்சு ஓடிக்கொண்டிருப்ப தனால் உடனேயே களுவோவில வைத்தியசாலைக்கு எடுத்துச் சென்றதோடு, என் அண்ணன் கவிக்கோவிற்கும் தகவலை அனுப்பியிருந்தாள். பேராதனைப் பல்கலைக் கழகத்தில் கவிக்கோ சமூகவியல் பாடத்தினைக் கற்பவராயினும், சமூகங்களில் பற்று என்பது அவரிடம் துளியளவும் இல்லையெனலாம்.

அவரிடம் இதுவரை சமூகத்தைப் பற்றியோ அல்லது தனிமனிதனைப் பற்றியோ பரந்துபட்டதோ, அன்றேல் ஆழமான எந்தக் கருத்துகளுமோ உருவாகியிருக்கவில்லை. எதனையும் குறுகிய கண்ணோட்டத்தில் பார்த்து, சுயநலங்களைத் தேடும் இயல்புடையவர். அதாவது தான் மட்டும் வாழ்ந்தால் போதும், இனம் எப்படிப் போனாலும் போகட்டும் என்ற கோட்பாட்டில் ஊறியிருந்தார். இது பிற்காலத்தில் சிங்கள நயவஞ்சகக் கூட்டங்களால், தமிழரின் இனக் கலாசாரப் பண்பாடுகளைச் சிதறடிக்கவும்,

ஒற்றுமையை வேரோடு பிடுங்கவும் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளினால் உருவாகியதொன்றாகும்.

இன்னொரு வகையிற் சொல்லப்போனால் இது ஒரு சாபக்கேடு. அது இறைவனாற் சபிக்கப்பட்டதென்றே நான் கருதுகின்றேன். இனி, கவிக்கோவும் நானும் இந்த விடயங்கள் பற்றி விவாதிப்பதனால் எம்முள் அதிக கசப்புணர்வுகள் தலையெடுத்துள்ளன. இம்முறையாவது அம்மாவை இறுதி நாட்களில் பார்த்து, தன் அன்பினைப் பகிர்ந்து கொள்ள உடனடியாக வருவான் என்று எதிர்பார்த்தேன். ஆனால் வந்து சேர ஒரு வாரமாயிற்று. அம்மாவின் உயிரும் அவனைப் பார்த்துவிட்டு வெளியேற விரும்பியிருந்தது. அவன் வந்து சேர்ந்ததும், அவன் கையைப் பிடித்து தன் மகன் என அடையாளப்படுத்திய பின் அவளின் மூச்சு நிற்கலாயிற்று. அண்ணனிடம் பணம் இருக்கவில்லை. அதனால் நான் என் நகைகளையும், அம்மாவின் நகைகளையும் விற்றுப் பணமாக்கி, அம்மாவின் அடக்கத்தினை நிறைவேற்ற முடிந்தது. பின், பெற்றோரை இழந்த அவனும் தன் வாழ்வு சூனியமாயிற்று என உணரத் தலைப்பட்டிருந்தான். பின், அப்பாவின் நண்பரான ஒரு சிங்கள சட்டத்தரணி மூலம் வீட்டைக் குறைந்த விலைக்கு விற்றுவிட்டு நாமிருவரும் லண்டனுக்குப் புலம் பெயர்ந்தோம்" என்று கூறிமுடிக்கையில் அவள் குரல் தழுதழுத்திருந்தது.

எம்மைச் சூழ இருந்த வெள்ளையர்கள் ஏதோ வாசிப்பவர்கள் போல் காணப்பட்டாலும், எம் சோக வெளிப்பாடுகளை இடையிடையே நோட்டம் விடுவதனையும் நான் அவதானித்திருந்தேன். அவளைத்

தேற்றுவதற்காக அவள் சோகங்களில் அதிக அக்கறை யில்லாதவன் போற் காட்டுவதற்காகத், தொடரூந்து தரித்த நிலையத்தை அறிய விரும்பி வெளியே எட்டிப் பார்த்தேன். அப்பொழுது தொடரூந்து விக்ரோரியா நிலையத்தில் மக்களை ஏற்றிக் கொண்டிருந்தது. அவளும் கண்ணீர்த் துளிகள் வழிவதற்கு முன்னரே கைக்குட்டை யால் கண்களை ஒற்றிக் கொண்டாள். கேள்விகள் எதுவும் என் சிந்தையில் உருவாகவில்லை. ஆனால் வாய் கேட்டுவிட்டது. "அப்ப அருள்மொழி இங்கு எங்கே இருக்கிறீர்கள்?" என்று ஆரம்பத்தில் கேட்ட கேள்வியையே வாய் கேட்டிருந்தது.

அவளுக்கு என்னை நோக்கிப் பதில் சொல்ல முடியாத நிலையில் தலையைக் கவிழ்த்த வண்ணமே "மனோபார்க்கில் அண்ணனுடன் தான் இருக்கின்றேன். அவர் இங்கு வந்து நாலைந்து வருடங்களில் ஒரு வீட்டைத் தனியாக வாடகைக்கு எடுத்துக் கொண்டு, திருமணமும் செய்து கொண்டார். அவர்கள் வீட்டில் ஒரு அறையில் தான் நானும் வாழ்ந்து வருகின்றேன்" என்றாள். மனிதர்கள் வாழ்வு சடுதியாக அவலமாய்ப் போய்விட்டதனை, அவள் வாழ்வின் கதைகள் கூறின. எனதும் அப்படித்தான் என்பதனை நான் கூறாவிட்டாலும், வாசகர்கள் உணர்ந்து கொள்வார்கள். ஹம்மர்சிமித் நிலையத்தை தொடரூந்து அடைந்தது. அன்று அருள்மொழியின் சோக வாழ்வின் ஒரு பக்கத்தினையே என்னால் வாசிக்க முடிந்தது. இன்னும் வாசிக்க எத்தனை பக்கங்களோ. அவற்றை வாசிக்கத் திரும்பவும் நாம் சந்திப்போமா? என்ற கேள்விக்குறியுடன்

அவளுக்குக் கையை அசைத்துப் பிரியாவிடை பெற்றுக் கொண்டு இறங்கி நடக்கலானேன். அன்று என் நெஞ்சம் சுமையாக இருந்ததனால் என் நடையும் தளர்ந்திருந்தது.

அருள்மொழி சில நிமிடங்கள் தனது துயரங்களைப் பகிர்ந்து கொள்ள உதவிய தேவன் எழும்பிச் சென்றதும், தன் பகுதியிலிருந்து பயணிகளை நோட்டமிட்டாள். பெரும்பாலானோர் இறங்கிப் போயிருந்தனர். வேலைக்குச் செல்லும் பயணிகளுக்கு இதெல்லாம் பழக்கப்பட்ட விடயம். அதனால் கூடுதலாக நூல்களையோ அல்லது நாள் ஏடுகளையோ வாசிப்பதிலேயே பயணத்தைக் கழிப்பது வழமையாகும். அருள்மொழி ஈலிங்கில் ஒரு மருந்துத் தொழிற்சாலையில் வேலையெடுத்து ஒரு வருடங்கள் ஓடியிருந்தது. ஆனால் இன்றுதான், தான் முன்பின் அறியாத தேவனிடம் தன் மனச்சுமைகளில் சிறிதளவினைக் கிள்ளிக் கொடுத்திருந்தாள். வேலைத் தலத்திற்கு விரைந்து சென்ற பொழுது, ஒரு புதிய பெண்ணாகத் தன்னை நினைத்துக் கொண்டாள். மனசும் கொஞ்சம் தளர்ந்திருந்தது. உறைகளில் அடைக்கப் பட்டிருந்த மருந்துப்பைகளைக் கணக்கெடுத்துப் பதிவு செய்து கொண்டாள். கைகள் வழமை போல் வேலை களைச் செய்திருந்தாலும், அவள் மனம் அவளை விட்டு தேவன் பின்னால் சென்றிருந்தது. இன்றைய உலகில் இருவர் சந்திப்பின் பின் தொடர்புகளை ஏற்படுத்தக்கூடிய தொலைபேசி எண்ணையோ அல்லது மின்னஞ்சல் தொடர்புகளையோ பரிமாறிக் கொள்வது வழமை. ஆனால் இவர்கள் இருவரும் அந்த நடைமுறைக்குள் போக விரும்பாதவர்களாகவே பிரிந்திருந்தார்கள்.

அருள்மொழி முற்றாகத் தன்னை மறந்து தேவனையே அடிக்கடி நினைத்துக் கொண்டாள். அதனோடு அதே நேரம் மறுநாளும் தொடரூந்தில் பயணித்தால் மீண்டும் அவனைச் சந்திக்க வாய்ப்புண்டு என்ற நம்பிக்கையிலிருந்தாள்.

ஆனால் ஆண் மகனான தேவனுக்கு அன்றைய சந்திப்பு அன்றுடனே முடிந்து விட்டதாகக் கருதியிருந் தான். ஆனால் அவனும் ஒரு சாதாரண மனிதன் தானே. அதனால் அவனது மனதில் ஏதோவொரு புதிய உணர்வு ஊசலாடத் தொடங்கியிருந்தது. அதனால் காலை நேரங்களில் ஓடும் தொடரூந்துகளில் சந்திப்புகள் இடம் பெறத் தொடங்கின. இதனை விதி என்று இருவரும் நம்பினர். அதனால் தேவனின் யந்திரவாழ்க்கையில் ‘அன்புப் பரிமாற்றம்’ எனும் முதல் இயல் ஆரம்பமாயிற்று. அது பலவித மனித உணர்வுகளைத் தொகுத்தளித் திருந்தது. ஆனாலும் இந்த வசந்தம் நிலைக்குமா? என்னும் கோணல் புத்தி இடையிடையே குறுக்கிடுவதும் உண்டு. அந்தக் கோணல் புத்தி “நீ ஒரு முட்டாள். முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போல் நீயும் அடைய முடியாத ஒன்றிடத்து ஆசைப்பட்டு ஏமாற்றமடையாதே” என எச்சரிக்கும். அதனால் சில சமயம் இளமையின் குருட்டுப் பார்வைக்கு இடம் கொடுப்பதில்லை என உறுதி பூணுவான். ஆனால் அருள்மொழியின் தொடர் சங்கிலியான சந்திப்புகள் அவனது எல்லா உறுதிகளையும் தகர்த்தெறிந்தன. அவள் முற்றாக தேவனை தன் இதயத்திற்குள் பாதுகாத்திருந்தாள். அதனால் அவனும் அவளது அன்பில் ஒரு புதிய இளைஞனாக

மாறிவிட்டிருந்தான். ஒரு நாள் அவள் 'அகதிகள்' எனும் நூலை அவனிடம் கொடுத்து "இதனை வாசியுங்கள். இதில் எம் எல்லோரதும் உணர்வுகள் பகிரப்பட்டுள்ளன. நாமும் அவற்றின் பங்காளிகள்" என்றதும் தேவனின் கைகள் சடார் என நீட்டி அதனை வாங்கிக் கொண்டன.

ஒவ்வொரு கிழமையும் 'அகதிகள்' எனும் வாரஏடு அவர்கள் இருவர்களதும் கருத்துப் பரிமாறல்களுக்குத் துணை போகலாயிற்று. ஒரு இதழில் 'ஈழம்' என்ற சொல் ஆய்வுகள் பற்றிய கட்டுரை இடம் பெற்றிருந்தது. அந்த ஆய்வின்படி தென்மதுரைப் பாண்டியரின் பழந்தமிழ் நாடுகளைக் கடல் கொண்ட பொழுது, எஞ்சிய நிலத்துண்டமான ஏழ்பனைநாட்டில் வாழ்ந்திருந்த, 'ஈழவர்' என்னும் ஆதிக்குடிகளின் பெயராலே 'ஈழம்' என்ற பெயர் ஏற்பட்டதென்பது வலியுறுத்தப்பட்டிருந்தது. இந்நாடு பனைவளமுடையதனால் ஈழவர், கள் எடுக்க உதவும் சீவுகத்திக்கும் 'ஈழம்' என்ற பெயர் இருந்துள்ளமையும் புலனாகியிருந்தது. இவ்வாறு பனைவளம்மிக்க ஈழத்தின் பெருமையை வரலாறுகள் குறிப்பிடுகின்றனவாயினும், இன்று இந்த வளமனைத்தும் சிங்களப் படையெடுப் பாளர்களால் அழிக்கப்பட்டு விட்டன. அதனோடு எல்லோருக்கும் கிடைக்கப்பெற்ற ஆங்கிலக் கல்வியினால் அனைவரதும் சமூக வாழ்வு முன்னேறினாலும், நாட்டு வளம் தான் சிதறடிக்கப்பட்டு விட்டது எனத் தேவன் மீட்டுப்பார்த்திருந்தான். நாட்டு வளம் சிதைவுற்ற தனையிட்டு கவலையடைந்திருக்கும் தேவனுக்குத் தமிழரின் மனிதவளத்திற்குச் சவால் எங்கிருந்து வந்தது என விளங்கிக் கொள்ள முடியாதிருந்தது. இவற்றை

யெல்லாம் மறக்கடிக்க வைக்கும் வகையில் ஒரு புதிய சவாலுக்கும் முகம் கொடுக்க வேண்டியவனாக இருந்தான்.

வழமை போல் அகதிகள் வார இதழ் தேவனின் கைகளுக்கு வந்து சேர்ந்தது. ஒருநாள் அதனுள் அருள்மொழியும் ஒளிந்து கொண்டு என்னுடன் வந்திருந்தாள். அதாவது நீலவண்ணக்கடதாசியில் முத்து, முத்தான தமிழ் எழுத்துகள் மூலமும், என்றுமே நான் படித்திராத அன்பு வார்த்தைகள் மூலமும் என் இதயக் கதவுகளைத் திறந்திருந்தாள். வாய் மூடப்பட்ட கடித உறையுள் இருந்த இக்கடிதம் என்னைப் பார்த்து நகைப்பது போன்ற உணர்வு என்னுள் ஏற்பட, கைகள் படபடக்க ஒருவாறு எழுந்து அவளுக்குக் கையசைத்து விட்டு வண்டியிலிருந்து இறங்கி வெளியேறிக் கொண்டிருந்தேன். கால்களின் வேகம் தளர்ந்திருந்தன.

என் வாழ்க்கையின் கனவுலகுடன் நான் போராடினேன். என் கைக் கடிகாரத்தைப் பார்த்தேன். மணி 9.45 ஆகியிருந்தது. விரைவாக வேலைத் தலத்திற்குச் சென்றால் தான் நேரத்தைப் பதிந்து விட்டுக் கையிலுள்ள கடிதத்தினை வாசிக்க முடியும் என்று கருதி நடையை வேகப்படுத்தினேன். நான் வேலை செய்வது ஒரு பாண் தயாரிக்கும் நிலையமாகும். காலை நேரத்தில் கணக்கெழுதும் தொழிலையும், மாலை நேரத்தில் பாண்களைப் பைகளில் அடைத்து, ஓடிக்கொண்டிருக்கும் மின் தட்டில் வைக்கும் தொழிலையும் ஏற்றிருந்தேன். இத்தொழில் முழுமையாக என்னைப் புற உலக சிந்தனையற்றவனாக மாற்றியிருந்தது. ஆனால் என்

அம்மாவைப் படுக்கைக்குப் போகும் பொழுது நினையாத நாள்களே இல்லை. அம்மாவிற்கு மாதாமாதம் பணம் அனுப்பும்போது நான் காணும் சுகம் வேறெதிலும் கிடைப்பதில்லை. அம்மாவிற்குத் தந்தையாரின் ஓய்வூதியப் பணம் கிடைப்பதனால் அவவிற்குப் பணக்குறை எதுவுமில்லை. அதனால் என் பணத்தை விட, அவவிற்கு என்னிடம் அதிக பாசத்தினையே எதிர்பார்த்திருந்தா. என் உடல் நலம், தெய்வவழிபாடு, உணவுப் பழக்கம் முதலானவற்றை விசாரித்தே கடிதம் எழுதுவா. கடவுள் வழிபாட்டில் தான் காணும் சுகத்தையும், அனுபவங்களை யும் தவறாது குறிப்பிடுவர். இந்தத் தாயின் பாசத்தைப் போட்டி போட்டுக் கொண்டு பகிர்ந்து கொள்ள இன்னொரு பெண் காலடி எடுத்து வைப்பதாக நான் நம்பினேன்.

வேலைத்தலத்திற்குள் புகுந்ததும் நேரத்தைப் பதிவு செய்து விட்டு, கடிதத்தைப் படிக்கலானேன். அங்கு என் முன் அருள்மொழியே நின்று வாசிப்பது போன்ற ஒரு பிரமை. "அன்புள்ள தேவன் நாம் எதிர்பாராத வகையில் சந்தித்தோம். ஈழம் தான் எம் தாயகம், நாம் தமிழர் எனும் இரு வலைகளினால் பின்னிப் பிணைக்கப்பட்டோம். அது காதலாக வளர்ந்திருந்தது. இரு பௌதிக உடல்களிலிருந்த இரு மனங்கள் பேசி உறவாடியதனால் நாம் 'ஓருயிர்' எனும் தெய்வீக அனுபவத்தைப் பெற்றுக் கொண்டோம். நாம் சித்தியெய்தி விட்டோம். இந்த அன்பும், அறனும் மேலோங்கி எம் குடும்ப வாழ்வை, வள்ளுவன் கூறியது போல் வையத்து வாழ்வாங்கு வாழவைக்கும் என்பதில் உறுதிபூண்டுள்ளேன். உங்கள் முடிவும் இதுவேயாகத்தான் இருக்கும் என்பதில்

ஐயமில்லை. அன்புடன், அருள்மொழி" என்று கடிதம் முடிவுபெற்றிருந்தது.

எனக்குப் பயத்தினால் உடம்பு வியர்த்துக் கொண்டிருந்தது. தலையும் பம்பரம் போல் சுழல்வது போல் இன்னோர் பிரமை. இவள் அண்ணன் சுயநலவாதி. ஆனால் தங்கைக்குத் திருமணத்தை செய்து வைக்க முன்வராத நிலையில், அவளே ஒருவனைத் தேடிக் கொள்வதில் கௌரவப்பிரச்சினை எழுவது இயல்பு. அதனால் தொழில், சாதி, தகைமை என எல்லாம் குட்டையில் கிளறி விசாரித்து எனக்கு இருக்கும் நிம்மதியையும் இவள் இல்லாமல் செய்து விடுவாள். ஆகையினால் எமது பூர்வீக வரலாறுகளை இவளுக்கு எடுத்துக் கூறியபின், அவள் முடிவெடுக்கட்டும் என்று கருதினேன்.

உண்மையில் காடுகளில் பாதுகாப்பிற்காக கல்லாயுதங்களுடன் திரிந்த ஆதிமனிதன் நல்ல பண்பானவனாகவே வாழ்ந்திருந்தான். காலப்போக்கில் குழுக்களாக வாழ முற்பட்ட காலங்களிலே அரசன், குடிமக்கள், அல்லது முதலாளி, தொழிலாளி என்ற பலப்பரீட்சை உருவாகி, பின் தொழிலடிப்படையில் மனிதன் பாகுபாடு செய்யப்பட்டிருந்தான். அந்தக் காலத்தில் மன்னர்களின் ஆசைகளை நிறைவேற்ற சமூகம் முழுவதும் இராப்பகலாகக் கற்பாறைகளை உடைத்தும், குடைந்தும் எடுத்த கற்பலகைகளைச் சுமந்து இழுத்து பிரமாண்டமான கட்டடங்களைக் கட்டி முடித்தது. இந்தத் தொழிலாளிகள் எவரும் பாராட்டப் பட்டதாக வரலாற்றில் பதிவுகள் இல்லை. இன்றைய விஞ்ஞான

உலகிலும் இயந்திரங்கள் தொழிற்பட்டாலும் மனிதனும் யந்திரத்துடன் கடுமையாகத் தொழிற்பட்டாலே கடலிற் பிரமாண்டமான கப்பல்களை ஓடவைக்கலாம். வானத்திலும் வானூர்திகள் பறந்து உலகையே கலக்கும் நிலை ஏற்படலாயிற்று. இவ்வாறு நிலத்தில் மனிதனின் சக்திமிக்க கைகள் செய்துள்ள அற்புதங்கள் எண்ணற்றவை.

சுரங்கத்தின் கீழ் மனிதன் ஏன் தொழில் புரிகின்றான். இந்தச் சமுதாயத்தை இவ்வாறான தொழில்களே பாகுபாடு செய்து வைத்துள்ளன. ஆனால் இன்றைய சமூகப் புரட்சியில் சுரங்கத் தொழிலாளி மகன் நாட்டை ஆளும் தலைவனாகத் தெரியப்படலாம் என்பதனால் மக்கள் சாதி, சமயம் பற்றி அலட்டிக் கொள்வதில்லை. அதனால் கல்வியும், அறிவு வளர்ச்சியும், தனிப்பட்ட ஆளுமைகளும் தான் இந்த வேறுபாடுகளைக் களைய முடியும் என்பது பலரது கருத்து. ஆனால் பனைத் தொழில் மரபில் வந்த என்னை 'வெள்ளை' என்று கூறுவதற்காக நான் முன்வைக்கும் கருத்துகள் இவை எனவும் சிலர் கருதலாம். இருப்பினும் இது எனக்கும், அருள்மொழிக்குமிடையேயுள்ள விடயமாகையினால், அவளிடமே என் காய்களை நகர்த்துதல் தான் சரியான தீர்வைத் தரும் என்ற முடிவிற்கு வந்தேன்.

மறுநாள் பார்க்கிங் தொடரூந்து நிலையத்திற்கு வந்து வழமைபோல் ஏறும் பெட்டியில் ஏறி அமர்ந்து கொண்டேன். அருகில் ஆசனங்கள் பல காலியாகக் கிடந்தன. அடுத்த ஈஸ்ட்ஹாம் நிலையத்தில் வழமை போல் அருள்மொழி ஏறியதும் பக்கத்து இருக்கையில்

அவசரமாக வந்து அமர்ந்து கொண்டாள். அன்பே உருவெடுத்தாற் போல் அவள் தோற்றம் என்னை ஆறுதல் படுத்தினாலும், 'இவள் பாவம்' என்று மனது சொல்லிக் கொண்டது. எந்தவித வெளிப்பாடுகளுமற்று மரக்கட்டை போல் உட்கார்ந்திருந்த என்னைப் பார்த்ததும் அவள் பேசத் தொடங்கினாள். "என்ன தேவன்! நான் வந்து அமர்ந்ததே தெரியாது, இஞ்சி தின்ற குரங்குமாதிரி இருக்கிறீர்கள். அந்தக் கடிதத்தைப் படித்தீர்களா?" என்று கேள்வி ஒன்றையும் எழுப்பியிருந்தாள். என் வாய் கட்டுப் போட்டிருந்தது. அதனால் 'ம்' என்று ஒரு ஒலி வாய்க்குள் இழுத்திருந்தது. நிமிர்ந்து அவள் கண்களைப் பார்த்துப் பேச முடியாத நிலையில், எப்படி அவளுக்கு என் நிலைமைகளைப் புரியவைக்க முடியும். அதனால் அவள் மௌனியானாள். நானோ என் குரலைச் செருமி இயல்பாக்கிக் கொண்டு அருள்மொழி! நீர் கொழும்பில் வாழ்ந்த பெண். அதனால் தமிழர் சமூகக் கட்டமைப்பில் காலம், காலமாகப் பேணி வந்த மரபுகள் சில உள. நாமிருவரும் தமிழர் என்ற வகையில் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டுள்ளோம். ஆனால் உங்கள் வேளாளர் சமூகம் போல் எம் ஈழவர் சமூகமும் சில கட்டமைப்பிற்குட்பட்டதுதான். இன்று நான் ஈழத்தில் சுங்க இலாகாவில் தொழில் புரிந்துவிட்டு, லண்டனில் வாழ்கின்றேன் என்பதற்காக என் சமூக பாரம்பரியங்களை அலட்சியப்படுத்த முடியுமா? என்று மளமள என்று கொட்டித் தீர்த்தேன்.

அருள்மொழி, என் வேதாந்த, சித்தாந்தங்களைக் காதிற் போட்டுக் கொண்டதாகத் தெரியவில்லை. எதிரிலுள்ளவர்களைப் பார்த்துக் கொண்டதனாலோ

என்னவோ சிரிப்பை அடக்கி வைத்துக் கொண்டு பேசினாள். சமயச் சொற்பொழிவுகள் தோற்கும் வகையில், "கடவுள் முன் நாமனைவரும் சமமே. அவரோ ஒருவர். நாமோ கணக்கற்றவர்களாகி விட்ட நிலையில், மனிதனுக்கு மனிதன் வேறுபாடுகளைக் காட்டி, உயர்ந்தவன், தாழ்ந்தவன் எனப் பாகுபாடுகளை வளர்த்து விட்டுள்ளோம். கொழும்பில் சிங்களவன் எல்லாத் தமிழரையும் 'பறைதெமள' என்ற வட்டத்திற்குள் வைத்தே படுகொலைகளைச் செய்து வருகின்றான். அதனாலே என் தகப்பனாரும், தாயும் அங்கு அகால மரணமடைந்தார்கள். நீங்களும், நானும் உயிர்பிழைப்பதற்காக முன்பின் தெரியாத வெள்ளையர்களுடன் வாழ்ந்து வருகின்றோம். அந்தக் காலத்தில் தமிழ்நாட்டில் குடியமர்த்தப்பட்ட பிராமணர்களே சாதிப் பாகுபாடுகளை அதிகம் வளர்த்து விட்டு எம்மக்களின் வழிபாட்டுரிமைகளையும் மறுத்திருந்தார்கள். அதனாலே தான் தமிழர்கள் முதலில் பௌத்தம், சமண மதங்களையும், பிற்காலத்தில் இஸ்லாம், கிறித்தவ மதங்களையும் தழுவி கடவுளைத் தமதாக்கி யிருந்தார்கள். அதனால் நீங்கள் பழைய குப்பைகளைக் கிளறிச் சொல்லும் கதைகளில் நான் அதிக நம்பிக்கை யில்லாதவள்'' என்று கூறிக்கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தாள்.

அவள் நியாயங்கள் என் உளச்சூட்டைத் தணித்திருந்தன. அவளது கருத்துகள் மனித நீதி,-நியாயங் களைக் கொண்டிருந்தது. வடமொழியும், பிராமணக் குருமாரும் கடவுளைத் தமக்குரியவரெனக் கட்டி வைத்திருந்தனர். ஆனால், ஆங்கில மொழியை எம்மீது திணித்த ஆங்கிலேயர்கள் முயற்சிக்கேற்பத் தொழில்

வாய்ப்புகள் என்றனர். கல்வியைத் தாராளமானதாக்கிய தனால், மக்கள் அறியாமையிலிருந்து விடுவிக்கப்பட்டார் கள். அதனோடு பண்படுத்தப்பட்ட மனிதர்களாகித் தொழில் வாய்ப்புகளைப் பெறலானர். கல்வியினால் ஏழையின் மகனும் எந்தெந்தத் தொழிலில் அவன் திறமைசாலியாக இருக்கின்றான் என நிரூபிக்க முடிந்தது. நசுக்கப்பட்டு மறைந்திருந்த ஆளுமைகள் அனைத்தும் பயன்படுத்தப்பட்டபோது நம் சமூகம் ஒரு புதிய பரிணாமத்தை எட்டியிருந்தது. ஆனாலும் இன்னோரன்ன சமூக மாற்றங்களால், காலம் காலமாகத் தேங்கிக் கிடந்த சமூக அமைப்புகளை ஒரே நொடியில் தூக்கி வீசிவிட முடியாது என்பதும் உண்மையே.

இத்தகைய சமூகச் சீர்கேடுகள் கண்டம் விட்டுக் கண்டம் பாய்ந்தாலும் அவையும் தொடரவல்லன. இவற்றையெல்லாம் மனித மனம் எனும் குப்பைத் தொட்டிக்குள்ளிருந்து அகற்றி விடுவதும் இயலாத காரியமே என்றெல்லாம் என் மனம் அப்படியும், இப்படியும் போட்டுக் குழப்பிக் கொண்டிருந்தது. இருந்தாலும் சில நாள்கள் பழகிய அருள்மொழி கள்ளம் கபடமற்ற குழந்தையைப் போல் காணப்பட்டாள். அவளது அறிவுக்கெட்டிய நீதி நியாங்களை எல்லா மக்களும் ஏற்க வேண்டும். எம் சமூகம் கடவுளின் முன் ஒரு சிறந்த நீதிநியாயங்களைக் கொண்ட சமூகமாக மிளிரவேண்டுமென்று நான் வேண்டிக் கொண்டேன். நான் என்னிடமிருந்த தாழ்வு மனப்பான்மைகளை எடுத்து வீசிவிட்டு, புதிய மனிதனாக வாழவேண்டுமென்ற துடிப்புடையவனானேன்.

அவள் தொடர்ந்தும் 'அகதிகள்' வார இதழ்களுள் தன் தூய்மையான காதலை வெளிப்படுத்தும் கடிதங்களை வைத்துக் கொண்டே வந்தாள். ஆனால் நான் தொடர்ந்தும் மௌனியாக வேடம் போட்டிருந்தேன். அவள் பொறுமையிழந்தாள். ஒரு நாள் அவள் சீற்றத்திற்கு முகம் கொடுக்க வேண்டிய நிலையேற்பட்டிருந்தது. எல்லா உயிர்களுக்கும் தாயாக வழிபடும் அம்மனே, காளிவடிவில் சீற்றம் கொண்டது போல் அவள் கோபம் தலைக்கு மேலாகப் போயிருந்தது. ஒருநாள் தொடரூந்து ஈஸ்ட்ஹாம் நிலையத்தில் நிறுத்தவும், நான் தலையை வெளியே விட்டு அருள்மொழியைத் தேடினேன். என் கண்கள் அவளைத் தேட, அவள் அவசரம் அவசரமாக நானிருக்கும் பெட்டியை நோக்கி ஓடி ஏறிக்கொண்டாள். அவளுக்கென ஒரு இருக்கை காத்திருந்தது. சடார் என்று அமர்ந்ததுதான் தாமதம். "தேவன்! நீங்கள் என்ன முற்றத் துறந்த சுவாமியாரா? அல்லது ஆசைகளை வெல்ல முடியாத வேடதாரியா? நான் ஒரு பெண். ஆயினும் சபலப்புத்திகள் என்னிடம் இல்லை. எதனையும் நீதி, நியாயங்களுடன் நிறைவேற்றி வருபவள். நான் உறுதியுடன் வெளிப்படுத்திய என் தூய்மையான காதலை நீங்கள் கணக்கெடுப்பதாக இல்லை. உங்கள் மௌனம் என்னை அணுவணுவாக அரித்துக்கொண்டேயிருக்கின்றது" என மூச்சு விடாமல் பேசிக் கொண்டே போனாள்.

நான் மரியாதையாக ஒதுங்கிக்கொண்டே, "இல்லை அருள்மொழி உன்னுடன் இணைந்து இல்லறம் நடத்த எனக்கு நிறைய விருப்பம் உண்டு. ஆனால் நாம் கடவுள் பற்றியும், அவர் உயிர்களிடம் பட்சபாதமற்ற அன்புடையவர் என்றும் வேதாந்தம், சித்தாந்தம் பேசிச்

சமாளிக்கின்றோம். ஒவ்வொரு சமூகமும், தன்தன் சமூகத்தின் மத்தியில்தான் இயல்பான வாழ்க்கையை மேற்கொள்ள முடியும். தென்னாபிரிக்காவில் கறுப்பர்களின் மண்ணை அபகரித்துக் கொண்ட வெள்ளையர்கள் சட்டத்தின் மூலம் அவர்கள் தாய்மண்ணில் சுதந்திரமாக வாழ முடியாது செய்திருந்தனர். அதனையே உலகம் எதிர்த்தது. ஆனால் இன்று கிழக்கு லண்டனில் உள்ள நிலைமை என்ன? சட்டமில்லாமலே ஆபிரிக்கர்களும், ஆசியர்களும் வெள்ளையர் நிலங்களைத் தமதாக்கிக் கொண்டனர். இவர்களுடன் கலந்து வாழவிரும்பாமையால் வெள்ளையர்கள் தாமாகவே வெளியேறி விட்டார்கள். இவ்வாறு பலஇனங்களை உள்வாங்கியிருக்கும் இங்கிலாந்தினை போப்பாண்டவரின் பேச்சாளர் "இங்கிலாந்து ஒரு மூன்றாம் உலகநாடாக மாறியிருக்கின்றது" எனக் குறிப்பிட்டிருந்தார்.

இதுபோலத்தான் சட்டங்கள் இல்லாமலே எமது சமூகமும் சில நியதிகளுக்குட்பட்டிருப்பதனை நான் அவதானிக்கின்றேன். கறுப்போ, வெள்ளையோ, கட்டையோ, நீளமோ நாமெல்லோரும் மனிதர்கள் என்பதனால் சமமானவர்களே. ஆனால் சமூகவளர்ச்சிக்காக ஏற்படுத்தப்பட்ட தொழில்பிரிவுகள் சில வாழ்வியல் வளர்ச்சிக்கு உதவியிருந்த பொழுதும், அது சமுதாயத்தைப் பிளவுபடுத்தியுள்ளமையையும், இது இன்றும் எம்மத்தியில் புரையோடிக் கிடப்பதனையும் எவரும் மறுப்பதற்கில்லை. திரும்பவும் சொல்கிறேன் நாம் இருவரும் தமிழர்கள். ஆனால் தொழில் அடிப்படையில் வெவ்வேறு

இயல்புகளைக் கொண்ட சமூகங்களாக பிரிந்து வாழ்ந்து வருகின்றோம்.

நீ ஒரு புதுமைப்பெண். கடவுளின் நியாயங்களுக்கு முன்னுரிமை கொடுப்பவள். எம் சமூகம் அப்படியல்ல. பிராமணர்களைப் பார். அவர்கள் இந்தியாவிற்குள் புலம்பெயர்ந்து ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகள் கழிந்தாலும் தாம் காசியப்பர், விசுவாமித்திரர் போன்ற முனிவர்கள் வழி வந்தவர்கள் என இன்னுமும் குலம், கோத்திர வழிகளை அடையாளம் காட்டி வாழ்கிறார்கள். உண்மையென்னவென்றால், இப்படியான குலம், கோத்திரத்தைப் பேசி, இவர்கள் மற்றவர்களை ஏமாற்றி வருகின்றார்கள். அதுதான் உண்மை. தமிழருக்கு இந்த வரலாறு தெரியாது. ஆனால் தெரிந்திருந்தாலும் அவர்கள் கடவுளின் படைப்பு ரகசியங்களைப் புரிந்து கொள்ளத் திறனற்ற நிலையில் மின்னுபவர்களைக் கண்டதும் 'ஐயா!' என்று பின்போகும் தம் இயல்புகளைக் கைவிடமாட்டார்கள். அதுபோல் தான் என் நிலையும் என்று கூறி நிறுத்திவிட்டு, அவளை நிமிர்ந்து பார்க்க அச்சமுற்றிருந்தேன். அவள் தனது உறுதியிலிருந்து சிறிதும் தவறவில்லை. அரசியல் பேசினாள்.

"தேவன்! இந்தச் சாதி, சமயம் என்ற பூச்சுகளைப் பூசிக்கொண்டதனாற்றான் தமிழ்ச் சமூகத்தின் ஒற்றுமை சிதறடிக்கப்பட்டு, பலவீனமுடைய இனமாகிக் கிடக்கின்றது. அதனாலே சிவனும், முருகப்பெருமானும் தம் திருவிளையாடல்களால் தமிழை வளர்த்துக் கொடுத்த தாயக மண்ணை இழந்து தமிழினம் வேரற்றுச் சாய்ந்து கிடக்கின்றது. தம் தாயக மண்ணில் பெருமையாக

வாழ்ந்த மூவேந்தர்கள் எங்கே? அவர்களும் பிராமணக் குருமாரின் ஆசை வார்த்தைகளையும் வேள்விகளையும் நம்பி தமக்குள்ளே போரிட்டு மடிந்தார்கள். அப்பொழுது தமிழ்மண்ணிலிருந்து இவர்கள் மீண்டும் தலையெடுக்க முடியாமல் போனதற்கு ஒற்றுமையின்மையே காரணம். அது ஒரு சாபம் என்றே நான் கருதுகின்றேன். குடியேற்றவாசியாக வந்த சிங்களவர்கள் தமக்குள் கட்சிபேதங்களை வைத்திருந்தாலும், தமிழரது பூர்வீக நிலங்களைத் தமதாக்கி தம் ஆட்சிகளை உறுதி செய்துவிட்டு, ஈழத்தில் தமிழரை இரண்டாம் தரப் பிரஜைகளாக வாழ்வதற்கு, துட்டகைமுனு காலத்திலேயே நடவடிக்கைளை மேற்கொண்டிருந்தார்கள். தம் வமிசாவளியை 'மகாவம்சம்' என்று கூறி வரலாறுகளை எழுதி வைத்தார்கள்.

இந்த வரலாறுகளைப் படித்துத்தான் தமிழக வரலாறுகளும் உறுதி செய்யப்படலாயின. ஏனெனில், தமிழர்கள் தம் பூர்வீகமண், சமயம், மூவேந்தர்கள், ஆட்சிப் பெருமைகள், கடற்கோள்கள், முதலிரு சங்கங்களில் இருந்த இலக்கியங்கள் பற்றி செய்திகளை கால அடிப்படையில் எழுதி வைக்கத் தவறியிருந்தார்கள். மூன்றாம் சங்கத்துப் புலவர்களில், ஒருவரான கணியன் பூங்குன்றனார் புறநானூற்றில் "யாதும் ஊரே யாவரும் கேளிர், தீதும் நன்றும் பிறர்தர வாரா" என்று பொதுவுடமை பேசினார். இதுபற்றி நீங்களும் குறிப்பிட்டிருந்தீர்கள். இதுபோன்ற பலவீனங்கள் அரசியல் ஆட்சிக்குரியனவல்ல. ஆன்மீகத்தை அரசியலில் பயன்படுத்திய சந்திரகுப்தனும், பேரன் அசோகனும்

ஆட்சிகளைக் கைவிட்டு, துறவிகளானார்கள். இந்த நிலையைக் குப்தர்கள் பயன்படுத்தியே பேரரசாட்சிகளை வடஇந்தியாவில் உருவாக்கினார்கள்.

அரசியல்வாதிகள் கடவுளின் நீதி, நியாயங்களுக்குப் பயந்தவர்கள் அல்ல. தங்கள் சுயநலமே அவர்களுக்கு முக்கியமானது. அவர்களுக்குக் கடவுள் பற்றிக் கவலையில்லை. அதுபோல நாமும் நலமுடன் வாழவேண்டுமானால் கொஞ்சம் சுயநலவாதிகளாகத் தான் இருக்க வேண்டும். தேவன் நான் யார்? என்று இப்பொழுது புரிந்து கொள்வீர்கள்" என்று கூறிவிட்டு, அடங்கியிருந்த மூச்சினை வெளியேற்றினாள். இனி, ஒருபக்கச் சார்பான என் கடிதங்களை எழுதமாட்டேன். நேரில் பேசிக் கொள்வோம். அல்லது தொலைபேசியில் உரையாடுவோம் என்று கூறித் தன் தொலைபேசி இலக்கம் குறிக்கப்பட்ட துண்டினை என் கைகளில் வைத்து விட்டு, மறுபக்கம் திரும்பிக் கொண்டாள்.

எனக்குத் தலை சுழன்றது. அப்பொழுதுதான் பூமியும் என்னுடன் சேர்ந்து சுழல்வதாக உணர்ந்தேன். என் இக்கட்டான நிலையை உணர்ந்து உதவ முன்வந்தது போல் வண்டி ஹம்மர்சிமித் நிலையத்தை அடைந்திருந்தது. நான் இறங்குவதற்காக இருக்கையை விட்டு முன்கூட்டியே எழுந்திருந்தேன். அப்பொழுது "இரவு ஒன்பது மணிக்கு உங்கள் குரலை தொலைபேசியில் கேட்க முடியும் என்று கருதுகின்றேன்" என்று மீண்டும் நினைவுபடுத்தினாள். அதற்குப் பதில் எதுவும் என்னிடம் உடனடியாக இருக்கவில்லை. எனினும் கண்களால் அவளை நோக்கியபடியே இறங்கிக் கொண்டேன்.

வேலைத்தலத்தில் அன்று சம்பளக்கணக்குகளை முடிவு செய்யும் நாள். அதனால் கணக்குகள் எல்லா வற்றையும் சரிபார்ப்பதில் கவனம் செலுத்தினேன். ஆனால் தலையோ மிகப் பாரமானதுடன் வலித்துக் கொண்டிருந்தது. மனமோ பாறாங்கல்லொன்றினைச் சுமந்து கொண்டிருப்பது போல் கனமாகிக் கிடந்தது. ஆனால் பழக்கப்பட்ட விரல்களோ இவற்றைக் கணக்கெடுக்காமல், கணினியில் போடப்பட்டிருந்த கணக்குகளைத் தட்டித், தட்டி சரிசெய்து கொண்டிருந்தது. பயிற்றப்பட்ட விரல்கள் மிகவிரைவில் சம்பளப்பட்டியல் களைத் தயாரித்து முடித்திருந்தன. அதனால் மூளையின் வலியைக் குறைக்க தேநீர் அருந்தித் தீர்க்க விரும்பினேன். ஆனால் மனமோ இரவு 9 மணிக்கு என் தொலைபேசி அழைப்பினை எதிர்பார்த்து அருள்மொழி காத்திருப்பாள் என்று அடிக்கடி நினைவூட்டித் தொல்லை கொடுத்துக் கொண்டேயிருந்தது. மாலை ஆறுமணிக்கெல்லாம் அறைக்குச் சென்று கதவைத் திறந்ததும், உள்ளே போவதா அல்லது வேறெங்கேயாவது போய் 9 மணியின் பின் திரும்பிவரலாமா என மனம் குழப்பமுற்றிருந்தது. அப்பொழுது அருள்மொழி "என்ன தேவன்! நீங்கள் ஒரு ஆண் பிள்ளையா? அல்லது கோழையா" என்று நையாண்டி பண்ணுவது போன்ற உணர்வு என்னைத் தட்டிக்கொடுத்தது.

'தேவா! பயப்படாதே! உனக்கொரு பெண் துணை அவசியம். சந்தர்ப்பத்தை நழுவ விடாதே! அருள்மொழி திறமைசாலி. எப்படியும் உன்னை வென்றெடுப்பாள்' என்று என் உள்மனம் பேச, எங்கிருந்தோ வந்த உறுதி

என்னைத் தழுவிக் கொண்டது. மற்ற அறைகளில் தங்கும் பாகிஸ்தான், பிலிப்பின் நண்பர்கள் அறை வெளிச்சங்களை கதவு நீக்கலூடாகப் பார்த்து விட்டு, நான் உள்ளே புகுந்து கதவைச் சாத்திக் கொண்டேன். அப்பாடா என்று கட்டிலில் சரிந்து படுத்துக் கொண்டே கடிகாரத்தைப் பார்ப்பதுவும், திரும்புவதுமாக இருந்தேன்.

இறுதியாக சுவர்க்கடிகாரம் பலமாக டாங், டாங் என ஒன்பது முறைகள் அடித்து நேரத்தைச் சொல்லி விட்டு, ரிக் ரிக் என மெல்லிய சத்தத்துடன் ஓடிக்கொண்டிருந்தது. ஆனால் என் நெஞ்சத்தில் ரிக் ரிக் எனும் ஒலி பலமாக அடித்துக் கொண்டிருந்தது. குரல் கரகரத்துக் கொண்டிருந்தது. அதனால் மேசையிலிருந்த தண்ணீர்ப் போத்தலை எடுத்துக் குடித்து, தொண்டையை நனைத்து விட்டிருந்தேன். பின் தொலைபேசி வாங்கியை எடுத்து அருள்மொழி தந்த இலக்கங்களை அழுத்தினேன். மணி அடிக்கும் சத்தம் கேட்டு, மகிழ்ச்சியுடன் அருள்மொழி ஓடிவந்து எடுத்துக் கதைப்பாள் என்று எதிர்பார்த்திருந்தேன். ஆனால் 'ஹலோ' என்று ஒரு ஆணின் குரல் என் காதுகளில் விழுந்தன. அது அருள்மொழியின் அண்ணனின் குரல் தான் என்பது நினைவிற்கு வந்தது. மறுகணமே என் அறையினுள் அருள்மொழியும், அத்தனை பொருட்களும் நிலை தடுமாறிச் சுழல்வது போன்றதொரு பிரமை என்னைக் கவ்வலாயிற்று. ஆனாலும் கரகரத்த குரலில் "I am Devan. Can I speak to Arulmoli. Please" என்று முனகினேன்.

"படார்" என்று தொலைபேசி வாங்கியை வைக்கும் சத்தம், என்னைக் கன்னத்தில் யாரோ அறைவது போல்

உணர, கையிலிருந்த வாங்கியும் நழுவித் தன்னைத் தூக்கிட்டுக் கொண்டது. 'குலைநடுக்கம்' என்ற சொல்லின் பொருளை அன்றுதான் அனுபவித்துணர்ந்தேன். பத்து நிமிடங்கள் தான் கழிந்திருக்கும் கவிக்கோவிற்கு பார்க்கிங்கிலுள்ள என் அறையை அடைவதற்கு. நானோ வேறு வழியின்றி நடந்தவை அனைத்தையும் கனவு போல் கருதி அருள்மொழியை மறந்துவிடவேண்டுமென்ற முடிவுடன் கட்டிலில் உட்காரும் சமயம் பார்த்து என் கதவினைப் பலமாகத் தட்டும் சத்தம் கேட்டு அதிர்ந்தேன். பின் 'இது ஒரு மரணத்தின் அழைப்பு' என உறுதிசெய்து கொண்டு கதவைத் திறந்தேன்.

அருள்மொழியின் அண்ணன் கவிக்கோவும், இரு உதவியாளர்களும் உள்ளே புகுந்து கதவைப் பூட்டிவிட்டார்கள். கவிக்கோ ஒரு வில்லனாகவே அங்கு வந்திருந்தான். எடே! நாய்ப்பயலே! காதலுக்குக் கண்ணில்லை என்று கூறிக் காதலித்த எத்தனையோ பேர் கசையடி வாங்கிச் செத்த வரலாறுகளே அதிகம் என்று ஏசிக்கொண்டே என் சேட்டினை இழுத்தவன் வேகமாக முன்னும் பின்னும் தள்ளிக் கையை விட்டான். என் தலை எதிரிலிருந்த சுவரில் மோதி விழுந்து விட்டேன். அப்பொழுது பல கால்கள் உதைப்பது மட்டுமே என் நினைவில் இருந்தது. பின் கண்விழித்துப் பார்க்கையில், பக்கத்து அறை நண்பர்கள் 999ற்கு அடித்து என்னை நியூஹாமிலுள்ள மருத்துவ சேவை உதவியுடன் அவசர சிகிச்சைப் பிரிவில் சேர்ந்திருந்தனர். அவர்கள் வேறு இனத்தவராயினும் தம் மனிதநேயத்தை எனக்கு முழுமையாகக் காட்டியிருந்தார்கள். அவர்களுக்கு நன்றி கூறி அனுப்பிவிட்டு, தூங்கி எல்லாவற்றையும் மறக்க

முயன்றேன். ஆனால் மனம் ஒருபுறம் வலிக்க, உடல் இன்னொரு புறம் வலிக்க தூக்கமோ என்னைப் பார்த்து வெருண்டது. எனவே பிறவிகளில் மனிதப் பிறவி எடுப்பது அரிதிலும் அரிது என்று சித்தாந்தம் கூறுகின்றதே? மனிதப் பிறவியின் பலன் இதுதானா? என்று பலமாக யோசித்து, யோசித்து களைத்த நிலையில், என்னை அறியாமலே தூக்கம் என்னைத் தழுவிக் கொண்டது. எவ்வளவு கஷ்டத்தின் பின் கிடைக்கப்பெற்ற இந்த அமைதியை இந்த மணி வேண்டுமென்றே அடித்துக் குழப்பியிருந்தது. தூக்கம் எவ்வளவு சுகம் தரும் என்று இன்றுதான் அனுபவித்திருந்தேன். ஆனால் அதனை நாம் நினைத்தவுடன் பெற்றிட முடியாது என்ற முடிவுடன் மறுபடியும் முகத்தைத் தலையணையில் புதைத்தேன்.

அப்பொழுது ஒரு பெண் குரல் "தேவன்! உங்கள் தேநீர் குளிர்ந்து போய்க் கிடக்கின்றதே. குடிக்க வில்லையா?" என்று வினவியது. அப்பொழுது என் ஆசாபாசங்களை அடக்கி, அமைதி காண முயலும் என்னை மீண்டும் குழப்பி வேடிக்கை பார்க்கத் தூண்டும் இப்பெண் யார்? என்று அறிய முகத்தைத் திருப்பிக் கடைக்கண்களால் பார்த்தேன். அங்கு ஒரு தாதிப்பெண் நின்றிருந்தாள். அதுவும் தமிழ்மணம் வீச நின்று கொண்டிருந்தாள். கண்களைக் கசக்கிவிட்டு மீண்டும் அவளைப் பார்த்தேன், சந்தேகமில்லை. அவளொரு தமிழ்மகளே தான். அவளும் என் எண்ணங்களைப் புரிந்து கொண்டவள் போல, "தேவன்! நீங்கள் யாழ்குடாவைச் சேர்ந்தவர் தானே? என்றாள். வெறுப்புடன் 'ம்' என்று இழுத்துக் கொண்டு ஏன்? என் ஊரைப் பற்றி

விசாரிக்கின்றீர்கள் என்றேன். இல்லை. என்னைத் தவறாக எடை போடவேண்டாம். ஊருக்கு ஊர் இயற்கையமைதி வேறுபாடு இருப்பதனால் சிறு, சிறு வாழ்வு முறை வேறுபாடுகள் இயல்பாக அமையும். சிலர் தமது ஊர் மிகப் பின்தங்கிய பகுதியாயினும், தமது ஊரைப் புகழ்ந்து தள்ளுவார்கள். எனது ஊர் மட்டக்களப்பில் ஏறாவூராகும். இது மகாவம்சத்தில் 'ஏரகவில்ல' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அதனால் இந்த ஊரின் வரலாற்றுப் பெருமையைப் பற்றி, நான் என் யாழ்குடா நண்பிகளுக்கு அடிக்கடி எடுத்துக் கூறுவேன். அதனால் தான் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் உங்களிடமும் கேட்டு விட்டேன்'' என்றாள்.

தேவன் உயிரூட்டம் பெற்றவன் போல், "நீங்கள் மட்டக்களப்பைச் சேர்ந்தவரா?'' எனக்கு அதிகம் பிடித்த ஊர். அதனோடு சிறுவயதின் பெரும்பகுதியை நான் அங்குதான் கழித்திருக்கின்றேன்'' என்று கூறியதோடு, மேலும் என் கதையைத் தொடர முனைந்தேன். ஆனால் என் இன்றைய வாழ்வின் கசப்புணர்வுகளை இவளுடன் பகிர்ந்து கொள்ளக் கூடாது என்ற முடிவுடன், அவள் பெயரை அறிந்து கொள்ளாமலே மறுபுறம் திரும்பிப் படுக்க, என் வலிபட்ட கையை மெதுவாகத் திருப்பினேன். ஆனால் அவள் ஒரு மருத்துவ தாதியானபடியினால், என் கையைத் திருப்பிவிட்டு, அதனை அன்போடு வருடிவிட்டாள். அதனோடு, தேவன்! தேவன் இந்தக் கையிற்றான் வலி அதிகமோ? என்று கேட்டதும், ம்... ம்... என்று முனகிக்கொண்டே கையை வேகமாக இழுத்துக் கொண்டேன். அவள் முகம் கோணவில்லை.

ஆனால் அதனிடம் பரிவு மேலோங்கியிருந்தது. "இன்னும் இரண்டு நாட்களுக்கு நீங்கள் இந்தச் சிகிச்சைப் பிரிவில் தான் இருக்க வேண்டும். நானே உங்களுக்குப் பொறுப்பாக இருந்து, அடிபட்ட பகுதிகளை வருடிவிட்டு மருந்துகளையும் தரவிருக்கின்றேன்" என்றாள்.

பெண்கள் தொடர்பே என் இந்நிலைக்குக் காரணம் என்று நான் ஒதுங்குகையில், இவள் என்னடாவென்றால் பனையிலிருந்து விழுந்தவனை மாடு ஏறி மிதிப்பது போல், என்னை மிதிக்கிறாளே என்ற எண்ணத்துடன், இல்லை இல்லை நான், நான் உடனடியாக என் அறைக்குப் போய், என் வேலைத் தலத்திற்கு அறிவிக்க வேண்டும் என்றேன். நோ நீடித்தால் வெளிமருத்துவப் பிரிவிற்கு வந்து மருந்து எடுத்துக் கொள்வேன் எனத் தழுதழுத்தேன். அப்பொழுது தான் அவள் தேவன்! நான் அருள்மொழியின் அன்பிற்குக் கட்டுப்பட்டவள். உங்கள் தொலைபேசி அழைப்புக்கு முன்னரே கவிக்கோ அவளை அடித்து, வீட்டிற்கு வெளியே விட்டிருந்தான். அப்பொழுது உடுத்த உடுப்புடன் என் அறைக்கு வந்து, உங்களிடம் தான் வைத்திருக்கும் அன்பு தூய்மையானது, அதனை விளங்கிக் கொள்ள முடியாத அண்ணனுடன் வாழ்வது நரக வேதனையை விட மேலானது என்று கருதுகின்றாள்.

இந்த உலகில் ஒருவன் இன்னொருவனை அடித்து உதைக்கும் பொழுது, அடிபட்டவனுக்கு அன்பும், பரிவும் காட்ட மனிதர்கள் இல்லாவிடில் கடவுளின் படைப்புத் தொழிலும் குறிக்கோள் அற்றதாகிவிடும். அதனால் என்னிடம் அடைக்கலமாக வந்த அருள்மொழியை அரவணைத்து முத்தமிட்டு, என்ன நடந்தது? என்று

விசாரித்தேன். அப்பொழுது அவளுக்கு நடந்தவை எதுவும் தெரிந்திருக்கவில்லை. நேற்று இரவு நான் வேலையால் வீட்டிற்குத் திரும்பியபொழுது, தேவன் என்பவர் அடிகாயங்களுடன் எமது அவசரசிகிச்சைப் பிரிவில் இருக்கின்றார். அவர் அடிக்கடி அருள்மொழி, அருள்மொழி யென்று முனகிக் கொண்டிருந்தார் என்பதனை எடுத்துக் கூறியிருந்தேன். அப்பொழுது அவள் அதிர்ந்தே போனாள். உங்களை உடனே வந்து பார்க்க வேண்டுமென்று துடித்தாள். நான் தான் தடுத்து நிறுத்தினேன். நீங்கள் என் கண்காணிப்பின் கீழ் குணமடைந்து வருவதனால் அவள் அமைதி காக்க வேண்டும். அதனோடு அவள் உடல், உளநலன் கருதி இருநாட்கள் வேலைக்குப் போகாமல் ஓய்வெடுக்கும்படி கூறியிருக்கின்றேன்.

உங்களை 999 அடித்து இங்கு சேர்த்திருந்த பக்கத்து அறை நண்பர்களும் வந்து உங்களைப் பார்க்க அனுமதி கேட்டார்கள். அவர்களுக்கு அனும்தி மறுக்கப்பட்டதனால் அவர்கள் திரும்பிச் சென்று விட்டார்கள். ஆனால் என்ன அன்று நடந்ததென்று நான் தனிப்பட்ட முறையில் விசாரித்த பொழுது, தங்களுக்கு எதுவும் தெரியாது எனினும் பொலிஸ்பிரிவினர் வந்து தடயங்களைச் சேகரித்தபொழுது, கவிக்கோ வீட்டு தொலைபேசி இலக்கம் எழுதப்பட்டிருந்த துண்டு நிலத்தில் விழுந்து கிடந்ததாகவும், அதனைக் கொண்டு கவிக்கோவுடன் தொடர்பு கொண்டு, அவர் வாக்குமூலத்தைப் பெற்றுக் கொண்டு அவரைச் சிறையில் வைத்திருக்கிறார்கள் என்றும் தெரிகின்றது என்று கூறி முடித்தாள்.

தேவனுக்கு தன் காதுகளை நம்பமுடியவில்லை. தன் உயிர் தன்னுடலை விட்டுப் பிரியாமல் இருப்பதைக் கூட நம்ப முடியவில்லை. எல்லாமே கண்கட்டி வித்தை களாகவே அவனை மயக்கியிருந்தன. அப்பொழுது தான் தமிழர் சமூக பாரம்பரியங்களில் வளர்ந்திருந்த சமூக அமைப்புகள் பற்றி அருள்மொழிக்கு அவன் எடுத்துக் கூறியவிடத்தும், அவற்றைக் காலத்தின் கோலங்கள் என எடுத்து வீசிவிட்டு, மனித நேயத்தை வளர்த்தெடுக்க முயலும் அருள்மொழியை "அவளொரு தெய்வம்" "அவளொரு தெய்வம்" என என் வாய் வாழ்த்தி மகிழ்ந்தது.

பின், அருகில் நின்று கொண்டிருந்த மருத்துவத்தாதி மருந்துகளை எடுத்துக் கொண்டு புன்முறுவலுடன் வெளியேற முற்பட்டபொழுது, "நீங்கள் இதுவரை உங்கள் பெயரைக் குறிப்பிடவில்லையே..'' என்றிழுத்தேன். "மன்னிக்க வேண்டும். என் பெயர் 'தமிழ்நங்கை'. என் தந்தையார் ஒரு தமிழ் வாத்தியார். அதனால் தமிழை வீட்டில் வளர்க்க வேண்டுமென்று எனக்கு இப்பெயரை இட்டதாக எனக்கு அடிக்கடி நினைவுபடுத்தியிருந்தார்.

அப்பெயரைக் கேட்டதும் எவ்வளவு அழகான பெயர். அதனாலே அவளொரு தமிழ்ப் பெண்மணி என்று நான் முதலில் ஊகித்திருந்ததும் சரியானது என்பதனை நினைவுபடுத்தினேன். நான் 'தமிழ் நங்கை' என உச்சரித்துப் பார்க்கையில், அவள் சிரித்துக் கொண்டே வெளியேறிவிட்டாள். தனிமையில் விடப்பட்ட நான் அவள் போனதிசையைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். எவ்வளவு நேரம் அப்படியிருந்தேன் என்பது

எனக்குத் தெரியாது. என் ஆழ்ந்த தூக்கத்தில் எண்ண அலைகள் அத்தனையும் ஓய்ந்து விட்டிருந்தமையையும், பின்னர் விழித்தெழுந்தபொழுது உணர்ந்து கொண்டேன். அதாவது அந்த விடியற் காலையில் யாரோ ஒருவர் அவசரச் சிகிச்சைக்காக வந்திருப்பதனை அறிந்த வைத்தியர் ஒருவரும், மருத்துவத் தாதியினரும் விரைந்து செல்வதாக உணர்ந்து கொண்டேன். இந்த ஆரவாரத்தில் நானும் புதிய நாளொன்றிற்கு முகம் கொடுத்து விழித்துக் கொண்டேன். நேரத்தைப் பார்த்தேன். காலை 5 மணியாகியிருந்தது. கோடை காலமாகையால் வடதுருவ நாடுகளில் சூரியனின் கதிர்கள் ஐந்து மணிக்கே உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தன. தென்றல் காற்றும் அமைதியாக வீசிக் கொண்டிருந்தது.

ஆறறிவுடைய மனிதனுக்கில்லாத அன்பும், பரிவும் இந்த இயற்கையினிடம் இருப்பதனாற்றான் பூமியில் உயிர்கள் நிலைக்க முடிகின்றது. பூமித்தாய் மனிதனுக்கு மட்டுமல்ல, அதன் மீது வாழும் அனைத்து உயிர்களுக்கும் பொதுவானவள். ஆனால் மனிதனோ பூமித்தாய் தனக்குப் பகிர்ந்தளித்த பகுதியில் திருப்தியடையாது, மற்ற மனிதர்களுக்குரிய பகுதிகளையும் அபகரிக்க எடுத்த போர்களும், மனிதப் படுகொலைகளும் எத்தனை? எத்தனை? யார் அறிவார். எம் கண் முன்னாலே குடியேற்றவாசியாக ஈழத்திற்கு வந்த விஜயனும், தோழர்களும், அவர்களது தலைமுறையினரும் எம் பூமியின் பங்குகளை அபகரித்துக் கொண்டனர். அதனாலே இன்று வடதுருவத்தையண்டிய நாடுகளில் அடைக்கலம் தேடினோம். இங்கு தமிழனுக்குத் தமிழனே

விரோதியாகி, இயற்கையின் பொறுமையைச் சோதித்து வருகின்றான் என்ற புதிய எண்ணங்களை ஓடவிட்டவாறு எழும்பி, நொண்டியபடியே என்னைச் சுத்தப்படுத்திவிட்டு, ஆறிவிட்ட தேநீரை விழுங்கி தொண்டையை நனைத்துக் கொண்டேன். பின்னர் படுக்கையில் சரிந்து படுத்து கண்களை இறுக மூடிக் கொண்டு, கடவுள் எனக்குத் தந்த அனுபவம் தான் என்ன? என்று சிந்தனையில் மூழ்கியிருந்தேன்.

கடவுள் இயற்கையை உயிர்கள் பயன்படுத்திக் கொள்வதற்காக எவ்வளவு அழகாகப் படைத்தாரோ, அவ்வளவு அழகாக உயிர்கள் இயங்குவதற்காகவும் படைப்பின் ரகசியங்களை மறைவாகவே வைத்துப் படைத்திருந்தார். எனக்குக் கிடைத்த அருள்மொழியின் உள்ளம் எவ்வளவு அழகானது. அதனையும் அவர்தானே படைத்தார் என்று எண்ணுகையில், மென்மையான கைகள் என் நெற்றியை வருடி விடுவதாக உணர்ந்தேன். யாரது? என்று அறியக் கண்களைத் திறந்தேன். அங்கு நின்று கொண்டிருந்த அருள்மொழி, தேவன்! என்னை மன்னித்து விடுங்கள் என்று கூறி என் கைகளைப் பற்றி, தன் முகத்தில் ஒற்றிக் கொண்டாள். நானும் அவளது அன்பினுக்காக ஏங்கி நிற்பவன் என்பதனை உறுதிப்படுத்த, எழும்பி அவளை அன்புடன் அரவணைத்துக் கொண்டேன். கதவின் பின்னால் மறைந்து நின்ற தமிழ்நங்கை "நல்வாழ்த்துக்கள்",

அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது

எனத் தானும் வாழ்த்தி, திருவள்ளுவர் மூலமும் எங்கள் இல்லறவியலைத் தொடக்கியிருந்தாள். காலைப் பொழுது மங்கள வாழ்த்துப் பாட, மருத்துவமனை மணியும் டாங், டாங் என்ற ஒலி எங்கும் பரவ, தேவனும், அருள்மொழியும் வளமுடன் வாழ்க என வாழ்த்தி யிருந்தன. இந்த வாழ்த்துகளுடன் நாமிருவரும் வெளியேறி எம் இல்லற வாழ்வினை ஆரம்பித்திருந்தோம். இருபது வருடங்கள் வேகமாக ஓடிவிட்ட நிலையில், எம் பிள்ளைகளாகிய அங்கவைக்கும், சங்கவைக்கும் எம் பழைய நினைவுகளை மீட்டிருந்தேன். அவர்களும், 'அன்புத் தெய்வங்களே நீடூழிகள் வாழ்க' என வாழ்த்தி முத்தமிட்டு அணைத்துக் கொண்டார்கள்.

எம்மிருவர் இதயங்களும் அந்த இளமை நாள்களை நோக்கி வட்டமிடலாயின. எல்லாமே மாயைதான் என்ற உண்மையை உணர்வதற்கு இந்த வாழ்க்கை ஒன்றே போதுமானதாகும்.

(வரலாற்றுக் கருவினை மையமாகக் கொண்ட இக்கதையில் இடம்பெறும் கதாபாத்திரங்கள் அனைத்தும் கற்பனை வடிவங்களே.)



# ஈழத்தமிழரின் மண்ணையும், மக்களையும் காப்பாற்ற ஆவிகள் போராடின

சிங்கள வான்படையினர் ஆகாயத்திலிருந்து வீசிய குண்டுகள் வீடுகள், கோவில்கள், பாடசாலைகள் யாவற்றையும் சின்னாபின்னமாக்கின. பெரும்பாலான மக்களும் இரையாகினர். எஞ்சியோர் அலறிக் கொண்டு அங்குமிங்கும் சிதறி ஓடினர். இந்த அவலங்களைப் பொறுக்க முடியாத இனியனும், வேந்தனும் பங்கரில் இருந்து கொண்டு குண்டுபொழியும் புக்காராவை நோக்கிச் சுட்டுக்கொண்டே இருந்தனர். புக்கரா கணப்பொழுதில் குண்டுகளைப் போட்டு விட்டு மேலே சென்று விட்டது. ஆனால் இவர்கள் கைகள் சுட்டுக்கொண்டே இருந்தன. பக்கத்தில் விழுந்த குண்டுகள் இனியனையும், வேந்தனையும் பலியெடுத்தன. 'நாம் சாகவில்லை. நாம் எம்மண்ணை மீட்கும் வரை போராடுவோம்' என்று முணகிக் கொண்டே சாய்ந்தனர். உயிர் பிரிந்தும் துவக்குகள் அவர்கள் கைப்பிடியிலிருந்து நழுவவில்லை.

குண்டுகள் ஓய்ந்தன. எங்கும் மரணத்தின் ஓலங்கள் கேட்டுக்கொண்டிருந்தன. இனியனையும், வேந்தனையும் தேடி நண்பர்கள் ஓடிவந்தனர். துவக்குகளை கையில் தாங்கியபடி புன்னகை தவழக் கிடக்கும் அவர்களைத் தூக்கி அணைத்துக் கொண்டனர். பின் வந்து சேர்ந்த நண்பர்களும் தத்தம் வீரமரியாதைகளைச் செலுத்தி விட்டு, தம் தோள்களிலே இவர்களை அணைத்துத் தூக்கிக் கொண்டு போய், மக்கள் அஞ்சலிக்கு வைத்தனர். இவ்வளவு அக்கிரமம் வாய்ந்த குண்டுகளுக்குள்ளும் எத்தனை ஆயிரம் மக்கள் கண்ணீரும் கம்பலையுமாக நின்று அஞ்சலி செலுத்தினார்கள்.

மக்கள் மயானத்தை விட்டு நீங்க இரவு 1 மணி ஆகியிருந்தது. போராளிகள் தத்தம் கடமைத் தானங்களுக்குச் சென்றார்கள். எல்லாளனும், மாறனும் பதுங்கு குழியினுள் துவக்குகளைப் பக்கத்தில் வைத்துவிட்டுச் சிறிது நேரம் ஓய்வெடுக்க விரும்பினர். எல்லாளன் அடுத்தகணமே குறட்டையுடன் கண்ணயர்ந்து விட்டான். மாறனுக்கு தூக்கம் வருவதாக இல்லை. அன்றைய போர்ச் சோர்வு, பசிக்களை என்பன இழுத் தடித்துக் கொண்டிருந்தன. அன்று அவன் மட்டுமல்ல மக்கள் எல்லோருமே அவன் நிலையிலே இருந்தார்கள். எந்த வீட்டிலும் உலைப்பனை அடுப்பில் வைக்கப் படவில்லை. வழமையாக பதுங்கு குழிகளில் வீரர்களுக்கு உணவு அளிக்கும் குடும்பங்கள் உயிரோடு இருக்கிறார்களா? இல்லையா? என்பது கூட எவருக்கும் தெரியாது. மாறனுக்கு நேற்றைய சாப்பாட்டில் இரண்டு வடைகள் மீதமாயிருந்தது ஞாபகம். நெருப்புக் குச்சியைத்

தட்டிப் பார்த்தான். அந்த வடைகளும், பக்கத்தில் தண்ணீர்ப் போத்தலும் இருந்தன. எட்டி எடுத்து ஒரு வடையினை மென்று கொண்டு, தண்ணீரையும் அருந்தி தன் வறண்ட தொண்டையை இளகச் செய்து கொண்டு, சாய்ந்தவன் நல்ல உறக்க நிலைக்கே போய்விட்டான். எல்லாளனின் குறட்டை தவிர எல்லாமே மயான அமைதியாக இருந்தது. எல்லாளன் உறங்கி சிலமணி நேரமாகவில்லை.

இனியனும், வேந்தனும் "டே எல்லாளா! டே மாறா!" என்று தட்டி எழுப்பும் குரல்கள் கேட்டுக் கண்விழித்தனர். இதென்னடா? இப்பதான் கொஞ்சம் நித்திரை வருகிறது என்று சாய்ந்தால், நீங்கள் விடமாட்டிங்களோ என்று கூறிக் கொண்டே எல்லாளன் மறுபுறம் திரும்பிப் படுக்க முயன்றான். திரும்பவும் "என்னடா எல்லாளா எங்களை நீங்கள் அடக்கம் செய்து விட்டீர்கள் என்று நித்திரையா? மனுநீதி கண்ட தமிழ் மன்னர்கள் ஆட்சி புரிந்த தலைமுறையில் வந்த எம்மை விட்டாலும், மண்ணை விடலாமா? என்று உரமாகத் தட்டினர். எல்லாளனுக்கு நித்திரை தெளியவில்லை. மாறனும் விழித்துக் கொண்டான். இதென்ன? கனவா? நனவா? என்று எல்லாளனும், மாறனும் ஒருவரை ஒருவர் பார்த்து மருண்டனர்.

அப்பொழுது அவர்கள் நிலையை உணர்ந்த இனியனும் வேந்தனும், "டே நேற்று உங்களுடன் இருந்தோம். இன்று நாங்கள் மயானத்தில் உறங்குகிறோம் என்று நினைத்தா மருள்கிறீர்கள். எங்கள் உடலைத் தானடா மயானத்தில் வைத்துக் கொண்டாடுகிறீர்கள்.

எங்கள் ஆவிகள் உங்களுடன் தானடா இருக்கின்றன" என்றான் வேந்தன். இனியன் "பயப்படாதே எம் ஆவிகள் உங்களுக்குத் தொல்லை கொடுக்கப் போகின்றன என்று. இம்மண்ணை நீங்கள் மீளப்பெற்று எம்மக்களுக்குக் கொடுக்கும் வரை நாங்களும் உங்களது போர்க்களத்தில் துணையாய் நிற்போம். முதலில் எமது பதுங்கு குழிகளில் தான் உங்களுக்கு உதவியாக இருப்போம்" என்றான். அப்பொழுதுதான் எல்லாளனுக்குச் சுயஉணர்வு ஏற்பட்டிருந்தது. எல்லாளனுக்கு வீட்டில் லட்சுமிப் பாட்டி சொன்ன ஆவிகளின் நடமாட்டக் கதைகள் நினைவுக்கு வந்தன. "இறக்கும் பொழுது ஒரு உயிர் எதனை நினைத்துக் கொண்டு பிரிகின்றதோ அந்நினைவு நிறைவேறும் வரை அவ்வுயிர் வேறுபிறவிகளை நாடாது, தான் விரும்பிய இடங்களிலே சுற்றித் திரியும்" என்று பாட்டி கூறிய உண்மை அவனுக்குப் புலனாகியது. உடனே எல்லாளன் துள்ளி எழும்பினான். மாறனும் எழுந்தான்.

இருவரும் இனியனையும், வேந்தனையும் கட்டியணைக்கக் கைகளை நீட்டினார்கள். அவர்கள் முன் நின்ற உருவங்கள் இரண்டும் மறைந்துவிட்டன. "சீ இதென்ன. சும்மா இருந்து அவர்களோடு உரையாடி, அவர்கள் நேற்றைய போரில் எவ்வாறு மாண்டார்கள் என்று கேட்டறியாமலே நாம் அவர்களைத் தழுவப் போய், மாண்டவர் மாண்டவர்களாகி விட்டார்கள்" என எல்லாளனும், மாறனும் தமக்குள் பேசுகையில் தூரத்திலே 'கூ' எனும் ஒலியும், சிரிப்பொலிகளும் பலமாகக் கேட்டுக் கொண்டேயிருந்தன. மாறன் "நாமும் மாண்டால், இந்தப் பதுங்கு குழிக்குள் தான் அலைந்து திரிவோம் போல

இருக்கடா? எதற்கும் வெளியே போய்ப் பார்ப்போம் என்று கூறிக்கொண்டே எல்லாளனும் மாறனும் தத்தம் துவக்குகளை எடுக்கக் கைகளை விட்டுத் துளாவினர். துவக்குகள் எதுவுமில்லை. இருவருக்கும் நெஞ்சு துணுக்குற்றது.

விடிவெள்ளி கீழ்வானத்தில் பளபளக்கின்றது. குருவிகள், காகங்கள் சத்தம் பொழுது விடியப் போகின்றது என்பதனை அறிவித்துக் கொண்டிருந்தது. இருவரும் பொழுது புலருமுன் போராளிகள் கூடாரங்களுக்குச் சென்று காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, புதிய காவல் அரண்களுக்கு விரைய வேணும். அப்படியானால் அவர்களது துவக்குகள் இல்லாமல் போராளிகள் கூடாரங்களுக்கு எப்படிப் போவது. இனியனும், வேந்தனும் தான் துவக்குகளை எடுத்துப் போயிருக்கிறார்கள். "இவர்கள் எங்கடா எம் துவக்குகளை எடுத்துக் கொண்டு போய் வைப்பார்கள். நிச்சயமாக அவர்களை அடக்கம் செய்த மயானத்திற்குத்தான் கொண்டு போயிருப்பார்கள். வா மயானத்திற்குப் போய்ப் பார்ப்போம்" என்று பேசிக் கொண்டே இருவரும் வேகமாக மயானத்தை நோக்கி ஓடினார்கள்.

அந்த மயானம் நான்கு மைல் தொலைவிலிருந்தது. ஆனால் எத்தனையோ வீரர்களின் மரணக் கொண்டாட்டங்களுக்குப் போய்ப் பழகிய அவர்கள் கால்கள், ஒழுங்கைகள், தோட்டங்கள், வயல்கள் எல்லாம் வேகமாகக் கடந்தன. இவர்களின் காலடிச் சத்தங்களைக் கேட்டு, நாய்கள் யாவும் குரைக்கவே பதுங்கியிருந்த மக்களும் பயபீதியினால் வெளியே தலையை நீட்டிப்

பார்த்துக் கொண்டே "எங்களுடைய பிள்ளைகள் தான் இந்த நேரத்தில் கல்லும் முள்ளும் பார்க்காமல் ஓடுவார்கள்" என்று கூறிக்கொண்டு பழையபடி பதுங்கிய இடங்களில் மீண்டும் முடங்கிக் கொண்டனர். எல்லாளனும், மாறனும் மயானத்தை அணுகியதும் அவர்களது கீழ்மூச்சு மேல்மூச்சு வேகம் சமநிலையை அடைகின்றது. உடலையும் மனதையும் நிதானமாக்கிக் கொண்டு நெருப்புக்குச்சியைத் தட்டிய வெளிச்சத்தில் குனிந்து கொண்டே மாவீரர் தூபிகளை ஒவ்வொன்றாகத் தடவிக் கொண்டு சென்றனர். எல்லாளன் கால்களில் கனமான பொருள் ஒன்று தட்டுப்படவே கால்கள் இடறி நிலைதளர்ந்தான். மாறன் எல்லாளனைத் தன் தோள்களில் தாங்கியபடியே குனிந்து பார்த்தான். 'அதென்ன? துவக்குகளா? என்று குனிந்து தூக்கினான். ஆம் துவக்குகளே தான்.

"டே எல்லாளா! இந்தத் துவக்குகளைப் பார்" என்றதும், எல்லாளனின் சக்தி மேலிடுகின்றது. தாவிப் பிடித்துப் பார்க்கின்றான். "என்ன ஆச்சரியம்! எம் துவக்குகளே. ஆனால் கயிறால் பிணைக்கப்பட்டிருக் கின்றன. அது ஏன்?" என்ற கேள்வியுடன் நிமிர்கின்றான். அப்பொழுது மாறன், "ஆவிகள் இரும்பைத் தொடும் சக்தியற்றவை என்று உனக்குத் தெரியாதா? அதனால் கயிறு போட்டு இழுத்து வந்திருக்கிறார்கள் அவ்வளவு தான்" என்றான்.

எல்லாளன் நினைவுச் சிலைகளின் வாசகங்களை தீக்குச்சி வெளிச்சத்தில் உற்று நோக்குகின்றான். உடனே "நீங்கள் உண்மைத் தியாகிகளே. உங்கள் மரணம் உங்கள்

போராட்டத்திற்குத் தடை போடவேயில்லை. ஆயிரம் யுகங்கள் சென்றாலும் தமிழ் மக்கள் உங்களை நினைவு கூர்வார்கள். அது நிச்சயம்" என்று எல்லாளனின் வாய் முணுமுணுத்தது. அப்பொழுது அவர்களது தூபிகளில் ஒட்டப்பட்டிருந்த நிழல்படங்கள் முறுவலித்தன. அவர்கள் நேரமாகின்றது, துவக்குகளை எடுத்துக் கொண்டு களத்திற்கு ஓடுங்கள் என்று உத்தரவிடுவதாக உணர்ந்தனர். மாறனும், எல்லாளனும் உடனே தம் நண்பர்களின் தூபிகளின் முன் மண்டியிட்டு வணங்கி விட்டுத், துவக்குகளை எடுத்துக் கொண்டு அம்மன் கோவில் பக்கமாக ஓடினார்கள். நண்பர்களின் ஆவிகள் கோவிற் பக்கமெனில் தொடரமாட்டா என்பதுதான் அவர்கள் உள்நோக்கம். ஆனால் அப்பொழுது வானூர்தியொன்று கடற்கரையோரமாகச் சுற்றிச் சுற்றி வளைவதனைக் கண்டனர்.

வானூர்திச் சத்தம் கேட்டு மக்கள் சிலர் படுக்கைகளை எறிந்து விட்டு அவலமாக ஓடிக் கொண்டிருந்தனர். குழந்தைகளின் அழுகை ஒலிகள் இவர்கள் நெஞ்சை வருடின. உடனே எல்லாளனும் மாறனும் தம் துவக்கு களை நீட்டிக் குறிபார்த்துப் படபட எனச் சுட்டனர். வானூர்தி கடலுக்குள் வீழ்கின்றது. அப்பொழுது எல்லாளனும், மாறனும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கி ஒருவரையொருவர் தழுவிக் கொண்டனர். "இனியனும் வேந்தனும் எம் துவக்குகளை மயானத்திற்குக் கொண்டு வராவிடின் நாம் இந்த வானூர்தியைச் சுட்டு வீழ்த்தி யிருக்கமாட்டோம்" என்றான் மாறன். 'மரணித்தவர்களே எமது வழிகாட்டிகள்' எனப் பதிலுக்குக் கூறினான்

எல்லாளன். அடிவானத்திலிருந்து எட்டிப் பார்த்துச் சூரியனும் மாவீரரை வாழ்த்தியது. காகங்கள், குருவிகள் யாவும் காலைப் பொழுதில் துதிபாடின. மக்களும் மகிழ்ச்சி பொங்க ஆரவாரித்தனர். ''சிங்களப் படையினிடமிருந்து எம்மைக் காக்க பிள்ளைகள் ஆவிகள் கூட போராடுகின்றன'' என்ற ஒலி எங்கும் ஒலிக்கலாயிற்று. ''வானுலகெங்கும் உங்கள் வீரம் பறைசாற்றப் படட்டும்.'' என்று மீண்டும் மீண்டும் மக்கள் ஆரவாரித்தனர். அந்த மக்களின் மகிழ்ச்சி ஒலியானது எட்டுத்திக்கிலும் பலமணி நேரம் எதிரொலித்துக் கொண்டேயிருந்தது.



# இந்தக் கடா உங்களுக்கு

அது கிளிநொச்சியில் வாங்கிவிடப்பட்டிருந்த இரண்டு ஏக்கர் காணி. கொழும்பில் சிங்களக் காடையர் 1983ஆம் ஆண்டு, தமிழ் மக்களைப் படுகொலை செய்த தோடு அவர்களது சொத்துகளுக்கும் எரியூட்டி எல்லாவற்றையும் சாம்பலாக்கி விட்டனர். எல்லா வற்றையும் இழந்த தமிழ் வாத்தியார் குடும்பம், இனிக் கொழும்பு வாழ்க்கை வேண்டாமென்று அலுத்துக் கொண்டு, இந்திய அரசு தமிழ் அகதிகளை ஏற்றிச் செல்லவென்று அனுப்பிய கப்பலில் ஏறி யாழ்ப்பாணம் வந்து இறங்கினார்கள். பின், தம் வங்கியிலிருந்த பணத்தை எடுத்துக் கொண்டு வாங்கிவிட்ட காணிதான் அது. அவர் அந்தக் காணியைத் திருத்தி ஒரு வீடு, கோழிப்பண்ணை, காய்கறித் தோட்டமெல்லாம் போட்டு, தமிழ் மண்ணில் படுத்துறங்கலாம் என்று கனவு கண்டு விழிக்கு முன்னரே, ஆனையிறவிலிருந்த சிங்களப் படை கிளிநொச்சி வருகிறதாம் என்ற கதை அவர் காதில் விழுந்தது. அதன் பின் அவர் எங்கே போனார்? என்று எவருக்கும் தெரியாது.

சிலர் அவர் லண்டனுக்குப் போய் விட்டார், அவருக்கென்ன குறை. நாங்கள்தான் போகவழியில்லாமல் அங்குமிங்கும் அலைகின்றோம் என்று அலுத்துக் கொண்டார்கள். எப்படியென்றாலும் இந்தக் காணியைப் பார்க்க வரத்தான் செய்வார் என்று பலரும் எதிர் பார்த்தார்கள். ஆனால் அவர் பல வருடங்கள் சென்றும் வரவேயில்லை. அதனால் அவர் ஒரு வரலாறு அற்ற மனிதனாகிக் காட்சியளித்தார். அத்துடன் அந்த இரண்டு ஏக்கர் காணிக்கும் அவர் ஒரு வரலாற்றுப் பதிவை விட்டுச் செல்லவில்லை. அதனால் அதனை யாரும் உரிமை கோரலாம் என்ற நிலையிருந்தது. இப்படியான வொரு நிலை எம்மண்ணுக்கு போர்த்துக்கேயர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் ஆட்சிகளிலும் இருந்து வந்துள்ளது. ஏனெனில் இந்த வன்னிப் பெருநிலப்பரப்பில் வாழ்ந்த மக்கள், அந்நியர் படையெடுப்புக் காலங்களில் எங்கே போனார்கள்? அவர்களுக்கு என்ன நடந்தது? என்று இற்றை வரை எவரும் அறியார். காலம் அறிந் திருந்தாலும், அதனது தொழில் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு மௌனமாக இருப்பதேயாகும்.

1996இல் சிங்களப் படைக்கு தமிழன் வீட்டில் சாப்பாடு தயாரிக்க நெருப்பு எரிவது சகிக்க முடியாத நிலை. அதனால் ஆகாயத்திலிருந்து குண்டு போட்டாவது மக்களைச் சிதறுண்டு ஓடவிட்டபின், ஓடமுடியாது முடங்கிக் கிடக்கும் அவர்கள் மண்ணில் தமது கோழைத் தனங்களைப் பதியவைக்கலாம் என்ற திட்டத்தில் குண்டுகளைக் குடியிருப்புகள் மீது போட்டனர். பலியானவர்கள் மண்ணுக்கு இரையாக, மற்றவர்கள் நாலாபக்கமும் சிதறி ஓடிவிட்டனர். சிங்களப் படைக்கு

தமிழர்களின் சொத்துகளைக் கொள்ளையடிப்பது என்பது ஒரு கைகண்ட கலை. கதவுகள், தளபாடங்கள், யன்னல் கள், கூரைகள் எல்லாம் கொள்ளையடித்து வாகனங்களில் ஏற்றிச் சென்ற பின் வெறிச்சோடிக்கிடந்த வளவுகள் யாவும் பற்றைமண்டி மீண்டும் மனித சஞ்சாரமற்ற காடுகளாகின. ஆனால் 1998இல் விடுதலைப்புலிகள் தாம் மீண்டும் உயிர்த்தெழுந்துவிட்டோம் என்று காட்ட ஆனையிறவு படை முகாமை அழித்து, உப்பு விளையும் மண்ணுக்குச் சுதந்திரம் ஈட்டிக் கொடுத்தது.

இச்செய்தியை எதிர்பார்த்திருந்த மக்கள் தாம் அனாதரவாக விட்டுச் சென்ற மண்ணையும், மனைகளையும் நோக்கி விரைந்தனர். அப்பொழுதுதான் சாவகச்சேரிக் குண்டு வீச்சில் தன் மூன்று பிள்ளைகளை யும் இழந்த தங்கம் அங்கிருக்க முடியாதவளாய், தன் தங்கை மகள் நங்கையுடன் அங்கு யாராவது உதவுவார்கள் என்ற எண்ணத்துடன் வந்திருந்தாள். அப்பொழுது தமிழர் புனர்வாழ்வுக் கழகம் ருபா.5000மும், பானை, பாத்திரங்களும் கொடுத்தது. பின், தமிழ் வாத்தியார் கைவிட்டுப்போன அந்த 2 ஏக்கர் காணியின் ஒரு மூலையில் கொட்டிலைப் போட்டு நிம்மதிப் பெருமூச்சுடன் குடியமர்ந்தார்கள். பின், நங்கையின் அண்ணன் கதிர் லண்டனில் தனக்குக் கிடைக்கும் அகதிப்பணத்தில் இடைசுகம் சிறுதொகைப் பணத்தை அனுப்பி இவர்களைப் பராமரித்து வந்தான். கதிருக்கு லண்டனில் படிக்கவும், தொழில் புரியவும் வாய்ப்பிருந்தும் அவனே கெடுத்துக் கொண்டான். ஆனால் அவன் தஞ்சம் கேட்கும் பொழுது விடுதலைப் புலிகள் இயக்கத்திலிருந்து போராடியது, பின் கொழும்பிற்குச் சென்று

கடையொன்றில் வேலைபார்த்துக் கொண்டு எதிரிக் குழுக்களின் நடமாட்டங்களைக் கண்காணித்து வருகையில், எதிரித் தமிழ்க் குழுவினரால் கைது செய்யப்பட்டு சிறையில் துன்புறுத்திய கதையெல்லாம் உளறப் போய், வதிவிடபிரசை நிலை கிடைக்கவில்லை. ஆனால் சும்மா, சிங்களப் படை எங்களைக் கைது செய்து, துன்புறுத்து கிறது. அதனால் உயிர்ப் பாதுகாப்பிற்கு வந்தோம் என்று கூறியோருக்கு எல்லாச் சலுகைகளும் கிடைத்துள்ளன.

ஆனால் கதிர் போன்றோர் பலர் 9 - 10 வருடங்களாகியும் மாதா மாதம் கையெழுத்திட்டுக் கொண்டு, தொழில் வாய்ப்புமில்லாமல் நடைப் பிணமாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். எனினும், கதிர் தன் செலவு போக மிகுதியை இடைசுகம் அனுப்புவதனால் தங்கமும், மங்கையும் நாட்களையோட்டி வந்தார்கள். ஆனால் காலப்போக்கில் தங்கம் முழுமையாக மன நோயாளியாகிவிட, நங்கைக்குத் தங்கத்தைப் பராமரிப்பதே முழுத்தொழிலாகி விட்டது. கிளிநொச்சியில் இரண்டு ஏக்கர், மூன்று ஏக்கர் காணிகளில் வாழும் மக்களுக் கெல்லாம் தனிக்காட்டு ராசா வாழ்க்கைதான். அக்கம், பக்கம் அயலட்டை உதவி என்று எவரும் இல்லை. இடை சுகம் யாரும் தேடி வந்து போனால் பொழுது போவது தெரியாமல் போய்விடும். எனவே_எல்லோரும் போல் நங்கையும் ஒரு கோழிப்பண்ணையையும், நாலைந்து ஆடுகளையும் வளர்த்துக் கொண்டதோடு, கிணற்றடியைச் சூழ வாழைகள், பூக்கன்றுகள் நட்டிருந்தாள். கிணறு தோண்டி அரைகுறையாகக் கிடந்தது. நீரும் ஒருபக்கத்தில் தான் ஊறியிருக்கும். மூன்று பனைக்குத்திகள் குறுக்காகப் போட்டபடி கிடந்தன. அதன் மீது நின்று கொண்டு

தண்ணீரை ஒருமாதிரி மொண்டு ஒரு அண்டாவில் நிரப்பிக் கொண்டால், அது ஒரு பெரும் சாதனைபோல் உணர்ந்து கொள்வாள். ஊரில் போல் இங்கும் தென்னம்பிள்ளை, மாங்கன்று, பலாக்கன்றுகள் வளர்க்க ஆசை. ஆனால் தண்ணீர் இல்லாமல் என்ன செய்வதென அலுத்துக் கொள்வாள்.

அன்று எல்லா வேலைகளும் முடிந்தாயிற்று. என்ன செய்யலாம் என்று திரும்பிப் பார்க்கையில் முதல் நாள் பக்கத்து விதானையார் வீட்டிலிருந்து எடுத்து வந்த நாளேடான 'ஈழ நாத'த்தில் கவனம் சென்றது. அதைக் கையில் எடுத்துக் கொண்டிருந்தவள் நேரம் போவது தெரியாமல் அதனை வாசிப்பதில் மூழ்கிக் கிடந்தாள். ஆனால் அவள் காதுகள் ஒலியொன்றினை மீட்டுக் கொண்டிருப்பதாக உணர்ந்து தலையை நிமிர்த்திப் படலையை நோக்கினாள். காதுகள் காற்றிலே மிதந்து வந்த சிரிப்பொலிகளைத்தான் மீட்டிருந்தன. அவை அவள் பாடசாலைத் தோழிகளான எழிலியும், குந்தவையும் தான் எழுப்பிய ஒலி எனக் கண்டவள் சடக்கென எழும்பி படலையை நோக்கி விரைந்தாள்.

படலையைத் திறந்தவாறே அந்தப் போராளிப் பெண்களின் அழகை உள்வாங்கினாள். என்ன அழகான பட்டுப் போன்று பளபளக்கும் கன்னங்கள். அதனைப் பார்த்து ரசிக்கவென அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக்கும் கண்கள். எல்லாவற்றுக்கும் மேலாகப் பொன் சரிகைகளால் வேலைப்பாடு செய்த சேலையினை கால்கள் மறையக் கட்டி, முகத்தின் அழகைக் கண்டு மற்றவர்கள் மயங்காது வலைப்பட்டினால் மறைத்துக் கொண்டு

கைகளில் மணமாலையை எடுத்துக் கொண்டு மண வறைக்குப் போவதற்காக இளமை களைகட்டிவிட்ட இந்த அழகு மங்கையர் என்ன உடுத்திருக்கிறார்கள்? காலம் காலமாக எம் மூதாதையர் வாழ்ந்து, நேசித்துத் துஞ்சிய இந்தத் தாய்மண்ணை இடையில் ஆக்கிரமிப்பாளனாக வந்த சிங்களவன், எம்மை அடிமைகளாக்கி ஆள ஆசைப்படுகின்றான். மண்ணைக் காப்பாற்றினால்தான் தாய்க்குலம் சுதந்திர மக்களைப் பெறும் பேறுடைத்தாவர். ஆகையினால் பெண்கள் போராளிகளாவது அவர்களது அடிப்படை உரிமைகளை வென்றெடுப்பதற்கே என்பதனை உணர்ந்து கொண்டவர்கள் இவர்கள். அதனால் உள்ளிருக்கும் வீரத்தைப் பிரதிபலிக்கும் அடையாளங் களாக கறுப்பு நிறக் காற்சட்டைகள், வெள்ளை மேலங்கிகள், இடுப்பில் ஒரு கறுதப்பட்டி, வளைவாகக் கட்டிய இரு பின்னல்கள் விளங்கின.

இரண்டாம் உலகப் போரில் மேலை நாட்டுப் பெண்கள் விமானம் ஓட்டுதல் முதல், ஆயுதங்கள் தயாரிப்பு, போர்க்களத்தில் முதலுதவிகள், மற்றும் உணவுப் பஞ்சம் தீரக் காய்கறித் தோட்டங்சள், பண்ணைகள் நிருவாகம் என ஆண்கள் அதுகாலவரை செய்திருந்த எல்லாத் துறைத் தொழில்களையும் வெற்றிகரமாகச் செய்தனர் எனப் பாராட்டப்பட்டுள்ளார்கள். அதன் பின்னரே மேலை நாடுகளில் பெண்கள் தம்மால் நாடாளவும் முடியும் என்று அடையாளப்படுத்தி தம் திறமைகளை நிரூபித்திருந்தார்கள். எமது வரலாற்றிலும் ஒளவையார் இருமன்னரைச் சமரசப்படுத்தத் தூது சென்றமை, அல்லி அரசாணி முதலானோர் வீரம்

என்பன போற்றப்பட்டாலும், தமிழ்பெண்கள் அணியொன்று முதன் முதலாக விடுதலைப் போரின் முன்னின்று போரிடுவது என்பது தமிழர் வரலாற்றில் ஒரு புதுமையுகத்தினை ஏற்படுத்தியிருந்தது எனலாம்.

முன்பு மறைந்திருந்த வீரம் தற்பொழுது வெளியே தலைகாட்டிக் கொண்டிருந்தது. அதனால் துவக்குகள் சாவகசமாக அவர்கள் முதுகில் தொங்கிக் கொண்டிருந் தன. கழுத்தில் தொங்கும் சைனைட் குளிசைகள் இவர்கள் மரணத்திற்கு அஞ்சாதவர்கள் என்பதனையும் துலாம்பரப்படுத்தியிருந்தன. ஆனால், இவர்கள் அணிந்திருந்த சைனைட் குளிசைகளால் வேறு இரண்டும் காக்கப்பட்டன. அதாவது எதிரிக்குப் போர்த்திட்டங்கள் போகா வண்ணம் காப்பதோடு, பெண்மையையும் புனிதமாகக் காக்கக்கூடியதாய் இருந்தது.

இவ்வாறெல்லாம் ஒரு கணம் மனதிற் பேசிக் கொண்ட நங்கை, "என்ன இந்தப் பக்கம். சிங்கள உளவாளிகள் இந்தப் பக்கம் வேவு பார்க்கிறார்களோ? அல்லது நீங்கள் வேவு பார்க்கிறீர்களோ" என்றிழுத்தாள். சிங்கள வேவுகாரர் இங்கு வருவதாவது. எம்மண்ணின் தரையில் மட்டுமல்ல, ஆகாயத்திலும் நெருங்க முடியாதவாறு கண்காணிப்புகள் செய்கின்றோம். கடலிலும் கூட நெருங்க முடியாதவாறு போர்த்திட்டங்கள் உள. யாழ்குடாவிலும், திருகோணமலையிலும் அவர்கள் படைகளைக் குவித்து, மக்களைத் துன்புறுத்தினாலும், மக்கள் நினைத்தால் அவர்களை ஓடவிரட்டமுடியும். ஆனால் எம் மனிதவளத்தினை நாம் அழியவிடக் கூடாது. அதற்காகிய போர்த் திட்டங்களைத் தயார் பண்ணி

வைத்திருக்கின்றோம். பொறுத்திருந்து பார். எம் மக்கள் ஈழத்தில் மட்டுமன்றி, புலம் பெயர் நாடுகளிலிருந்தும் எம் உரிமைக் குரலை பலமாக ஒலித்து வருகின்றார்கள்.

ஆனால் உலக நாடுகளும் சிங்கள அரசுகளின் கொடூர முகங்களை முழுமையாக விளங்கிக் கொள்ளும் சக்தி அற்றவர்களாக இருக்கின்றார்கள். ஏனெனில் சிங்கள அரசுகளின் காடைத்தனம் எம் வரலாற்றின் மண்ணின் மீது திணிக்கப்பட்ட அவர்கள் பொம்மலாட்டங்களையே பிரசாரப்படுத்துவதாக இருக்கின்றது. அதனால் எம் தொல்லியல் தடயங்கள் வெளிக்கொணர்ந்துள்ள எம் பூர்வீகம் மேலும், மேலும் நசுக்கப்பட்டுக் கொண்டேயிருக்கின்றது. அதனால் நாம் வெறும் போராளிகளாக மட்டுமல்ல, வெகு விரைவில் தொல்லியலாளராக உருவெடுப்போம். எம் ஆதிவரலாறுகளைக் கட்டி எழுப்பி, எம்மண்ணை வென்றெடுப்போம் என்று நிறுத்திவிட்டு, என்னை இருவரும் உற்று நோக்கிவிட்டு மீண்டும் கூறினார்கள். ஆனால் அதற்காக நாம் நம் உறவுகளைப் பாசங்களை உதறிவிடமாட்டோம். அன்று 'தூயவன் அறிவியற் கூடத்தின்' முன் உம்மைச் சந்தித்த பொழுது, நீர் கூறிய அடையாளத்தைக் கொண்டு தேடி வந்துள்ளோம் என்று கூறிக் கொண்டு என் கைகளை இருவரும் அன்போடு பற்றினார்கள்.

என்மீது அந்த இலட்சியக் கைகள் படுவதனையிட்டு உள்ளம் புளகாங்கிதம் அடைந்தாலும், என்னால் அவர்களை இறுகப்பற்றிக் கொள்ள முடியவில்லை. அவர்களின் மென்மையான கரங்கள் படைக்களப்

பயிற்சியினால் வலிமை பெற்றிருந்ததனை என்னால் உணர முடிந்தது. வாழாவெட்டியாகப் பொழுதைக் கழித்து, வாழும் என் வெறுமையான கைகள் அந்த வலிமை, வைராக்கியமிக்க கைகளிலிருந்து மெதுவாக நழுவிற்று. எனினும் "உள்ளே வாருங்கோ, தேநீர் அருந்தி விட்டுப் பேசுவோம்" என்றேன். பதில் மின்னல் வேகத்தில் ஒலித்தது. "உள்ளே வாரதா? நீர் எம் பள்ளித் தோழி. அந்த நாட்கள் இன்றும் நினைவில் தேங்கிக் கிடக்கின்றன. அதனாலே உம்மைப் பார்த்துப் போக விரும்பினோம். எம் போராளிகளின் உணவுக் கட்டுகளை காடுகளின் எல்லைகளுக்கும், கடல் எல்லைகளுக்கும், பதுங்குழிகளுக்கும் எடுத்துச் செல்ல வேண்டிய எம்முறை இன்று ஆகும். ஆகையால் வேறோர் நாள் வருவோம்" என்று கூறிக் கொண்டே உந்துருளியில் ஏறிக் கொள்ளக் கால்களை எடுத்து வைத்தாள் எழிலி. அதற்கிடையில் குந்தவை ஏதோ நினைவு வந்தவள் போல் "உன் அம்மா எங்கே?" என்றாள். "அம்மாவா? அந்த ஜடம் உரிலேதான் என்று நினைக்கின்றேன்" என்றதும், "ஏன் அப்படி ஒரு தாயை நொந்து பேசுகிறாய்" என்று வினவினாள்.

நங்கை பதிலுக்கு "அன்னையும், பிதாவும் முன்னறி தெய்வம்" என்றுதான் தமிழராகிய நாம் காலம், காலமாகப் போற்றி வருகின்றோம். ஆனால் என் அம்மாவோ விடுதலைப் போராட்டங்களின் இலட்சியங் களைப் புரிந்து கொள்ளும் பக்குவம் பெற்றிருக்கவில்லை. அதனால் ஒருமுறை விடுதலைப் புலிப் போராளிகள், போராளிகளைத் திரட்டுமுகமாக எம் வீட்டுக்கு வந்தவிடத்து என் தம்பியின் கைகளைப் பிடித்து இழுத்துக் கொண்டுபோய், அவர்கள் முன்னிலையில் விட்டிட்டு

என்ன சொன்னாள் தெரியுமா? 'இந்தக் கடா உங்களுக்குத் தான். கூட்டிப் போங்கள்' என்றாள். அப்பொழுது போராளிகள் முகங்கள் கறுத்துச் சுருங்க, சூழவிருந்த சனங்களும் 'எடி சண்டாளி! என்ன பேச்சுப் பேசுகிறாய்' என்று கத்தினார்கள்.

அப்பொழுது போராளிகள் 'எமக்குப் பலிக் கடாக்கள் வேண்டாம். எம் மண்ணினதும், மக்களதும் விடுதலைக்காகப் போராட மனஉரம்மிக்க போராளிகளே வேண்டும்' என்று கூறி விட்டுப் போய்விட்டார்கள். போராட்டத்தின் உயிர் நாடி போராளிகளைப் பலிக்கடாக்கள் ஆக்குவதல்ல. அவர்கள் பிறந்து, வளர்ந்து உறவுகளுடன் கூடிவாழ்ந்த மண்ணை எங்கிருந்தோ தோணியில் கடலில் விடப்பட்டு வந்து எம்மண்ணில் கரை சேர்ந்து, தஞ்சமாகியவன் தன் அடாவடித்தனத்தால் எம்மை அடிமைகளாக்கி, ஆளவிரும்புகின்றான். காலம், காலமாக எம் மன்னர்கள் ஆண்ட மண், பின் வந்த ஆங்கிலேயரால் தாரை வார்த்ததனால், இருந்த மண்ணும் இன்றில்லாமல் போய்விட எம்மக்கள் அநாதரவற்றுக் கிடக்கின்றார்கள்.

'ஒரு இனம் ஆளவும், இன்னொரு இனம் ஆளப்படவும்' என்ற பெரும்பான்மை இனவாதம் இன்று முற்றாகத் தகர்த்தெறியப்பட வேண்டிய விடயம். இதற்காகவே மக்கள் பலநாடுகளில் போராடி வருகின்றார்கள். வல்லரசுகள் இவற்றை அறிந்தும், அறியாதவர் போல் தாயக மண்ணின் மீட்பிற்காக இன்னுயிர்களைத் துச்சமாகக் கருதி முன்னெடுக்கும் விடுதலைப் போராட்டங்களுக்குப் பயங்கரவாதிகள் என்று

முத்திரை குத்தி வருகின்றார்கள். நீதி, நியாயமென்பது உலக மட்டத்தில் குறைந்து போனால், நாமே எம் தலைவிதியை நிர்ணயிக்க வேண்டியவர்கள் ஆவோம். தமிழினம் செய்த தவத்தினால் குறைந்தது எழுநூறு வருடங்களின் பின் விலைமதிப்பிற்கரிய தலைவனைப் பெற்றிருக்கின்றோம். இன்றைய தமிழர் அத்தலைவனை வரலாற்றுப் பொக்கிசம் என்று கூறினாலும் மிகையாகாது. எமது தலைவனின் இலட்சியமும், போராளிகளின் இலட்சியமும் ஒன்றே.

போரில் ஒரு போராளி உயிர்நீக்கும் பொழுது ஒரு தலைவனை இழந்து விடுகின்றோம். அந்தத் தலைவனின் வீரமரணம் காலம்தோறும் எம் சந்ததியினருக்கு நினைவூட்டவே கல்லறைகளும், போர்க்காவியங்களாக மிளிர்கின்றன. சிங்கள அரசின் கூலிப்படைகளும், இனத்துரோகிகளுமே ஈழமீட்புப் போரில் கடாக்கள் ஆகின்றனர். அவர்களுக்கு யார், வீரக்கற்கள் அமைக்கின்றார்கள். புறநானூற்றுக் காலத்திற்குப் பின் நாமே நடுகல் எடுத்து, அவர்களைப் போற்றுகின்றோம். ஆனால் சிங்களப் படையினருக்கு எஞ்சுவது, கூலியும், மரணமுமே" என்று நான் புலம்பிக் கத்திவிட்டு அம்மாவை விட்டுப் பிரிந்து என் பெரியம்மாவுடன் போயிருந்து விட்டேன். அதன் பின் அம்மா எங்கே? என்று சரியாகத் தெரியாது. ஊரில தான் இருக்க வேண்டுமென்று மட, மட என்று வார்த்தைகளைக் கொட்டி விட்டு தலையை நிமிர்த்தினேன்.

அவர்களது முகத்தில் பலவித உணர்வுகள் படர்ந்து காணப்பட்டன. அது என்னவாக இருக்கலாம் என்று

நான் அலசு முன்னரே, அடுத்த காணியின் மாந்தோப் பூடாக பேச்சு ஒலியும், சிரிப்பும் வந்த பக்கம் திரும்பினோம். "அதோ உணவுப் பொதிகள் வருகின்றன" என்று அவர்களிருவரும் கூறிக்கொண்டு எனக்கு கையையசைத்து விட்டுத் திரும்பினர். உணவுப் பொதிகளை உந்துருளிகளில் வைத்து ஓட்டிவரும் போராளிகளை நானும் உற்று நோக்கினேன். என்ன ஆச்சரியம். எல்லோரும் பெண் போராளிகளே. அந்த உறுதிமிக்க பெண் போராளிகள் என்னைப் பார்த்து விடக்கூடாது என்று கருதிப் படலைக்குப் பின்னால் மறைந்து கொண்டேன். அப்பொழுது "நங்கை போய் வருகின்றோம்" என்று எழிலி, குந்தவை இருவரும் விடைபெற்றனர்.

ஆனால் குரல்கள் அவர்கள் போய் பல விநாடிகளாயும் என் காதுகளில் எதிரொலித்துக் கொண்டிருந்தன. எல்லோரும் வரிசையாகப் போய்க் கொண்டிருப்பதனை என் கண்கள் இமைகொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தன. கடைசி உந்துருளி கண்ணுக்கு எட்டாத தூரம் போய் மறைகையில், கடாநிலையிலிருந்த நான் ஏதோ பித்துப் பிடித்தவள் போல் வேகமாக அவர்களை நோக்கி ஓடத் தொடங்கினேன்.

"எழிலி! குந்தவை! நானும் உங்கள் மண் விடுதலைப் போராட்டத்தில் இணைந்து கொள்ள விரும்புகின்றேன்" என்று கைகளை அசைத்து நிற்குமாறு சைகை காட்டிவிட்டு, உரமாகக் கத்திக் கொண்டு ஓடினேன். எழிலி என் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்து, என் நிலைமையைப் புரிந்து கொண்டு உரமாகக் கத்தினாள்.

"இல்லை! இல்லை! அங்கேயே நில். நாங்கள் மீட்டுத்தரும் இந்தத் தமிழர் மண்ணின் வரலாறு தொடரவேண்டு மானால், நீதான் வீரமக்களைப் பெற்று எம் வரலாற்றை மீண்டும் கட்டி எழுப்பும் வரலாற்று நங்கையாகப் போற்றப்படுவாய். இதுவே நீ உன் தாய் மண்ணுக்குச் செய்ய வேண்டிய கடமை. எனவே திரும்பிப் போ" என்ற கட்டளையிட்டாள். பின் அவள் திரும்பிக் கொண்டாள்.

எனக்கு வேறு வழியில்லை. அதனால் என் கால்களும் அந்த இரண்டு ஏக்கர் வரலாறு காணாத காணியை நோக்கி நடைபோட்டன. என் எண்ணங்கள் அவள் சொல்வதும் சரிதான் என்று நியாயப்படுத்தின. 'அவள் மீட்டுத் தரும் இந்தத் தாயக மண்ணுக்கு நான் வீரமக்களைப் பெற்றுக் கொடுக்க வேண்டும். அதுவும் நியாயமே. ஆனால் இந்த இலட்சியப் போராளிகள் என்றும் அழியாக வரலாற்று நாயகர்களே. அவர்கள் வீரச் சாவிலே எங்கள் வரலாறும், வாழ்வும் மீண்டும் உயிர்க்கப் போகின்றன' என்று எண்ணிக் கொண்டே படலையைத் திறந்து உள்ளே போனேன்.

அப்பொழுது ஒருவர் காணிக்குள் நின்று கொண்டிருந்தார். அவர் புலிப்படையினர் அணியும் ஆடையும், தொப்பியும் அணிந்து கொண்டு ஒரு போராளியாகவே காணப்பட்டார். அவருக்கொரு 55 வயதுதான் மதிக்கலாம். அவர் என்னைக் கண்டதும், செருமிக் கொண்டே "வா நங்கை எங்கே போயிருந்தாய் உனக்காகத்தான் காத்திருக்கின்றேன்'' என்றார். "எனக்காகவா என்ன விடயம்?" என்றேன். "நான் தான் இந்தக் காணியை வாங்கிய தமிழ் வாத்தியார். சிங்களப்

படை ஆனையிறவிலிருந்து கிளிநொச்சியை நோக்கி நகர்கின்றது என்று அறியவந்ததும், நான் என் தாய்மண்ணுக்காகப் போராட விடுதலைப் புலிகள் இயக்கத்துடன் சேர்ந்து படைக்களப் பயிற்சிகள் பெற்று போராளியாகிக் கொண்டேன். இப்பொழுது இந்தக் காணியை உன் பெயரில் மாற்றி எழுதி உறுதியைக் கொடுப்பதற்காகவே வந்தேன்" என்றார். அப்பொழுது நங்கை, ''உங்களுக்குக் குடும்ப உறவுகள் வேறு யாருமில்லையோ?'' என்று வினாத்தொடுத்தாள். அப்பொழுதுதான் அவர் தான் யார் என்று விவரிக்கத் தொடங்கினார்.

எனது தாயார் புலோலியைச் சேர்ந்தவர். ஆங்கில ஆசிரியையாகக் கொழும்பில் படிப்பித்து வரும்பொழுது எனது தந்தையார் ஆரியரத்னாவை அதே ஒழுங்கை யிலும், பேரூந்து பிரயாணத்திலும் பலதடவைகள் தொடர்ந்து சந்தித்ததனால், காதலித்து திருமணம் செய்து கொண்டார். அப்பாவின் பெயர் ஆரியரத்னா என்றாலும் அவர் ஒரு மிதவாதி. தமிழர் பூர்வீக வரலாறுகளைத் தெரிந்திருந்தவர். இவர் ஒரு தமிழ்ப் பெண்ணைக் கட்டிக் கொண்டதால் அவரது சிங்கள சக ஆசிரியர்கள் இவரைத் 'திராவிடரத்னா' என்று அழைத்துக் கேலி பண்ணுவார்களாம். அதனால் அவருக்கு மேலும் தமிழ்மக்கள் மீது அபிமானம் வளரத் தொடங்கியதாம்.

1983ஆம் ஆண்டு இனக்கலவரத்தின் போது ஆரியரத்னா மகனையும், மனைவியையும் அகதி, முகாமுக்கு அனுப்பிவிட்டு, வீட்டில் இருக்கையில் காடையர் உள்ளே புகுந்து “ஓயாகே தமிழ்ப்பொம்பளை

கொய்த?" (உன் தமிழ் மனைவி எங்கே?) என்று கேட்டு இவரைத் தாக்கியதில் அவர் உயிர் துறந்து விட்டார். மறுநாள் பக்கத்து வீட்டு முத்துமெனிக்கா அகதி முகாமுக்கு அவரது இறப்புச் செய்தியைச் சொன்னதும் தாய் அலறி அடித்துக் கொண்டு வீட்டுக்குப் போய் ஈமக்கிரியை ஒழுங்குகளைச் செய்துவிட்டு தன்னைப் புலோலிக்குக் கூட்டி வந்தார். அப்பொழுதுதான் தன் தாய் தனக்கு விடுதலை உணர்வை ஏற்படுத்தியிருந்தார் என்றும், தனக்குத் தமிழ், சிங்களம், ஆங்கிலம் ஆகிய மூன்று மொழிகளிலும் போதிய அறிவு இருந்ததனால் உலக விடுதலைப் போராட்ட வரலாறுகள், உலகமகாயுத்தங்கள் போன்ற நூல்களைத் தொடர்ந்தும் வாசித்து, ஒரு போராட்டத்தின் வெற்றிக்குத் துணைநின்ற அம்சங்களையும் அறிந்து கொண்டே கிளிநொச்சிக்குத் தமிழ்வாத்தியார் என்ற போர்வையில் வந்ததாகவும், தான் தனிப்பிள்ளையானதால், தாய் வயோதிபத்தின் கஷ்டங்களை அனுபவிக்கையில் அவருடன் இருப்பது அவசியமாயிற்று என்பதனால் அவர் இறந்த பின்னரே தனக்கு விடுதலையியக்கத்தில் சேர்ந்து போராடுவது சாத்தியமாயிற்று என்றும் கூறிமுடித்தார். "அப்ப ஐயா! உங்களுடைய உண்மையான பெயர்?" என்று கேட்டேன்.

"என் பெயர் தமிழ்வேந்தன். ஆனால் நான் போராளிகளுக்குச் சுதந்திரப் போராட்டங்கள் பற்றியும், அவற்றிற்காகிய வெற்றி, தோல்விகளையும், மக்களின் பங்களிப்புகளையும், மற்றும் இரண்டாம் உலக மகா யுத்தத்தின் போது லட்சக்கணக்கான தம் சிறுவர்களை உள்ளூர்களுக்கும், இளைஞர்களை அவுஸ்திரேலியா, அமெரிக்கா போன்ற பிற தேசங்களுக்கும் அனுப்பி ஆங்கிலேயர் தம்

பரம்பரையினரைக் காப்பாற்ற எடுத்த முயற்சிகள் போன்றவற்றையும் நான் எடுத்துரைப்பதனால் என்னை 'ஈழத்து பூராடனார்' என என்னை அன்பாக அழைப்பர். தற்போது எனது பழைய வாத்தியார் உடுப்பில்லாததால் முன்பு என்னையறிந்திருந்த ஓரிருவருக்கு என்னை இப்பொழுது அடையாளம் காணமுடியாதுள்ளது. அதனால் என்னை அகதியாக லண்டனுக்குப் போய் விட்டார் என்று நம்பி வருகின்றார்கள். நான் என் காணியைப் பார்க்கவும், என் வரலாற்றைப் பதியவும் தான் மீண்டும் வந்துள்ளேன். இந்த நன்கொடை உறுதியைப் பாதுகாப்பாக வைத்து, உன் சந்ததியினருக்கு எழுதிக் கொடு என்று சொல்லிவிட்டு, குடிசையோரமாகச் சாய்ந்திருந்த உந்துருளியில் ஏறி, வேகமாய் போய் மறைந்து விட்டார்.

நங்கை அவரது காலடிபட்ட மண்ணை அள்ளி முகர்ந்தாள். 'தமிழ் மணம் வீசுகிறது' என்று கூறிக் கொண்டு அந்த மண்ணை ஒரு டப்பாவில் பத்திரமாகப் போட்டு அவர் நினைவாக வைத்திருந்தாள். ஒவ்வொரு வருடமும் அதே தினத்தில், அதே நேரத்தில் அதனை எடுத்து முகர்ந்து பார்த்து 'தமிழ் மணம் வீசுகிறது' என்று முணுமுணுத்துக் கொள்வாள்.

*(ஈழப்போரின் நடுவே மிதந்து வந்த உண்மைகளின் வடிவம். கதாபாத்திரங்கள் அனைத்தும் கற்பனையே).*

# சமய - சமூக - வரலாற்று எழுத்தாளர் திருமதி. தனபாக்கியம் குணபாலசிங்கம் அவர்களின் நூல்களின் சிறப்பியல்புகள்

1. 'இலங்கையிற் தொல்லியல் ஆய்வுகளும், திராவிடக் கலாச்சாரமும்' எனும் நூல் ஈழம், ஈழத்தமிழரின் ஆதித் தாயகம் என்பதனை உறுதி செய்துள்ளது. இதனைத் தொடர்ந்து அவர் எழுதிய 'தமிழகப் பூர்வீக வரலாறும், அரிய செய்திகளும்' எனும் நூலில் தமிழர்கள் வரலாற்றுப் பற்றற்றுப் பாராமுகமாகக் கைவிடப்பட்ட அல்லது கடற்கோள்களினால் காலவெள்ளத்துள் மூழ்கிப்போன வரலாறுகளை தொல்லியல், அகழ்வாய்வுகள், பழந்தமிழ் இலக்கியங்கள் முதலானவை தரும் சான்றுகள் துணைகொண்டு ஆசிரியர் தமிழர் வரலாறுகளைப் புதிய கண்ணோட்டத்தில் வெளிக் கொணர்ந்துள்ளார். இந்நூல்களை ஒவ்வொரு தமிழனும் படித்துத் தம்மின வரலாற்றினைப் பின்னோக்கிப் பார்ப்பதன் மூலம் புத்துணர்வுகள் பெற்று, தாமிழந்த உரிமைகளை வென்றெடுக்க வேண்டுமென்பது நூலாசிரியரின் எதிர்பார்ப்பாகும்.

இவரது 'மட்டக்களப்பு மான்மியம் ஓர் ஆராய்ச்சி' எனும் நூல், மகாவித்வான் எப்.எக்.சி. நடராசா அவர்கள் தொகுத்து வெளியிட்ட கல்வெட்டு நூலினுள் மறைந்து கிடந்த மட்டக்

களப்புத் தமிழகத்தின் வரலாறுகளைப் பொதுமக்களும் விளங்கிக் கொள்ளும் வகையில் எளிமையாக்கப்பட்ட தொன்றாகும். இதனைத் தொடர்ந்து இவர் எழுதிய வரலாற்று நூலாக 'இலங்கையில் வங்க இளவரசன் வரலாறும், சிங்கள இன, மொழி வளர்ச்சி நிலையும்' எனும் நூல் அமைகின்றது. இந்நூல் மறுபதிப்பாக தமிழகப் பூர்வீக வரலாற்று நூலில் இடம் பெறச் செய்யப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

2. தமிழரின் சமயம் சைவம் எனவும், தத்துவம் சைவசித்தாந்தம் எனவும் தமிழரின் சமயபாரம்பரியங்கள் தெரிவிக்கின்றன. அதனால் சைவசமய வரலாறுகள், சைவசித்தாந்தக் கோட்பாடுகள் ஆகியவற்றை எளிமைப்படுத்திய நூல்களே 'சைவசித்தாந்தமும், விஞ்ஞான உலகமும்', 'பின்பற்றப்பட வேண்டிய சைவசமய தத்துவங்கள்' என்பனவாம். இவற்றைப் படித்து பூமியில் பரவி வீசிக் கொண்டிருக்கும் தெய்வீக அலைகளை உணர்ந்து கொள்ள முடியும்.

3. 'ஆசிய, ஆப்பிரிக்க, ஐரோப்பிய இனங்களின் தனித்துவமான வரலாறு' எனும் நூல் இரு தொகுதிகளைக் கொண்டு அமைந்த நூலாகும். வரலாறு படைத்த இந்த இனங்களின் வரலாறுகளை படித்துணர்வது ஒவ்வொரு தமிழனுக்கும் அவசியமானது என்பதனை இந்நூலினைப் படிப்பதன் மூலம் உணர்வீர்கள்.

4. இறுதியாக, தமிழரின் சமய, தத்துவக் கோட்பாடுகளைப் புலம்பெயர் நாடுகளில் வதியும், இளையோரும், பெரியோரும் படித்துணர வேண்டுமென்ற நோக்கில் இருநூல்கள் எழுதப்பட்டுள்ளன அவையாவன:

(அ) பிராணிகள் கூறும் அறிவியற் கதைகள்.

(ஆ) The Stories of Moral Teachings. (இந்நூலில் பிராணிகள் கூறும் அறிவியற் கதைகளைத் தமிழில் படித்து இன்புற முடியாதவர்களுக்காக எட்டுக் கதைகளுக்கு ஆங்கில வடிவம் கொடுக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.)

திக்கற்ற தமிழனுக்கு கல்வியே முதல் ஆயுதம். மற்றும் தெய்வீக அனுபவங்களும், உலகியல் ஞானமும் பெற்றிட இவரது நூல்கள் கைகொடுக்க வல்லன. படித்தின்புறுங்கள்!





# நூலாசிரியரைப் பற்றி...



இந்நூலில்...

எழுத்துத் துறையிலிருந்து ஓய்வுபெற ஆசிரியர் விரும்பிய பொழுதும் அவரால் முடியவில்லை. ஏனெனில் விட்டகுறை தொட்ட குறையெனத் தம் ஆய்வுகளிற் சில, காலத்தினுள் கரைந்து போகக் கூடாது என்ற முடிவுடன் மீண்டும் தலை தூக்கினார்; தம் கண்களுக்குப் புலனாகாத இறைவனை மீண்டும் கண்ணாரக் கண்டு கொள்ள முயற்சிக்கிறார்.

பின், இறைவன் ஆணையால் சால்டியாவின் தலைநகரான ஊரிலிருந்து (இன்றைய ஈராக்கின் தென்பகுதி) புலம்பெயர்ந்த அப்ரமின் (ஆப்ரஹாம்) அறுந்துபோன தமிழ்த் தாயகத் தொடர்புகளை மீட்டுப் பார்க்கிறார். உண்மையில் இன்று உருவாகியுள்ள யூத இனமும், ஹீப்ருமொழியும் பூர்வீகத்தை இனம் காணாமலே வாழ்ந்து வருகின்றன. இத்தகைய நிலையில் புலம்பெயர்ந்த நிலையில் இருக்கின்ற ஈழத்தமிழருக்கு மொழியளவில் மாற்றங்கள் இல்லையெனினும் இன அளவில் மாற்றங்கள் ஏற்படலாம் என்பதனை யூதர் இனம் எமக்கு எச்சரிக்கின்றது எனலாம். அதனால் நாம் 3012ஆம் ஆண்டில் (ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு) எம் தலைமுறையினருக்கு எம் வரலாறுகளை எவ்வாறு பாதுகாத்து, அவர்கள் கைகளில் ஒப்படைக்க வேண்டுமென்றும் சில கருத்துகளை முன் வைத்திருக்கின்றார். இவற்றுடன் நின்றுவிடாமல் விஞ்ஞான வளர்ச்சியில் சிலிக்கன் துணுக்குகளினூடே ஓடிக்கொண்டிருக்கும் மின்காந்த அலைகள் ஏற்படுத்தியிருக்கும் சமூகமாற்றங்களையும் வாசகர்கள் அறிந்துகொள்ளுமாறு எளிமைப் படுத்தியிருக்கின்றார். இறுதியாக, ஈழப்போர் தொடர்பான வரலாற்றுப் பதிவுகளையும் சிறுகதைகளாக வடிவம் கொடுத்திருக்கின்றார். இவையனைத் தினையும் ஒரே நூலில் பெற்று வாசகர்கள் பயனடைவர் என்று மணிமேகலைப் பிரசுரம் மகிழ்ச்சியுடன் வெளியிடுகின்றது. இந்நூல் ஆய்வு நூலாக மட்டுமின்றி, உங்கள் இதயங்களுடன் பேசுகின்ற உளவியல் நூலாகவும் அமையட்டும்.

-பதிப்பகத்தார்